# சிவகோத்திர
# வைசிய விருத்தி

(முதற்பாகம்)





PROPRIETOR, AUTHOR & PUBLISHER.
PANA SONA ANDIAPPAN.
PALAMKOTTA, S. INDIA.

# SIVAGOTHRA VAISHYA VRIDHI.

## PART I




BY

**ANDIYAPPAN, SON OF CHOKALINGAM,**

*Publisher and Proprietor,*

**PALAMCOTTAH (S. INDIA.)**

MADRAS:

PRINTED AT THOMPSON AND CO., "MINERVA PRESS."

**FIRST EDITION.**



1924.

# சிவகோத்திர வைசிய விருத்தி.

## முதற்பாகம்.




ஆக்கியோன். ப. சொ. ஆண்டியப்பன்.

பாளையங்கோட்டை.



மதராஸ்

"மினர்வா" அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பெற்றது

ரிஜிஸ்ட்டர்] 1924. [காப்பிரைட்.



திருவணைமகளிர் செல்வஞ் சிறூரின்
குழவியப்பாலர் குலநலக் கொள்கை
கல்வி நன்மனன் கடவுணூற் பயிர்ச்சி
பன்னருஞ் சிறப்பி னன்னய நிறைந்த
கொன்மரபொழுக்க மென்றைக்குங் குன்றா அப்
பல்வளச் செங்கூழ் மல்குமா மாட்சியும்,
எல்லையிற்பெரிய தொல்லையிற் சிறந்த
அண்டமும் பிண்டமு மசரமுஞ் சரமுங்
கண்டுடன் றானாய்க் கொண்டுடன்வேறாய்
உடலுக் குடலாய் உயிருக்குயிராய்
எழுவகைத் தோற்றமு மின்புறீஇ யியலுக
காலமுங் கணக்குங் கருணையும் வினையுமாஞ்
சக்கரந்தாங்கி மக்கண் மாமனத்தும்
இருட்கொடியறுத்து அருட்கொடியுயர்த்து
அடுநிலையொரீஇ நடுநிலைமரீஇ
நாடொறு நாடி முறைசெய்து காக்குமா
மன்னா மன்னரு மன்னுமாமந்த
முச்சகம் போற்றுஞ் சக்கரவர்த்தியாம்
வெய்யோனடாத்துந் துய்யமா விரதப்
பரிகளும் விலக இலகுமாவிற்களும்,
மாடமுங் கூடமுங் கோபுரமதில்களும்,
சுத்தமாஞ்சைவ சித்தாந்தம் படர்ந்த
எண்டிசை புகழுந் தண்டமிழ் நிலத்து
ஒருதலை சிறந்த திருமலிவணிகர்
மண்டிலமதனிற் பண்டைநாட் போற்றிய
மரகத விநாயகன் மலரடி தொழுதெழ
வரநல்ல வாழ்வுகள் பலவும் வருமே.




உ

சிவமயம்.

# சிவகோத்திர வைசிய விருத்தி.

(முதற்பாகம்)

## ஒன்றாவது அத்தியாயம் நூன்முகம்.

"திருவாக்கும் செய்கருமங் கைகூட்டும், செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்—உருவாக்கும்
ஆதலால் வானோரும் யானை முகத்தானைக்
காதலாற் கூப்புவர் தங்கை" (ஔவையார்)

"வெண்தாமரைக்கன்றி நின்பதந்தாங்க என்வெள்ளை யுள்ளத்
தண்தாமரைக்குத் தகாதுகொல்லோ சகமேழு மளித்து
உண்டானுறங்க ஒளித்தான்பித்தாக உண்டாக்கும் வண்ணம்
கண்டான் சுவைகொள்கரும்பே சகலகலா வல்லியே" (குமரகுருபரர்)

எல்லாம்வல்ல இறைவன் திருவருட் குமர! "முலையென விரண்டு முரட்குவடு மரீஇக் குழற்காடு சுமந்த யானைமகட்புணர்ந்தோய்! செங்கட் குறவர் கருங்காட்டு வளர்த்த பைங்கொடிவள்ளி படர்ந்த புயமலையோய்; இமயம்பூத்த சுனைமாண் தொட்டில் அறுவிற்றங்கி அறுதாய் முலையுண்டு உழன்மதில் சுட்ட தழல்நகைப்பெருமான் வணங்கி நின்றேத்தக் குரு மொழிவைத்தோய்; ஓமெனும் எழுத்திற் பிரமம் பேசிய நான்மறை விதியை நடுங்குசிறை வைத்துப் படைப்புமுதன் மாயவான் முதற்கூடித் தாதையுமிரப்பத் தளையது விடுத்தோய்; கூடஞ்சுமந்த நெடுமுடிநேரி விண் டடையாது மண்புகப் புதைத்த குறுமுனிதேற நெடுமறை விரித்தோய்; ஆறு திருவெழுத்தும் கூறுநிலைகண்டு நின்றாட் புகழுநர் கண்ணுட் பொலிந் தோய்; மணிக்காலறிஞர் பெருங்குடித்தோன்றி இறையோன் பொருட்குப் பரணர்முதல் கேட்பப் பெருந்தமிழ் விரித்த அருந்தமிழ்ப் புலவனும் பாய் பாரறிய நீயேயாதலின் வெட்சிமலர் சூழ்ந்த நின்னிருகழற்கால் குழந்தை அன்பினொடு சென்னிதலைக் கொள்ளுதும்." (இஃது கல்லாடம்) ஏனெனில் இந்நூல் முறையே ஒவ்வோராங்கங்களும் செவ்வனே எவ்வித வழுஉக்களு மின்றி, நிறைபெறும் பொருட்டும், "அறிவு நிலைகூடாச் சின்மொழி கொண்டு கடவுட் கூறுவுலவாவருத்தியும்" சனனப் பீழையுந் தள்ளாக் காமமும், தற்படுதுயரமு மடைவுகெட்டிறத்தலும், தென்புலக் கோமகன் தீத்தெறு தண்டமும், நரகொடு துறக்கத்துழல் வருபீழையும், நீளாதிம்பரின் முடித்து, மீளாக்காட்சிதருதி.! இன்றெனவே." என்பதன் பொருட்டுமேயாம். அன்புள்ள நண்ப! "பஞ்சிதன் சொல்லாப் பனுவலிழையாகச் செஞ்சொற்

புலவனே சேயிழையா எஞ்சாத கையேவாயாக கதிரே மதியாக மையிலா நூன் முடியுமாறு" என்பதற்கிணங்கி, எழுத்துணர்வித்தோன் இரண்டு திரு வடிகளையும், அடியேஞ் சிரமேற்கொண்டு வணங்கி, "சிவகோத்திரவைசிய விருத்தி" என்னும் இந்நூலை முறையாக வரையத் தொடங்குவாம். அஃதா வது,ஆண்டான் முதுமையும், அறிவானிளமையும் உடைத்தாய எம்முடைய கல்வித்திறன் காட்டற் கருதியோ? இன்றேன் "வறியார் இருமையறியார்" என்பானோர்ந்து, எம்பாற் சூழ்ந்து வருத்தும் கொடிதான வெறுமைநோய் களைவான் கருதியோ? இன்றேன், மகுடவணிக மணிகளான ஒவ்வொரு சகோதர, சகோதரிகட்கும் "சுடர் விளக்காயினும் நன்றாய் விளங்கிடத் தூண்டுகோலொன்று வேண்டும்" என்பானோர்ந்து, பேரறிவாண்மை என் னும் பெருந்திருவிளக்கினை, மீண்டும், மீண்டுந்தூண்டுவான் கருதியோ? இன் றேன், "மன்னுவுலகத்து மன்னியது புரிமோ" என்பான் கருதியோ? யாது காரணங்கருதி இந்நூல் நோற்பான்தொடங்கியது எனின், தெரிக்குதும். எ எம் அருமைச்சகோதரனே! எம்முடைய இருபஃதாவது ஆண்டுதொடங்கி இற்றைநாள் (அஃதாவது, எம்முடைய நாற்பஃதாவது ஆண்டுகள்வரை நம், இந்தியா, பர்மா, இலங்கை முதலான சில தேயயாத்திரை வாசியாகவே இருந்து வந்திருக்கின்றேம். ஆகலின், யாஞ் சென்றிருந்த ஒவ்வொரு நாடு நகரங்களினும், நமது, மகாசமுகத்தைச் சார்ந்த பலபேரறிவாளர்களின் கூட் டுறவும், நட்பும், ஆதரவுமே எமக்குக் கிடைத்தன, ஆங்காங்கு நிகழ்ந்த எல்லாச் சம்பவங்களையும் ஈண்டு ஒருங்கே வரைவதென்னின் அஃதொரு பெரும்புத்தகமாக முடியுமாகலின், அவைகளிற் சிலவற்றை மட்டும் மிகச் சுருக்கமாகக்கூறி முடிப்பாம். என்னை எனில், "அன்பினைந்திணைக்களவெனப் படுவது, அந்தணரருமறை மன்றலெட்டினுள் கந்தருவ வழக்கம் என் மனார்புலவர்" அஃதாவது, பண்டொருக்காலம் "உலகியனிறுத்தும் பொரு ண்மரபொடுங்க, மாறனும் புலவரும் மயங்குறுகாலை முந்துறும் பெருமறை முளைத்த வருள்வாக்கால், அன்பினைந்திணை யென்றறுபது சூத்திரம், கடலமு தெடுத்துக் கரையில் வைத்ததுபோற், பரப்பின் தமிழ்ச்சுவை திரட்டி மற் றவர்க்குத், தெளிதரக் கொடுத்த தென்தமிழ்க் கடவுள்" (இஃது கல்லா டம்) திருவாக்கிற் கிணங்கத் திருவருண் முடிப்ப, எம் இருபஃதொன்றும் ஆண்டின் யாம் காந்தருவ விவாகஞ் செய்துகொண்ட மனையாளோடும், எங் களின், இனபந்துக்களாவார் ஒருவருக்குமே உணர்த்துவான் இன்றி சுமார் ஆயிர ரூபாய்வரை பெறுமதியான, ஆடையாபரணங்களுடன், இரங்கோன் நமது பிள்ளையார் ஆலயமிருக்கும் இருபத்துநான்கா மிலக்கத் தெருப் போய்ச் சார்ந்து, எங்கள்பாலுடைத்தான, ஆபரணங்களிற் சிலவற்றை விற்றுண்பான் புக்கி ஓர் இல்லியன் மரீஇ வாழ்ந்து வருவான் தொடங்கிய சின்னாட்கட்கெல்லாம், எம்மனையாளின் தந்தையானவர், எந்தவாற்றானோ ஓர்ந்து, யாங்களிருக்கும் இடமுற்று, யாங்களிருவோரையுங் கண்டு மிகவும்

பேராநந்தமடைந்தார். அது கண்டயாம் எம் அறியாத்தன்மையை நினைந்து, மனமிறக்க நாணி அவர்களினின்றும் பிரிந்து நிராதார சம்பன்னனுய், இன்னதுதான் செய்வோமென்பன ஒன்றுந் தோன்றுமல் இரங்கோனுக்கு ஆறுவது மயிற்றாரத்திருக்கும் கம்பையைப் போய்ச்சார்ந்து, இப்பெரிய நமது மகா சமுகத்து, நகரவிடுதித் திண்ணையிலுட்கார்ந்து கொண்டிருந்தேம். இரண்டு நாளாயிற்று. "உண்டான போழ்து உடைந்துழிக்காகம்போல், தொண்டாயிரவர் தொகுபவே, வண்டாய் திரிதருங்காலத்துத் தீதிலிரோ வேன்பார் ஒருவரும் இவ்வுலகத்தில்" (இஃது நாலடியார்) என்பதற் கிணங்க உண்டீரோ வென்பார் ஒருவரையுமே ஆங்கு கண்டிலம். மூன்றுநாட் சோமவாரங்காலை ஏழெட்டு நாழிகைச் சுமாருக்கு குருபரன் தெரிசனத்துக்காக சா. அ. வீரப்ப செட்டியார் என்னும் பெரியார் ஒருவர் ஆங்குற்றூர். திண்ணையிலுட்கார்ந்து கொண்டிருக்கிற வொருவர் யாரென்று. ஆங்குடைத்தான பண்டாரத்தை வினுவ, அவர் எங்கோ திருநெல்வேலியாம். சைவராம். இரண்டு மூன்று நாட்களாக இங்ஙனந்தான் குந்திக்கொண்டிருக்கிறுரென அதனைக் கேள்வியுற்ற சிறிது பொழுதுக்கெல்லாம் வெளியே வந்த அச்செட்டியாரவர்கள், ஏன் ஐயா! நீங்களெந்தவூர்? சாப்பிடாதவர்போற் காணப்படுகிறதே! கோவிற் பிரசாதம் தரச்சொல்லுகிறேன் சாப்பிடுங்களென மிக உள்ளன்போடுங் கூறினுர்கள். "அன்பு நாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ டைந்து சால்பூன்றியதூண்" என்றும், "குணநலஞ்சான்றோர் நலனே பிறநலம் எந்நலத்துள்ளதூஉமன்று" என்றும் வந்த தேவர் திருவாக்கினின்றும் எழுந்த வேதவாக்குகள்,எம் அனுபவத்து அங்ஙனந்தான் பயனுடைத்தாயிற்று. அங்ஙனங் கூறி முடியவே, ஆங்குடைத்தான, எல்லாம் வல்ல நமதிறைவன் திருவருட் குமரரான குமரகுருபரன்றன் அர்ச்சகர் நாராயணபிள்ளையால் அக்காரம், பால் நெய்யுடன் சமைந்த சில நைவேதனங்களாகிய தேவவுணவுகளை ஓர் வெள்ளிக்கமலத்துக் கொணர்ந்து, தாயினுஞ் சாலத்தயைபுடைமையையுங் காட்டி, பாற்கடல் கடைந்தாங்கு நிகழ்ந்த அமிழ்தம்போன்ற இனிய வார்த்தைகளையுங் கூட்டிவைப்ப "அன்பைப் பெருக்கி யெமதாருயிரைக் காக்க வந்த, இன்பப் பெருக்காகிய" எண்குணமுடையார் திருவருட் பெருக்கம் இஃதேயாம்போலும் என்று உட்கி யுணர்ந்து உண்டுகளித்தேம். பின்னர் அச்செட்டியாரவர்கள் இரட்டைப் புரவிகள் பூட்டிய நான்கு சக்கரச் சகடமேறி இரங்கோனுக்கு போகுங்கால் சமீபத்திலிருந்த எம்மையுமழைத்து நீங்கள் ஈங்கிருக்கும் நாண்மட்டும், உங்கட்கு நாராயண பிள்ளையிடஞ் சொல்லியிருக்கிறேன், அவர்களுடன் சாப்பிட்டுக்கொண்டு சௌக்கியமாக இருங்கள், ஊருக்குப் போவதாயிருப்பின் என்னிடஞ் சொல்லிக்கொண்டு போங்களெனக் கூறி பத்து ரூபாய்க் கரன்ஸி நோட்டையும், ஏதேனுஞ் செலவு வந்தாலிருக்கட்டுமெனத் தந்துஞ் சென்றூர்கள். அன்று நாண்முதல் ஓராண்டுவரை, நமது, தேவபெருமான் திருவாய்மலர்ந்தருளிய

தமிழ் வேதமாகிய திருக்குறளைப் பாடஞ் செய்துகொண்டிருந்தேம். பின்னர் தாக்களா அழகப்ப செட்டியாரவர்களோடும் நட்புகொண்டு அவர்களாலேயே மாதாமாதம் இருபத்தைந்து ரூபாய்கள் தரப்பெற்று இரண்டாண்டுகள் வரை, இரங்கோன், பெ. மா. மதுரைப் பிள்ளை யவர்களின், பிரதம மகாவித்வான்களில் ஒருவராகிய பு. த. செய்யப்ப நாவலரவர்களிடமாக "சொல்லிய பொருண்மை சொல்லியாங் குணர்தலும், சொல்லிய பொருளொடு சூழ்ந்து நன்குணர்தலும், செய்ந்நன்றி யறிதலும், தீச்சார்பின்மையும், மடி, தடுமாற்றம், மானம், பொச்சாப்புக், கடுநோய், சீற்றம், களவே, காமம் என்றிவையின்மையும், சென்று வழிபடுதலும், அறத்துறை வழாமையும், குறிப்பறிந்தொழுகலும், கேட்டவை நினைத்தலும், பாடம் போற்றலும், மீட்டவை வினவலும், விடுத்தலும், உரைத்தலும் உடையராகி, நடையறிந்தியலுநர். நன் மாணுக்கர்" (இஃது, தொல்காப்பிய பாயிர விருத்தி) என்பதற் கிணங்க நின்று, பிங்கல நிகண்டும், நன்னூலும், நன்னூற்களாகிய ஏனைய சில நூற்களும், முறையாகப் பாடங்கேட்டு "கற்கை நன்றே" "கற்கை நன்றே" "பிச்சை புகினுங் கற்கை நன்றே" "கல்லாது நீண்டவொருவனுலகத்து, நல்லறிவாள ரிடைப்புக்கு, மெல்ல விருப்பினு நாயிருந்தற்றேயிராஅ, துரைப்பினு நாய் குரைத்தற்று" "கல்லாதான் சொற்காமுறுதன் முலையிரண்டு மில்லாதாள் பெண் காமுற்றற்று" "கல்லாதா னொட்பங்கழிய நன்றாயினுங் கொள்ளாரறிவுடையார்" "கல்லாத மூடரைக் காணவு மாகாதே, கல்லாத மூடர் சொற்கேட்கக் கடனன்று, கல்லாத மூடற்குக்கல்லாதார் நல்லாராம், கல்லாதபேர்கள் கலப்பறியாரே" "இளமையிற்கல்" இளமையிற் கல்வி சிலையிலெழுத்து" "கைபொருடன்னின் மெய்ப்பொருள் கல்வி" என்பனவாதியவான்றோர் திருவாக்குகளை, நன்குட்கியுணர்ந்து பயின்று, கல்வியின் மாட்சியிஃதாமெனத் தேர்ந்து, அதற்கோரறி குறியாகச் "சமயக் குறள்" எனப் பெயரிய முன்னூற்றுபத்துக் குறட்பாக்களைத் தம்மகத்துகொண்ட சிறு நூலொன்றையு மியற்றி யச்சிடுவித்தனம். பின்னர், மேற் கண்டவச் செட்டியாரவர்களிட மிருந்து ஓர் தொகைப் பொருளு மனுமதியும் பெற்றுக் கொண்டு, ஆங்காங்குடைத்தான பல நாடுநகரங்களையும், நமது, பாரத கண்டத்துடைத்தான பல நாடுநகரங்களையும் யாத்திரை செய்துகொண்டு நமது, செட்டிமண்டல மார்க்க மெமதூர் போய்ச் சார்ந்தாம். ஆகவே இதுகாறும் யாங் கூறிவந்த விடயங்களினின்றும், எம்முடைய கல்வியறிவு அநுபவம் சுருங்கச் சொல்லுமிடத்து "உடல், பொருள், ஆவி மூன்றையும், இப் பெரிய மகா சமுகத்துக்கே வுரிமையாக்கல் வேண்டுங் கடப்பாடுடையன வென்பதை அறிவாளிகளாயுள்ளா ரெவரு மறுக்க முன்வரார். ஆகலின், இந்நூனேற்றற்குரிய சுதந்தர மெமக்கு முள்ளதென்பது யாங்கூறாமலே நன்கு விளங்குவதொன்றாம். இனி யிந்நூனேற்றற்குரிய இரண்டாவது காரணங்களைப்பற்றியுஞ் சிறிது விளக்குவாம்.

எமதன்பார்ந்த நண்ப! மலர்தலை வையத்து, நமதுஆசியா கண்டத்து, தென்திசையிலே, கிழக்கு வங்காளக்குடாக்கடலையும், மேக்கிலரபிக்கடலையும், வடக்கில் இமயமலையையும், தெற்கி லிந்துமகாசமுத்திரத்தையு மெல்லைகளாகப் பெற்ற வெமக்குச் சொந்தமான இப்பாரத கண்டத்துத்தான் "இந்நாட்டுக்கோட்டை வைசிய மகாசமுகம்" ஆனதூஉம், உள்ளதூஉம், உண்மை யென்பாரொருவரை யாவர்தான் மறுக்கக்கூடும்? அறம் பொருள், இன்பம், வீடு எனப்படும் நான்கு புருடார்த்த விலக்கணங்களையும் எத்தகையார்க்கு மிகச் செவ்வையாக விளங்கக் காட்டப்படுவதூஉம்; மிக மேலான வினிமையும், நல்ல நீர்மையும், எழுத்துச் சொற்பொருள் யாப்பணி யெனப்படுகிற அங்கங்களும், தன்னை யடைந்தா ரெவர்கட்கும் பேரின்பம்பயக்கும் பெரியவோர் வன்மையும் தெய்வத்தன்மை வாய்ந்ததும், சுமாரிரண்டு கோடிமக்கட் கூட்டத்தார்க்குத் தாய்மொழியாக வுடையதுமாகிய, எமக்குச் சொந்தமான இச்செந்தமிழ் மொழிக்கே "இந்நாட்டுக்கோட்டை வைசிய மகாசமுகமும்" உரித்தான தென்பா ரொருண்மையை யாவர்தான் மறுக்கக் கூடும்? "காடுங்கரையு மனக்குரங்கு கால்விட்டோட வதன்பிறகே, ஓடுந்தொழிலாற் பயனுளதோ வொன்றுய்ப்பலவா யுயிர்க்குயிராய்; ஆடுங்கருணைப் பரஞ்சோதி யருளைப்பெறுதற் கன்புநிலை, தேடுஞ்சமய மிதுகண்டீர் சேர வாருஞ் செகத்தீரே" "சைவசமயமே சமயம் சமயாதீதப் பழம்பொருளைக், கைவந்திடவே 'மன்றுள்வெளி காட்டுமிந்தக் கருத்தைவிட்டுப்; பொய் வந்துழலுஞ் சமயநெறி புகுதவேண்டா முத்திதருந், தெய்வசபையைக் காண்பதற்குச் சேரவாருஞ் செகத்தீரே" "காகமுறவு கலந்துண்ணக் கண்டீரகண்டாகாரசிவ, போகமெனும் பேரின்பவெள்ளம் பொங்கித்ததும்பிப் பூரணமாய்; ஏகவுருவாய்க் கிடக்குதையோ வின்புற்றிட நாமினியெடுத்த தேகம்விழுமுன் புசிப்பதற்குச் சேரவாருஞ் செகத்தீரே" எனக்கூவியழைத்தப் பெருங்கருணைத் தடங்கடலுருவமாகிய, நமது, தாயுமானர் திருவாக்கான்வெளிப்படு நமது, சைவ சமயமாட்சியானதோர் புறநிற்பினும், தோற்றப்படுகிற மிகவும் பெரிதான இச்சகமிசையுடைத்தாக விளங்கும். ஏனைய பல சமயங்களும், தங்கள் தங்கட்குரிய மொழிகளானும் மொழிபெயர்த்து எடுத்துத் தெரிந்துகொள்வதற்குத் தகுந்த, உயர்தர மாட்சியுட்டங்கிக் கிடக்கும் எமக்குச் சொந்தமான், எம்முடைய சைவசமயமே "இந்நாட்டுக் கோட்டை வைசியமகா சமுகத்துக்கு முரியதா மென்பானொருண்மையையும் யாவர்தான் மறுக்குக் கூடும்? "யாதொரு தெய்வங் கொண்டீரத் தெய்வமாகியாங்கே, மாதொருபாகனார் தாம்வருவர், மற்றத் தெய்வங்கள்; வேதனைப்படுமிறக்கும் பிறக்குமேல் வினையுஞ்செய்யு, மாதலானிவையிலா தானறிந்தருள் செய்வனன்றே" என்ற, "சிவஞான சித்தியார்" போன்று, காணப்படுகிற முச்சகங்கட்கும், ஐந்து பூதங்கட்கும், பகலவன், மதியம் முதலாய வெவைகட்கும், ஏகநாயகனும், மாதொரு பாகனும், எல்லாம்வல்ல முழு

முதற்கடவுளாயும், எமக்குச் சொந்தமாயும் விளங்கப்படுகிற பரசிவப் பெருமானே, "இந்நாட்டுக் கோட்டை வைசிய மகாசமூகத்துக்கு முரித் தென்பானொருவனையும் யாவர்தான் மறுக்கக்கூடும்? "சமன்செய்து சீர் தூக்குங் கோல்போலமைந்தொருபாற்குக் கோடாமை சான்றோர்க்கணி" என்ற, செந்நாப்புலவரின் நன்னுமறைபோன்று, ஓரணுவளவுகூட நியாயக் கோடின்றி யாராயப்புகின் "வருணம்" இருவேறு பிரிவினதாம். அஃதாவது "பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்" என்பானொரு வேறுபிரிவும், "தேவர், மனிதர், விலங்கு, புள்,ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம்" என்பான் "எழுவகைத் தோற்றம்" மற்றோர் வேறு பிரிவுமாம். இவ்விரு வேறு பிரிவுள், தொழிற் பேதத்தான் ஒரு வேறுவகையும்,சிருட்டி பேதத்தான் மற்றோர்வேறு வகை யுமென்பானறிஞரா யுள்ளாரெவரு மொப்பமுடிந்தனவேயாம். தொழிற் பேதத்தானிகழும் வருணபேதத்தினும், சிருட்டி பேதத்தானிகழும் வருண பேதமே மிக்க வுயர்வுடைத்தென்பதை யாவர்தான் மறுக்க முன்வருவார்? எத்துணையோ சிறந்தவொரு எவரானு மறுத்தற்கியலாத (இயற்கையில்) சிருட்டி பேதத்தானிகழ்ந்த, வருணத்தைக் கவனிக்கப்புகின் "இந்நாட்டுக் கோட்டை வைசிய மகாசமுகமும்" எம்முடைய மனிதவகுப்பைச் சார்ந்த வொருபெருஞ்சமூகமே என்பானுண்மையையும் யாவர்தான் மறுக்கக்கூடும்.

அபேதகட்சியை யொழித்தும், பேதக்கட்சிபிற் சிறிது விழித்தும் சில வற்றை விரிப்பான் றொடங்கி விளக்குதும். அஃதாவது, நமது, வைசியமகா சமூகம், பொருளீட்டும் வன்மையையுந் தன்மையையும், அதனானிகழுந் துன் பங்களையும்பற்றி யுணர்வான் புக்கு அஃதொரு வெவரானும் வரையுந்தரத் தல்லனவாகவே முடியும். ஒருவாறு கூடியமட்டி லவைகளொருங்கையும், மிகச் சிந்தித்து விரிப்பான் றொடங்கனு மீண்டைக்கஃது பொருத்தமாகா வாம். எனினும், தங்கள், தங்களின் பான்மணமாருப் பாலர் முதலாயமனை யாண் மக்களையும், சுற்றத்தாரையும் விட்டுப் பிரிந்து, "வைசியர்க்சழகு வளர் பொருளீட்டல்" "திரைகடலோடியுந் திரவியந்தேடு" என்ற வேதவாக்கியங் கட்கிணங்கி, ஆயிரக் கணக்கான மயிற்றாரங்களையு மிகப்பயங்கரமான கடல் யாத்திரை புரிந்து, பலவயனகரங்கட்குஞ் செல்வான் றொடங்கிச் சென்று, மூன்று நான்கு வருடமொரே கணக்காக ஆங்கு தங்கி, பெரும்பான்மையு மொருவிடயத்தை யாய்ந்தோர்ந்து பகுத்துணரும் பேரருஞ் சக்தியற்றவர்க ளான "துருக்கர், சிங்களர், சோனகர், சீனர், பர்மியர், கோங்கர், தெலுங்கர், மலா யியர் முதலாயவேனைய பலவகுப்பாரோடும் பெருநட்பு குழீஇ, மிக்கவிதம் பதமாகத் தொழின்முறைகளைக் கொண்டு நடாத்திப் பேரறிவாண்மையோடு மிலக்குக் கணக்குகளிற் பொருட்களை மீத்துத் தங்களின் றாய்நாடாகிய இவ் விடத்துக்குக் கொணர்ந்து, பாண்டிவள நாட்டினொரு பகுதியாகிய சாதாரண நம் தமிழ்நாட்டை யித்துணைக்குபேர நகரங்களாக வாக்கிய இவ்வொரு பேர ருஞ் செயற்கும் நம் நாடாற்ற பாலனவாயகைமாறி யாதுகொல்! மேலும்

தங்களின், சுயநலங்களை மிகுதியுங் கருதாது, நமது, சைவசமயத்தை யெவ்வாறபிவிருத்தி செய்வோம், வேதாகமங்களை யெவ்வாறு மறையோர்கள்பால் விளங்கச் செய்வோம், அவைகளின் சாராம்ஸங்களை யெவ்வாறு வெளிப்படுத்வோம், "தேவர்குறளுந் திருநான்மறைமுடிவு, மூவர் தமிழு முனிமொழியுங்--கோவை; திருவாசகமுந் திருமூலர் சொல்லு, மொருவாசக மென்றுணர்" என்றவாற்றை யோர்ந்து நந்தமிழ் மறையாகிய திருக்குறள், தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், திருமந்திரம் வேதவேதாந்த சாரமாகிய சித்தாந்த சாத்திரங்கண் முதலிய, நஞ்சமயக் கல்விகளையும், சமயக்கொள்வகைகளையும், இந்நிலவுல கெங்கணு மெவ்வாறு பரவச் செய்வோம்; நந்தமிழ் பாடையை யெவ்வாறு வளர்ப்போம்; ஏழையெளியோரை யெவ்வாறு பாதுகாப்போம், வேத பாடசாலைகள், ஆகமபாடசாலைகள், தேவாரதிருமந்திர திருவாசக பாடசாலைகள், அறக்கூழ்ச்சாலைகள், குருபூசாமடங்கள், பசுமடங்கள், நந்தனவனங்கள், முதலியவைகளை யாங்கு, யாங்கமைப்போம்: பூர்வீகச் சிவாலயங்களை, யெவ்வாறு பன்னெடுங்கால மீண்டு நிலைநிற்கச் செய்வோம்; ஊருணிக ளெங்கெங்கமைப்போம், பல நல்ல நீதிமார்க்கங்களை யெவ்வாறு நிலைநிறுவச் செய்வோம்; எந்த மார்கத்தாற் பெரும்புகழ் படைப்போம்; பேரறிவாண்மையைப் பகற் கொள்ளைக்காரனாகியக் காலக்கொடுமையின் பாற் பறிகொடுத்துத் தேங்குஞ் சில மடாதிபதிகளையு அன்னோரன்ன சில குருநிலகோக்களையு மெவ்வாறு திருத்தியமைப்போம்; என்பன வாயப்பல நல்ல மார்க்கங்களையு மிகப்பூரணமாகச் சிந்தித்து, தீரத் தெளிந்து, "நீரிற் குமிழியிளமை நிறைசெல்வ நீரிற் சுருட்டு நெடுந்திரைகணீரிலெழுத்தாகுமாக்கை" என்பானோர்ந்து, நம்முடைய மகாசமுகமானது, தம் பகுதியல்லாத பிறபகுதியைச் சார்ந்த வயனாடு நகரங்களினும், எத்துணைச் சத்திரங்கள், எத்துணைக் குருபூசைமடங்கள், எத்துணைப் பசுமடங்கள், எத்துணைப் பாடசாலைகள், எத்துணைச் சிவாலயங்கண் முதலிய கட்டிடங்களைக் கட்டி முடித்திருக்கின்றது. அவைகளொருங்கு முறையே நடைபெறும் பொருட்டு எத்துணைத்தொகைப் பொருள்களை யென்றைக்கு மழிவுறா வண்ண நிலைக்க நிலைநாட்டி வைத்திருக்கின்றது. எத்துணைத் திருப்பணிகள், திருவிழாக்கள், கும்பாபிடேகங்கண் முதலிய சில அரிய பெரிய விசேடங்களை பெரும் பொருட் செலவோடு நடாத்திக்கொண்டு வருகின்றது. எத்துணை யூருணிகள், எத்துணை நந்தனவனங்களையாக்கி வைத்திருக்கின்றது எத்துணையறப் பெருஞ் செயல்களைக்கையாண்டு வருகின்றது. எத்துணைக் கல்விச்சாலைகளுக்குப் பெரும்பொருள் கொடுத்துதவி வருகின்றது. எத்துணைச் சங்கங்களைத் தாபித்திருக்கின்றது. எத்துணை யகரங்களைக் கட்டி மறையோர்க்குத் தானங் கொடுத்து வருகின்றது. எத்துணைக் கன்னிகாதானங்களைச் செய்து வருகின்றது. எத்துணை மடாதிபதிகளைத் திருத்தியமைக்க முன்னின்று வருகின்றது. இன்னுமிவைகள்போன்ற எண்ணிலடங்காத எத்துணையோ பல நன்

மைகளையுஞ் செய்து வருகின்றதே? இவைகளை யெல்லாஞ் சிறிது முணராத வ்யல் வகுப்பா ரெவரேனு முளரா? பான்மணமாறாப் பாலர்கட்குக்கூட விஃது நன்கு விளங்குமே? இப்பெரிய வைசிய மகாசமுகமானது ஏனைய பகுதியாருக் கென்னை யடிமைப்பத்திரமா வரைந்து கொடுத்திருக்கின்றது? இவ்வாறு செய்துதான்றீர்தல் வேண்டுமெனக் கட்டாயச் சட்டத்தையா நமதிறைவன் கற்பித்திருக்கின்றான்? "கைமாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டென்னாற்றுங் கொல்லோவுலகு" "ஊருணி நீர் நிறைந்தற்றே யுலகவாம் பேரறிவாளன்றிரு" என்ற திருக்குறட்கன்றோ விலக்காகக் காணப் பெறுகின்றது. சமயாபிவிருத்தியையும், பாஷாபி விருத்தியையும் எத்துணை தூரங்கவனித்து வருகின்றது. ஆனாலித்துணை தூரஞ் சிறந்த வள்ளற்றன்மை பூண்டு, நமது பாரதமாதாவிற்கும், நமது, சைவசமயத்துக்கும் பெருந்தொண்டு புரிந்து, மலையிலக்காக இஞ்ஞாலத்துக்கே அழகுவாய்ந்த வொரு திருமுகம்போன்று விளங்கும், "இந்நாட்டுக்கோட்டை வைசிய மகாசமுத்தின்" மாட்சியைப் பற்றியும், நாளுக்கு நாண் மேன்மேலும் வளர்ந்தோங்க வேண்டுமாறுகளைப் பற்றியும், "இம்மகாசமுகம் வேண்டிநிற்கும் சில திருத்தமார்க்கங்களைப் பற்றியும்" பிறபகுதியாரைச் சார்ந்த வெவரேனு மொருவர் ஞாபகப்படுத்தவாவது முன் வந்ததுண்டா? எற்றானுஞ் சிறந்த விம்மகாசமுகமானது, தம்முடைய மாட்சியை தாமே புகழ்ந்து வரைந்துகொள்ளுமா? தாமே புகழ்ந்து பேசவுஞ் செய்யுமா? இப்பெரிய சமுகத்தைச் சார்ந்த சிறுவர் சிறுமிகளிடத்துங்கூட அவ்வழக்க மெட்பிளவன்னவுங் கிடையாதே? இச்சமுகத்தைப் பற்றிச் சிறிதாய்ந்து நோக்குழி ஆ! ஆ!! எத்துணைக் கௌரவம், எத்துணை விவேகம், எத்துணைச்சாந்தம், எத்துணையடக்கம், எத்துணைக் கீர்த்தி" எத்துணைத் தன்மைவன்மை "எத்துணைக்கருணை" எத்துணையாழ்ந்த கருத்துடைமை முதலியவைகளும், பெருஞ் செய்கைகளுந் தெற்றென விளங்குகின்றது, எமதாப்தநண்ப! ஈண்டுஞ் சிறிது கவனிக்க புகின், இம்மகாசமுகத்தினின்றும் எத்துணை நாவல்லர்கள்" "எத்துணை வித்வான்கள்" "எத்துணைக்கவிராயர்கள்" "எத்துணைச் சாத்திரிமார்கள்" "எத்துணை யாழ்ப்பாணத்தோர்கள்" "எத்துணைச்சித்தாந்த நிபுணர்கள்" "எத்துணைப் பௌராணிகன்மார்கள்" ஆயிரக்கணக்காய்பகற் கொள்ளையிட்டுக் கொண்டுபோய் இற்றைக்கும் வாழ்ந்துவருகிறார்களன்றோ? "இச்சகம் பேசுங் கொச்சை மக்களாய்த் திரிந்து" "பிச்சைக்குழுத்த குடிவாழ்க்கை பேசுங்கா லிச்சைபல சொல்லியிடித்துண்கை" என்பான் றொடக்கத்திணங்கி யெத்துணையோ பெயர்கள் செல்வவந்தர்களாய் விளங்குகிறார்களன்றோ? எத்துணையோ பெயர்கள் தொலைக்குக் கடிதங்கள் பெற்றுக்கொண்டு போகிறார்களன்றோ? எத்துணையோ பெயர்கள் பிள்ளையார் கோவில்கட்டுகிறோ மென்றும், குருபூசா மடங்கட்டுகிறோமென்றும், திருப்பணியாற்றுகிறோமென்றும், சங்கந்தாபிக்கப் போகிறோ மென்றும் பாய்க்கதை கூறிபொருள் பெற்றுக்கொண்டு போயினார்களன்றோ? நியாய

விரோதமென மிக நன்கு தெரிந்துகொண்டு மிகையான பொருள்களைப் பெற்று, எத்துணை வக்கீல்கள் இலக்காதிபதிகளாயிருக்கிறார்களன்றோ? பகற் கொள்ளைக் காரர்களாய் எத்துணை யுத்தியோகத்தர்கள் கொள்ளையிட்டுக் கொண்டு போயிருக்கிறார்களன்றோ? எத்துணை யந்தணர்கள், எத்துணைச் சைவர்கள் இலவசமாய்ப் பொருள்பெற்று செல்வவந்தர்களாயிருக்கிறார் களன்றோ? இம்மகாசமுகத்துக்கு பிறபகுதியார்களா லுபகாரமில்லா தொழி யினும், உபத்திரவமில்லாமலு மில்லையே, யாங்ஙனமெனின்? திருப்பணி களாற்றப் புகுவதில் ஆங்காங்குடைத்தான சில செல்வவந்தர்களாலும், தர் மகர்த்தர்களாலும், அதன் மேனிற்குங் கமிட்டியார்களாலும், மடாதிபதி களாலும், எத்துணையோ அளவுகடந்த கட்ட நட்டங்களேயன்றோ வேற் படுகின்றன. அவைகளொருங்கையும் விரிப்பான்றொடங்கி னஃதெல்லையிற் பெரிதாயன்றோ வளர்கின்றது. இத்துணைத்தன்மையில், இப்பெரிய வைசிய மகாசமுகத்துக்கு பிற பகுதியைச் சார்ந்த யாயொரு சிறியேமாற்றுஞ் சிற் சில சிறு நற்செய்கைகட் கென்னை சுதந்தர மில்லாமலா போய்விடும்? இனி வருங்கால நாகரீகங்கட்குத் தக்கவாறு, நமது, மகாசமுத்தின், நறும்புகழ் நிலைகளையும், நமது, பூர்வீகக் கொள்கைகளையும், சரித்திரத்தையும் மிகச் செவ்விதாய் நாம் வரைந்து வைத்தல் வேண்டாவோ?நம்மனோரவைகளைமிக நன்றாகப்படித்துப் பார்த்துப் பேரானந்தப்படுதலும் வேண்டாவோ? நமது பின்சந்ததியார்களின் வாழ்நாட்களுக் கவைகளொருங்கும் பயனுடைத்தா கல்வேண்டாவோ?நமது பூர்வீகக் கொள்கைகளையும்,சமயக்கொள்வகைகளை யும் பாதுகாத்தல் வேண்டாவோ? நமது, மகாசமுகத்தைச்சார்ந்த சிலசகோ தரர்களை பிறசமயத்தையும் சாரவிடலாகுமோ? "உலோகாயதமெனு மோண் டிறற்பாம்பானுந்" தீண்டவிடலாகுமா? "மிண்டியமாயாவாத மென்னுஞ் சண் டமாருத" ச்சுழலானது, சுழித்தடித்து, ஈர்த்துக்கொண்டு போவதையும், நம் மனமாரப் பார்த்துக்கொண்டி ருக்கலாகுமா? சம்மாற் கூடுமானவரை யவ் விடத்துக்கும், அத்தேக்கத்துக்குந் தக்க வயிழ்தங்கள் கொடுத்துவரல் வேண்டாமா? நமது, மகாசமுகத்தைச் சார்ந்த பேரறப்பணியாளர், பேர றத்திருப்பணியாளர், பெரும்புகழாளர் முதலிய பெரியார் சரித்திரங்களொ ருங்கையு மிகநன்கு வரைந்து, அழகிய புத்தகங்களாக்கி நமது, சிறுவர் சிறு மிகளை நன்குபடித்து வருமாறு செய்தலும் வேண்டாமா? நமது செல்வவந் தர்களிலொரு பெரியார் நினைப்பினும் மேற்கண்ட பேரறப்பணிக ளென்னை யத்துணைப் பெரியவைகளாகவா போய்விடும்? இவைகள் போல்வன பலவற் றையு மிகச் செவ்வனே ஞாபகப் படுத்துவான் பொருட்டுத்தான் நமது, "நாட்டுக் கோட்டை வைசியம்"என்னு மாதாந்தப் பத்திரிகையும் ஏற்பட் டன. நண்ப! இதன்மேல் வரும் விடயங்கள் சிலவற்றை நன்கு கவனித் தல் வேண்டுமாய் வேண்டுகிறேம். காலவர்த்தமானத்தை நினைத்து "நமது சமூக வூழியங்களையும்" இத்தக்கணமே செய்ய முன் எழவேண்டுமாய், நுங்க ளின் மேலான கனத்தைப் பன்முறை பிரார்த்திக்கின்றேம்.

எமதாப்த நண்ப! யாம், ஏதோ சிறிது விவேகமுடையே மென்பது, அடியேமுடைய கருத்தாம். அதினின்றும், எம்முடைய பாரத கண்டத்துக்கும், எம்முடைய சிவசமயத்துக்கும், எம்முடைய தமிழ் பாடைக்கும், எம்முடைய தமிழ்ச் சமுகங்கட்கும், வேண்டுந் திருத்தங்களேயும், அவைகளேச் சார்ந்த நன்மைகளேயும் எம்மாற் கூடுமானவரை செய்தல் வேண்டுமென்றும், அவ்வாறு செய்தற் கெஞ்சியவோர் நல்லறச் செயல் பிறவேதுமில்லையென்று மிகச்செவ்வையாகத் தெரிந்ததாம். அதினின்று மிகவாழ்ந்த கருத்தோடுமோறிய சிந்தையோடுங் கூடியோர் நிலேயின்று பரியாலோசிப்பான் புகுந்த வோரளவில், நமது "நாட்டுக்கோட்டை வைசிய மகாசமுகமானது" நமது பாரதமாதாவுக்கு, ஓர் திருமுகம்போல்வதாயும்,நமது, சைவசமயத்துக்கோர் சிறந்த நால்வர்களாற் பதிகம் பெற்றுத் திருவருட்டன்மை நிரம்பிய சிவாலயம் போல்வதாயு முடைத்தாமென்றும்,ஆகலின், நமது நாட்டுக்கோட்டை வைசிய மகாசமுகத்தின் நறுப்புகழ் நிலேகளே யணிபெற வரைவது, எமதுபாரத மாதாவின் திருமுகத்தை யணிபெறச் செய்தலேயே யொக்குமென்றும் நமது,மகாசமுகத்துக்காக வேண்டுஞ் சில திருத்த மார்க்கங்களேப் பற்றிஞாபகப்படுத்துதலே ஒரு பெரிய சிவாலயத் திருப்பணியாமென்றும் தீர்மானித்துக் கண்டாம். இந்நிலவுலகத்துக் காணப்பெறும் ஒவ்வொரு சிவாலயங்களும், நமது, மகாசமுகமாகிய சிவாலயத்துக்குக் கிளேகளேயாகும். ஆகலினுற்றுன், இந்நூனேற்கத் தொடங்கியதாமென்க.

எம் அருமைச் சகோதர! நமது, பாரதமாதாவிற்குத் திருமுகம் போல்வதாயும், நமது,சைவசமயத்துக்கோர் சிவாலயம் போல்வதாயும் "எத்துணேயோ சீலம்" "கௌரவம்" "பொறை" "நாகரீகம்" 'பேரறிவாண்மை' "தயை" "அரசபக்தி" "தெய்வபக்தி" "ஒருமைப்பாடு" "சர்வமதசகோதரத்துவம்" "அடைந்தோர் புரத்தல்" "மனேதைர்யம்" "அன்பு" "வரத்தகத்தேற்றம்" என்பான் ஞெடக்கத்தின்னேரன்ன வெத்துணேயோபல நற்குண நல்லொழுக்கங்க ளியற்கையிலேயே பூரணமாக நிறைந்து விளங்கும் "பிரதான வைசியர்களாகிய" நமது, மகா சமுகத்தினின்றும், இற்றைநாள் வரை நம்மிந்தியாவினும், ஏனைய பல பாகங்களினும் நடைபெற்றிருக்கும் அறப்பணி திருப்பணி புறவறப்பணிகளெல்லா மொருங்கே கணக்காக வாராய்ந்து, பொருட்டொகை யோர்வானெருவன், ஓர்ந்துழி வட்டி முதற்கூட்டிக் கணக்கியனேக்கினஃது பதினைந்துகோடி ரூபாய்கட்கு மேலாமென்றே மதிப்பிடுவானன்றோ? இத்தகையவொரு மேலான வறப்பெருஞ்செயல்கள் நம்மிந்தியாவினுடைத்தான வேனைய வெந்தச் சமுகத்தாராலாவது, ஒருவாறு கவனிக்கப் புகின் நமது, அரசாங்கத்தாராலாவது செய்யப்பெற்றிருக்கின்றனவா? இத்துணேச் சிறந்த பேரறப்பணிகளொருங்கையுந் தொகைவகை விரிப்பான் ஞெடங்கிக் கணக்கியன் முறைமரீஇ நன்கிலக்கணமமைய வரைந்து வைத்தல் வேண்டுவதூஉம் இக்காலத்து, ஆவசியகமே

யாமன்றே? நமது, மகாசமுகத்தின் இற்றை நாணிலையை நோக்கின் கேவல மெய்ப்போலியன்றி யெத்துணையோ சிறந்த "சிவஞான யோகதத்துவ நூலா ரொருவரான்றே" இந்நூனேற்பான் றொடங்கியிருத்தல் வேண்டும். என்று லவர், "மனத்தினை யொருவழி நிறுப்பது நிறையே' "நிறுத்திய வம்மனநிலை திரியாமற், குறித்த பொருளொடு கொள்ளுதனினைவே" "ஆங்ஙனங்குறித்த வம்முதற் பொருளொடு, தான் பிறனுகாத்தகையது சமாதி' என்பான் றொடங்கிச் சமாதியாய் நின்று விடுகின்றாராகலின், அன்னோர்க்கஃது தோற் றுவென்பது நன்கு விளக்கமாம். பின்னர் நமது மகாசமுகத்தைச் சார்ந்த பெரியரோவெனின், அவர் தம் சமூகப் பெரும்புகழ் நிலைகளும், சரித்திரத் தொடர்களும், அஃதாயிர முகத்தா னகன்றதா யிருப்பினும், தான்றற் புகழ் தற்றகுதியன்றே யென்பான்றேர்ந்து, அவைகளை விரிப்பான் றொடங்கலிற் றுந்தலையிட்டுக் கொள்ளாரென்ப தெத்தகையபலரு நன்குணர்ந்ததோர் தேற்றமாம். ஆகலினுற்றுன் இந்நூனீனுற்றலை பெற்றுனுந் தாழ்ந்த சிற்றறி வுடையேமாகிய யாமெடுத்துக்கொள்ள நேர்ந்தன. இன்றேலிம் மகாசமுகத் துப் பெரும்புகழ் நிலைகளும், சரித்திரத் தொடர்களும், ஒருவரான் வரைந்து புத்தகமாக்கலாகாது நின்று போய்விடுமோ வென்னின்? தெரிக் குதும். அஃதாவது, நம்மிந்திய தேய்த்துட் பிறந்த வெத்தகையார்க்குந் தங்கடேயத்துப் பெரும்புகழ் நிலைகளையும், சரித்திரங்களையும் முறையாக வரைந்து வைத்துக்கொள்ளல் வேண்டுமென்றவோரவா எந்தக்காலத்து மேயின்றும். ஆகலினஃது, நமது மகாசமுகத்தார்க்கு மரபில்லையாய் போ யிற்று. என்றுலஃது இனி வருங்காலத்துக்குப் பொருந்தாமை காண்டல் நமது மகாசமுகத்தைச் சார்ந்த வொவ்வொருவர்க்குங் கடமையாம். நாங்கவனித்து வரைந்து தற்கால நிலைமைக்கேற்ப வோர்நூன்முறையாகப் பாகுபடுத்திப் புத்தகமாக்குதலிற் காலந் தாழ்த்துவோமாயின், காலக்கிரமத் தில் பிள்ளைப்பூச்சிகள் சுண்டெலிகளாக மாறும், சுண்டெலிகள் எலிகளாக மாறும், எலிகள் மூடிகங்களாகமாறும், மூடிகங்கள் பூனைகளாகமாறும், பூனை கள் நாய்களாகமாறும், நாய்கள் ஓநாய்களாக மாறும், ஓநாய்கள் குரங் குகளாக மாறும், அக்குரங்குகள்தான், தற்கால மனுஷியர்களாய் மாறு கிறுர்களென வுண்மையைக் கண்டுபிடிக்கும், ஆராய்ச்சி வல்லுநர்களாய மேனுட்டுத் தத்துவ சாத்திர நிபுணர்கள் சிலரும், அவர்களின் ஒழுக்கப் பழக்கவழக்கக் கல்வியாதிகளை மேற்கொண்ட நம் நாட்டு நிபுணர்கள் பலரும் இவ்விடயத்தினு நுழைந்து, அவர்களின், நூதன விவேகத்தைக் காட்டி, "நமது,இந்து தேயச்சரித்திரம்" "நெல்ஷன் மேனுயல்" 'டீசுராக்கண்டரி' "சதரன் இண்டியா" முதலிய சிலநூற்களைப்போன்று, நமது, தேயச்சரித் திரங்களை யெட்பிளவுகூடச் சரிவரத் தெரிந்துகொள்ளாதவர்களாய், தங்க ளின் மனம்போன போக்கில் வரைந்து வைத்து விடுவார்கள். நமது, பூர்வீ கத்தைப்பற்றி யொரு சிறிதளவு முண்மை தெரிந்து கொள்வானுற்றலில்லை

யென்பான் ஜெடக்கமவர்கள் வரைந்து வைத்திருக்கிற நூற்களே நன்கு சாட்சிபகருமன்ரு? சிறிதேறக்குறைய வோரிருபஃதாயிர மாண்டுகட்கு முன்னரே நந்தாய் மொழியான தமிழ்ப்பாடையின்கண் "நம்போன்ற மனி தர்க்கு நரரேன்றும்" இக்காலத்துங் குரங்குகளாகவே காணப்படுகிற"குரங் கிற்கு" "வானரர்" அஃது, "னலமுன்றனவும் ணளமுன்டணவுமாகுந்த நக் களாயுங்காலே" என்பானோர் விதிமரீஇ "வால்+நரர்" எனப்பிரிந்து, இரண் டாம் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்தவன் மொழித் தொகையாய் வாலையுடைய நரர் எனப்பொருள்படுமாறு பெயர்கள் காணக்கிடக்கின்றன. மீண்டும், இன்னோரன்ன சிலரின் ஆராய்ச்சி வன்மைகளை பற்றிச்சிறிது விரிப் பான்றொடங்கினஃது, சாகரமேபோன்று பெருகுவதாம். சாதாரணமான நமது "தமிழ்" என்னு மொழியைப்பற்றி யன்னோர் விவகரிக்கு மற்புதம், அறிவுடையாரெவரும் வியத்தற் பாலதேயாம். அஃது, பூர்வத்தில் 'திமிலம்' என்றும், அதன் பின்னர், திரமிளமாகத் திரிந்ததென்றும், பின்னர் தென் மொழியாகத் திரிந்ததென்றும், அதன் பின்னர், திராவிடமாகத்திரிந்த தென்றும், இக்காலம் தமிழாகத் திரிந்து வழங்குகிற தென்றும், ஒரு சிறி தளவுகூடநாண வெட்கமின்றி யக்கற்றறி மூடக்கயவோர் சிலர் வரைந்து புத்தகமாக்கிப் பள்ளிச்சிறுர் பலரைப்படிக்கவுஞ் செய்திருக்கின்றனர். இத் தகைய சில விடயங்களை யீண்டு விரிப்பான்றொடங்கலு மிகையா மென்றஞ் சிவிடுக்கின்ரும். மேலும், இந்து தேயசரித்திர மென்ற புத்தகத்தில் நம்மிந் தியரைப்பற்றி யன்னோர் வரைந்திருக்குஞ் சில முக்கிய விடயங்களியாவும், எந்தக்காலத்து நம்பாரத கண்டத்துடைத்தான தன்ரும், வரையறுத்துக் கூறுவதற்கியலாத வெத்துணையோ பல நெடுங்காலங்கட்கு முன்னரே யிருந்தும் நம் பாரதகண்ட முயர்தர நாகரீக தசையுட்டங்கி வாழ்ந்து வந் திருக்கின்றதாம். அதற்கென்னை சாட்சிய மொன்றுனும் வேண்டாமோ வெனின்? வேண்டும். நமது பூர்வீகப் பெரியோர் நாழிகை, நாள், வாரம், பக்கம், மாதம், அயனம், வருடம், யுகம், இங்ஙனமாகக் காலத்தையள விட்டுப் பிரித்திருக்கிருர்கள். நாள், வாரம், பக்கம் அயனம், வருடங்கள் மாறி மாறி நிகழ்வதைப் போன்று 17 லக்கத்து 28 ஆயிரம் வருடமாகிய கால வட்டத்தைக் கொண்ட "கிரேதாயுகமும்" 12 லக்கத்து 96 ஆயிரவரு டங்களாகிய காலவட்டத்தைக் கொண்ட திரேதாயுகமும், 8 லக்கத்து 64 ஆயிரம் வருடங்களாகிய காலவட்டத்தைக் கொண்ட துவாபரயுகமும், 4 லக்கத்து 32 ஆயிரத்து வருடங்களாகிய கால வட்டத்தைக் கொண்ட கலி யுகமும், ஆக 43 லக்கத்து 20 ஆயிரம் வருடங்களாகிய காலவட்டத்தைக் கொண்ட வெத்துணையோ சதுர்யுகங்கண் மாறி மாறி நிகழ்ந்திருக்கிறதாக தற்காலநாகரீக தசையுட்டங்கிக் கிடக்கும் எத்துணையோ பல பெரியாரு மொப்பத்தகுந்தவநேக நூன்முறைச் சட்டங்கள் காணக்கிடக்கின்றனவன் ரே? இக்கால நிரணயஞ் செய்திருக்குந்தன்மை யொன்றிலிருந்தேனும் நம்

பாரத கண்ட மெந்தக்காலத்தும் நாகரீக நிலைமையுட்டங்கியுள்ளதே என் பான் றெடக்கம் நன்கு விளங்குகிறதோவன்றோ? இத்துணையதீதக்கால மாய் மகோன்னத நிலைமையில் வாழ்ந்துகொண்டிருக்கும் நம்பாரதகண்டத் துக்கு இக்காலத்து ஒரு எவரான் சரித்திரவரன்முறை கண்டுபிடித்து வரை தற்கியலும்? இன்னுமிவைபோன்ற வநேககாரணங்கள் காணக்கிடக்கின் றன. இவைகளை யுணராத பிறர் "மாறு கொளக்கூறல்" "வழூஉச்சொற் புணர்த்தன்" "மயங்கவைத்தன்" "வெற்றெனத்தொடுத்தன்" மற்றொன்று விரித்தன்" முதலிய குற்றங்களோடு நமது, மகாசமுகத்தின், இந்நூலையு நோற்பான் றெடங்கற்கு முன்னரே நாந்தொடங்கி முடித்தல் நன்னலம் பயக்கு மென்றுன்னியே யாந்தொடங்கியதா மென்க. சிறிதேறக்குறைய விற்றைக் கிருபஃதாண்டுகளாக நமது, மகாசமுகத்துக்காக வேண்டு மநேகவிடயங்களை வரைந்து வைத்திருக்கின்றேம். அவைகளில் "நாட்டுக் கோட்டைவைசியம்" என்னுமாதாந்த நூல்வழியாய் வந்த நாற்பதைம்பது விடயங்கள்போக மீதமச்சாக வேண்டியனவாய், எமதுழி தங்கியிருக்கின்றன. இதற்கிடையில் இத்தகைய நூலொன்றை முன்னதாக முடித்து அச்சு இடு வித்தே யேனைய நோக்குதல் வேண்டுமென்றெண்ணி யிந்நூலைக் கூடிய விரை விற் பூர்த்தியாக்கினேம். இந்நூல் இரண்டாவது பாகமும் கூடிய விரைவில் அச்சுவாகன மேறி வெளிவருமாறு, எல்லாம், வல்ல இறைவன் திருவருள் சுரப்பானுகுக. இந்நூன் மிசை பதினோர் அங்கங்கள் உள்ளன.

I "நூன்முகம்"
II "கடவுள் வாழ்த்து, மாணிக்கவாசகம்"
III "நமது, மகாசமுகத்துக்குரிய சிறப்புப் பெயர்கள்"
IV "நமது, பூர்வீகமாட்சி"
V "நமது, மரபியன் மாட்சி"
VI "நமது சமயக் கொள்கையும், சுதேசபாஷையும்"
VII "செட்டிமண்டலச் சதகம்" [களும்'
VIII "நமது, தற்காலமாட்சியும், நம்மனோர்வசிக்கும் நாடுநகரங்'
IX "நமது, தொழின்முறை மாட்சி"
X "நமது, அறப்பெருஞ்செயல்கள்"
XI "நாம் எந்த ஞான்றும் மறவாதிருக்க வேண்டுஞ் சிலஞாபகக்குறிப்புகள்"

இப்பதினோர், அங்கங்களுள், இப்புத்தகத்து வராதனவொருங்கும், "சிவகோத்திரவைசிய விருத்தி" இரண்டாம் பாகம் என்னும் புத்தகமாக வெளிவருமென்று நமது நண்பர்கள் தெரிந்துகொள்ளல்வேண்டும்.

இங்ஙனம்,

ஆக்கியோன், ப. சொ. ஆண்டியப்பன்,

பாளையங்கோட்டை.

உ

திருச்சிற்றம்பலம்.

# இரண்டாவது அத்தியாயம்

## கடவுள் வாழ்த்து

---

"மாணிக்க வாசகம்"

"கைக்கும் பிணியொடு காலன்றலைப் படுமேல்வையினால்
எய்க்கும் கவலைக்கிடைந்தடைந்தே னிணைநா வளைத்துப்
பைக்கும் அரவரையான்றந்த பாய்மத வானைபத்துத்
திக்கும் பணிநுதற்கண் திருவாளன் திருவடியே"
(ஔவையார்)

"நாடும்பொருட்சுவை சொற்சுவை தோய்தர நாற்கவியும்
பாடும்பணியிற் பணித்தருள்வாய் பங்கயா சனத்திற்
கூடும்பசும்பொற் கொடியே கனதனக்குன்றும் ஐம்பாற்
காடுஞ்சுமக்குங் கரும்பே சகலகலா வல்லியே" (குமரகுருபரர்)

அன்பார்ந்த ஐய! "பொன்னகர்கூடற் சென்னியம் பிறையோன் பொதியப்பொருப்பன் மதியக்கருத்தினை, கொங்கு தேர்வாழ்க்கை செந்தமிழ்க்கூறிப், பொற்குவை தருமிக்கற்புடனுதவியது" (இஃது கல்லாடம்) முதற்கொண்டு, ஒப்புமுயர்வுமல்லாதனவாய, அற்புதத் திருவிளையாடல்கள் பல நிகழ்ந்ததூஉம், பக்கஞ்சூழ்ந்த நெடுநகர்முன்றிற் கோடகழ்ந்தெடுத்த மறிநீர்க்காலும், வெண்கார்பெய்யுநாள் குறித்துழூநரும், சூனிறைந்துளையுஞ் சுரிவளைச்சாத்து, மினக்கயலுண்ணுங் களிக்குருகினமும், வரைப்பறைய றைந்தவாசவற்றெழுது, நிரைநிரை விளம்பி வழி முடிநடுநரும், நாறுகழிதுற் றசகடீர்க்குநரும் தாமரை பாடமெறுகாற்கிளையும், முறைத்தெறிக்கம்பலையும் பரைத்தாவி, முடித்தலைதிமிர்ப்பவடிக்கடி கொடுக்கும், அள்ளற்பழனத்தணி நீர்கூடல்" (இஃது கல்லாடம்) கள் பல சூழ்ந்ததூஉமான எம்பாண்டிவள நாட்டின், தனவைசிய ரத்னசிகாமணிகளாகிய, எமதன்பார்ந்த நண்ப! நமது சைவசமயத்துமுதற் குரவர் பெருமானாகிய "திருவாதவூரடிகட்கு" "மாணிக்கவாசகர் எனக்காரணப்பெயர் கொடுத்த பெருந்தகைப்பெருமான் யாவர்? அவர்தான், "வெடிவாற்பைங்கட்குறு நரியினத்தினை. யேழிடந்தோன்றியிந் நூற்கியைந்து, வீதிபோகிய வாலுளைப்புரவி, யாக்கிய விஞ்சைப்பிறைமுடி



''நாத பிந்து கலாதி நமோ, நமோ
வேத மந்திர ஸ்வரூபா நமோ, நமோ
ஞான பண்டித ஸ்வாமி நமோ, நமோ வெகுகோடி

நாம சம்பு குமாரா நமோ, நமோ
போக அந்தரி பாலா நமோ, நமோ
நாக பந்த மயூரா நமோ, நமோ பரசூரர்

சேத தண்ட விநோதா நமோ, நமோ
கீத கிண்கிணிபாதா நமோ, நமோ
வீர சம்ப்ரமதீரா நமோ, நமோ கிரிராஜ

தீப மங்கள சோதி நமோ, நமோ
தூய அம்பர லீலா நமோ, நமோ
தேவ குஞ்சரி பாகா நமோ, நமோ அருள்தாராய்

ஈதலும் பல கோலால பூஜையும்
ஓதலும் குண ஆசார நீதியும்
ஈரமும் குருசீர்பாத சேவையும் மறவாத

ஏழ்தலம் புகழ் காவேரியால் விளை
சோழ மண்டல மீதே மனோகர
இராஜ கெம்பீர நாடாளும் நாயக வயலூரா

ஆதரம் பயில் ஆரூரர் தோழமை
சேர்தல் கொண்டவரோடே முன்காளினில்
ஆடல் வெம்பரிமீதேறிமா கயிலையில் ஏகி

ஆதியந்தம் உலா ஆசு பாடிய
சேரர் கொங்குவை காவூர் நன்னாடதில்
ஆவினன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே''

யந்தணன்'' ஆம், அன்றோ! மேலும், "உரகன்வாய் கீண்டமாதவன்போல, மண்ணகழ்ந்தெடுத்துவரு புனல்வையைக், கூலஞ்சுமக்கக் கொற்றாளாகி, நரைத்தலை முதியோளிடித்தடுகூலிகொண், டடைப்பதுபோல வுடைப்பது நோக்கிக், கோமகனடிக்கவவனடிவாங்கி, யெவ்வுயிரெவ்வுலகத்தெத்துறைக் கெல்லாம், அவ்வடிகொடுத்த வருணிறைநாயகன்'' (கல்லாடம்) உம், ஆமன்றோ. ஐய! அத்திருவாதவூரடிக டிருவாய்மலர்ந்தருளிய, மதுரவாசகங்களு ளொரு சில திருவாசகங்களையே யெனினுமெடுத்துத், தந்தூய்மையான மனத்தானே, தெய்விகத்தன்மையோடுகூடிய விளஞ்சூரியப் பிரகாசம் போன்ற தம்மறிவின்பாற்படுத்தி நன்குசிந்திப்பான் றொடங்கிச் சீர்தூக்கி யாராயப்புகுவார் கல்வியறிவா னெத்துணைச்சிறந்த மகாவல்லுநரேயெனினும், அவ்வாசக மாட்சிகளையும், "எழுத்துச் சொற் பொருள் யாப்பு அணி முதலிய அவ்வாசகப் பொருண்மாட்சிகளையும் பற்றி வரையறுத்துக் கூறமுடியாததொன்றேயாகும். எனினும், நமக்கு முன்னைப் பெரியரும், உயர்தரக்கல்வியறிவோடுகூடிய, சிவஞானயோகப் பெருஞ்செல்வப் பேறுடையருமான சிலரானமக்குத் தந்தருளப்பெற்ற சில பாக்களைப் பெரிதுங் கவனிப்போமாகுக. அஃதாவது, "தேனும்பாலுந் தீங்கன்னலுமமுது மாய்த் தித்தித்து, ஊனுமுள்ளமுமுருக்க வுள்ளொளி யுணர்ந்தின்பம், ஆனவாறு தேக்கிப்புறங்க சிவதொத்தழியா, ஞானவாணி வந்திறுந்தன ளன்பர்தந்நாவில்'' "தொல்லையிரும் பிறவி சூழுந்தளை நீக்கி, யல்லலறுத் தானந்தமாக்கியதே, யெல்லை மருவாநெறியளிக்கும் வாதவூரெங்கோன், றிருவாசகமென்னுந் தேன்'' (திருவாசகம்) "வேதமோதின் விழிநீர்பெருக்கி, நெஞ்சநெக்குருகிநிற்பவர் காண்கிலேந், திருவாசகமிங் கொருகாலோதிற், கருங்கன்மனமுங் கரைந்துகக்கண்க, டொடுமணற்கேணியிற் சுரந்துநீர்பாய, மெய்மயிர் பொடிப்பவிதிர், விதிர்ப்பெய்தி, யன்பராகுனரன்றிமன்பதை யுலகின், மற்றையரிலரே'' (நால்வர் நான் மணிமாலை) "பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ள, மூழ்கிய புனிதன் மொழிந்தவாசகமே வாசகம், அதற்கு வாச்சியந், தூசகலல்குல்வேய்த்தோளிடத்தவனே'' "திருவார் பெருந்துறைச்செழுமலர்க்குருந்தின், நீழல்வாயுண்ட சிகரிலானந்தத், தேன்றேக்கெறியுஞ்செய்ய மாணிக்கவாசகன் புகன்ற மதுரவாசகம், யாவருமோது மியற்கைத்தாதலின் பொற்கல சிகர்க்கும், பூசுரர் நான்மறை மட்கல சிகர்க்கும், மதுரவாசகமோதின் முத்தியுறுபயன், வேதமோதின் மெய்ப்பயனறமே'' (நால்வர் நான் மணிமாலை) என்றற்றொடக்கத்தான் வந்தனவேசாலும், மிக்கவிரிப்பான்றொடங்கில் வரம்பின்றிப் பக்கம் பெருகுவதோடும் மிகைபடக்கூற லென்னும் பிழைபாடு மெழுமேயென்றஞ்சி நிறுத்தினும், இத்தகைய வபாரசக்திகளமைந்து கிடக்குமத்திருவாசகங்கட்கு மாணிக்கவாசகமெண, நமதிறைவன் பெயர்கொடுத்திருக்கின்றார். ஆனால், அத்திருவாசகத்தினிடத்து, அம்மாணிக்கப் பொருட்கு நிகரான வபாரசக்திகளெண்ணையமைந்து விளங்

குகிற தென்பதுபற்றிச் சிறுது கவனிப்பாம். அங்ஙனமானூற்றுன், அவ்வாசகங்களின் மாட்சிகண் மிகுதியு நமக்குப் புலப்படுவதொன்றும். ஆகலின், எமதாப்த நண்ப! சிறிது நண்குணர்ந்து நோக்குக.

மாணிக்கம், மரகதம், வைரம், வைடூரியம், கோமேதகம், புருடராகம், நீலம், முத்து, பவளம் என்பனவாய வொன்பான் ரத்தினங்களுள்ளும் ஏனைய பல்வகை நிதிகள் செல்வமாதிகளுள்ளும் மாணிக்கம் முதன்மை பெற்ற தொன்றும். அஃதே, போன்று. "சுவர்க்க மத்திய பாதலம்" ஆகிய மூவுலகத்துங் காணப்படுகிற எவ்வாசகங்களுள்ளும், எவ்வேதாகம புராணேதிகாசங்கள் தருக்கம் வியாகரண முதலியவெவைகளுள்ளும், எச்சுலோகங்களுள்ளும் எச்சூத்திரங்களுள்ளும், இவ்வாசக முதன்மை பெற்ற தொன்றுமென்பதை யெவர்கட்கும் வெள்ளிடை மலைபோற்றெள்ளிதின் விளங்கப் புலப்படுத்துவான் பொருட்டு, எல்லாம்வல்ல நமது, முழுமுதற் கடவுண், மாணிக்கவாசகமெனப் பெரும்பெயர் கொடுத்தும், அழகிய திருச்சிற்றம்பலமுடையாரெனக் கையொப்பம் வைத்துஞ் சென்றனராமென்க. மேலும். அம்மாணிக்கத்தினிடத்தமைந்து கிடக்கு மபாரசக்திகள் குணமும், பொருளுமேயாம். எனின், அதன் குணத்தைப்பற்றி முதன்முதலாகக் கவனிப்பாம். அஃதாவது, "தாமரை, கழுநீர், சாதகப் புட்கண், கோபம் மின்மினி, கொடுங்கதிர், விளக்கு, மாதுளைப்பூ, விரை, வன்னியீரைந்து மோதுசாதுரங்க வொளியாதும்மே" "திலகம், உலோத்திரம், செம்பருத்திப்பூ, கலிமலர்க்குன்றி, முயலுதிரம்மே, சிந்துரம், குக்கிற்கண்ணென வெட்டும் எண்ணிய குருவிந்தமன்னியநிறனே" கோவைநற் செங்கற் குராமலர் மஞ்சளெனக் கூறிய நான்குங்கோவாங்கு நிறனே" (தேரையார் இரத்தினப் பரீக்ஷை) எனப் பெரியார்வரையறை செய்திருக்கின்றுராகலின் இம்மாணிக்கத்துக்கதன் குணமே நிறமென்பதூஉம், அதனிறமே குணமென்பதூஉந் தேற்றமாம். ஒருவாறு பொதுமை நோக்கிக் கவனிக்கப்புகின், அம்மாணிக்கத்தின் குணஞ் செவ்விய தன்மையாகலின், அவ்வாசகத்தின்றன்மையுஞ் செவ்விபதா யிருத்தலாமோர் தன்மைபற்றியுமாமென்க. இனி அம்மாணிக்கத்தின் பொருளைப்பற்றியுஞ் சிறுது விளக்குதும்.

அஃதாவது, அம்மாணிக்க வியாபாரத்தா னீண்டகாலத்தனுபவத்துக்கும், அதனூற்றேர்ந்து தெளிந்து முடிவான கல்விக்கும், அதனுனிகழு நுண்ணியவறிவுக்கும் தக்க தக்கவாறே அம்மாணிக்கத்தின் குணகுணங்களும், பொருண்மதிப்பாகிற ஏற்றந்தாழ்வுகளும் பார்வையாலேற்படுவன போன்று, அம்மாணிக்க வாசகங்களிடத்தும், நீண்டகாலமயாழ்ந்த கருத்தோடும் ஆராய்ந்துவந்த வனுபவத்துக்கும், அதனூற்றேர்ந்து தெளிந்த தேற்றமாகிய கல்விக்கும், அதனூற் சந்தேகவிபரீதங்களற பிரகாசித்த வொள்ளிய அறிவிற்கும், தக்கதக்கவாறே "நோக்கரிய நோக்கத்தான்" அவ்

வாசகத்தின் குணகுணங்களும், அதன் பொருளிலக்கண வேற்றந் தாழ்வுகளு மிகநன்கு விளங்குவதொன்றும். அஃதியாங்ஙனமென்னின் தெரிக்குதும். செல்வச்செழுமையும், வியாபாரத்தேற்றமு மல்லாத சிற்றூர்களில் வாசஞ்செய்கிற சாதாரண வொருரத்தின வியாபாரியிடம் விலையேறப்பெற்றவோர் மாணிக்கத்தைக் கொண்டுபோய்க் காட்டின், அவன்றனத்துணைக் காலமுங் கண்டிராதவக்கல்லை முதன்முதலாக வென்னகல்லென்று மதிப்பான்? பின்னரதன் குணகுணத்தையும் பொருணிலை மதிப்பையும் யாங்ஙனங்கண்டு தெளிவான்? ஆனால், அதைப்பற்றி யேதோவொன்றைமட்டுஞ் சொல்லிமுடிப்பான்! மீண்டுமவனினின்றும், சிறிது பெரிய வியாபாரியிடஞ் சென்று காட்டின் அவன், இஃதொருமாதிரியான செகப்புத்தான். செங்கற் கற்போன்றதா யிருக்கின்றது. இஃதீங்கு யாருக்குத்தேவை. ஒரு கடுக்கன் கிடுக்கன் கட்டி விற்போமென்றாலும், கன்மிகவும் பெரிதாயன்றோ காணுகிறது. ஆயினு மிதற்கோரைந்நூறு ரூபாய்கள் வரை கொடுக்கலாமென்பான். மீண்டுமவனினின்றுஞ் சிறிது பெரிய வியாபாரியிடஞ்சென்று காண்பிப்போமாயின், அவன் இஃது, செட்டி நாட்டுக்காணுற்பிடிக்கும், நமது நாடுகளி லிஃதெடுபடாதென்பான். நமது, செட்டி நாட்டைச் சார்ந்தவொரு தேர்ந்த பரிசிலகரான, நல்ல வியாபாரியிடங் கொண்டுபோய், "ஆம் ஐயீர்! இதனை நன்கு நோக்குமின், நமது நாட்டிற் கிஃதெவன்கொற் பிடிக்குமோ? இதன் குணகுணத்தையும், பொருணிலை மதிப்பையும் நனிவிளங்க நோக்கித் தெளிந்து, சொன்மின்" எனக்காண்பிப்போமாயின், அவரதனை வாங்கிநோக்கி மிகநன்கு தெளிந்து, இஃது மிக வுயர்ந்த பழைய செகப்புத்தான். இதற்கியாதோ ரையமுமின்றும். தற்காலப்போலியன்றும். இதனை யாவர் கொணர்ந்திருக்கின்றூர்? பெருந்தொகை பெறும்போற்றன் காணுகின்றது. ஆனலிதனைச் சாணையிற்பிடித்து, செய்யவேண்டும் விதமாய் வேலைகளைச்செய்து கவனிப்போமாயின் நல்ல தொகையோடு மேவுமென்பார். இங்ஙனமே யம்மாணிக்க வாசகங்களையும், அவைகளின் குணகுணங்களையும், பொருணிலைகளையும்பற்றி யிஞ்ஞாலத்திற் காணப்படுகிற பலதிறப்பட்ட மதவாதிகளான வொவ்வொருவரும் "சமயவாதி கடத்த மதங்களிலமைவதாக வரற்றிமலைந்தனர்" என்பான்றொடக்கத்து விளங்கக்கண்டு ஒவ்வொரு விதமாகவே கூறுவார்கள். ஆகலினனும் "மாணிக்கவாசகம்" என்ற பெயராமென்க.

"ஒன்றுவது கடா" ஆம் ஐயீர்! "மாணிக்கவாசகம்" என்பான்றொடங்கித்தாங்கூறி வருகிறதொரு நுங்கும் கவனிக்குமிடத்து வொருவாறு நன்றாகத் தானிருக்கின்றன. "மாணிக்கமாகிய கல்லையுமதன் குணமாகிய வொளியையு மொன்றைவிட்டொன்று பிரியாத விரண்டையு மிங்ஙனமொன்றாகக் கண்டோமே? இஃதே போன்றவ்வாசகத்தையும், அவ்வாசகத்தோடு கூடியபொருளையும் ஒன்றைவிட்டொன்று பிரியாத விரண்டையும் இங்ஙனம், நாம் ஒன்றாகக் கண்டாந்தன்மையில்லையே?

"இரண்டாவது கடா" மாணிக்கவாசகமென வியாங்ஙனம் பொருத்தம்? வாசகமாணிக்கமா? சொன்மாணிக்கமா? எழுத்து மாணிக்கமா? செவிப்புலனுமணுத்திரளொலி மாணிக்கமா? ஆக்கியகர்த்தா மாணிக்கமா? அவ்வாசகத்தோடுகூட விரண்டறக் கலந்துவிளங்கும் பொருண்மாணிக்கமா? இறைவன் கொடுத்த காரணமேயாமன்று? எக்கருத்து மெந்தத்தன்மையுநோக்கி மாணிக்கவாசகமென்ற பெரும்பெயர் பொருந்தக்கூடும்? நுட்பமதியல்லார் சிலர்க்கு நன்குவிளங்குமாறு கூறுமின். ஈசன் வாக்குக்கெதிர் வாக்கு யாங்ஙனங் கூறுவோமென்றஞ்சன்மின். "இந்திரனுக்குப்போல" "நமதுடம்பொருங்குமே கண்களாகக்காட்டினு நமது பாட்டுக்குற்றமே குற்றமென்ற நக்கீரர்" போன்றருட்கவிப்புலவராக விரும்புமின், யாவையுமாய்ந்தோர்ந்து தக்கவிடை கொடுமின்.

"மூன்றாவது கடா" மாணிக்கவாசகமென்ற தொடர்மொழியின் இலக்கணமென்னை? ஆம் ஐயீர்? தாங்கடாவிய கடாக்கண் மூன்றுமிக நன்றாயிருக்கின்றன. ஆவசியகமான கடாக்கடான். நம்நுட்பமதியுமாழ்ந்த கருத்துமிக நன்குபுலப்படுகின்றன. இதன்மேனிகழ் விடயங்களைச் சிறிது நன்குணர்மின். சிறிது பொறுமையாயடங்கியிருந் தாய்ந்தோர்ந்து நோக்குமின். "இனிமையும், நீர்மையுங்கூடிய புதியகரும்பெனவே நும் பேரறிவிற்குச் சுவைதரும்" "நுண்ணுணர்வினரோடுகூடி நுகர்வுடைமை, விண்ணுலகேயொக்கும் விழைவிற்றால்" என்பான் மிக்கப் பொருத்தமாயிருக்கும். "நுண்ணுணர்வின்மை வறுமையஃதுடைமை பண்ணைப்பணைத்த பெருஞ்செல்வமென்பானுமக்கினிது விளங்கும். நும்பிறவிப் பிணிநீங்கும். "மாணிக்கம்" ஆகிய வரிவடிவாகியவும், ஒலிவடிவாகியவுமான இவ்வைந்தெழுத்தையுங்கூட்டி நோக்குழியஃதோர் பொருளா? ஓர்பொருளின் பெயரா? அஃதோர் பொருளின் பெயர்தான். அப்பெயர்க்குரித்தான வோர்பொருளெங்கே யிருக்கிறது. அஃதெமதில்லத்துப் பெட்டியுளிருக்கின்றது. எங்கேயெடுத்துக்கொண்டு வம்மின்காணுவோம்? ஆம் ஐயீர்! இதோவிருக்கின்றது நோக்குமின். ஓ! ஓ! இதுதானோ? ஆம். இதுதான். அங்ஙனமாயின், இதன்மிசை "மாணிக்கமென்றற்குரிய" வரிவடிவெழுத்துக்களையும், ஒலிவடிவெழுத்துக்களையும், என் காணவில்லை? ஆ! ஆ!! மிகநன்றாயிருக்கின்றது. இஃதென்னையையா யீங்ஙனங்கடாவுகின்றீர்? விழுச்சுடர் செம்பொன் மேருமால்வரை என்று நாமெத்துணைப் பலதரமீங்கு வரைந்துகொண்டாலும், ஈங்கு பகர்ந்துகொண்டாலும் அஃதிருப்பான்றொடங்கலெத்துணையோ பலநெடுங்காவதங்கட்கும் வடக்கன்றோ? "ஏட்டுச்சுரைக்காய் கறிக்ககப்படுங்கொல்லோ" ஒருபொருண்மிசை யதன் பெயருட்கார்ந்துகொண்டிருப்பதையும் ஒருபெயர்மிசையதன் பொருளுட்கார்ந்து கொண்டிருப்பதையும், நும்மாற் சிறந்த வித்துணைக்கால வனுபவத்தினுமெங்கேனுங் கண்டதுண்டா? கேள்விப்பட்டதாவதுண்டா? மெத்தப் படித்தார்க்குப்

புத்தி முட்டென்பான் பழமொழி மிக்கச்சரி. அங்ஙனமாயின் ஓர் பொருண்மிசை யதன்பெயரும், ஓர் பெயர்மிசை யதன்பொருளும் இல்லையோ? இல்லை. வேறு, வேறாகத்தானிருக்கின்றது. அங்ஙனமாயின், எமதன் பார்ந்த ஐயா! நும்பெயரென்னே? எம்பெயரும் மாணிக்கவாசகர்தான். எமதன்பிற்சிறந்த ஓ ஐயா! மாணிக்கவாசகம்! என் ஐயீர்! இதோதானே நும்முன்னிருக்கின்றேன். காணாதார் மாதிரி யெதற்காக விளிக்கின்றீர்? என்! ஓ! ஓ!! இஃதென்னவியப்பு! நும்பெயர் நும்மிசை இல்லையெ? நீவிரெங்ஙனம் ஏனென்று கேட்டதும், இத்துணைவார்த்தைகள் பேசியதும்? சிறிதாலோசித்துணர்மின் மீண்டும், பான்மணமாறா வொருசிறுவனை நோக்கி ஏ அப்பா! இஃதென்னமரம், எனக் கேட்பின். அதற்கவன் ஆம் ஐயா, இஃதுமா, இஃதுபலா, இஃதுகொய்யா, இஃதுதென்னை, இஃதுவாழை, இஃதுவேம்பு என அதனதன் பெயரைச்சொல்லியந்தந்த மரத்தையுஞ் சுட்டியொருசிறிதளவு சந்தேகமுமின்றிக் காட்டுவானேயன்றே? அப்பொருள்களின்மிசை யப்பொருள்கட்குரிய பெயர்களில்லா திருப்பின், அச்சிறுவனெவ்வாறு கண்டு கூறுவான்? நும்பெயர்கூறி விளித்தவங்ஙனம் நீயிர் எவ்வாறே னெனக்கேட்டீர்? பெயர்கள் வேறுயும், பொருள்கள் வேறுயுமுள்ளன வென்பானெமக்கும் உடன்பாடுதான். எனின், காரியம் விளங்கவில்லையே, காரணமென்னே? நுமதறிவின் பாற்படுத்திச் சிறிதுசிந்தித்துத்தெளிந்து சொன்மின். ஆம், ஐயீர்! இக்கடாவிற்கு விடைகொடுக்கத்தக்க பேரறிவாண்மை யெமதுழியில்லையாகலின் நுங்களாற்றான் "உடையார் முன்னில்லார்போலேக்கற்றுங்கற்றார், கடையரே கல்லாதவர்" (திருக்குறள்) என்பதற்கிலக்காகத் தெரிந்துகொள்ள வேண்டியவனுக நிற்கின்றேம். மேலும், ஒருவர் தெரிவிக்கத்தெரிந்து, கொள்ளுமாற்றலோடுகூடிய மனிதவர்க்கத்தார். எல்லாம்வல்ல முதல்வன் காரணமாயும் அவனருள் பெற்றுய்ந்த பெரியார்காரணமாயும் ஒருவர், கல்வியாதியபலவிடயங்களையுந் தெரிவிக்கத் தெரிந்தமட்டில் ஒருவர் சிறியராயும் ஒருவர், பெரியராயுங் காணப்படுகின்றனர். ஆம் எம்பீ! இங்ஙன நன்குணர்வாயாகுக. காணப்படுகிற சர்வாண்டபிண்ட சராசரங்களாகிய வொவ்வொருபொருள்களின் பெயர்களும், அவ்வப்பொருள்கட்குரிய சர்வவிலக்கணங்களும், ஒருவர் தெரிவிக்க வொருவர் தெரிந்துகொண்டமட்டின், அவ்வவராக விளங்கும்" "இருதிறனறிவுள்ளதாகியவான்மா, அல்லது,சிவம், அல்லது பிரம்மம் ஆகிய ஓர் சக்தியினிடத்தே தானமைந்து கிடக்கின்றன". ஒருவர் கற்கும், எத்துணையோ அளவு சங்கையற்ற கல்விப் பொருளொருங்கையும், அவர்மயமாயும், சர்வவியாபகமாயும், "ஆன்மா" என்னும் பெயரோடு கூடினதாயுமுடைத்தான, ஆன்ம சக்தியினிடத்தே கொண்டுபோய்க் கணக்கியலோடு வைத்ததூஉம், பின்னர் வேண்டுங்காலங்களிற் கணக்காக வெளியே ஆங்கிருந்தெடுத்துக்கொணர்ந்து தருவதூஉம், அவர் தம்நான்கு கரணங்களி

லொன்ருகிய மனக்கணக்கன் ருெழிலேயாம். ஆம் எம்பீ! நீயிர்! இதுகாறும் யாங்கூறிவந்ததினின்றுந் தெரிந்துகொண்ட தென்னே?

ஐயா! "மாணிக்கம்" என்ற வார்த்தையானதோர் பொருளின் "பெயர்ச் சொல்" என்பதூஉம், அத்தகைய வொவ்வொரு பொருளின் பெயர்களும், சர்வவியாபகப்பொருளெதுவோ வதனிடத்தே தானமைந்து கிடக்கின்றன வென்பதூஉம், மாணிக்கத்துக்குரிய மாட்சிக ளெவைகளோ அவைக ளொருங்கும், அம்மாணிக்க வாசகங்கட்கு முள்ளனவாமென்பான்ருெடக் கத்து ஒரு சில பகுதிகளும், ஆம். இனி வாசகமென்பது பற்றிச் சிறிது விளங்க வுரைப்பீராகுக.

அஃது "உரிச்சொல்" அதன்பொருள் "வசனம் பாசுரம் வார்த்தை யும் வாசகம்" என்பார் பிங்கலந்தைச் சூத்திரம். இஃது உவமத்தொகை. உவமம் என்பது, ஒரு பொருளோடு, ஒரு பொருளினே, "உவமையும், பொளும் ஒத்தல்வேண்டும்" என்ற காப்பியத்திற் கிணங்க ஒப்புமைகூறுத லாம். தொகை என்பது, அதன் உருபுதொக்கி நிற்றலாம். அஃது, சுட் டிக்கூறுவுவமம் எனவும் பெயர் பெறும். "பவளவாய்" என்றவழிச் சுட் டிக்கூறுவுவமாம். "சுட்டிக்கூறுவுவமமாயிற், பொருளெதிர் புணர்த்துப் புணர்ந்தனகொளலே" என, பாப்பல புகழும், யாப்பினுட் சிறந்த, தொல் காப்பியவிதி நோக்கி, ஆண்டுப் பவளத்தினேயும், வாயினேயுங் கூட்டிப்பார்த் துச் செம்மைக் குணம்பற்றி "உவமம்" செய்ததென்று, அதன் இலக் கணத்தை நன்கு கண்டு தெளிந்து, பவளத்தைப் போலுஞ் செந்துவர்வாய் என சுட்டிகூறும் உவமமாக விரித்துக்கூறுதல் வேண்டுமாம். "பவளம் போற் செந்துவர்வாய்" என்பது சுட்டிக் கூறியவுவமமாம் இவ்வுவமம், "வினைபயன் மெய்யுருவென்ற நான்கே, வகைபெற வந்தவுவமத்தோற்றம்" (இஃது, தொல்காப்பியம்) என்பதற்கிணங்க வினை வழியானும், பயன்வழி யானும், மெய் வழியானும், உருவழியானும் பிறக்கும் என்பதாம். என்ன வே, அங்ஙனம் பிறத்தற்குரிய இடங்கள் "சிறப்பே நலனே காதல் வலியோ டந்நாற்பண்பும் நிலைக்களமென்ப" என்ற காப்பிய விதிபோன்று, சிறப்பு நலன், காதல், வலி ஆகிய இந்நான்குமாம். ஆகவே, இனி "மாணிக்கவாச கம்" என்றவழி, அஃது, சுட்டிக்கூறப்படாத சிறப்பாகியநிலைக்களத்தினின் றும் பிறந்து, உருவுவமமாகத் தோற்றி, அறிவுடை யொருவரான் ஆய்ந் தோர்ந்து காணுங்காலஃது, மாணிக்கம் போன்றவசனம், மாணிக்கம்போன் றபாசுரம், மாணிக்கம்போன்ற வார்த்தை யென்பனவாகவிரிந்து, மாணிக்க வாசகம் படித்தானென்புழி "ஒன்றன் பெயரானதற்கியை பிறிதைத்தொன் முறையுரைப்பனவாகுபெயரே" என்பான்ருெடக்கத்தாய்ந்து நோக்குழி யஃது, மாணிக்கமும், வாசகமுமாகிய வியற்பெயர்பொருளேயு முணர்த்தாது. அன்மொழித் தொகையாகிய வம்மாணிக்கவாசகத்தையுடைய புத்தகத் தையுமுணர்த்தாது, ஆகுபெயராகி யொன்றன் பெயரானதற்கியைந்த மற்

றுன்றை விரிப்பான் றொடங்கி யம்மாணிக்க வாசகங்களோடு கூடி யிரண்டறக் கலந்து, எங்கணும் பரிபூரணமாக நிறைந்து, எந்த வாற்ருனு மொப்புயர் வற்றனவாகச் சிறந்து விளங்குந் "திருச்சிற்றம்பல முடையாரை" யேயுணர்த்து முகத்தான் அவர் தம்பிரபாவங்களையே படித்தாமென்பனவாக எவர்கட்குந் தெற்றென விளங்கப்பொருள்படும். இஃதென்போலெனின்? 'பொற்ருமரைக்கட் பூசனைபுரிந்தான்' 'என்புழி,யஃது' பொன்னுந்தாமரையுமாகிய வியற்பெயர் பொருளையுமுணர்த்தாது அன்மொழித்தொகையாகிய, அப்பொற்ருமரையையுடைய அத்தடாகத்தையு முணர்த்தாது, ஆகுபெயராகி, அத்தடாகத்தின் கரையையே யுணர்த்து மாறுபோலென்க.

இனி, நீவிர்கடாவிய வொன்ருவது கடாவில் "மாணிக்கமாகிய கல்லையும், அதன்குணமாகிய வொளியையும் ஒன்றைவிட்டொன்று பிரியாமலவ் விரண்டையு மிங்ஙனமொன்ருகக்கண்டோமே" என்றீர், அஃதுண்மைதான் அம்மாணிக்கமாகிய அக்கற்குமதன்குணமாகிய வொளிக்கும் உரியதோர் தொகைப் பொருள், ஐந்தோ பத்தோ, நூருே, வாயிரமோ ஒருவாறஃதெத்துணையோ, அத்துணை பொருள்களையும், சூக்குமமாயவ் வொளியோடுகூடிய அக்கன்மிசை தொக்கி நிற்கக் கண்டீரேயன்றி தூலமாகவக்கன் மிசை கண்டிரோ? ஆம், ஐயா? காணவில்லை. பின்னாப்பொருள்களெங்கே யிருக்கின்றன? எவரோவொரு தனவந்தரிடஞ்சாதாரண எவருங்காண்டற் கியலாதவோர் பெட்டியுளிருக்கின்றன. ஆகவே, அத்தொகையைத் தாந்தூலமாகக் காணவில்லையன்ருு? பின்னரஃதே போன்று அவ்வாசகத்தையு மவ்வாசகத்தோடு கூடியபொருளையும், ஒன்றைவிட்டொன்று பிரியாமல் அவ்விரண்டையும் நாம், ஒன்ருகக் கண்டாந்தன்மையில்லையே யென்றீர். அஃதேன் கண்டாந்தன்மையில்லை? அவ்வாசகத்தோடு கூடியபொருள் குணந்தானே வன்ருே? அக்குணங்களாவதென்னை, வரிவடிவெழுத்துக் களும், ஒலிவடிவெழுத்துக்களுமேயன்ருு? ஆகவேயவைக ளுணர்த்தும் பொருள் "திருச்சிற்றம்பலமுடையா" ராகிய பரசிவவிலக்கணம், பரசிவப் பிரபாவம், பாசநீக்கம், வீடுபேறு முதலியவைகள் தானேவன்ருே? அவைகள் தான், அவ்வாசகத்தோடு கூடியொன்றை விட்டொன்றுபிரியாமல் மிகச்சிறப்பினவாயோரளவுசங்கையின்றி பூரணமாக நிறைந்து பெருகியமுதசாகரமாய்த் ததும்புகின்றனவே? "வலமமூவுயரிய நலமலிகங்கை நதிதலைசேர்ந்த நற்கருணைக்கடன் முகந்து, உலகுவப்பவுகந்த மாணிக்கவாசகனென்னுமொருமாமழைபொழிந்து, திருவாசகமெனும் பெருநீரொழுகி,ஓதுவார்மனமெனுமொண்குளம்புகுந்து, நாவெனுமதகினடந்து, கேட்போர் செவியெனுமடையிற் செவ்விதிற் செல்லாவுளம்புகலூன்றிய அன்பாம் வித்திற், சிவமெனு மென்முளை தோன்றி, வளர்ந்து, கருணைமலர்ந்து, விளங்குறுமுத்தி மெய்ப்பயன் தருமே" என்றவாறு பெரும்பயன் தந்துகொண்

டிருக்கின்றனவோவன்றே? அஃதெவன் நும்மின், மாசுபடிந்தகட்புலனுக்கும்,பாசுபடிந்த, நும்பேரறிவாண்மைக்கும் நன்கு விளங்கவில்லைப்போலும்! சிறிதாய்ந்து நோக்குமின். அவ்வாசகத்துக்கும், அவ்வாசகத்தோடுகூடிய குணங்கட்கும் உரியதோர் தொகைப்பொரு ளவ்வாசகத்தின்மிசை தொக்கி நிற்கிற தென்பதையும் நன்குதெளிமின். இனியப்பெரியவோர் பொருளை நாந்தூலமாகக் காணவேண்டுமாயின் றெரிக்குதும். அஃதாவது, ''அரிச்சுற்றவினையாலடர்ப்புண்டுநீர், எரிச்சுற்றக் கிடந்தாரென்றயலவர், சிரிச்சுற்றுப்பலர் பேசப்படாமுனந் திருச்சிற்றம்பலஞ் சென்றடைந்துய்ம்மினே" என்பானோராற்றைக் கடைபிடித்து, பற்றுக்குப் பற்றாய்ப்பரமனிருப்பிடஞ்,சிற்றம்பலமென்று தெரிந்துகொண்டேனே" என்பானோர்ந்து, திருச்சிற்றம்பலஞ் சென்றடைந்து, பரமன்றிருவடி கண்டுய்ந்த பெரியாரிவரேயெனக் கண்டு, அப்பெரியார்போம்வழி யாமும் பின்போவான் றொடங்கிப் போயத் திருச்சிற்றம்பலத்தையடையப் பெறுவோமாயின், ஆங்குதிரு நடமாடுமொரு நெடும்பரமனை நாமுந்தூலமாகக் காணப்பெறலாம், மாணிக்கத்தின்றொகைப் பொருள்கொண்டார்க் கீண்டாவன வொருங்குமாவன போன்று, அவ்வாசகத்தின் றொகைப்பொருள் கொண்டார்க்காண்டைக் காவனவொருங்குமாவனவாம், ஈண்டையினுமாண்டை யெத்துணையோ பன்மடங்குயர்ந்ததன்றாமாலெனின்? ஈண்டைக்குயர்ந்ததோர் பொருண்மாணிக்கமாம் பொன்றாண்டைக்குயர்ந்ததோர் பொருள்வாசகமாமாகலின் நந்திருச்சிற்றம்பலமுடையாரவ்வாசகங்கட்கு மாணிக்கவாசகம் எனபெரும் பெயர் கொடுத்தனராமென்க. இனி இரண்டாவது கடாவினைப் பின்பற்றியுஞ் சிலவற்றை விளங்கத் தெரிக்குதும். நன்குணர்வீராகுக.

அஃதாவது, செவிப்புலனுமணுத்திர ளொலிகள், எழுத்துக்கள்,சொற்கள், வாசகங்கள், பல்வகைக்கல்விகள், பல்வகைப் பெரியார்கண், முதலிய விவைகளெதற்காக நிகழ்ந்தன? உற்றுநோக்குழி அவைகளொருங்கும், அகப்பொருள், புறப்பொருண் முதலிய வெவ்வகைப் பொருள்களையும், விளங்கக் காட்டுவான்கருதியே யன்றே, ஆகலின், திருவார்பெருந் துறைச் செழுமலர்க் குருந்தினீழல்வாயுண்ட நிகரிலாநந்தத் தேன்றேக் கெறியுஞ் செய்யமாணிக்கவாசகன் புகன்ற மதுரவாசகம்" "முத்தின் வயிரத்தின், முன்னீர் பவளத்தின், கொத்தும் பசும்பொன்னின் றாவொளிமாணிக்கம், ஒத்துயரண்டத்துள்ளமர் சோதியை, எத்தன்மைவேறென்று கூறுசெய்வீரே" "மாணிக்கத்துள்ளே மரகதசோதியாய், மாணிக்கத்துள்ளே மரகதமாடமாய், ஆணிப்பொன்மன்றினுளாடுந் திருக்கூத்தை, பேணித் தொழுதென்ன பேறுபெற்றாரே" "மாணிக்கக் கூத்தனை வண்டில்லைக் கூத்தனை, பூணுற்றமன்றுட் புரிசடைக் கூத்தனைச், சேணுற்ற சோதிசிவாநந்தக் கூத்தனை,யாணிப்பொற் கூத்தனை யாருரைப்பாரே" என்ற திருமந்திரம் போன்று எத்தகையாராலுமளந்துரைத்தற்கு இயலாத எல்லாம்வல்ல நமது திருச்சிற்றம்பலமுடை

யாரையே, திருவாய் மலர்ந்தருளுகிறதாகலின், "ஒரும் வேதாந்தமென்னும் உச்சியிற்பழுத்தவாரா வின்பவருங்கனிபிழிந்து, சாரங்கொண்டசைவசித்தாந்தத்தேனமுதருந்தினர்" சிலருள்ளுமுதல்வரான, அம்மதுரவாசக கர்த்தாவாகிய "திருவாதவூராடிகளே" முதன், முதன் மாணிக்கக் குன்றந்தான், பின்னர், அம்மாணிக்ககுன்றத்தினின்று நிகழ்ந்த செவிப்புலனுமணுத்திரளொலிகளென்ன. எழுத்துக்களென்ன, சொற்களென்ன, வாசகங்களென்ன, அவைகளொன்றை விட்டொன்று பிரியாதவேடுகள், புத்தகங்களென்ன, அவைகளானேலமிடப்படும்' "பெண்ணாகியாணாயலியாய்ப்பிறங்கொளிர்சேர் விண்ணாகிமண்ணாகியத்தனையும் வேறாகிக், கண்ணாரமுதமுமாய்" நின்றானென்ன, அவன்றன்றிருவடிகளென்ன அவைகளொருங்கேயாவும், மாணிக்கங்களேயாம். ஈசன்வாக்குக் கெதிர்வாக்குக்கூறிய நக்கீரர்பட்டபாடு, நுமக்கெவன் தெரிந்ததாமன்றோ? மீண்டும் "மயின்மாதர்" "மதிமுகம்" "பிறைநுதல்" "கயற்கண்" "கொவ்வைச்செவ்வாய்" "பவளவிதழ்" "பான்மொழி" "மலைமுலை" "கொடியிடை" இன்னோரன்ன பலவுவமத்தொகைகளையும் நன்குநூக்கியுணர்மின், "பான்மொழி" என்னின்? பான்மிசை நிகழுமொவ்வோர் தொழின் முறைகளும், பயனிலைகளும், அம்மொழிமிசையிருந்து நிகழ்தல்வேண்டுமே? அஃதியாங்ஙனம்? அம்மொழியெவன் நங்கரத்தகத்தகப்படுங்கொல்லோ? வற்றக்காய்ச்சிக்கடையவும்படுங்கொலோ? வெண்ணெயாய்த்திரடானும் படுங்கொல்லோ? நெய்யாயுருக்கவும் படுங்கொல்லோ? இஃதெவன் பெரியாருவமங் கூறியது? எனவாராய்ச்சி செய்யப் புகுந்ததன்மைதான், நக்கீரர் இலக்கணந்தெரிந்து கொள்வதற்கு முந்தியதன்மையாம். "கல்லாக்கயவர்க் கருநூற்கிளைமறை சொல்லினர் தோமெனத்துணை முலைபெருத்தன, பலவுடம்பழிக்கும் பழியூனுணவினர்தவமெனத் தேய்ந்ததுதுடியெனுநுசுப்பே, "கடவுட்கூறுருளமெனக்குழலும், கொன்றைபுறவகற்றி நின்றவிருள், காட்டின" "சுரும்புபடிந்துண்ணுங் கழுநீர்போல, கறுத்துச் சிவந்தன கண்ணிணை மலரே" எனவரும்பலவுவமங்களையுஞ் சீர்தூக்கி யாய்ந்தோர்ந்து தெளிந்தடங்குமின். தாங்கடாவிய முக்கடாக்கட்குந் தக்க விடைகணிகழ்ந்தாங்கு கண்டு தெளிமின்.

எமதாப்தநண்ப! ஈண்டு தூலப்பொருட்களைக்கூடக் காண்டற்கு சூக்குமமாகிய வகத்துக்கண் உதவியின்றி முகத்துக்கண்கட்கு ஓர்சிறிய வணுவளவுகூடக் காணுந் தன்மையில்லையெனின், "அருட்கண்ணிலாதார்க் கரும்பொருடோன்றா, அருட்கண்ணுளோர்க்கெதிர் தோன்றுமரனே, இருட்கண்ணினோர்க்கங் கிரவியுந்தோன்றா, தெருட் கண்ணினோர்க்கெங் குஞ் சீரொளியாமே" "பூவினிற்கந்தம் பொருந்தியவாறுபோற், சீவனுக் குள்ளே சிவமணம்பூத்தது" "கும்பமலைமேலெழுந்ததோர் கொம்புண்டு கொம்புக்குமப்பா லடிப்பதோர்காற்றுண்டு, வம்பாய் மலர்ந்ததோர் பூவுண்டப்பூவுக்குள், வண்டாய்க்கிடந்து மணங்கொள்வன், ஈசனே" "எண்ணாயி

ரத்தாண்டு யோகமிருக்கினும், கண்ணாரமுதனைக்கண்டறிவாரில்லை, யுண்ணு டியுள்ளே யொளிபெறத்தானோக்கில், கண்ணாடிபோல கலந்திருந்தானே'' ''எங்குந்தானிறைந்து சிவனின்றானாகி யெல்லாருங்காணவே வேண்டுந் தானென்னில், இங்குந்தானந்த கருக்கிரவியிருளாகும், ஈசனருட் கண் ணில்லார்க் கொளியாயேயிருளாம், பங்கந்தானெழும்பதுமம் பக்குவத் தைபடையப் பரிதியலர்த்திடுவது போற்பருவஞ்சேருயிர்க்குத், தூங்க வரன் ஞானக்கண் கொடுத்தருளினாலே, சோதிக்குட் சோதியாய்த்தோன் றிடுவன்காணே'' 'சிவஞானசித்தியார்' ''காலினூறுங் கரும்பினிற்கட்டியும், பாலினுணெய்யும் பழத்துளிரதமும், பூவினுணாற்றமும் போன்றுளனெம் மிறை, காவலனெங்குங் கலந்துநின்றானே'' ''எள்ளகத்தெண்ணெயிருந்த தனையொக்குமே உள்ளகத்தீசனொளி'' ''பிரமன்மாலறியாப் பெற்றியோ னே'' என்பான்றொடக்கத்துப் பெரியார் திருவாக்குகளெத்துணையோ பல காணக் கிடக்கின்றன வாகலினாற்றான், ''முகத்துக்கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காளகத்துக்கண் கொண்டுபார்ப்பதே யாநந்தம்'' என்றும் அங்ஙனங் காண்பான் றெளிந்தனுபவிக்கப்படுமாநந்தமும் மகட்குத்தாய்தன்மணாள னோடாடியசுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமாறெங்ஙனே, என்பான் சுட்டியுமிருக்கின்றார் பெரியர். இத்துணைப் பெரும்பாட்டாற் காணவேண் டிய திருச்சிற்றம்பலமுடையாரோ நந்தூலக்கண்கட்குத் தெற்றெனவிளங்க போகின்றார்.

நமது, மாணிக்கவாசகப்பெருமான், அணுவுக்கணுவாய் அப்பாலுக் கப்பாலாய், அநாதியாய், நித்தியமாய் சர்வவியாபகமாய், சூக்குமமாய் சர் வாண்டபிண்ட சராசரங்ளொருங்கு மெங்கணுந்தானாய், சர்வவல்லமையாய், காலாகாலத்துக்குமதீதமாய், சமயக்கணக்கர் மதிவழிக்கெட்டாத சமயாதீத மாய், பிரம்மாதி தேவர்களாலுமறியப்படாத வதிசூக்குமமாய் நிறைந்து விளங்குஞ் ''சிவ'' மாகிய பேராழியுண் மூழ்கிய தன்சத்துக்களாய ''இரதங் களை போதுமானவரையள்ளிக்கொணர்ந்து, தமிழ்ச்சொற்களென்னு மூலிகை களாற்கட்டி, செவ்வியமணிகளாக்கியவைகளைக் கோவைகளாகக் கோத்து வைத்திருக்கின்றாராகலின், 'செப்பிரதக்குளிகையினாற்களிம்பற்றுப் பொன் னாய்ச்செம்பொன்னுடன்சேரும், மலஞ்சிதைந்தாற் சிவனம்பனுடன்கூடும், என்பார் சிவஞானசித்தியார். அஃதாவது, ''நெல்லிற்குமியும் நிகழ் செம்பி னிற்களிம்புஞ் சொல்லிற்புதிதன்று தொன்மையே,, என்பதாய, செம்போடு கூடியவநாதிநித்தியமாகியகளிம்பு இரதக்குளிகையினானீங்கிப் பொன்னாய்த் தனிமூதற்றங்கமாகிய செம்பொன்னோடுசேரும். (அஃதெப்படியெனின்? ஓரோட்டினிறையவுமிகளைக் கொட்டியதனடுவி னன்றாக வெரியத்தகுந்த கரிகளையுங் கொட்டி நெரிப்பையுமிட்டுத் துருத்தியானூதிப் பற்றவைத்துக் கொண்டு, உலோகங்களையுருக்குகிறவோர் குகையிலே. செம்பைவைத்து, அக்குகையையவ்வுமியோட்டின் மத்தியாகவைத்து, குறைந்தபாக மிரண்டு

முகூர்த்தகாலம், இடையிடையே கரிகளையும் வேண்டுமாத்திரங் கொட்டி விடாமலூதினாலச் செம்பானது, வெங்காரத்தையு மேற்றுத் தண்ணீரே போன்றுருகிக்கண்விட்டு மிகநன்றாகச் சுற்றியாடும். அப்பருவம்பார்த்து, இரதக்குளிகையையுருகியாடிக் கொண்டிருக்குமச் செம்பிடை கொடுப்பின், அச்செம்போடுகூடி யணுவுக்கணுவாக நுழைந்து, அச்செம்போடுகூடி யிரண்டறக்கலந்து கொண்டிருக்கு மக்களிம்பைப்பறந்தோடுமாறு செய்து, அச்செம்பைபொன்னாகச் செய்துவிடும். பின்னர் செம்பொன்னோடு சேர்த் துருக்கினாலொரு சிறிதளவுகூடப் பேதந்தோன்றாமல் ஒன்றாகச்சார்ந்து தனிமூதற்றங்கமாகவே பிரகாச மாய்விளங்கும்) அஃதேபோன்று, அநாதி நித்தியமாயுள்ள மலத்தோடுகூடிய சீவனாகிய செம்பையும் அக்கண்ணா கிய குகையிலேவைத்து சரீரமாகிய வில்லத்துளிருக்கும் அநாகதமாகிய வோட்டினிறையக்கருவிகரணாதிகளையுமிகளாகவுங் கரிகளாகவுங் கொட்டி, குண்டலிசத்தியாகிய நெரிப்பையுமிட்டு, 'உச்சுவாசம்' 'நிச்சுவாசம்' ஆகிய துருத்தியினாலூதிப் பற்றவைத்துக்கொண்டு, அக்குகையை யவ்வுமியோட் டினடுவாக வைத்து, குறைந்தபாக மிரண்டு முகூர்த்தகாலம் 'நோக்கரிய நோக்கத்தானோக்கி' இடைவிடாதூதி யனற்பொரிபறக்க மூலாக்கினி யையும் ஞானாக்கினியையுங் கொழுந்துவிட்டெரியுமாறு, செய்வோமாயின், அச்சீவனாகியசெம்புமிக நன்றாகவுருகிக் கண்விட்டுச் சுற்றியாடும், அப் பருவம் பார்த்து, நமது, மணிவாசகப்பெருமான் திருவாய்மலர்ந்தருளிய, ''கரணங்களெல்லாங்கடந்து நின்றகறைமிடற்றன், சரணங்களே சென்று சார்தலுமேதானெனக்கு, மரணம்பிறப்பென்றிவை யிரண்டின்மயக்கறுத்த, கருணைக்கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ'' ''வன்னெஞ்சகள்வன் மனவலியனென்னாதே, கன்னெஞ்சுருக்கிக் கருணையினாலாண்டுகொண்ட வன்னந்திளைக்கு மணித்தில்லையம்பலவன், பொன்னங்கழலுக்கே சென்றூ தாய் கோத்தும்பீ'' 'நானாரென்னுள்ளமார் ஞானங்களாரென்னையாரறிவார், வானோர்பிரானென்னையாண்டிலனேன் மதிமயங்கி, யூனாருடைத்தலையிலுண் பலித்தேரம்பலவன், தேனார்கமலமேசென்றூதாய் கோத்தும்பீ'' ''தினைத் தனையுள்ளதோர் பூவினிற்றேனுண்ணாதே, நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தோறும் எப்போதும், அனைத்தெலும்பு உண்ணெக வானந்தத்தேன் சொரியுங், குனிப்புடையானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ'' ''வைத்தநிதி பெண்டிர் மக்கள் குலங்கல்வியென்னும், பித்தவுலகிற் பிறப்போடிறப்பென் னுஞ் சித்தவிகாரக் கலக்கந்தெளிவித்த, வித்தகத்தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ'' சிரிப்பார், களிப்பார், தேனிப்பார், திரண்டு திரண்டுன் திருவார்த்தைவிரிப்பார், கேட்பார், மெச்சுவார், வெவ்வேறிருந்துன் திரு நாமந்தரிப்பார், பொன்னம்பலத்தாடுந் தலைவாவென்பார், அவர் முன்னே நடிப்பாய், நாயேனிருப்பேனோ நம்பியினித்தானல்காயே. என்பான்றோடக் கத்து இன்னோரன்ன பாசுரங்களாகிய, அவ்விரதமணிகளை ஒவ்வொன்று

கக்கொடுக்க. அச்சிவனுகியசெம்பிடை அணுவுக்கணுவாக நுழைந்து அநாதிநித்தியமாய் அச்சிவனேடுகூடி யிரண்டறக்கலந்து கொண்டிருக்கும், அக்களிம்புபோன்ற மலமாதியப்பாசங்களொருங்கையும் பறந்தோடப்போக்கி அச்சிவனுர்க்கவர் நம்பனுடன்கூடுமோற்றினையும் காட்டிவிடுமாகலினுற்ருன் நமதுபரமன் "மாணிக்கவாசகம்" எனப்பெயர் கொடுத்தனராமென்க. இக்காரணம்பற்றித்தான், மதுரவாசகமோதின் முத்தியுறுபயன், நிகரிலாநந்தத்தேன்றேக்கெறியும், என்பனவாய நற்கரிப்பாக்களும் எழுந்தனவாம்.

இனி, இம் மாணிக்கவாசகப்பெருமானுடைய சிவஞானபோத ஆற்றலோவெனின்? அஃதெவரானுமெடுத்துரைக்குந்தரத்தன்றும். கல்லையும் கனியச்செய்யுந் திவ்விய வாய்ச்சொல்லை சொல்லென்று உரைத்தலாகாதென்று, எல்லாம்வல்ல நம்மிறைவன் மாணிக்கவாசகமென்று சொல்ல, காணப்படுகிற எல்லாவுலகமும் மாணிக்கவாசகமென்று தலைமேலேற்றி யோலமிடுவதாயிற்று. இப்பெருந்தகையார் காலம் இற்றைக்கேறக்குறைய ஐயாயிரமாண்டுகளிருக்கலாமெனக் கணக்கிடப்படுகின்றன.

"யாவருமோதுமியற்கைத்தாதலின் பொற்கலம் நிகர்க்கும்" என்பதற்கிணங்க மாணிக்கமானது, எவ்வாறு சாதாரண மனிதர் முதற்கொண்டுமன் மக்களீருக பெரும்பான்மை எத்தகையாரிடத்தும் தத்தங்கல்வி வளர்ச்சிக்கும், அறிவுநிகழ்ச்சிக்கும், செல்வத்தகுதிக்கும் தக்க, தக்கவாறு, அவ்வவரிடத்துந்தங்கியிருந்து, அநுபவமனேதிருப்தியைக் கொடுக்கிறதுபோன்று, அம்மாணிக்கவாசகமும், சாதாரணவழிவாளிகண்முதற்கொண்டு, சிவஞானயோகச் செல்வப்பேறுடையாரீருக, சிற்றறிவுடையார் பேரறிவுடையராகிய எத்தகையாரிடத்தும், எச்சமயத்தாரிடத்தும், எவ்வருணத்தாரிடத்தும், அவ்வவர்களின் அறிவு நிகழ்ச்சிக்குத்தக்கதக்கவாறு அவ்வவர்கட்குஞ் சிவாநந்தப் பெரும்பேற்றைவிளக்கும் ஓர் பேருஞ்சத்தியேயாகலின், அவ்வாசகங்கட்கு மாணிக்கவாசகமென ஈசன் பெயர்கொடுத்தனரென்பதூஉம் ஒரு பெரும் பொருத்தமாமென்க.

நவக்கிரகங்களுள், "மலர்தலையுலகின் மாயிருமெியப் பலர்புகழ்ஞாயிறுபடரினல்லது. காண்டல்செல்லா" எனப்புகழ்ந்தெடுத்தோதற்பாலனவாய கதிரவனே உயர்ந்ததாமாகலின் அக்கிரகத்துக்குரியரத்னம் மாணிக்கமேயாகும் கணிதசாத்திரமுறையான் கதிரவன்நமதிறைவன் அமிசமேயாகலின், மாணிக்கவாசகமெனப் பெயர் கொடுத்தனரென்னலும் ஓர் பொருத்தமேயாம்.

நண்ப! இங்ஙனம் முடிபுரையாகச் சிலவற்றைக்கூறி விடயத்தைப் பூர்த்தியாக்குவாம். விரிப்பான்றெடங்கின் முடிவிலவாம். மாணிக்கமானது நோக்குவாரறிவிற்கும், விரும்புவாரவாவிற்குந் தக்கனவே பயன்படும். அஃதேபோன்று, அவ்வாசகங்களின் மகாத்மியங்களும், ஈண்டுசிறிது கவ



''காடுவெட்டிப் போட்டுக் கடிய நிலந்திருத்தி
வீடுகட்டிக் கொண்டிருக்கும் வேல்வணிகர்—வீடுகட்கு
அன்றைக்கு வந்தளங்க ளம்மாள் இலக்குமிநீ
என்றைக்கும் நீங்கா திரு''

''நீங்காது நின்மகனும் நெடியதிரு மானிதியும்
பாங்காக அன்றுவந்த பாற்கடல்போற்—றேங்காது
நன்றாக நீவளர்ந்து நகரத்தார் வீடுகளில்
என்றைக்கும் நீங்கா திரு''

''நின்மேலுமாணை நின்மகன்மேலுமாணை நின்மாக் கொழுநன்
தன்மேலுமாணை தண்கடன்மேலுமாணை தனமா வணிகச்
சின்னஞ்சிறுவர் தெரியாதகாளையர் என்செய்யினும் நீ
பின்னும்பொறுத்தே இருப்பாய் சிறப்பாய் பெரிய இலக்குமியே''

இப்பாக்கள் ஸ்ரீமஹாவித்வான் பாடுவான் முத்தப்பசெட்டியாரவர்களின் திருவாக்கினின்றும் எழுந்த தனித் திருப்பாக்களாகும். கானாடுகாத்தான் ஸ்ரீமான், கு. எ. மா. சிதம்பரஞ் செட்டியாரவர்களிடமிருந்து முன்னம் கிடைக்கப்பெற்றன.

னிக்குமிடத்து அங்ஙனந்தான் முடிவாகின்றன. வேதாகமங்களானும், உபநிடதங்களானுமளக்குந்துணைத்தல்லனவாகலின், அவ்வாசகங்களுக்கு முதற்பெயர் வாசகமாகிய 'மாணிக்கவாசகம்" என்ற எல்லாம் வல்ல நமது இறைவன் திருவாக்கையே, விரித்துரைப்பான்றொடங்கல் கடவுள்வாழ்த்தாமென்றெண்ணி அம்மாணிக்கவாசகத்தையே இந்நூற்குத்தலையங்கமாக அமைத்திருக்கின்றேம். "நெல்லிற்குமியுண்டு, நீர்க்குநுரையுண்டு புல்லிதழ் பூவிற்குமுண்டு" என்பானோக்கி, யாதும்பிழைபாடுளதேற் பெரியார் பொருத்தருளல் வேண்டுமாய்க்கேட்டுக்கொள்கிறேம். இந்நூன்முறையே ஒவ்வோரங்கங்களும் இலக்கியவிலக்கணவழூஉக்களின்றி அணிபெற இனிதுமுடியுமாறு, எல்லாம்வல்ல நமது திருச்சிற்றம்பலமுடையாரும், அவர்தம் அருமைப்புதல்வர்களுந் திருவருள் சுரப்பார்கள் ஆகுக. சுபம்! திருச்சிற்றம்பலம்.



உ

திருச்சிற்றம்பலம்.

மூன்றுவது, அத்தியாயம். "நமது, மகாசமுகத்துக்குரிய. சிறப்புப்பெயர்கள்"

"அடியமைந்து செய்வாயென் னெஞ்சமே யப்பம்
இடியவலொ டெள்ளுண்டை கன்னல்—வடிசுவையிற்
றாழ்வானை யாள்வானைத் தன்னடியா ருள்ளத்தே
வாழ்வானை வாழ்த்தியே வாழ்" (ஔவையார்)

"அளிக்குஞ் செழுந்தமிழ்த் தெள்ளமுதார்ந் துன்னருட்கடலிற்
குளிக்கும் படிக்கென்று கூடுங்கொலோவுளங் கொண்டுதெள்ளித்
தெளிக்கும் பனுவற்புலவோர் கவிமழை சிந்தக்கண்டு
களிக்குங் கலாபமயிலே சகலகலா வல்லியே" (குமரகுருபரர்)

"பான்மதி முடித்த பரமன்றலைமகன்" தாமரைமலர்போலும், அழகியதிருவடிகளை அடியேஞ்சிரமேற்கொண்டு நண்ப! இங்ஙனம், நமது மகாசமுகத்துக்குரிய சிறப்புப் பெயர்களென்னும், அங்கத்தை வரையத் தொடங்குவாம். அஃதாவது,

க. "பிரதானவைசியர்"
உ. "மகுடவைசியர்"
ங. "தனவைசியர்"
ச. "இரத்தின தன வைசியர்"
ரு. "உபயகுல பூபால வைசியர்"
சா. "சந்திர கங்காகுல வைசியர்"
எ. "சிவகோத்திர வைசியர்"

அ. "இளையாற்றக்குடி நகரவைசியர்"

கூ. "நாட்டுக் கோட்டை வைசியர்"

அன்பார்ந்த ஐயா! "மேதக்கச் சோழவளநாடு சோறுடைத்து" என நமது. ஔவையம் பிராட்டியாராற் புகழ்ந்து, கூறப்பெற்ற எந்நாட்டி னுஞ் சிறந்த நன்னாடாகிய, சோணாட்டுக்குத் தலைநகராக விளங்கிய காவிரிப் பூம்பட்டினத்து, பல்வகைவைசியரினும், பெருந்தன்மையும், பேரறச் செய் கையுமுடையராய், பூரணமாக நிறைந்த செல்வப்பேறுடையோராய் பல் வகை நல்லொழுக்கங்களினுஞ் சிறந்தோராய் விளங்கினராகலின் "பிரதான வைசியர்" என்றும், சோழமன்மக்கட்கு முடி சூட்டுங் கௌரவமுடைய ராய் அக்காலம் வாழ்ந்து வந்தார்களாகலின் "மகுடவைசியர்" என்றும், இந்தக்காலத்தும் நிறைந்த செல்வப்பேறுடையாராகலின் "தனவைசியர்" என்றும், அஃதோடு, இரத்தின வியாபாரச் செய்கையுமுடையாராகலின், "இரத்தினதன வைசியர்" என்றும், "உழவர் மேழியர் காராளரிளங்கோ புகல் பூபாலர் பூவைசியர் பெயரே" என்பார் பிங்கலந்தைச் சூத்திரமாக லின், பூவைசியராகிய கெங்காகுல வேளாளப் பெண்களைத் திருமணஞ் செய்து கொண்டார்களாகலின் "உபயகுலபூபாலவைசியர்" சந்திரகங்காகுல வைசியர்" என்றும், நமது, கோத்திராதியளவைகட்கு, இலக்காகவும், அடி பீடமாகவும், நிற்பனசிவாலயமாகலின் "சிவகோத்திர வைசியர்" என்றும், ஒருக்கானமது வருணத்தார்யாவரும் ஒருங்கே, இளையாற்றக்குடி நகரத்தின் மட்டும் வாசஞ்செய்து கொண்டிருந்தாராகலின், "இளையாற்றக்குடி நகரவை சியர்" என்றும், நமது, பாண்டிவளநாட்டின்கண், கடலுக்குமேக்கும், வை கையாற்றுக்கு வடக்கும் பிரான்மலைக்குக் கிழக்கும், வெள்ளாற்றுக்குத் தெற்கும் ஆகிய இந்நான்கெல்கைக்குட் குடியேறி நாம் வாசஞ்செய்யும் நாடானது, இந்நாட்டுக்கு நடு மண்டலமாகலானும், இந்நான்கெல்கைகளை யுங்கடந்து, ஏனையவோர் நாடுநகரங்கட்குத் தங்கள், தங்களின் மனையாண் மக்களோடுஞ் சென்று குடியேறி வாசஞ்செய்கிறதில்லை யென்னும், நமது, முன்னையப்பெரியோர் தங்கள் தங்களின், சத்திய வாசகங்களாகிய கருங்கற் களாலே அந்நடுமண்டலத்தைச் சுற்றிப்பேரரண் ஆமாறு வொருபெருங் கோட்டையாகக் கட்டிக்கொண்டாராகலானும், "நாட்டுக்கோட்டை வை சியர்" என்றும் காரணச்சிறப்புப் பெயர்கணிகழ்ந்தனவாமென்க. மேலும், நமது, செந்தமிழ்த் தேயத்து, இலைவாணிகர், எண்ணைவாணிகர், நூல்வா ணிகர், பட்டுநூல்வாணிகர், சடம்புவாணிகர், வளைவாணிகர்,கோண்மூட்டி வாணிகர், காசுக்காரவாணிகர், வேளாண்வாணிகர், உப்புவாணிகர்முத லிய பல்வகை வணிகரினும் மேம்பட்டு, வேதம், ஆகமம் ஸ்மிருதி, புரா ணம், இதிகாசங்கள் சம்பந்தப் பட்டமட்டில் வைசியமரபுக்குரிய "ஓதல், வேட்டல், நிரையோம்பல், வாணிகம், உழவு, ஈதல்" ஆகிய, இருமூன்று வகையினதாய, தொன்று தொட்டுவரும், நல் ஒழுக்கங்களையும்

"இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர் பட்டாங்கிலுள்ளபடி" என்பதற்கும், "ஈட்டிய வெல்லா மிதன் பொருட்டென்பதே காட்டிய கை வண்ணங் காட்டினர்—வேட்டொறு உங் காமருதார்ச்சென்னி கடல்சூழ்பு கார்வணிகர் தாமரையுஞ் சங்கும் போற்றந்து" என்பதற்கும் இணங்க சங்க நிதியும், பதுமநிதியும், போன்று, இரப்போர்க்கு எந்தஞான்றும், இல்லை என்னுமல் ஈயும் குணன்நோக்கி, பின்னும் அளித்தற்காகவேண்டும் தலையாகிய முதலைப் பாதுகாத்தும் ஊதியமெல்லாம் ஒருங்கே வழங்கும் வள்ளற்றன்மையையும் உடைத்தாகப் பெற்றது எந்தவாற்றானுஞ் சிறந்தநமது வைசிய மகாசமுகமே,என்பதை நமது, மகாசமுகம் செய்கையளவிற் காட்டிக்கொண்டுவரும், "காட்சி ளவை" ஒன்றுமே போதியசான்றும். எல்லாம் வல்ல நமதிறைவன்றிருவருட் சுரப்பானுகுக. சுபம்!



உ

திருச்சிற்றம்பலம்.

"நான்காவது, அத்தியாயம். நமது, பூர்வீக மாட்சி."

"வாழைக்கனி, பலவின்கனி, மாங்கனி தாங்கனிந்த
கூழைச் சிறுகுழை அப்பமெள்ளுண்டை எல்லாந்துறுத்தும்
பேழைப் பெருவயிற்றேடும் புகுந்தெனுளம் பிரியான்
வேழத்திரு முகத்துச் செக்கர்மேனி விநாயகனே" (ஔவையார்)
"தூக்கும் பனுவல் துறைதோய்ந்த கல்வியும் சொற்சுவைதோய்
வாக்கும் பெருகப் பணித்தருள்வாய் வடநூற்கடலும்
தேக்குஞ் செழுந்தமிழ்ச் செல்வமுந் தொண்டர் செந்நாவில் நின்று
காக்குங் கருணைக் கடலே சகலகலாவல்லியே" (குமாரகுருபரர்)

அமிழ்தினும் இனிய, செந்தமிழ்மலி நிலத்து, "செவ்வன் றெரிகிற்பான், மெய்நோக்கிக் காண்கிற்பான், பல்லுரையுங் கேட்பான், மிகப்பெரிதுங் காதலான், தெய்வத்தைப்போல மதிப்பான், திரிபில்லான்" ஆகிய இவ்வாறு மாண்புகளும் ஒருங்கே சிறந்து விளங்கும் எமதன்பார்ந்த எம்பி! இதுகாறும், இந்நூல் வரைதற்கு நிகழ்ந்த சில முதற் காரணம், துணைக் காரணங்களைப்பற்றியும் கடவுள் வாழ்த்தாகிய மாணிக்கவாசகம், என்பது பற்றியும், நமது, மகாசமுகத்துக்கு உரித்தாக நிகழ்து விளங்குஞ் சிறப்புப் பெயர்களைப்பற்றியும் வரைந்து வந்தாம். இனி, "நமது, மகாசமுகத்தின் பூர்வீக மாட்சி" என்னும் அங்கத்தைச் சிறிது நன்கு விளங்க விரிப்பான் றொடங்கி வரையத் தொடங்குவாம். அஃதாவது, பண்டைக் காலத்து நமது, முன்னையப் பெரியார் இத்தகைய மாட்சியுட்டங்கி வாழ்ந்து வந்தார் என்பது பற்றியும், எந்தக்காலத்தும், எந்தவாற்றானும் நமது, மகாசமுகமானது, கூடிய சீர் சிறப்போடு மகோன்னதமான நல்ல நிலைமையிலே நின்று,

நிலைத்து வாழ்ந்து வரும்பொருட்டு அன்னோர் சிலஅடிபீடங்களைத் தாபித் திருக்கின்றாராகலின், அவைகளின், அருமை பெருமைகளைப் பற்றியும், விவகரிக்கும் இவ்வங்கமே நமது பூர்வீக மாட்சியெனப் பெயர் பெறும். நீர்மலி கடல்சூழ் நிலவுலகத்தில் சீர்மலி சம்புத்தீவத்தின்கண், ஆதியில் நாகநாட்டிலே சாந்தியாபுரி யென்னும் நகரத்திலே "சந்திரகுல கோத்திர வைசியர்களாய்" கோபதீசுவரசுவாமி ஆலய தெரிசனமும், சதாசிவகுரு பீடத்தில் தீட்சாகிரியையும், மரகத விநாயகர் பூசையும், இரத்தின வியாபாரமும், செய்துகொண்டு, மகாயோக பாக்கிய சம்பன்னர்களாய், இராசப்பிரசாதமும், மன்னிணை, மரியாதையும் பெற்று, சிவாகம புராண சித்தாந்த, சைவதீட்சா சம்பன்னர்களாய் விபூதி, ருத்திராக்க, மாலிகாபரணராய், சிவதரும, குலதரும பரிபாலகராய், நமது, பூர்வீகப் பெரியார் வாழ்ந்து வந்தார்கள். பின்னர், கலியுகவருடம் இருநூற்றி நான்கிலிருந்து தொண்டை மண்டலத்துக்குத் தலை நகராகவிளங்கிய காஞ்சீபுரத்திலே, சத்திபுரீசுவரர் சுவாமி ஆலய தெரிசனமும், புஷ்கரநதியாடலும், அருணகிரி சிவசங்கராசாரியபடரித்தில் தீட்சாகிரியையும், மரகத விநாயகர் பூசையும் பெற்று இரத்தின வியாபாரச் செய்கையும் உடையராய் வாழ்ந்து வந்தார்கள். பின்னர், கலியுகவருஷம் இரண்டாயிரத்து முன்னூற்றுப் பன்னிரண்டிலிருந்து, காவேரி தீரமாகிய, சோழவள நாட்டிலே, மநுநெறிவழாது, செங்கோல் நடாத்திய, சோழமன் மக்கட்கு உரியனவாகிய நகரங்களைந்தனுள் செல்வச்சிறப்பின் மிக்கு விளங்கியதும், பொன்னுலகத்தினும் மேம்பட்டு சுவர்க்க வாசிகளின், இருதயங்களையுங் கவரத்தக்க சுவர்ணமயமான மாடமாளிகை, கூடல், கோபுரங்கள்' நிறைந்தள்ளதும், தோரணங்கள் முதலிய பல அலங்காரங்கள் செய்யப்பட்டதாயுமுள்ள, காவிரிப்பூம்பட்டினத்திலே, மநுநீதிச் சோழன் காலந் தொடங்கிப், பிரதானவைசியர்களாகவும், மகுட வைசியர்களாகவும், அங்கீகரிக்கப்பெற்று, சிங்கக் கொடியும், தங்கக்கலசங்கள் வைத்துள்ள மாடமாளிகைகளமைந்ததுமான, இல்லங்களையும், உடையராய், ருத்திராபதீசுவரசுவாமி யாலய தெரிசனமும், காவிரி நதியாடலும், பதஞ்சலி க்ஷேத்திரத்தில், ஈசான்ய சிவாசாரியரிடத்தில் தீட்சாகிரியை முதலானவைகளையும் கௌர சிலத்தோடும் பெற்று மரகத விநாயகர் பூசையையும் விடாது செய்து கொண்டு, எண்ணாயிரங் குடும்பத்தார்கள்வரை இராஜாபிமானத்துடன், ஜெயமங்கல சோபனமாக, இரத்தினதன மகுடவைசியர்களென்ற பெரும்பெயர்ச் சிறப் போடும், சைவசமய நெறியில் வழுவாது, தடாக கோபுர சிவாலய பிரதிட்டையும், குலதரும் பரிபாலனமுஞ் செய்துகொண்டு நமது பூர்வீகப் பெரியார் நெடுங்காலம் வாழ்ந்து வந்தார்கள். பின்னர், பாண்டிநாட்டின் வளப்பங்கள் இத்தகையனவாயிருக்குமென்பது, அவர்களுக்குத் தெரியாததானும், மன்னன் வாக்குக்கு மறுவாக்குரைத்தன்மாட்

டாமையானும், கலியுகம் வருடம் மூவாயிரத்து எண்ணூற்று எட்டில், நமது பாண்டியவள நாட்டின்கண் உடைத்தாய ஓங்காரக்குடி, என்னும் நகரம் வந்து சார்ந்து, நமது, "நகரத்தார் சரித்திரம்" என்னும் புத்தகத்துக் கண்டவாறு, அமைந்து, வரன் முறைக்கட்டுக்களோடும், உயர்தர நாகரீகங்களோடும், சுத்தாத்துவைத சைவசித்தாந்தக் கொள்வகைகளோடும் வாழ்ந்து வருவாராயினர்கள். அத்தகைய நமது பூர்வீகப் பெரியோர்களால் நிலைநாட்டப் பெற்றிருக்கும் நமது கோத்திராதிகளின் மாட்சிகளைப்பற்றிச் சிறிது விளக்குவாம். அஃதாவது, "கோடிவழிகள்" என்பதே பொருள். என்றால் அவைகளைப்பற்றிச் சிறிது ஆய்ந்தோர்ந்து சிந்தித்துக் கவனிக்கப்புகின் ஒரு சுரையானது, சிறிய சிறிய கொடிகளும், பெரிய பெரிய கொடிகளுமாக மிக நன்குவளர்ந்து செழிப்புற்று, அரும்பு, மலர், பிஞ்சு, காய், கனிகளுடன். அநேகபல கொடிகளாகக் காணப்படுவதையும், அக்கொடிகளானது, ஒன்றன்மேல் ஒன்றாகவோ ஒன்றன் பக்கம் ஒன்றாகவோ, ஒன்றன் பின் ஒன்றாய் அடுத்தடுத்து ஊடுறுவிச் சென்று அநேக பலவழிகளாக ஆங்குடைத்தான இடனெருங்கையும் அடங்கப் படர்ந்து விரிந்துகிடப்பதையும், கண்டார். ஒருவரையொருவர் இக்கொடிவழியாவென வினவ இக்கொடிவழி சுரையேயாமென்பர். என்னில், அக்கொடிவழிகள் தங்களின் முதலாகிய சுரையையே யுணர்த்தியாங்கு, எமதன்பார்ந்த ஐயா! நுங்களின் கொடிவழியாவென ஒருவரையொருவர் வினவ, ஆம், ஐயா! எங்களின் கொடிவழி இஃதாமென்று ஒருவர்க்கு ஒருவர் உணர்த்தப் புகுங்கால் அஃது, தங்கட்கு, ஆதியாயும், முதலாயும், முதற்காரணமாயும் நின்ற, தங்களின் வமிசத்தைச்சார்ந்த ஒரு பெரியாரையே யுணர்த்துவதாகும். எமதன்பார்ந்த எம்பீ! "கோத்திரமுங் குலமுங்கொண்டென் செய்வீர்" என, நமது திருநாவுக்கரசர் திருவாக்கிருப்பினும், இஞ்ஞால வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டும் பெருஞ்சிறப்பினவாகலின், நமது கோத்திராதிக்கட்டுக்களை பொற்குவைகளினும் பெரியவைகளாகப் போற்றிச் சீர்தூக்கி ஆராய்ந்து அவைகளின், பெருமைகளை நாம், நன்குணர்வதோடும், நம்முடைய பின் சந்ததியார்களை நன்குணரச் செய்யவேண்டுவதும் நம்முடைய முதற்கடமையாகும். பொதுவாகக் கவனிக்குமிடத்து, நமது, பாரதகண்டத்துக் காணப்பெறும், மனிதக்கூட்டத்துள், அந்தணவகுப்பாரே, உயர்ந்தவருணத்தாரென்பதை யாவர்தான் மறுக்கக்கூடும்? அவ்வகுப்பாரின் கொடிவழிகளைப்பற்றிக் கவனிக்கப்புகின், அவைகள் "காசிபக் கோத்திரம், பரத்துவாசக் கோத்திரம், வசிட்டகோத்திரம், கௌதமக்கோத்திரம், விசுவாமித்திரக் கோத்திரம், ஆத்ரியக் கோத்திரம், அகத்தியக் கோத்திரம், ஜமதக்கினிக்கோத்திரம், கௌசிகக் கோத்திரம், என்பவைகளன்றி, இன்னுமிவைகளைப்போன்ற பலரிஷிஸ்வரர்களைப் பின்பற்றியதாகவே காணப்பெறுகின்றன. இஃது, இங்ஙனமாக, நமது முன்னோராகிய, நம்மன்னோர்

கோத்திரம் என்றவழி, கோவில்களும், உட்பிரிவுகளும் என்று தொகுத்துச் சுட்டி, வகுத்துக் காட்டியுமிருக்கிறார்கள். அஃதாவது,

க. "இளையாற்றக்குடிக் கோவிற்கொடிவழி"
உ. "மாற்றூர்க் கோவிற் கொடிவழி"
ங. "வைரவன் கோவிற் கொடிவழி"
ச. "இரணியூர் கோவிற் கொடிவழி"
ரு. "பிள்ளையார்பட்டிக் கோவிற் கொடிவழி"
சு. "நேமங் கோவிற் கொடிவழி"
எ. "இலுப்பைக்குடிக் கோவிற் கொடிவழி"
அ. "சூரைக்குடிக் கோவிற் கொடிவழி"
கூ. "வேலங்குடிக் கோவிற் கொடிவழி"

என்பவைகளாகத்தானே, நமது சைவசமயத்தைச் சார்ந்த சிவாகமசித்தாந்தங்கட்கு, முதற்காரணமாக விளங்கும், எல்லாம்வல்ல நமது, பசுபதி பெயரிய தனிமுதற்கடவுளையே யடிபீடமாகக்கொண்டு, சிவாலயங்களைப் பின்பற்றியதாகவே காணப்பெறுகின்றன. இங்ஙனமாக, அடியார்களைப்பின் பற்றியதாகக் காணப்பெறுங் கொடிவழிகளினும், அடியார்களும் வணங்குதற்குரித்தான, சிவாலயங்களைப் பின்பற்றியதாகக் காணப் பெறுங்கொடிவழிகளே மிகச் சிறந்தவைகளாமென்பதையாவர்தான் மறுக்கக்கூடும்? இதினின்றும், நமது பூர்வீகப் பெரியார் மாட்சியானது, ஏனைய பலவகுப்பாரின் பூர்வீகப் பெரியார் மாட்சியினின்றும் மிக்கவுயர்ந்ததாமென்பது எவர்கட்கும் எளிதின் விளங்கக் கூடியவோர் பெரியமலையிலக்காம் போன்றதாமன்றோ.

ஆம் ஐயா! தாங்கள் கூறுவது மிக நன்றாயிருக்கிறது. "சிவனைவழி பட்டா ரெண்ணிலாத்தேவர், அவனை வழிபட்டங்காமாறென்றில்லை, யவனை வழிபட்டங்காமாறு காட்டுங், குருவை வழிபடிற் கூடலுமாமே" என்றும், "சங்கநிதி பதுமநிதி யிரண்டுந்தந்து தரணியோடு வானாளத்தருவரேனும், மங்குவாரவர்செல்வ மதிப்போமல்லேம் மாதேவர்க்கேகாந்தரல்லராயின், அங்கமெலாங்குறைந்தழுகு தொழுநோயரா யாவுரித்துத் தின்றுழலும்புலையரேனுங், கங்கைவார்சடைக்கரந்தார்க்கன்பராயி னவர்கண்டீர் யாம்வணங்குங் கடவுளாரே" என்றும், "பெரிது பெரிது புவனம் பெரிது, புவனமோ நான்முகன் படைப்பு நான்முகனோகரியமாலுந்தியின் வந்தோன், கரியமாலோ வலைகடற்றுயின்றோன் அலைகடலோ குறுமுனிகையிலடக்கம், குறுமுனியோ கலசத்திற் பிறந்தோன், கலசமோ புவியிற் சிறுமண், புவியோ அரவினுக்கொருதலைபாரம். அரவோ வுமையவள் சிறுவிரன் மோதிரம், உமையவளோ விறைவர்பாகத்தொடுக்கம், இறைவரோ, தொண்டருள்ளத் தொடுக்கம், தொண்டர்தம் பெருமையைச் சொல்லவொண்ணாதே" என்றும்

"ஈசனும் ஞானியிருந்துளவிடத்தே யிருப்பது முத்திதானந்த தேசிகனே வல் செய்பவன் காலென் சென்னியிலிருப்பது மன்னி, மாசிலாப் பிரம ஞானியா முனிக்குமகேசனு மொப்பலன் மதிக்கில், ஆசிலாவரியு மொப் பலன் யானும் ஒப்பலன், எவரொப்பாரே" என்றும், திருமூலர், திருநாவுக்கர சர், ஔவையம் பிராட்டியார், முதலிய, இன்னும், எத்துணையோமகாபெரிய வர்களெல்லாம், எல்லாம் வல்ல இறைவரினின்றும், அவன்றன் றிருத் தொண்டர்களே, அவ்விறைவரினும், மிக்கமேம்பாடுடையராமெனக் கூறி யிருக்க, அவ்வடியார் பெயரினைப்பின்பற்றி நிகழுங் கோத்திரங்களினும், அவ்விறைவர் பெயரினைப்பின்பற்றி நிகழுங் கோத்திரங்கள் யாங்ஙனம் உயர்ந்ததெனக்கூடும்? ஆம், ஐயா! தெரிக்குதும். சிறிது கவனமாகக் கேண் மின். "ஆண்டான் இல்வழி அடியவன் எங்குளன்" "மன்னவன் இல்வழி மந் திரி எங்குளன்" "ஈஸ்வரன் இல்வழி ரிஷீஸ்வரன் எங்குளன்" "மண்ணே இல்வழி மட்குடம் எங்குள" "காரணம் இல்வழி காரியம் எங்குள?" "கல் லாதவரும் நனிநல்லர், கற்றூர்முன், சொல்லாதிருக்கப் பெறின்" நுங்கட் கென்னே ஞாபகம் இல்லையோ? கதிரவன் உளதாலன்றூக் கதிரவனுற் காய்ந்த மணற்கும் மகத்துவம் ஏற்பட்டன. மேலும், கஞ்சனூரிலே, வைணவசமயத்திலே மதுசூதனுச்சாரியரின் புதல்வர் "ஹரிதத்தர்" என்பார் ஒருவர் இருந்தார். அவர் வேதம், ஆகமம். புராணம், இதி காசம், தருக்கம், வியாகரண முதலிய சகல கலைகளையும் தெள்ளத் தெளிந்த உணர்வினராய்; பலசமயவுணர்ச்சியினும் மிகுந்த வல்லுநராய் சிவஞானயோகப் பெருஞ்செல்வராய்; எச்சமயங்களிலும் உயர்ந்த மெய்ச் சமயமானது சைவசமயமே என்றும், பரசிவப்பெருமானே எல்லாம்வல்ல முழுமுதற் கடவுளான பரம்பொருளே எனவும் கண்டு, தம்முடைய வைண வசமயத்தினின்றும் பெயர்ந்து, சைவசமயத்தினராய்; சிவாகம சித்தாந்த ஒழுக்கத்தினராய்; உண்ணுமுலையம்மாளின் அண்ணுமலையிலேற்றிய கார்த் திகை மதியின் "தீபம்" போல் பிரகாசித்தனர். அதுகண்டு பொறாமையும், துவேஷமும்கொண்ட மாபாதகர்களான கொடியவைணவர்கள் பலருங்கூடி அப்பெரியாரை நோக்கி உமது, பரசிவப்பெருமானே உண்மையாகப்பரம் பொருளாயின் நாங்களிடும் இரும்புப்படிமேல் நின்று, உம்முடைய பரசிவ பரத்துவத்தை நிலைபெறச் செய்யக்கடவீரோ! என, அப்பெரியார் அதற் குடன்பட்டு, அக்கொடியவைணவர்களாலே, கொல்லனுலையிலே இட்டுப் பழுக்கக் காய்ச்சிய, பெரியவோர் இருப்புப் பாளப்படியின்மேல் சுத்தாத்து வித சைவசித்தாந்த வைராக்கிய தீரவீர பராக்கிரம சத்திய சீலராகிய ஆயி ரத்தெட்டு மாற்றுச் சுவர்னமயம்போன்ற அப்பெரியார் ஏறி நின்று நிலைத்து எல்லாம்வல்ல எம்பெருமான் பிரபாவங்களையும், பரத்துவத்தையும் எடுத்து விரிப்பான் தொடங்கி உயர் காயத்திரிக்கு உரியபொருளாகலின்; தசரதன் மதலைத் தாபித்தேத்தலின்; கண்ணன் கையிலையில் நண்ணி நின்றிரப்பபுகழ்ச்சி

பின் அமைந்த மகப்பேறுதவலின்; தனுஅது விழியுடன் ஓராயிரங்கமலப் புதுமலர் கொண்டரி பூசனையாற்றலின்; ஆங்கவர்க்கிரங்கி ஆழியீந்தருள் தலின், ஐங்கணைக்கிழவனை அழல் விருந்தாக்கலின்; அமைப்பருங்கடுவிடம் அமுது செய்திடுதலின்; தென்திசைத் தலைவனைச் செகுத்துயிர்பருகலின்; அவுணர்முப்புரம் அழியவில் வாங்கலின்; தக்கன்வேள்வி தகர்த்தருள் செய் தலின்; தனஞ்சயன் தனக்குத் தன்படை வழங்கலின்; மானுடமடங்கலை வலிதபக் கோறலின்; மாயோன்மகடூஉவாகிய காலை தடமுலை திளைத்துச் சாத்தனைத் தருதலின்; ஆழ்கடல் வரைப்பின் ஆன்றோரநேகர் அன்பு மீதூர அருச்சனை ஆற்றலின்; நான்கிரு செல்வமும் ஆங்கவர்க்கு அருள்த லின்; ஐயிருபிறப்பினும் அரியருச்சித்தலின்; இருவரும் அன்னமும் ஏன முமாகி அடிமுடிதேட அழற்பிழம்பாகலின்; பிறப்பிறப்பாதி உயிர்க்குணம் இன்மையின்; கங்கைசூழ்கிடந்தகாசிமால் வரைப்பிற் பொய்புகல் வியாதன் கைதம்பித்தலின்; முப்புரமிறுப்புழி முகுந்தப்புத்தேள் மால்விடையாகினு லமொடுதாங்கலின்; அயன் சிரமாலையளவில அணிதலின்; ஞானமும்வீடும் பேணினர்க்குதவலின்; பசுபதி பெயரிய தனிமுதற்கடவுள் உம்பர்களெவர் க்கும் உயர்ந்தோன் என்பது தெளிக இயல்புணர்ந்தோரே" என்று, இத் தகைய பலஏதுக்களையும் எடுத்துக்காட்டி, ஆண்டான் அடிமைத்திறத்தை யும், பரசிவபரத்துவத்தையும் பசுமரத்தாணி பதிந்தாற்போன்று நிலைக்க நாட்டி, "ஹரிதத்தர்" என்னும், இயற்கைப் பெயரையும் அங்ஙனம்சீ என ஓட்டி. ஆங்குடைத்தான பல பேரறிவாளரும், சிவஞானயோகச் செல்வப் பேறுடையருமான பல சிவனடியார்களும், தம்முடைய பக்திவன்மையையும், தம்மகத்திருந்து நிகழ்ந்த திருவருட் சக்தியையுங் கண்டுப் பேரானந்தமுற மூட்டி, ஏ! ஏ! இப்பெரியார், "ஹரதத்தர்" "ஹரதத்தர்" என்று, சிவாநந்தக் கூத்துக்களாடக் கூட்டிச், சிறப்புத்திருநாமமும் பெற்று, இஞ்ஞான்றும் கைலையங்கிரியில் வாழ்ந்து வருகிறூர் என்பான் தொடக்கம் சைவசமய சீல ராயுள்ள பலரும் நன்குணர்வார்களன்றோ? அஃதென்னை உங்கட்குமட்டும் விளங்காததாமோ? மேலும், ஞானதீக்கை புரியும் சற்குரவராவார் ஒருவர்க் குத்தம்முடல் பொருள் ஆவி, மூன்றையும் தத்தம் பண்ணி அவர் தம் திரு வடிகட்கு உள்ளன்போடும் வழிபடுவார்க்கன்றி, எத்துணையோ தூரம்பெறு தற்கு அரிதான எல்லாம்வல்ல இறைவன் திருவடிப்பேற்றினைக்கூடல் கூடாவாம். ஆகலின், அதனையாவர்க்கும் தெற்றென விளங்க வலியுறுத்து வான் கருதியே மேற்கண்ட அன்னவோரன்ன திருப்பாசுரங்கள் நிகழ்ந்தன வாமென்றுணர்க. ஆகலின், எமதாப்த நண்ப! சர்வாண்ட பிண்ட சராசரங் கட்கும் முழுமுதற் கடவுளாக விளங்கும், நமதிறைவன் பெயர்களைப்பின் பற்றிய கோத்திராதிகளே, மிக்கச்சிறந்து, உயர்ந்ததாமென்பதை நமதுமகா சமுகத்தைச்சார்ந்த ஒவ்வொரு சகோதரசகோதரிகளும், நன்குணர்ந்து, நமது, பூர்வீகப் பெரியாரே பெரியருட் பெரியராமென்பதையுந்தெளிக.

இனி, நமது, பூர்வீகப் பெரியார் கௌரவத்தைப்பற்றிச் சிறிது விளக்குவாம். அஃதாவது, "மல்குக வேதவேள்வி வழங்குக சுரந்து வானம், பல்குக வளங்களெங்கும், பரவுக அறங்களின்பம், நல்குக உயிர்கட்கெல்லாம், நான்மறைச் சைவமோங்கிப், புல்குக உலகமெல்லாம், புரவலன் செங்கோல்வாழ்க" என்பனவாதிய சில அரிய பெரிய கருத்துக்களை முன்னதாகவே தம்முட்சிந்தித்து, எல்லாம் வல்ல இறைவனை நன்கு பிரார்த்தித்து, எமதன்பார்ந்த ஏ அரசகுமார! இற்றைநாண் முதற்கொண்டு நீ! பெறும் அரசானது, எந்த ஞான்றும் அரசே போன்றுகுக. நின் திருக்கரந்தாங்கும் செவ்வியகோலானது, எஞ்ஞான்றும், செங்கோலே ஆகுக. நின் நாடுநகரங்கள் யாவும் நன்னடும், நன்னகரங்களுமே ஆகுக. நின்னுடையவாழ்நாட்கள் நீடூழி ஆகுக. என்பனவாய பல்வகை மங்கலவாழ்த்துக்கள் கூறித் தமது அரியதிருக்கரங்களான் மன்மக்கட்கு முடிசூட்டுஞ் சுதந்தரமுடையதாகவே இருந்தது. மேலும், மன்மக்கட்கு முடிசூட்டுந் தன்மையுடையார் எந்தக்காலத்தும் உண்மையில் மெய்ஞ்ஞானிகளாகவே இருந்து வந்திருக்கிறுர்கள். அஃது, இந்தக்காலத்தும், ஞாலப்பற்று ஓர் சிறிதுமற்ற பாதிரிமார்களே என்பதும் வெளிப்படை. ஆகலின், நமது முன்னையப் பெரியரான ஒவ்வொருவரும் இயற்கையிற் சிறந்த மெய்ஞ்ஞானிகளாகவே விளங்கினுர்கள் என்பதை நாம் நன்குணர்தல்வேண்டும். அதற்குச் சான்று அவர்களில் ஒருவரான பட்டினத்தடிகளும், "முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும் முடிவிலொரு பிடிசாம்பராய் வெந்து மண்ணுவதும் கண்டு பின்னும் அந்தப்படிசார்ந்த வாழ்வை நினைப்பதல்லால் பொன்னின் அம்பலவன் அடிசார்ந்து நாம் உய்யவேண்டுமென்று அறிவாறில்லையே" என்றும். "மையாடுகண்ணியும் மைந்தரும் வாழ்வும் மனையும் செந்தீ, ஐயா நின்மாயை உருவெளித்தோற்றம் இவ்வகிலமெல்லாம், மெய்யாய் இருந்தது. நாட்செல நாட் செல வெட்டவெறும் பொய்யாய், பழங்கதையாய்க் கனவாய் மெல்லப் போயினவே"என்றும், ஓலமிட்டிருக்கின்றுர்கள். ஆகவே, இதினின்றும் நாமுணர்தற்குரிய பெரியவிடயம் ஒன்றும் இலைமறைகாய் போன்று காணக்கிடக்கின்றது. அஃதாவது, அயலார் ஒருவர்க்கு முடிசூட்டுங் கௌரவமுடையார் தம்மகத்து, அம்முடியினைத் தாந்தாங்கி இஞ்ஞாலத்தைச் செங்கோலோச்சும் ஆற்றிற்சிறிது ஓரணுவளவுகூடப் பற்றின்றும் என்பதனை இவ்வுலகறியுமாறு வெளிப்படையாகக் காட்டுவான் கருதியே தம் சிரமிசை இயற்கையாக நிகழும் முடியையுங்களைந்து விட்டார்களாம் என்பதே. அந்த நாள் தொடங்கியே அஃது நம்மரபிற்குரியனவாய் வழக்கத்தில் வந்துவிட்டனவாம் என்க. நமது முன்னையப்பெரியார் காவலன் என்ற பெயரை ஏற்றுக்கொள்ளாமலே நமது மகாசமுகத்தைக் காவல் புரிந்து வந்திருக்கிறுர்கள், இறைவன் என்ற பெயரை ஏற்றுக் கொள்ளாமலே இறைபெற்று வந்திருக்கிறுர்கள். எவ்வித ஆயுதங்களும், படைகளும், விலங்குகளும் இன்

றியே, குற்றஞ்செய்தாரைத் தண்டித்து வந்திருக்கிறார்கள். அபேதக் கட்சியானது, இந்நிலவுலகு எங்கணும் மலிந்து, உயர்தர நாகரீ கங்கள் மிக நன்றாகப் பொலிந்து, பழையனகழிந்து, புதியன மிகுந்து, மேனாட்டார், கீழ்நாட்டார் முதலிய எந்நாட்டவரும் குடி யரசேவேண்டும், குடியரசே வேண்டும் அதுதான் மிகவுயர்ந்தது. அது தான்மிக நியாயமார்க்கமுள்ளது. அதுதான் மிகநாகரீகமானது. அது தான் இக்காலவியற்கைக்கு மிக்கப் பொருத்தமானது, அதுதான் சிறிதும் வஞ்சமற்றது, அதுதான் பேதமற்றது. என்று பலவகையாக அதன் மகத் துவங்களை எடுத்துக்காட்டிப்புகழ்ந்துகூறிக் கொண்டாடித்திரியும் இக்கா லத்துக்கும் நெடுங்காலங்கட்கும் முன்னரே இருந்து குடியரசு புரிந்து வந் திருக்கிறார்கள். இக்காலத்து, ஓ எமதன்பார்ந்த எம்பீ! மிக்கபரபரப்போடு, நமது, மகாசமுகவூழியங்களில் முன்னேற்ற மடையவிரும்பும், எம் இனிய சகோதர! இங்ஙனம் சிறிது நன்குணர்வீர்களாக. நுங்களின் நுட்பமதியால் இதன்மேல்வரும் விஷயங்களைச் சிறிது நன்கோர்ந்து பாருங்கள். இஞ் ஞாலத்து ஒருவர் மன்னராயிருந்து செங்கோல் செலுத்தும் அஃதேதுக் காக? ஒருவரோடு ஒருவர் கலாம்விளைத்துக் கொள்ளாமலும், ஒருவருடை மைகளை ஒருவர் அபகரித்துக்கொள்ளாமலும், "தத்தஞ்சமயத்துத் தகுதி நில்லாதாரை அத்தன் சிவன் சொன்ன ஆகம நூனெறி எத்தண்டமும் செய்யும் அம்மையில் இம்மையின் மெய்த்தண்டஞ் செய்வது அவ்வேந்தன் கடனே" என்ற திருமந்திரம் போன்று, மனிதவர்க்கமாய்ப் பிறந்த ஒவ் வொரு சகோதர சகோதரிகளும், தத்தம், மதக்கொள்வகைகளிலே நின்றும் சிறிதும் வழுவாது ஒழுகவும், மீண்டுஞ் சிறிது கவனிக்கின், மனிதவர்க்கத் தாரும், ஏனையபல ஆன்மகோடிகளும், எட்பிளவுங்கூடத் துன்புறுவண் ணம் இன்பாதிகளிலே துய்த்தல் நிலைபெறற் பொருட்டும், உலகநீதிகளைப் பாதுகாத்தற் பொருட்டுமேயாம் அன்றோ? ஆகலினாற்றான், அவர்க்குக் காவ லன் என்றும், அக்காவற்கூலி, ஒவ்வொருவர் இடத்தும் கொஞ்சம், கொஞ் சமாகப் பெற்றுக்கொள்கிறதாகலின், அவர்க்கு இறை என்றும், பலமனி தர்க்கும் தலைவன் ஒருவனாக நின்று காத்தலினாற்றான் அவர்க்குக் கோன் என்றும், மாந்தராய்ப் பிறந்தார் எவர்க்குந் தெரிய விளங்குகிறாராகலின் அவர்க்கு மன்னவர் என்றும், இன்னோரன்ன பல பெயர்கள் நிகழ்ந்தனவாம் என்க, மேலும், பெரியர், சிறியர், செல்வர், தரித்திரர், நட்பினர், பகை வர், பந்து, அயலார் என்னும் பகுதிநோக்கி ஓர் அணுவளவுகூடத் தம்மகத் துக் கோணுதலின்றிக் காவல் புரிய வேண்டுவதே அவர்க்கு உரியவோர் பெருங்கடனாகலின் அதனை வெளிப்படையாக எவர்க்கும் தெற்றென விளங் கச் செய்தற்பொருட்டே அவன் திருக்கரத்தில், வளைதல், நெளிதல், கணுக்கண் முதலியன இன்றி மிகச்செவ்விதமான தடிக்கொம்பொன்றைத் தாங்குகிறான். ஆகலின், அக்கோற்குச் செங்கோல் என்னும் பெயர். இத்

துணைச் சிறப்புக்களில் நின்றும், செய்கைகளில் நின்றும், நமது, முன்னையப் பெரியார் எத்துணையோ பன்மடங்கு மிகையான சீர்சிறப்புக்களினும், செய்கைகளினும் தங்கி உயர்ந்து விளங்கினர்கள் என்பது, இதன்மேல்வரும் சில அரிய பெரிய விஷயங்களால் இனிது விளங்கும். அஃதாவது, "செயற்கரிய செய்வார்பெரியர் சிறியர் செயற்கரிய செய்கலாதார்" என்பதற்கிணங்கச் செயற்கருஞ் செயல்கள் பலவாகச் செய்து வந்திருக்கிறார்கள். மேலும், "சொல்லாமலே பெரியர் சொல்லிச்சிறியர் செய்வர். சொல்லியுஞ் செய்யார் கயவரே-நல்ல-குலமாலே வேற்கண்ணாய் கூறுவமை நாடில் பலாமாவைப் பாதிரியைப் பார்" என்பதற்கு இணங்க நம்மன்னோர், வார்த்தையளவில் ஒன்றையுஞ் சொல்லிக்கொள்ளாமல், செயற்கை. அளவில் அன்னோர் பேரரசேயன்று புரிந்து வந்திருக்கிறார்கள். உண்மையில் வேலாயுதத்துக்கு மேலாயுதம் இல்லை என்பதையும், கதிர்வேலுக்கு எதிர்வேல் இல்லை என்பதையும் நன்குணர்ந்து கையாண்டு வந்திருக்கிறார்கள். ஆ! ஆ! அவர்களின் வல்லுநத்தன்மையைப் பற்றி என் என்று எடுத்துக்கூறுவது. அவர்களின், பெரியதன்மைகளையும், வன்மைகளையும், பேரறிவாண்மை, நல்லொழுக்கம்முதலியகுணகுணங்களையும், ஆசாரசீலங்களையும், ஒற்றுமை என்னுங் கயிற்றாலும்,கோவில் வாசற்கூட்டம், படத்துவாசற்கூட்டம், சர்வநகரக்கூட்டம், என்னுங்கயிற்றாலும், வருணச்சிரம தருமக்கட்டுக்கள் என்னுங்கயிற்றாலும், நமது, நாடுநகரங்கள் ஒருங்கையும் கட்டியாண்டுவந்த திறத்தையும், சித்திரத்தையும் பற்றிக் கவனிக்கப்புகின் அவைகள் ஒருங்கும், எத்தகைய இராஜீயதந்திரங்கள் என எவராற்றுன் நிருமாணிக்கக்கூடும்? நமது, மகாசமுகத்தைச் சார்ந்தார் எவரையும் பூரண நியாயஸ்தர் என்றும், சத்தியவந்தர்கள் என்றும், நிறைந்தவாக்கு நாணயம் உடையவர்கள் என்றும், ஐயம்புகுவார்முதற்கொண்டு வையங்காப்பார்கடையாக எட்பிளவுசந்தேகமும் இன்றி நம்பிக்கை கொள்ளச் செய்ததூஉம்,ஒன்றரைத துட்டுத்தலையால் ஆயிரக்கணக்கு இலக்கக்கணக்குகளிலே பற்று வரவுசெய்து நிர்வகித்துக் கொள்ள இடங்கொடுத்ததூஉம், கால், அரை வட்டிகட்காக பிறபகுதியார்களின் பணக்குவையல்கள் நமதிடம் கிடந்து புரளச்செய்ததூஉம், துர்விஷயங்கள் என்னும், திருடர்களையும், வம்பர்களையும், குறும்பர்களையும் நமது, சமுகத்துள் வந்து நுழைந்துகொள்ளவிடாமல் பாதுகாத்துக் கொண்டதூஉம், எத்துணையோ பல நல்ல ஒழுக்கங்களாகிய கற்பகதருக்கள் வளர்ந்தோங்கிநின்று தக்கபலன்களைக் கொடுத்துவரச் செய்ததூஉம், நமது, பூர்வீகப்பெரியாரமைத்து வைத்திருந்த ஓர்க்காவற் சட்டமே யாமன்றோ? அச்சட்டமொன்றைச் சிறிதுஉய்த்து நோக்கி ஆராயுமிடத்து. அஃது, எத்துணை தூரஞ்சிறந்த செங்கோன் முறைமையும், பகுதிநோக்காத நிர்தாட்சண்யமான அபாரசக்தியும் உள்ளனவாய்க் காணக்கிடக்கின்றது. இத்துணைதூரஞ் சிறந்த பேரரசே புரியும், இக்காவற் சட்டங்களை நிருமாணித்த ஒரு நமது பெரியார்க்கு காவ

லன், டொக்டர், அல்லது புரப்ஸர், என்ற பெயர்கள் உண்டா? அவர்கள் ஏன் அப்பெயர்களை ஏற்றுக் கொள்ளவில்லை? அதுதான் இந்தியப்பெரியார்கள் இடத்துடைத்தான பெருந்தகைமை. அதுதான் குடியரசின் இலக்கணம். மேலும், அக்கட்டானசட்டங்களால் ஒரு சமுகத்துக்கு நிகழும் பாதுகாப்புக்களைப் பார்க்கினும், மன்னன்என்றும், காவலன் என்றும், பெயர்கள் ஏற்று, அளவு சங்கையற்ற சட்டங்களை நிருமாணித்து, எத்துணையோ பல பல பெரும்புத்தகங்களை எல்லாந் தூக்கிச்சுமந்து கொண்டு, டம்பாச்சாரி வேடங்கள் பூண்டு நிகழும் செங்கோன்முறைகளால் என்னபாதுகாப்புகள் மிகையாக நிகழ்ந்துவிட காண்கின்றோம். ஏ நண்ப! இக்காவற் சட்டமானது நுங்கட்கு நன்குவிளங்குகிறதன்றூ? உணர்ந்துகொள்ளுங்கள். இக்காலமாகிய கொடுந்தீயானது, நம்மனோர் இருதயங்களைச் சூழ்ந்து கொண்டிருந்த அச்சட்டமாகிய சக்தியைப் பெரிதுங் கரித்துவிட்டன. நாம், என்செய்வோம். இன்னும் இவைபோன்ற நமது வருணச்சிரம தருமக்கட்டுக்கள் பலவற்றையும் நீங்களே நன்குணருங்கள். ஆனல், இக்கட்டுச்சட்டங்களுள், பல இற்றைநாள்வரை அஃதாவது, கலியுகம் வருஷம் ஐயாயிரத்து இருபதுக்கு, அரசாங்க வருஷம் ஆங்கிலம் ஆயிரத்துத் தொளாயிரத்து இருபஃதுவரை நிலைநின்றும்விட்டன. எல்லாம் வல்ல இறைவன் இனிமேலும் பாதுகாப்பாருகுக. ஏ நண்ப! நமது, முன்னையப்பெரியார் இறைவன் என்ற பெயரேற்றுக்கொள்ளாமல் இறையேற்றுக்கொண்டது எங்ஙனமெனின், தெரிக்குதும். ஆம் ஐயா! அதுதான் "மகமை" அக்கணக்கு எவ்வளவு இலகுவாயும், நுட்பமதியாயும் ஏற்படுத்தியிருக்கிறூர்கள் கண்டீர்களா? "பலதுளிபெருவெள்ளம்" என்பதற்கு இணங்க அவ்வளவு இலகுவான கணக்குகளாற்கூடும் பெரும்பொருள் ஒருங்கும் நமது, மகாசமுகத்தார் புரிந்துவந்த குடியரசாங்கத்துக்கும், ஏனைய எந்தமார்க்கத்துக்கும், எந்தமார்க்கத்தானும் வெற்றியைக் கொடுக்கும், வெட்சிமாலைசூடிய வெற்றிவேலாயுதத்துக்கே உரிமையாக்கிவந்திருக்கிறூர்கள். இன்னும், நமது, பூர்வீகப்பெரியார் பேருஞ்சக்திகளைப் பற்றிக் கவனிக்கப்புகின் அஃதொருங்கும் வரைந்து முடியாதனவேயாகும். எத்துணையோ பல வறப்பெருஞ் செயல்களையும், பொதுநன்மைகளையும், தந்நலமறுப்புடன்கூடிய சமூகவூழியங்களையும், கையாண்டு வந்திருக்கிறூர்கள். தாங்கள் ஏற்படுத்திக்கொண்ட சட்டங்கட்குத் தாங்களே அடங்கி ஒழுகிக் காட்டி வந்திருக்கிறூர்கள். அவர்கள் அமுலுக்குக் கொண்டுவந்திருந்த கூட்ட நாட்டங்களே ஒரு பெரிய அரசாங்கமுறைகளாய் விளங்கின. அவர்கள் வரன்முறைப்படுத்தி வைத்திருந்தக் கட்டுப்பாடுகளே உயர்ந்தச்சட்டமுறை நூற்களாம். அவர்களின் தீர்ப்புக்கு மேலொரு எவரானும் மறுப்புக்கிடையாது. அவர்கள், ஏனைய அரசாங்கத்தார் போன்று, ஒருவர் குற்றஞ் செய்தபின்னர் அவர் தன் தூலத்துக்குத் தண்டனைசெய்வது போன்றல்லாமல் ஒருவரை முன்னதாகவே அவர் குற்றங்கட்கு உட்படாமல் இருந்தொழுகுமாறு

அவர்தம் சூக்கும உறுப்புக்களாகிய மனமாதி அந்தக்கரணங்கட்கே தக்க தண்டமாம் ஔடதம் கொடுத்து வந்திருக்கிறார்கள். அன்னோர் வகுத்தும், தொகுத்தும் அநுபவத்துக்குக் கொணர்ந்திருக்கிற ஒவ்வொருவரன் முறைக் கட்டுக்களும், நமக்கே என்பதை நாம் நன்குணர்தல் வேண்டும். அவர்கள் பாலுடைத்தாக விளங்கிய ஒவ்வொரு அபாரசக்திகளும், நமதிடமும் உடைத்தாக விளங்கல் வேண்டுமே? அங்ஙனம் விளங்குகிறதாவென நாமே நன்கு சீர்தூக்கி ஆராய்ந்து ஓர்தலும் வேண்டும். அவர்களின் புண்ணிய விசேடமே, நமது, மகாசமுகத்துக்குரிய எவ்வகைப் பெருக்கத்துக்கும், காரணமாம் என்பதை நாம் நன்குணர்தலும் வேண்டும். மேலும், அவர்கள், இமாலயம் தொடங்கி, கன்னியாகுமரிவரை செய்து முடித்திருக்கும் அறப்பெரும் பணிகளையும் திருப்பெரும் பணிகளையும் கண்டு வியப்படையாதார்யாவர். இன்னும், பர்மா, மலாய், இலங்கை முதலிய தேயங்களில், வெள்ளிரதங்கள் ஓடியது, எந்தப்பாண்டி மன்மக்கட்காலத்திலேனும், சோழமன் மக்கட்காலத்திலேனும் உண்டா? சைவசமயமும், நமது, செந்தமிழ்ப் பாஷையும், ஆகமசித்தாந்தங்களும் இத்துணைச் சிறுதூரமாவது எழுந்தோங்கி நின்று, விளங்குவதற்கு, முதற்காரணமும், துணைக்காரணமும் நமது, மகாசமுகமே என்பது, இஞ்ஞாலமே உணர்ந்த மகாபிரசித்தமன்று? இத்துணை அற்புதம் வாய்ந்த நமது பெரியோர்களை நாம், எவ்வாறு மதித்தல்வேண்டும்? மறந்தேனும் அவர்களை அறியாதவர்கள் என்றுவது, கருநாடகர்கள் என்றுவது, உயர்தர நாகரீகங்கள், பேரறிவாண்மை முதலிய அபாரசக்திகள் அற்றவர்கள் என்றுவது, நாம் கருதுதல்கூடுமோ? ஓரெழுத் தொருமொழியாலேனும், ஒரு சமயம் இழித்துக்கூறவும் செய்யலாகுமா? மேலும், இக்காலம், நமது, மகாசமுகம், இத்துணைதூரஞ் சிறந்த பெருந்தகைமையுட்டங்கி யளவுக்கெஞ்சியசெல்வமாதிகளோடும், விலையேறப்பெற்ற ரத்னாதிகளோடு கூடிய வணிபணிகளோடும், பட்டாடைகளோடும், சித்திரசாலைகள், விசித்திரசாலைகள், அரண்மனைகள், பேரில்லங்கள், புதிது, புதிதான சிவாலயங்களோடும், மிகையான கிராமம் பூமிகளோடும், எத்தகையாரும் வியப்பத்தக்க பேரறச் செய்கைகளோடுங்கூடித் தேவேந்திரபோகங்களே யென்கவாழ்ந்து வருகிறதற்கு முதற்காரணமும் துணைக்காரணமும் நிமித்தகாரணமுமாகக் காண்பான் நமது பூர்வீகப்பெரியாராகிய வன்னோரூன்றிய நல்லவித்துக்களேயாமென்க. அவர்களூன்றியஅவ்வித்துக்கடான் இக்காலம் தக்கவிருக்கங்களாகிப் பூத்துக் காய்த்து வமிழ்தினுமினிய பேரருங்கனிகளாய்ப்பலன்களைத்தந்து கொண்டிருக்கிறதாமென்க. ஒன்றுக்குமுதவாத பாலைவனமெல்லா நல்ல நாடுநகரங்களாகவிளங்கக் காண்பதூஉம் அப்பலன்களே யாமென்க. தலைநகரங்களுந் தோற்பனவாய் மோட்டார்களோடுவதும், தந்திகள்பறப்பதூஉம், ஏனையபல்வகை நாகரீகங்கள் பரந்து சிறந்து விளங்குவதற்கு மூலபலம், அவ்வித்துக்களேயாமன்றோ? ஆகவே யக்காலத்துப் பெரியார் மாட்சிகளொருங்கு

மிக்கவிரிப்பான் றொடங்கில் இவ்வங்கமிகப் பெருகுமாகலின் முடிவுரையாக சிலவற்றைக்கூறி விஷயத்தைப் பூர்த்தியாக்குவாம். நம்மனோர், கையாண்டு அநுபவத்துப் பாதுகாத்துவந்த முப்பது பெரிய வன்மைகள் உள்ளன அவைகளை ஈண்டுவரைவாம். நமது வகுப்பைச்சார்ந்த ஒவ்வொரு மாண வர்களும், ஒவ்வொரு சகோதரசகோதரிகளும் நன்குணர்தல் வேண்டும்.

1. "எல்லாம் வல்ல நமதிறைவன் றிருவருட் குமாரனென குமரகுருபரன் றிருவருட் பேறுடைமை"
2. "குடியரசாங்க முறைமை"
3. "கொடிவழிகளுள், ஏனையவொருவர்யாமும், நுங்கள் கொடிவழியேயென வந்து நுழைந்து கொள்வதற்கோரிட மின்மை"
4. "மன்மக்கட்கு, முடிசூட்டுங் கௌரமாகிய பெருந்தன்மை"
5. "எந்த மார்க்கத்தானும், நட்டமின்றி யிலாபத்தையே கொடுக்கும், நாணயக் கொடுக்கல் வாங்கல்களான வட்டித் தொழின் முறைமை"
6. "எந்நாணயத்துள்ளும் உயர்ந்த நன்னாணயம், வாக்கு நாணயமெனக் கண்டு பிடித்துப்பாதுகாத்து வந்தமை"
7. "கல்வியானும், அறிவானும், செல்வத்தானும், செய்கையானும், வயசானும் எத்துணையோ பெரியராயிருந்தும் அதனை நடையுடை பாவனை முதலிய எந்த மார்க்கத்தானும் ஏனையோருக்குத் தெரிவித்துக் கொள்ளாமை"
8. "தந்நல மறுப்போடு பிறர்க்காவன செய்யுங் கடமை"
9. "சமூகவூழிய முறைமை"
10. "சைவசமயமாகிய ஒரேசமயக்கொள்வகையுடைமை"
11. "தம்முன்னோரொழுகிய வழிதாமொழுகுந் தன்மை."
12. "அறப்பணியுந் திருப்பணியு மார்வமோடு செய்யுந் தன்மை"
13. "இரப்போர்க் கேதேனுமில்லையென்னுதீயுந்தன்மை"
14. "எத்துணைவறுமைக் காலத்துந் தாமிரவாத்தன்மை"
15. "கருணையுடைமை"
16. "ஒருமைபெற்று வாழ்ந்துவரும் வன்மைத்தன்மை"
17. "தங்கட்கவசியமல்லாத எந்தக் காரியங்களினுந்தாங்கள் பிரவேசியாமை"

18. "பெரும் பொருளீட்டும் வன்மை"
19. "அந்நிய வருப்பாரொருவர்க் கடிமைப்படாமை"
20. "இடம்பமின்மை"
21. "அடக்க முடைமை"
22. "தைரிய முடைமை" "ஊக்க முடைமை"
23. "எத்தகைய பெரிய காரியங்களையுங் கொண்டுமுடிக்கும் பெரிய வன்மை"
24. "எம்முயர்ச்சியையு மிடைவிடாத்தன்மை"
25. 'திரைகடலோடியுந் திரவிய மீட்டித்திரும்புந்திறமை'
26. "தங்கணகரத்துடைத்தான பிறபகுதியாரையடக்கியாளுந் தன்மை"
27. "எந்த விபவகாரங்களினும் நடுநிலை கோடாமை"
28. "எவரோடு மினிய சொற்கூறும் வன்மை"
29. "மடமையின்மை"
30. "ஆழ்ந்த கருத்தோடுகூடிய பேரறிவாண்மை யுடைமை"

இத்தகைய வபாரவன்மைகளையும், பெருஞ் செல்வமாதிகளையும் பல வகையான நல்லொழுக்க முதலிய வாசார சீலங்களையும், மக்கட்செல்வத்தையும் நமது மகாசமுகத்துக்கு, எந்தக்காலத்தும், வளர்ந்தோங்குமாறு, எல்லாம் வல்ல இறைவன் திருவருட்பாலிப்பானுருக. சுபம்! சுபம்!! சுபம்!!!



உ

திருச்சிற்றம்பலம்.

ஐந்தாவது, அத்தியாயம். நமது, மரபியன் மாட்சி.

"விநாயகனே வெவ்வினைகள் வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான்—விநாயகனே
விண்ணுக்கும் மண்ணுக்கும் நாதனுமாந் தன்மையினாற்
கண்ணிற் பணிமின் கனிந்து" (ஔவையார்)

"பஞ்சப்புதந்தரு செய்யபொற் பாதபங் கேருகமென்
னெஞ்சத்தடத்த லராத தென்னே நெடுந்தாட் கமலத்
தஞ்சத்துவச முயர்த்தோன் செந்நாவுமகமும் வெள்ளைக்
கஞ்சத்தவி சொத்திருந்தாய் சகலகலா வல்லியே" (குமரகுருபரர்)

எமதன்பு நிறைந்த ஐய! எல்லாம்வல்ல நமது, இறைவன் திருவருட் கிருபையை முன்னிட்டு, இங்ஙனம், "நமது, மரபியன் மாட்சி" என்னும் இவ்

வங்கத்தை, எதோ அடியேமுடைய சிற்றறிவிற்கு எட்டிய வொருவாறு பாகுபடுத்தி, மிகத்தெளிவாயும், மிகத்திட்ப நுட்பங்களாயும், எவர்க்கு மெளிதின் விளங்கத்தக்க வெளிப்படையாயும், "மதுரைச் சமணமதகரிக ளெல்லாஞ் சிதறத்துரந்த சிவசமயகோளரியாம்" குமரகுருபரனிரண்டு திரு வடிகளையுமடியே முளத்திடையிருத்தி, நன்கு வரையத் தொடங்குவாம். அஃதாவது, தொன்றுதொட்டு, வரையறுத்துக் கூறுவதற்கியலாத நெடுங் காலத்துக்கு முன்னரே இருந்து,

"எப்பொரு ளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர்
செப்பின ரப்படிச் செப்புதன் மரபே"

என்பான்போன்று, ஒருவகுப்பின், அல்லது ஒருவகுப்பாரின் கொடி வழிகளான வமிசபரம்பரையின் இலக்கணங்களையும், கொள்வகைகளையும், வருண பேதமுதலிய வெழுவகைத் தோற்றங்களின் வேறுபாடுகளையும், மிகத்தெளிவாக விளங்கும்பொருட்டு, கல்வி, அறிவு, நல்லொழுக்க முதலி யவைகளாற் சிறந்து நிறைந்த பெரியோர்கள் எவ்வாறு, சொல்லியும், எவ் வாறு, அநுட்டித்தும் வந்தார்களோ, அவ்வாறு சொல்லியும், அவ்வாறு, அநுட்டித்தும் வருதலே "மரபாம்" அதன் பெருமைகளை விரிப்பான்றொடங் கன் "மாட்சியாம்" "இஃது, எப்பாலவர்க்கும் பொதுவாம்."

செந்தமிழ்க் கல்வியுந் திருவருட் சீலமும்
சிந்தையி னிறைகச் சந்தத மன்பொடும்
அந்தமிற் குமரனடி தொழுமாற்றலும்
வந்தவர்க் கேதும் வரையாது கொடுக்கும்
பந்தமுங் கருணையும் பழமையா யுடைத்தென

இந்தவோரன்ன வெழின்மிகு வொழுக்கம் பலநிறைந்துள்ள பான் மையோய்! எத்தகையரும் வியப்பத் தகுந்த பெரும்புகழ்படைத்து, வாழ்ந்துவரும் பெரியோய்! மகுடவணிக மணிகளாகத்தோற்றும் ஐயோய்! புதிய நாகரீகங்களின் மிகுபற்றுடைய புதியோய்! ஈண்டுறும் விடயங் களைச் சிறிது நன்குணர்மின். நமது மகாசமூகத்தின் மாட்சிகளை பிறபகுதி யார்கண்டு மணங்கொளுங்குமிழ் நடுகணை விரனுட்டி வியப்பதொடும், நமது, வகுப்பைச்சார்ந்த வொவ்வொருமாணவர்களும், ஒவ்வொருசகோதர சகோ தரிகளும் மிக நன்றாகத் தெரிந்துகொண்டிருத்தல் வேண்டுவதும் இக்காலத் து ஆவசியகமான பலவற்றுண் முதன்மையான ஆவசியகமேயாம். "மலையின் றோற்ற மலைக்குத் தெரியாததுபோன்று, நமது, மாட்சி நமக்குத் தெரியாது நிற்றற்கூடாது" காலவர்த்தமானத்தை மிகக் கவனமாகக் கவனித்தனும் வேண்டும். நமது வைசிய மகாசமூகத்தின் மாட்சிகளைப்பற்றிக் கவனிக்கப் புகினஃதொரு பெருஞ்சாகரம் போன்றே காணக்கிடக்கின்றன. யாங்ஙன மெனிற்றெரிக்குதும்.

"வெள்ளாறது வடக்காமேற் குப்பிரான் மலையாந்
தெள்ளார் புனல்வைகை தெற்காகும்—ஒள்ளியசீ
ரெட்டிக் கடற்கிழக்கா மிஃதன்றோ நாட்டரண்சேர்
செட்டிநாட் டெல்லையெனச் செப்பு"

இப்பாவானது இற்றைக்கேறக்குறைய 80-90 வருடங்கட்கு முன்னர் நமது, நகரங்களோடு சார்ந்த கீழச் செவற்பட்டியி லேனமங்கோவிற் கொடி வழியராயும், சாபாநுக்கிரக சீலராயும், நல்லதசையிற் பெரும்புகழ் படைத் துவாழ்ந்து வந்தவருமான ஸ்ரீ மகாவித்வான் "பாடுவான் முத்தப்ப செட்டி யாரவர்களின் திருவாக்கு. அஃதாவது, "சந்தனப் பொதிகைச் செந்தமிழ் முனிவனுஞ், சௌந்தரபாண்டியனெனுந் தமிழ்நாடனுஞ், சங்கப்பலகையுந் தழைத்தினிதோங்கு மங்கலப்பாண்டிவள நாடென்ப" எனப்புகழப்படுவ தான பாண்டிவளநாட்டின் கீழ்திக்கில் மேற்குப்பிரான் மலையும், தெற்கு வைகையாறும், வடக்கு வெள்ளாறும், கிழக்குச் சமுத்திரமுமாகிய விந்நான் கும், நமது, நாட்டுக்கோட்டை வைசியமாகாணத்தின் எல்லைகளாம்.

"இந்நான்கெல்கைகளையுங் கடந்து, ஏனையவோர் நாடுநகரங்கட்கு நமது, மனையாண் மக்களோடுஞ் சென்று இல்லறம் நடாத்துதற்கூடாதென் பது, நமது மகாசமுகத்தின் மரபாகும்,"

ஆம், ஐயா! இதற்குக் காரணமென்னை? ஏனையவருணத்தார்க்கு, அக்காவற்கட்டுப்பாடுகளைக் காணவில்லையே? நமது, வருணத்தார்க்கு மட்டும் யாது காரணம்பற்றி யுடன்பாடாயிற்று? நமது, மனையாண் மக்களோடுங் குழீஇ அயனகரங்கட்குச் சென்று, அறநெறிவழாது, நம்மில்லற தருமத் தைமிக வொழுங்காக நடாத்திவரின், அதனாலுறுங் கேடென்னை? காலதர் மத்தையுற்று நோக்காமல், நமது, மகாசமுகமுன்னேற்றத்துக்கு மிகுதியு மரணக்கூடிய சிலபழயகாலத்து வழக்கங்களையும் கொள்வகைகளையும், நீ யிருமெவன்கொன் மாட்சிமைப் படுத்தி வரையத்துணிகின்றீரோ? "சொன் னசொற்களை, மாற்றினு மாற்றுவர், வன்கணாளர்கள், கூற்றினும் பாவலர் கொடியராவரே" என்பதற் கிணக்கன்மின்; தெரிந்தவரையுள்ள காரணங் களையொழியன்மின்;எம், மகாசமுகத்தின் புகழையும்,பெருந்தன்மையையும், ஒருமைப்பாட்டையும், தருமச்செயல்கண் முதலிய பல நல்லொழுக்கங்களை யும்பற்றி யெவர்களும் வியந்து பேசிக்கொள்ளல் வேண்டுமென்ற பேரவா எங்கண், மகாசமுகத்தாரிடத்து எந்தக்காலத்து நிகழாவாம்; நும்போல்வா ரொருவர்;அணி பெறவரைதல் வேண்டுமென்ற விருப்பமுமில்லையாம்;எதோ நீயிராகச்செய்யப் புகுந்த வோர்செய்கையில் வெறும் பெயரேற்றுக்கொள் ளன்மின்;நன்கு கவனித்து வரைமின். சுருக்கமாகவுமின்றி, விரிவாகவுமின்றி மிக நிதானமாகக் கூறுமின். "குன்றக்கூறன், மிகைப்படக்கூறன்" முதலிய குற்றங்களினின்று மொரீஇ, "சுருங்கச் சொல்லல், விளங்கவைத்தல்" முத

விய அழகியல்களோடு மரீஇ, நூனேற்கத் தொடங்குமின். ஆம் ஐயா, நல்லது, அங்ஙனமேயாகட்டும். பொதுவாகக் கவனிக்குமிடத்து, நம், இந்திய பெரியோர்களின், வன்மைத்தன்மைகளைப்பற்றிக் கவனிக்கப்புகுந்த வொவ்வொருகாலத்தும், மிக்கவரிய பெரிய விடயங்களே யகப்படுகின்றன. அவர்களின் மேம்பாடுகளைப்பற்றி யெவரானும் வரையறுத்துக்கூற முடியா ததாகவே காணக்கிடக்கின்றன. அஃதாவது, மனிதவர்க்கத்தாரின் இயற் கையமைப்பில்,

"வருண பேதமுண்டா?" "தமையன், தம்பி, தங்கை, தமக்கை, தாய், தந்தை, மாமன், மாமி, மனைவி, கொழுநன் முதலிய வரன் முறைக்கட்டுக் களுண்டா"? "செல்வந் தரித்திரமுண்டா?" "ஆலயதெரிசனங் கடவுள் பக்தி யுண்டா"? "கல்வி யறிவு முதலிய பல நல்லொழுக்கங்களுண்டா?', "சுவர்க்க நரகமுண்டா"? "சமயக் கொள்வகையுண்டா"? "தேசாபிமானம், பாஷாபி மானம், மதாபிமானம், ஜனபிமானம், இவர் பெரியர், இவர் சிறியர், இவ ருறவர், இவர்பகைஞர், இவர் கிளைஞர், இவரறிஞர் என்பவைகளுண்டா?" இஞ்ஞாலத்தை யாள்வதற்கெனச் செங்கோ லேந்தியும், கிரீடந்தாங் கியும் எவரேனு மொருவர் பிறந்ததுண்டா"? "பிறக்கும்பொழுது கொடுவந் ததில்லை பிறந்துமண்மே லிறக்கும்பொழுது கொடுபோவதில்லை இடை நடுவிற் குறிக்கும்" சிறப்பினவாயன்றே, மேற்கண்டவைக ளொருங்குங் காணப்படுகின்றன.

இவைகளொருங்குஞ் செயற்கை யமைப்பில் யாவரானமைத்துக் கொள்ளப்பட்டன? நமது, முன்னையப்பெரியோரான், மனிதக்கூட்டத்தின், சௌக்கியத்தையும், நன்மையையும், அமைதியையும், ஏனையவறுவகைத் தோற்றங்கட்கும், நம்மனிதத் தோற்றத்துக்கும், இடையிலுடைத்தான வேற்றந்தாழ்வுகளையும், நன்கு விளங்கக் கருதி விளக்கியமைக்கப்பட்டதே யல்லவா? இன்றேல், விலங்கினங்கட்கும், நமது மனிதக்கூட்டத்தார்க்கும் என்னவோ பேத நிகழ்ந்திருக்கக்கூடும்? இஞ்ஞாலத்துத் தோற்றப்படுகிற ஒவ்வொரு வரன்முறைக் கட்டுப்பாடுகளும், ஆங்காங்குடைத்தான ஒவ் வொரு பெரியவர்களாலே யமைக்கப்பட்டு, அஃது, பூர்வீகவழக்கமா மென் றும், அவ்வவ்வகுப்பார்க்குரிய மரபியலாமென்றும், சொல்வதற்குரிய நூன் முறைச் சட்டங்களாக நமது வழக்கத்திருந்துவருகின்றன. இயற்கையமைப் பிலிடையிற் கோவணத்தோடுங்கூடவாவது ஒருவர் பிறந்தாரிலரன்றே? ஆகவே, ஈங்குகாணப்படுகிற ஒவ்வொரு பகுதியாரும் தங்கடங்கட்குரியமர பியலாமென்று புகழ்ந்து கொண்டாடிக் கொள்வதற்குத் தக்கவாறு, ஆங் காங்கு வமைக்கப்பட்டுக் கிடக்கும் வரன்முறைக்கட்டுச் சட்டங்களையும், நமது, வைசியமகாசமுகத்தின் வரன்முறைக் கட்டுச்சட்டங்களையும், சிறி தூன்றி நோக்கிக்கவனிக்குமிடத்து மிகுதியும், அரியபெரிய நூன்முறைக்

கட்டுச்சட்டங் கணம்முடையதே என்பது, நன்கு தெளிவுறக்காணலாம். யாம்வேண்டுமென்று ஒன்றைத் தாழ்த்தியும், ஒன்றை யுயர்த்தியும் வரைய வரவில்லை. உண்மையும், நியாயமும் எதுவோவதனையே மிகவிளக்கமாகக் கூறுதும், நன்குணர்மின்.

பான்மண மாறுப்பாலர் முதலாய மனையாண் மக்களோடும்கூட ஆயிரக்கணக்கான மயிற்றாரங்களையுங் கடல் யாத்திரையாகக் கடந்து ஏனைய வயனகரங்கட்குச் சென்று நாங்களே, உயர்தர கல்வியாதி நாகரீக நிலைமை பெற்றவர்களா மென்ன ஒரு சிறிதளவுகூட நாணமற்ற வெற்றிப் பறை கொட்டிவாழ்ந்து தங்களின் இல்லற தருமத்தை நடாத்திவரும், எந் தப் பிறசமுகத்தாரும் தங்களருமைக் குடும்பத்திற் பிறந்த தம்மருமைச் சகோதரிகளை, எட்பிளவானுமோர் பூர்வீக முறைமையின்றி "கண்டதே காட்சி" "கொண்டதே மாட்சி" என, எந்தமார்க் கத்தானுந் தங்கட்கெட் பிளவுஞ்சம்பந்த (ஏதோபேச்சளவிற்கூட வொரு பாஷைச் சுதந்தர) மல் லாதயாரோவொரு, எவர்கட்கெல்லாமோ கட்டி மணப்பிக்கக் கொடுத் துத் தங்களினருமைபான மரபியன் முறைகளைக் கெடுத்துக் கொண்டது போன்று, நமது மகாசமுகத்தின் மரபியன் முறைகளையுங் கெடுத்துக்கொள் ளக் கொடுத்துவிடாமல் ஒருநிலை நிற்கச் செய்ததூஉம், எற்றானுஞ் சிறந்த நமது பாண்டிவளநாட்டின்கண் பிரான்மலைக்கு மேற்கும், வைகையாற்றுக் குத் தெற்கும், வெள்ளாற்றுக்கு வடக்கும், கடலுக்குக் கிழக்கும், நமது வருணத்தார் மனையாண் மக்களோடுஞ்சென்று, எவ்வகை முகாந்தரங்களைக் கொண்டும், இல்லறம் நடாத்துதல் கூடாதென்று நமது பூர்வீகப்பெரியார் கட்டிவைத்த பேரறிவாண்மையான ஒருவிதவரன்முறைக் கட்டுப்பாடே யாமன்றோ!

அறிவிற் சிறந்த ஐயீர்! ஏனைய சமுகத்தாருள், ஒரே குடும்பத்தைச் சார்ந்த சிலருள் ஒருவர்வைணவராயும், மற்றொருவர் கிறிஸ்தவராயும், மற் றொருவர் செவ்வியசைவராயும், பூர்வீகச் சுதந்தரமான தங்களின் வரன் முறைக் கட்டுக்குலைந்து காணப்படுவதுபோன்று, நமது, மகாசமுகத்துள் ளுங் காணப்படாததற்குக் காரணம் மேற்கண்ட அக்கட்டுப்பாடேயா மன்றோ!

நமது, வைசியமகாசமுகத்தை, எற்றானுஞ் சிறந்த, நமது, பாரதமா தாவின் றிருமுகம்போல்வதாமென்று, எத்தகையாரானும் புகழ்ந்துகொண் டாடத் தகுந்தவஃதாவது, குன்றின் மேலேற்றியக் கார்த்திகைதீபமே போன்றுயர்தர நிலையத்துக்குக் கொணர்ந்ததூஉம் மேற்கண்ட வக்கட்டுப் பாடேயாமன்றோ?

நமது, பாரதமாதாவின் றேகத்திலுடைத்தான, பல்வகையறப் பெரும்பணிகளொருங்கையும், எந்தக்காலத்து மிகச்செவ்வனே நிலைநிற்கச் செய்ததூஉம், மேற்கண்ட வக்கட்டுப்பாடேயாமன்றோ?

நமது, குடும்பங்களுலாபக்கங்கட்குஞ் சென்று, ஆங்காங்குடைத்தானவர்களோடு சம்பந்தஞ் சாவடிகள் செய்து, ஒரே மொத்தமாக, இத்துணையாயிரங்குடும்பங்களா மிவ்வருணத்தாரெனச் செப்பமாகச் செப்புதற்குரிய மார்க்கத்தை யொழித்துச் சிதறுண்டு போகாதவண்ணம் பாதுகாத்துக் கொண்டதூஉம் மேற்கண்ட வக்கட்டுப்பாடேயாமன்றோ?

நமது, குடும்பங்களைச் சார்ந்தார் ஒருவரைப் பார்த்து ஒருவராய் யாவரும் பெருஞ் செல்வவந்தர்கள் ஆதல்வேண்டுமென்ற பேரவாவோடு பெரிய செல்வவந்தர்களாகித் தோற்றப்படுவதற்கும் மேற்கண்ட அக்கட்டுப்பாடேயாமன்று? நமது, சகோதரிகளிடத்துக் கற்பியன் மாட்சியை மிக அற்புதமாக நிலைநிற்கச் செய்ததூஉம் மேற்கண்ட அக்கட்டுப்பாடே யாமன்று?

ஏனைய வகுப்பார்போன்று, தங்களின் பூர்வீகப் பெரியார் எவர்களையும் அலட்சியஞ்செய்யாமல் இலட்சியமே செய்து அவர்களியன்றவழி நம்மையும் இயன்றுவருமாறு செய்ததூஉம், செய்கிறதூஉம் மேற்கண்ட அக்கட்டுப்பாடேயாமன்று? ஒன்றுக்கும் உதவாத பாலைவனத்தை இத்துணை தூரஞ் சிறந்த குபேர நகரங்களாகச் செய்ததூஉம் மேற்கண்ட அக்கட்டுப்பாடே யாமன்று?

எமது, ஆப்த நண்ப! ஈண்டுஞ் சிறிது கவனிக்குமிடத்து எல்லாம் வல்ல நமது பரமன் எழுதுங் கீழ்க்கணக்கராயும், நமது மணிவாசகப்பெருமான் எழுதக்கூறும் முதல்வராயும் நின்று திருவாய்மலர்ந்தருளிய "திருச்சிற்றம்பலக் கோவையார்" என்னும் ஒப்புயர்வற்ற அரிய தமிழ் மறையானது, எம்முடைய வேண்டுகோட்கிணங்கி நிகழ்ந்ததோ? இன்றேன் நுங்களின் வேண்டுகோட்கிணங்கி நிகழ்ந்ததோ? அம்மறையுள் "வாட்டங்கூறல்" "பிரிவு நினைவுரைத்தல்" "ஆற்றாது புலம்பல்" "ஆற்றாமை கூறல்" "திணை பெயர்த்துரைத்தல்" "பொருத்தமறிந்துரைத்தல்" "பிரிந்தமைகூறல்" "பிரிவாற்றாமையான் இரவுறுதுபரத்துக்கிரங்கி யுரைத்தல்" இகழ்ச்சி நினைந்தழிதல்" உருவு "வெளிப்படுதல்" "நெஞ்சொடுநோதல்" "நெஞ்சொடுபுலத்தல்" "நெஞ்சொடுமறுத்தல்" "நாளெண்ணி வருந்தல்" "ஏறுவரவு கண்டிரங்கியுரைத்தல்" "பருவங்கண்டிரங்கல்" "முகிலொடுகூறல்" "தேர்வரவு கூறல்" "இளயரெதிர் கோடல்" "உண்மகிழ்ந்துரைத்தல்" ஓதியவிருபதுமாதிநுதாலாய் வான்பொருட் பிரிதல்" அகத்திணை மருங்கில் கூறப்படும். மனையாண் மக்கள் சுற்றத்தார் முதலிய யாவரையும் விட்டுப்பிரிந்து தலைவன் பொருள் வயிற்பிரிதற்காக,

"முனிவருமன்னரு முன்னுவ பொன்னுன் முடியுமெனப்
பனிவருங்கண் பரமன்றிருச் சிற்றம்பல மனையாய்
துனிவரு நீர்மையிதென் னென்றுதூநீர் தெளித்தளிப்ப
நனிவரு நாளிதுவோ வென்று வந்திக்கு நன்னுதலே"

"வறியாரிருமை யறியார்என மன்னுமா நிதிக்கு
நெறியாருஞ் சுரஞ்செல்ல லுற்றூர்நமர் நீண்டிருவர்
அறியாவளவு நின்றேன் றில்லைச்சிற் றம்பலமனைய
செறிவார் கருங்குழல் வெண்ணகைச் செவ்வாய் திருநுதலே"

என்பான் றொடக்கத்திருபஃது பாக்களிருக்கின்றனவே? மேலும்,

"செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை"

"விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு"

"புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவிற்
அள்ளிக் கொள்வற்றே பசப்பு"

"தெங்கங்காய் போலதிரண் டுருண்ட பைங்கூந்தல்
வெண்கோழிமுட்டை யுடைத்தன்ன மாமேனி
யஞ்சனத்தன்ன பசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின்"

"காதலர் தூதொடு வந்தகனவினுக் கியாது
செய்வேன் கொல் விருந்து"

"பன்மாயக்கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை"

"ஊடலிற் றோற்றவர் வென்றாரது மன்னுங்
கூடலிற் காணப்படும்"

"காமக்கடும் புனனீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே யுளன்"

"நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை"

என்பனவாதிய ஆன்றோர் திருவாக்குகள் அநந்தமிருக்கின்றன. எற்றானுஞ் சிறந்த கல்வியொழுக்கத்தா னிறைந்த ஐயீர்! கற்பியன் மாதர் கணவரைப்பிரிந்து, சின்னாளல்லது, பன்னாள் தனியிருந்து வாழ்தலெந்தவாற்றானும்,பிழையாக மாட்டாதென்பதையும் அங்ஙனந்தனியிருந்து வாழ்தலும், காமாதி போகவின்பத்துண் மிக்கச்சிறந்த வோரின்பமா மென்பதையும், இங்ஙனம், நமக்கு மிகச்செவ்வனே விளங்கக்காட்டி நிற்பதூஉம், இஃது நமது, பூர்வீகக் கொள்கையே யாமென்பதூஉம், இத்தகைய வின்பாதி

போகங்கட்கு காரணமாக நிற்பதூஉம், மேற்கண்ட அக்கட்டுபாடேயா மன்றோ? ஈண்டுஞ் சிறிது கவனிக்குமிடத்து, இவைகள் போன்ற அநேக நல்லமார்க்கங்கட்கும், நமது வருணாச்சிரம தருமக் கட்டுக்கட்கும், உயர் தரமான நமது, பூர்வீகக் கொள்கைகளைப் பாதுகாத்துக் கோடற்கும் அக் கட்டுப்பாடு காரணமாகத்தா னிருக்கின்றது. இதனை வாசிக்கும் ஒவ்வொரு சகோதர சகோதரிகளும் நன்கு கவனித்தல் வேண்டும். ஒரு சிறிதளவு கூட மூலபலமற்ற புதிய நாகரீகங்களென்னும், சூறாவளியானது, இஞ் ஞால மொருங்கையுந்தான் பற்றிச்சுழற்றுகின்றது! என்னின் அஃது, துரும்புபோன்ற, சிற்றறிவாளரையேயன்றிக், கற்றூணைப்போன்ற பேரறி வாளரை யென்செயக்கூடும்? இனிவருங்காலத்தும் அக்கட்டுப்பாட் டை யுடைத்துவிடாமற் பாதுகாத்துக் கொள்ளவேண்டும் பேருஞ்சக்தி தான் நமது, மகாசமுகத்தாரிடம் வளர்தல் வேண்டுமேயன்றி, நிமிடத்துக்கு நிமிடம், நம்மை மாறுபடுத்துங்கால சக்தியையுடனுக்குடன் பேரறிவாண் மை யென்னும் மண்வெண்டியால் வெட்டி, வேரறப்பிடுங்கி, எறிந்து விடு தனுமேவேண்டும். அக்கால சக்தியை எந்தவாற்றானும் ஒரு சிறிதளவு கூடவளர்தல்விடக் கூடவேகூடாது. ஒருவாறு அக்கட்டுப்பாட்டையுடைத் துவிடலாமோவெனின் அஃது விடயத்தைப்பற்றி யெம்மாலீங்கு வரைந்து முடியாவாம். ஒருவாறு சிறிது கவனித்து முடிவு செய்யத்தான் வேண்டு மென்னின், அஃதாவது, சர்வநகரக்கூட்டம், நமது தொண்ணூற்றாறு நகரக் கூட்டமாகிய மகாசங்கம், ஒன்றைகூட்டிபதினமது வகுப்பைச்சார்ந்த பல விடயங்களையுங் காலதர்மம் நோக்கி "பல்லுநாவு முள்ளபேர்பகர்ந்து பேசி மகிழுவார்" என்பதற்கிணங்கி, "இறந்தது விலக்கலெதிரது போற்றல்" என்னு முத்தியைத் தழீஇ ஆராய்ந்து, புதிதாகச் சேர்க்கவேண்டும் நூன் முறைகளைப் பற்றியும், மாற்றியமைத்துக்கொள்ள வேண்டுஞ் சில நூன் முறைகளைப்பற்றியும், விலக்கவேண்டும் விதிமுறைகளைப் பற்றியும், எந்த வாற்றானுஞ் சிறந்த மகாவல்லுநகர்களாகக்கூடி யெந்தவிதமான, மனவருத் தமும், பொறாமையுமின்றி சாத்வீகத்தன்மையோடுகூடிய தெய்வீகத்தன் மையோடு கூடிப்பகர்ந்து பேசி, கூடியபக்கத்தார் அபிப்பிராயம்போன்று தீர்மானித்துக் கோடனும்வேண்டும். பின்னர், அத்தீர்மானங்களைநம் பின் சந்ததியார் நமக்கிவைகள், பூர்வீக வழக்கக் கொள்வகைகளாமென்று தங்களுச்சிமேலேற்றிப் புகழ்ந்து கொண்டாடிக் கொள்வதற்குரியதக்கரிக் கார்டுகளாக "நல்ல நூன்முறை சட்டங்களாக, அமைத்துப் புத்தகங்க ளாக்கி வைத்துவிடலும் வேண்டும். அவைகளை நமது, மாணவர், மாணவிக ளுக்குப் பாடமாகச் செய்துவிடனும் வேண்டும்.

இனி, நமது, மகாசமுகத்துக்குரிய கோத்திராதிகளைப் பற்றிச் சிறிது விரிப்பான் றொடங்கி, விளக்குதும். அஃதாவது,

1. "ஒக்கூருடையார் கோத்திரம்"
2. "பட்டினத்தடியார் கோத்திரம்"
3. "பெருமருதூருடையார் கோத்திரம்"
4. "கழனிவாசக்குடியார் கோத்திரம்"
5. "கிங்கிணிக்கூருடையார் கோத்திரம்"
6. "பேரசெந்தூருடையார் கோத்திரம்"
7. "சிறு சேத்தூருடையார் கோத்திரம்"

ஆகிய, இவ்வேழு கோத்திரத்தார்க்கும், இளையாற்றங்குடிச்சிவாலயம், அடிபீடமாகலின், இக்கோத்திரத்தார் இளையாற்றக்குடிகோவில், நகரத்தாரெனப் பெயர் பெறுவார்"

1. "உறையூருடையார் கோத்திரம்"
2. "அரும்பாக்கூருடையார் கோத்திரம்"
3. "மணலூருடையார் கோத்திரம்"
4. "மண்ணூருடையார் கோத்திரம்"
5. "கண்ணூருடையார் கோத்திரம்"
6. "கருப்பூருடையார் கோத்திரம்"
7. "குளத்தூருடையார் கோத்திரம்"

ஆகிய, இவ்வேழு கோத்திரத்தார்க்கும், மாற்றூர் சிவாலயம் அடிபீடமாகலின், இக்கோத்திரத்தார், மாற்றூர் கோவில் நகரத்தாரெனவும் பெயர் பெறுவார்.

1. "சிறுகுளத்தூருடையார் கோத்திரம்"
2. "கழனிவாசலுடையார் கோத்திரம்"
3. "மருதேந்திர புரமுடையார் கோத்திரம்"

ஆகிய, இம்மூன்று கோத்திரத்தார்க்கும், வைரவன் கோவிற் சிவாலயம் அடிபீடமாமாகலின், இக்கோத்திரத்தார் வைரவன் கோவில் நகரத்தாரெனவும் வைரவன் கோவிலாரெனவும் பெயர் பெறுவார். பெரியவகுப்பு தெய்வநாயகர்வகுப்பு, பிள்ளையார்வகுப்பு.

1. "இரணியூர்த் திருவேட்பூருடையார் கோத்திரம்"

இக்கோத்திரத்தார்க்கு இரணியூர்ச் சிவாலயமடிபீடமாகலின் இக்கோத்திரத்தார், இரணியூர்க் கோவில் நகரத்தார், இரணியூர் கோவிலாரெனவும் பெயர் பெறுவார்.

1. "பிள்ளையார்பட்டியான,
"திருவேட்பூருடையார் கோத்திரம்"

இக்கோத்திரத்தார்க்குப் பிள்ளையார் பட்டிச் சிவாலய மடிபீடமாமாகலின், இக்கோத்திரத்தார் பிள்ளையார் பட்டிக்கோவில் நகரத்தாரெனவும், பிள்ளையார்பட்டிக் கோவிலாரெனவும் பெயர் பெறுவார்.

1. "இளநலமுடையார் கோத்திரம்"

இக்கோத்திரத்தார்க்கு, நேமம், சிவாலயமடிபீடமாகலின் இக் கோத்திரத்தார் நேமங்கோவினகரத்தாரெனவும், நேமங்கோவிலாரெனவும் பெயர் பெறுவார்.

1. "சூடாமணிபுரமுடையார் கோத்திரம்"

இக்கோத்திரத்தார்க்கு, இலுப்பைக்குடிச்சிவாலய மடிபீடமாகலின் இக்கோத்திரத்தார், இலுப்பைக்குடிக் கோவில் நகரத்தாரெனவும், இலுப் பைக் குடிக்கோவிலாரெனவும் பெயர் பெறுவார்.

1. "புகழ்வேண்டியபாக்கமுடையார் கோத்திரம்"

இக்கோத்திரத்தார்க்குச் சூரைக்குடிச் சிவாலய மடிபீடமாகலின், இக்கோத்திரத்தார் சூரைக்குடிக்கோவில் நகரத்தாரெனவும் சூரைக்குடிக் கோவிலாரெனவும் பெயர் பெறுவார்.

1. "கழனிநல்லூருடையார் கோத்திரம்"

இக்கோத்திரத்தார்க்கு வேலங்குடிச் சிவாலய மடிபீடமாகலின், இக்கோத்திரத்தார் வேலங்குடிக் கோவில் நகரத்தாரெனவும், வேலங்குடிக் கோவிலாரெனவும் பெயர் பெறுவார். சிரார்த்தகாலத்தில் நமது கோத் திரத்தின் பெயரையும் அநுட்டானத்துக்குக் கொண்டுவர வேண்டுவதும் நமது கடமையாம். இன்னவோரன்ன வொன்பது, சிவாலயங்களையுஞ் சார்ந்தவிருபஃதுமூன்று, கோத்திரத்தார்களாகிய வைசியக்கூட்டத்தார்க் குத்தான், "நகரத்தார்" என்றும், மூன்றுவது, அத்தியாயத்துக்கண்ட சிறப் புப்பெயர்கட்குரியாரென்றும், நமது மகாசமுகத்தாரானும், ஏனையபலரா னும், வழங்கப் பெறுகின்றனவாம். ஒவ்வொரு கோத்திரத்தார்க்கும், அவ் வவர்கட்குரிய சிவாலயங்களிலிருந்துஞ் சுவாமிக்குச் சாத்தினமாலையும் விபூதிப் பிரசாதங்களும், வந்துதான் விவாகம் நடத்தல்வேண்டும். இவை கள் நகரத்தார் சரித்திரமென்ற புத்தகத்தினின்று மெடுத்தெழுதப் பெற் றனவாம். இந்நூற்கு முதனூலுமஃதேயாம். இனி, நண்ப! "நகரத்தார்" என்பது, நமது, மகாசமுகத்தின், பொதுமையைக் குறிக்குமோர் சிறப்புப் பெயராம். அஃது, ஏனையவொரு எந்த வருக்கத்தார்க்கும், எந்த வரு ணத்தார்க்கும், எந்த நகரவாசிகட்கும் எந்தநாகரீக முடையார்க்கும், உரித்தானதாகலின்றி, நமது, மகுடவைசிய வகுப்பார்க்கே வுரித்தான தென்பதூஉம், காரணம்பற்றியோ. இடுகுறியாயோ, நமது வகுப்பாரிட மே யப்பெயர், தொன்றுதொட்டு வழக்கத்திலியன்றுவருகிறதென்பதூ உம் இரவலர் முதற்கொண்டு புரவலரீறாக எவர்கட்குந் தெற்றெனவிளங் கிய தொன்றும். இஃது, இந்த நாடொடங்கியாக்கும், இவ்வகுப்பாருக் குரியதாக வழங்கிவருகிறதென, எந்த வாராய்ச்சிவல்லுநராலும் வரைய றுத்துக்கூற முடியாதாமென்க. இதன்பூர்வத்தைப்பற்றிச் சிறிது விரிப்பா

ளுடங்கின் அஃது, எத்தகையாரும் வியப்பத்தகுந்த நமது, மகாசமுகத்தின் மூலபலத்தையும், நமது, தாதை, மூதாதைகளின் மாட்சிகளையும்,பரம்பரையாக நமது மகாசமுகம், எச்சமயங்களானும் புகழ்ந்து கொண்டாடப்படுகிற மெய்ச்சமயமான நமது, சைவசமயம் ஒன்றின்மாத்திரமே ஈடுபட்டுச்சார்ந்து வருகிறதென்பதையும், எந்தக்காலத்தும், நமது, வகுப்பார் வைசியவருணத்தாரே என்பதையும் மிகத்தெளிவாக விளங்கக்காட்டும். அஃதாவதியாங்ஙனமெனின்? ''செட்டியிருப்பிடம் பட்டினமாகும்'' என்பது நமது, தாய்வர்க்கத்தாரின் பழமொழியாமன்றோ! எவ்வித நாகரீகமார்க்கத்துக்கும், திருத்தமார்க்கத்துக்கும், எவ்விதத் தொழிலபிவிருத்திக்கும், வியாபார வகுப்பாரே காரணமாவர். இஃது, இங்ஙிலவுலகின் கண்ணுடைத்தாய, பலதேயச் சரித்திரங்களையும் ஊகித்துணர்வா ரொவ்வொருவர்க்கும் நன்குவிளங்கும். எத்துணைக்கேவலமான வொருசிறு கிராமமாக விருப்பினும், அதில் வைசியர் சிலர் குடியேறுவார்களேயாயின் கூடியசுருக்கில் அஃதொரு பெரிய நகரமாமென்பதில், எட்பிளவு சந்தேகமுமில்லையாம். ஆகலின், நாட்டை நகரமாக்கல்வேண்டும், பேருஞ்சக்தியானது நமது, சமுகத்தாரிடமே பெரும்பான்மையமைந்து கிடத்தலினுற்றுன், நமது பிரதானவைசிய மகாசமுகத்துக்கு ''நகரத்தார்'' என்னுஞ் சிறப்புப் பெயரொன்றும், இயற்கையிலேயேயமைந்து கிடக்கின்றது. எந்தக்காலத்தும், நகரங்களிலே வாசஞ் செய்துவருவதூஉம், ஒன்று. மேலும், பட்டினமென்பதும், நகரமென்பதும் பொருளொன்றே என்பான் நமது முன்னையப் பெரியோர்க்குத் தெரிந்திராததன்று. அங்ஙனமாயின், நமது பூர்வீகப் பெரியார்பட்டினத்தார், பட்டினத்தாரென்ற பட்டத்தைக் காலக்கிரமத்தில் வழக்கத்திற்குக் கொண்டுவந்திராமல், நகரத்தார், நகரத்தாரென்ற சிறப்பினையே வழக்கத்திற்குக் கொண்டுவந்திருப்பதன் காரணமென்னை? ஆம் ஐயீர்! அதிற்றுன், நமது பூர்வீகப் பெரியார் ஆன்றதன்மையும், சைவசமயத்துப் பெறும்பற்றுடைமையும், ''இனித்த வொண்சுவை தருதனித்தமிழன்னையின், கனித்தலை பருவத்துதித்த நனித்தவமாக்கள் நமது, மகாசமுகத்தாரே'' என்பதூஉம், மிகத்தெளிவாகக் காணக்கிடக்கின்றன. அஃதென்னை? ''திருச்சிற்றம்பலத்தின்கண்'' ஆறுகோடிமாயா சக்திகளும் ஆநந்தசாகரத்தின் மூழ்கப் பல்லாயிரங்கோடி யிளஞ்சூரியப் பிரகாசம்போன்று, இரவுபகலென்பதின்றி, யெந்தக்காலத்தும், ஆநந்தத் திருநடனம் ஆடிக்கொண்டிருக்கும் ''அருக்கனிற் சோதியமைத்தோன்'' ''திருத்தகுமதியிற்றண்மை வைத்தோன்'' ''திண்டிறற்றீயின் வெம்மை செய்தோன்'' ''பொய்தீர்வானிற் கலப்பு வைத்தோன்'' ''மேதகுக்காலினூக்கங்கண்டோன்'' ''நிழறிகழ் நீரிலின்சுவைநிகழ்ந்தோன்'' ''வெளிப்பட மண்ணிற்றிண்மை வைத்தோன்'' ''என்றென்றெணைப் பலகோடி யெனைப்பல பிறவும்'' ''அனைத்தனைத்தவ்வயினடைந்தோன்'' ஆகிய ''சஞ்சீவினியை''

மாந்தராய்ப் பிறந்தார் எவர்கட்கு மெளிதிற் காட்டத் தகுந்த பேராசிரியன்மார்கள் ஐவரேயாவர். அச்சிற்றம்பலத்துக்குரியாரும் அவர்களேயாவர். அவர்கள்தான் யாரென்னின்? "நமது, திருநாவுக்கரசசுவாமிகள்" தம்மையோர் பாரமாங்கல்லோடே சார்த்தியார்த்து சாகரத்திலே கொடுங்கோன்மன்மகன் ஒருவனுல் அமிழ்த்தப்பட்டபோழ்துதங்களினரிய திருவாக்கால் "சொற்றுணைவேதியன் சோதிவானவன், பொற்றுணை திருந்தடி பொருந்தக்கைதொழ, கற்றுணைப்பூட்டியோர் கடலிற்பாய்ச்சினும், கற்றுணையாவது நமச்சிவாயவே" எனத்திருவாய்மலர்ந்தருளிய மாத்திரம், கண்டார் யாவரும் ஏ! ஏ! இஃதெவன் வியப்பு, இஃதெல்லாம் வல்ல நமதிறைவன்றிரு நாமமாகிய வைந்தெழுத்துண்மையின் மகாத்மியமே யாமென்று, அஞ்சலிபத்தராய் நின்று அதிசயிக்குமாறு, அக்கலையோராதனமாகக் கொண்டு, அச்சாகரத்தின் மிதப்ப செய்தவர்களேயாவர். அபயம் புகுந்தாரையஞ்சாமற்காக்குங் கருணாகரபிரபுக்களும் அவர்களேயாவர். இவ்வைவர்களின், மாட்சியைப்பற்றிச் சாதாரணமாக வரையப்புக்குழியிவ்வகலிடமும் ஆகாயமுமே போதாததாகவே முடியும். மேலும், நமது, சைவசமயம், இப்பேராசிரியன்மார்களான தம்பங்களின்மீதுதா னிலைநின்றும்வருகின்றது. "நாவினுக்கருங்கல நமச்சிவாயவே" "அரியதோர் நமச்சிவாயமாதியந்தமானது" "சிவாயநமாவென்று சிந்தித்திருப்பார்க் கபாயமொருநாளுமில்லை" "விண்ணுறவடுக்கிய விறகின் வெவ்வழல், நுண்ணியபுகிலவை வொன்றுமில்லையாம் பண்ணியவுலகினிற் பயின்றபாவத்தை நண்ணினின்றறுப்பது நமச்சிவாயவே" "நமச்சிவாயவாழ்க நாதன்றாழ்வாழ்க" என்பான்றொடக்கத்து எத்துணையோ மாமறை மொழிகள் ஓலமிடுகின்றன. அன்பார்ந்த ஐயீர்! எல்லையிற் பெரிய விவர்கடான், "நகரத்தார்" "மகரத்தார்" "வகரத்தார்" "சிகரத்தா" "யகரத்தார்" எனப் பெயர்பெறும் பேராசிரியன்மார்கள். இவ்வைவரும், மனிதராய்ப் பிறந்தார் ஒவ்வொருவர்க்கும், இன்றியமையாத ஆவசியகம் பற்றித்தான் இவ்வைவரின் முதலெழுத்தாய ந. ம. சி. வ. ய. ஆகிய அவ்வைந்தெழுத்தையு மொன்றுகூட்டி "நமசிவய" வெனவான்றோர்களமைத்து வைத்திருக்கின்றனர். இவ்வைந்து, ஆசிரியன்மார்களினும், இஞ்ஞாலவாழ்க்கைக்கு முதன்மையல்லது தலைமை பெற்றவர், நகரத்தாரேயாவராகலினுற்றான், அஃதினை. நன்குணர்ந்த, நமது முன்னையப் பெரியோர் "நகரத் தார்" என்றபட்டத்தை நமது, மகாசமுகத்திற்குரிய தாக்கிக்கொண்டார்களாமென்க. மேலும், உயிர் பனிரெண்டுமாணெழுத்தென்றும், ஒற்றெழுத்தொருங்கு மலியாமெனவும், உயிர் மெய்யெல்லாம் பெண்ணெழுத்தென்றும்,எழுத்தின் கிழத்தி நாமகளாதலிற் செய்யுளல்லது சொன்முதலிலே, பெண்ணெழுத்தல்லது, முன்வைத்துரையாரென்றும், ஒகரம் நீங்கிய வுயிர்க்குறினன்கும், "கசதபநமவ" ஆகியவுயிர் மெய்யெழுத்துக்களேழும், அமுதவெழுத்தாமென்றும் நமது, செந்தமிழ் பேராசிரியன்

மார்களாற் கூறப்படுகிறதாகலின், அவைகளிலே, பெரும்பயிர்ச்சியும், பேரபிமானமும் உடைய நமது, பூர்வீகப்பெரியார், நகரமாகிய, அமுதவெழுத்தை முன்வைத்தே நகரத்தாரென அமைத்துக் கொண்டார்களென்னலும், மிகப்பொருத்தமாம், நாட்டாரினின்றும் நகரத்தார் விசேடமானதும் ஒன்றும், ஆகலின், எமதாப்த நண்ப! நீவிர் எக்காரணங்கொண்டும், 'நகரத்தார்' என்னும் பட்டப்பெயரினை, மறத்தலைப்பொருந்தியும், நும்பழக்கவழக்கத்தினின்றும், விலகிவிடுமாறு செய்தல்கூடவேகூடாது. இதுகாறும், நம்மனுட்டானத்திருந்துவருகிறது போன்று, இனி வருங்காலத்தும், எவ்விதக்கூட்டநாட்டங்கள், ரிக்கார்டுகள், புத்தகங்கள், பத்திரிகைகள், துண்டுப்பேபர்களிறுதியான, எவ்விதப்பொது விடயங்களினும், நமது, மகாசமூகத்தின் பொதுமைக்குரித்தான, ஒரு பெரும்பொருட்குவையா மென்பதைக்கருதி, பழக்க வழக்கத்தினிகழ்ந்து, வருமாறு செய்தனும் வேண்டும். இது விஷயத்தின் மிகஞாபக மிருத்தனும்வேண்டும். "நிறை மொழிமாந்தராணையிற் கிளந்த, மறைமொழிதானே மந்திரமென்ப" என்னும், ஆன்றோர்திருவாக்குப் போன்று, "நகரத்தார்" என்ற வமுதவார்த்தையை யொருமகாமந்திரமாகக் கருதனும் வேண்டும். நமது, பூர்வீகப் பெரியார் வல்லுநத்தன்மைகளையும், கொள்வகைகளையும், அமுதவாசகங்களையும், பற்றிக்காலக்கோட்டத்தால் நிகழுமனக் கோட்டைத்தைத் திருத்தியமைத்துக்கொண்டு ஆராய்ச்சி செய்வார்க்கு அஃது மிக நன்கு விளங்கும், இதிற்றான் என்னையிருக்கின்றது, அதிற்றான், என்னையிருக்கின்றது, எனவொரு சிறிதளவும், ஆராய்ச்சியின்றி அலட்சியம் செய்தல் கூடவேகூடாது. "ஈன்று வளர்த்த தாய் தந்தைக்கெவரே கைமாறியற்றிடுவார், ஆன்ற மதலை நூறுவயதளவு மடிமைத்திறம் பூண்டு, மூன்று புவனத்துள்ள பொருண் முற்றுமளித்து, முறைமுறையே, ஏன்று வழிபாடியற்றிடினு மொருநாள் வளர்த்தற்கிணையாதே' என்றவாறு, நமது, தாதை மூதாதைகட்கு, எவ்விதமான கைமாறுநாஞ்செய்யினும், அஃது, ஒருநாள் வளர்த்தற்குஞ் சமமாகாதென்பது அறிவாளிகளாயுள்ள எப்பாலவரு மொப்பமுடிந்த வொருவிடையமாம். எனினும், நம்மை மிகவுள்ளன்போடும், பெற்றுவளர்த்து, வாலிபமாக்கிவிடுத்து, அவர்கட்குரித்தான எல்லாச் செல்வமாதிகளையும், நமதுழியொப்புத்தந்த ஒரு நன்றியை நோக்கி அவர்கள் செல்வமாதிகளொருங்கும் எவ்வாறு நமக்குச்சுதந்தரமாயிற்றோ? அஃதேபோன்று, அவர்களால் தீர்மானிக்கப்பெற்ற ஆசாரசீலங்களும், வரன்முறைக்கட்டுக்களும், லௌகிக வைதிகங்கண் முதலிய சமயக்கொள்வகைகளும், நமக்கே சுதந்தரமானதெனக் கருதி, ஓரணுவளவுகூட அதினின்றும் விலகாதிருத்தனும் வேண்டும். காலதருமம் நோக்கி நமது பூர்வீகக்கொள்வகைகளிலேதேனு மொன்றை மாற்றியமைத்துக்கொள்ள வேண்டுமாயின், நமது, மகாசங்கங்கூடியதிற் பகர்ந்து பேசிக் கூடியபக்கத்தாரபிப்பிராயம் போன்றே தீர்மானித்துக் கோடலும்

வேண்டும். எவ்விதக்கட்டுக்களேயும், ஒருவரிருவராயுடைத்துவிடுதல் கூடாது. புதிதாகவோர் விதியை, அமைத்துக் கொள்வதெனினும் மிகத்தீர்க்காலோசனேயுடன் சமுகப்பொதுவிற்கு ஒரு சிறிதளவுகூடத் தீமையை விளேவிக்கக் கூடாததாயிருத்தலும் வேண்டும். நம்தாதை, மூதாதைகளியல் வழி நாமியல்தலும், அவர்களனுட்டித்து வந்த சமயநூன்முறைகளேயே, நாமனுட்டித்துவரலும், அவர்கள் தீர்மானித்து, வமைத்து வைத்திருக்கிற வரன்முறைக்கட்டுச், சட்டங்களின்படியே, நாமமைந்து ஒழுகுதலுமே அவர்கட்கு நாமாற்றும் ஒரு மேலானகைமாறுகமுடியும். அவர்களேயல்லாமல் நாமெங்கிருந்து வந்தோமெனவுணரும் பெரியவோர் ஞாபகமே "ஒரு நாள் வளர்த்தற் கியையாதே" எனமுடிந்த மேற்கண்ட செய்யுளின் கருத்தைச், சண்டமாருதமாக நின்று ஒரு சிறிதளவுகூடத் தலேநீட்டவொட்டாமற் பறந்தோடச்செய்யும். காலவியற்கையைப் பின்பற்றி நமது, மனேசக்திகளும், நிமிடத்துக்கு, நிமிடமாறிக் கொண்டிருக்குமாகலின், அவைகளேப் பின்பற்றி நாமும் மாறுதலடைந்து விடக்கூடாது. ஒரு சிறிதளவுமாராய்ச்சியற்ற மனேசக்திகள், செல்லுகிற வழியெல்லாம், நாமும், 'காடுங்கரையு மனக்குரங்குகால்விட்டோட வதன்பிறகே யோடுந்தொழிலாற்பயனுளதோ' என்ற நம்தாயுமானர் திருவாக்கையும், "மனம்போன போக்கெல்லா போக வேண்டாம்" என்ற நம், ஔவையம் பிராட்டியார் திருவாக்கையும் ஊகித்துணராமற் செல்வோமாயின் அஃது பெருங்கேட்டையே விளேவிக்குமென்பதை, நாமறவாதிருத்தலும் வேண்டும். மேலும், நமது, பூர்வீகப்பெரியார் கொள்வகைகளேயும், அவர்களின் பழக்கவழக்கங்களான நடையுடைபாவனேகளேயும், நல்லொழுக்கங்களான வரன்முறைக்கட்டுக்களேயும், நாமவமதித்தும், விலகியொழுகியும், வருவோமாயின், நமதருணகிரி நாதர் திருவாய்மலர்ந்தருளியவாறுபோல் "வாலேவயதாகி யழகாகி மதனுகிபணிவாணிபமொடாடி, மருளாடிவிளேயாடி, விழல்வாழ்வுசதமாகி, வலுவாகிமாடகூடமொடு பொருள்தேடி, வாசபுழு கேடுமலரோடுமனமாகி மகிழ்வாசனேகளாதியிடலாகி, மயலாகி, விலேமாதர்களேமேவி யவராசைதனிலே சுழலச் சில நாள் போய், தோல்திரகைளாகி நரையாகிக்குருடாகி யிருகால்கள் தடுமாறி செவிமாறி பசுபாசபதி சூழ்கதிகள் மாறிதடியோடு திரியுறும் நாள்" நம்பால் வந்தணுகுமுன்னரே, நமதரும்புதல்வர்களும், நம்மனமாதிடுக்கிடுமாறு, தலேகீழ்ங்கான், மேலுமாக, மாறியியலத்தலேப்பட்டு விடுவார்களென்பதையும், நாமறந்து விடாதிருத்தலும், வேண்டும். ஞாபகமில்லார்க்கு ஞாபகப்படுத்துதலும் வேண்டும், இனி, நம்மனேர் மரபிற்குரியசிரமுண்டிதத்தின் மாட்சியைப் பற்றியுஞ் சிறிது விளக்குவாம். அஃதாவது, மிகவும் பெரிதான விப்பூமண்டலத்துடைத்தான, எந்தப்பகுதிமனிதக்கூட்டத்தாரின் செயற்கையமைப்புக்களேப்பற்றிக் கவனிக்கப் புகுவோமாயினும், நம்போன்று, சிரமுண்டிதஞ்செய்துகொள்கிறவகுப்பாரில்லவேயில்லே

என்பதாகத்தான் முடியும். இஞ்ஞாலத்து இக்கொள்வகை யுயர்ந்ததாக விருப்பின் இக்கொள்வகையை யாண்டநுபவத்துக் கொணரும், வகுப்பார், நாமாகமட்டும், மிகச்சுருக்கமாகக் காணப்பெறுவானேன்? மிகப் பெருக்கமாகவன்றோ காணப்பெறுதல்வேண்டும்! எனின், நண்ப! சிறிது நன்குணர்வீர்களாக. அஃதாவது, ஒருநகரத்துடைத்தான மனிதக்கூட்டத்தாருள், எற்றானுஞ் சிறந்தயோக்கியர்களித்துணை, அயோக்கியர்களித்துணை, என வேறுபிரித்துக் கணக்கெடுத்து நோக்கின், யோக்கியர்களாயுள்ளார் எத்துணைப் பெயர்களகப்படுவார்கள்? முக்காலே மூன்றுவீசம், முக்கால்வீசம் பாகமுஞ் சுத்த அயோக்கியர்களேயன்றோ காணப்படுவார்கள். மேலும், உயர்ந்த பொருள்கள் மிகச்சுருக்கமாகத்தானேயன்று காணப்பெறும் அஃதேபோன்று, உயர்ந்த கொள்வகைகளை யுடைய மனிதக்கூட்டத்தார் மிகச்சுருக்கமாகத்தான் காணப்பெறுவார்கள். ஆகலின், நம்மனோர் சிரமுண்டிதத்தின்மாட்சி இத்துணைத்தென்பது, ஒருவர்கூறாமலே, நன்குவிளங்குவதொன்றாம். எற்றானுஞ் சிறந்ததோர், கொள்வகையாமென்பதையும், எத்தகையவொரு பெரியார் எவரானு மறுக்கக்கூடாததூஉமாம். ஆனால், எவ்விடயங்களையும் பற்றி அவைகளின், உண்மைக ளொவ்வொன்றையு மொளிக்காமலும், அவைகளிலோர்சிறிதுங் களங்கம்வையாமலும், உள்ளதையுள்ளவாறே, வரைந்து முடிக்கும் எமது. இயற்கைக் குணத்தையே பின்பற்றியியலுகிறே மன்றிப், பிறிதின்றாம். மேலும், "வஞ்சமனத்தான் படிற்றொழுக்கம் பூதங்களைந்து மகத்தேநகும்" "வானுயர் தோற்ற மெவன் செய்யுந்தந் நெஞ்சந் தானறி குற்றப்படின்" "கண்ணுங்கருத்து முளதாயிருந்து மண்ணிற் பிறந்தார் மதிகெடலாமோ" என்பான் தொடக்கத்து ஆன்றோர் திருவாக்குகளும் எம்மை அடக்கியாள்கின்றன. ஒரு சிறிதளவுகூடப் பேதமற்றிருந்த நமது மகாசமுகத்தை இரண்டுமூன்று நான்குப் பிரிவுகளாகப் பிளவுபடுத்திய காலவிபரீதத்தை நினைதொறும் நினைதொறும், நெஞ்சம் பெரிதும் அஞ்சப்படுகின்றது. மேலும், சின்னாட்களுக்கு முன்னர் நம்மனோருட் சிலர் நமது மரபிற்குரிய சிரமுண்டிதமானது, அத்துணைக் கௌரவமுடையதல்லவென்றும், அறிவுடையார் மனத்துக்கு அஃது அசங்கியமாகக் காணப்படுகிறதென்றும், சுகாதார முறைகட்கும் அஃது அத்துணை ஒத்ததல்ல வென்றும், ஆகலின், நம்மனோர் யாவரும் முடிவைத்துக் கொள்ளல் வேண்டுவதூஉம் மிக்க அவசியகமேயா மென்றும், இங்ஙனமாக அது விஷயத்தைப்பற்றிப் பலவிதமாக பிரசங்கங்கள் செய்தும், பத்திரிகை புத்தகங்களாக வரைந்து வெளிப்படுத்தியும் வந்தார்களன்றோ? அஃதோடு, எம்முடைய அபிப்பிராயமுங்கூடக் கலந்து வெளிவரவேண்டும் ஆவசியகம் உள்ளதுதானே என்பதை யாமுஞ் சிறிது கவனிக்கப் புகுந்த தன்மையில் "இவ் அங்கத்துக்கு நமது மரபியன் மாட்சி என்றும், இந்நூற்குச் சிவகோத்திர வைசிய விருத்தி என்றும்" பெயர் புனைந்திருக்கிறோமாகலின் முதன்முதலின்

சிரமுண்டிதத்தின் மாட்சியை ஒருவாறு சுருக்கமாக வரைந்து முடித்தே பின்னர் கவனிப்போம். அஃதாவது. (சிரமுண்டிதத்தின் மூல காரணத்தைப்பற்றி) பலர் பலவித அபிப்பிராயப்படுகிறார்கள். அஃதொருபக்கம் இருக்கட்டும். ஈங்கு பொதுவாகக் கவனிக்குமிடத்து இது விஷயத்தைப் பற்றி ஆழ்ந்து யோசிக்கவேண்டியதாய் ஒன்றுந்தோற்றவில்லை. சாதாரண எவர்களுக்கும் எளிதில் விளங்கக்கூடியதாகத்தான் இருக்கிறது. அஃது எங்ஙனமெனின்? நமது இந்து தேயத்திலுள்ள ஒவ்வொரு ஆசாரசீலங்களும் மத சம்பந்தத்தை ஒட்டியதாகவே இருக்கும். அதிலும் நமது மகா சமுகம் எந்தக்காலத்தும் நமது சைவ சமயத்துப் பெரும்பற்றுடைய தென்பதை எவர்களும் மறுக்கமுடியாத வுண்மையல்லவா? நமது சைவசமயத்து முதன்மையான நான்கு ஆச்சிரமங்களினும், சன்னியாசியாச்சிரமமே மிக்கச் சிறந்ததாமென்பதை எவர்கள்தான் மறுக்கக்கூடும்? அச்சன்னியாசி ஆச்சிரமத்தார்க்குரிய இலக்கணங்களில், சிரமுண்டிதம் முதலாக சர்வாங்க வபனமே எற்றானுஞ் சிறந்ததென்பதை சாதாரணச் சிறுவர் சிறுமிமுதற் கொண்டு எத்தகையப் பெரியாரும் ஒப்பத்தகுந்த ஒரு மேலான விஷயம் அல்லவா? நமது மகா சமுகத்துக்கு முன்னையப்பெரியார் நியமித்திருக்கும் ஒவ்வொரு விதமான ''லௌகிக'' வரன்முறைச் சட்டங்களையும் சிறிது ஆராய்ந்து சீர்தூக்கிப்பார்க்கப் புகுவமேல் நமது மகாசமுகத்துக்கு அரண்களாய் நிற்கும் ஒவ்வொரு வரன் முறைகளும் மத சம்பந்தத்தை ஒட்டியதாகவே காணப்பெறும். மிகவும் பெரிதான நமது பரத கண்டத்துள் உடைத்தான எந்தப் பகுதியாருக்காவது சன்னியாசி ஆச்சிரமத்தார் நமதுமகாசமுகத்துக்கு ஆசிரியன்மார்களாயிருத்தலைப்போன்று ஆசிரியன் மார்களாயிருத்தலை நாம் கண்டிருக்கிறோமா? நமது முன்னையப் பெரியார் தங்கள்தங்களின் பான்மணமாறாப்பாலர்முதலாய மனைவி மக்களோடுங்கூடச் சுற்றத்தார் ஈறாக தங்களின்வருணத்தைச்சார்ந்த எல்லாச் சகோதரசகோதரிகளும் சன்னியாசிகளாவ தற்குரிய விருப்பமில்லாதவர்களாயின் முற்றத்துறந்தமுனிவர்களின் பால்உபதேசம்பெற்றுக்கொள்ளவும் விரும்புவார்களோ?வரையறுத்து கூறுவதற்கு இயலாத நெடுங்காலத்துக்கு முன்னரே இருந்து நமது மகாசமுகம் எற்றானுஞ்சிறந்து, பேரருணிறைந்து முற்றத்துறந்த முனிவர்களே ஆசிரியன்மார்களாய் உபதேசிக்கப் பெற்று வருகிறதென்பதே ஒரு பெரிய சாட்சியமன்றோ? மேலும், அவ் ஆசிரியன்மார்களால் உபதேசிக்கப்பெறும் ''மகாமந்திரத்தைப்''பற்றி சிறிது ஊன்றிநோக்கிக் கவனிக்கப்புகுந்து வியாக்கியானம் செய்யப்புகுந்தால் சன்னியாசிக்கும், கிரகஸ்தனுக்கும் உரித்தான இருவிதப்பொருள்களையும் எவ்விதச் சந்தேகவிபரீதங்களும் ஒழிய மிகத்தெளிவாக விளங்கப் போதிப்பதொன்றேயாகும். ஆனால் அதனைப்பற்றி வெளிப்படையாக விரித்துக்கூறும் சுதந்தரம் எமக்கில்லையாகலின் விடுத்தேம். மேலும், நமது மகாசமுகத்தைச் சார்ந்த ஒவ்வொரு

நகரங்களினும் இல்லறதருமத்தோடுகூடிய சன்னியாசிகளான உத்தமஞானிகள் பலரிருந்துவருகிறார்களென்பதூஉம் இதற்கு நல்லதோர் சாட்சியமன்றோ? ஈண்டுஞ் சிறிது கவனிக்கப்புகுந்தால் மிகுதியுஞ் சிறப்பான ஒரு பெரிய காரணம் ஒன்றுங்காணப்பெறுகிறது. அஃதாவது, நமது வகுப்பாரைப் போன்று, அநேகவகுப்பார்கள் நமது சைவசமயத்துக்கு உரித்தானவர்களாய் காணப்படினும், எல்லாம்வல்ல இறைவனின் திருவருட் குமாரனான "தண்டாயுதபாணி" நமது வருணத்தார்க்கு குலதெய்வமாய் நம்முன்னிலையிலும் நாம் கொண்டு நடாத்தும் எவ்விதத் தொழில்களாதி முன்னிலையிலும் முன்னிற்பதுபோன்று ஏனைய எந்தப்பகுதியாருக்காவது அவர்கள் தங்களின் குலதெய்வமாக அவர்களின் முன்னிலையிலாவது, அவர்கள் கொண்டுநடாத்தும் எவ்விதத்தொழில்களாதி முன்னிலையிலாவது, முன்னிற்பதை கண்டிருக்கிறோமா? கண்டிலமாகலின், அவனும் சிரமுண்டிதத்தோடு கூடினவனாகலின் அவன்தன் திருத்தொண்டர்களாகிய நமது வகுப்பாருக்கும் அஃது உரித்தாயதென்னலும் மிகப்பொருத்தமேயாகும். "பிரமத்திற்குமேம்பட்டது, சுப்பிரமமல்லவா" அச்சுப்பிரமமே முண்டாகாரமாயிருத்தலால், அச்சுப்பிரமமே சுப்பிரமணியமாமென்கக் காணப்படுகிற எந்தவுலகத்துக்குந் தோற்றப்படுகிறதாகலின் சன்னியாசிகளுக்குச் சிரமுண்டிதமே மிகமேலான சுதந்தரமாக முடிந்தது. அங்ஙனமாக அச்சுப்பிரமணியமே நமக்குக் குலதெய்வமாக நமது முன்னையப்பெரியார் புண்ணியவசத்தால் வந்தமைந்திருக்கிறதாகலின், சிரமுண்டிதமும் நமதுமரபிற்குப் பூர்வீகச் சுதந்தரமாகமுடிந்தனவாமென்க. ஆனால் இதனையல்லாத வேறு எவ்விதக்காரணங்களும் சிரமுண்டிதத்திற்குப் பொருத்தமாகாது. பொருத்தமாமாறு ஏதோசிலர் தங்களின் கல்வியறிவாற் கூறியிருப்பினும் அஃது உண்மையுமாகாது. யாம் கூறிவருகிற ஒவ்வொரு நியாயங்களும் உண்மையென்பதும், உண்மையல்லவென்பதும் நமது வகுப்பைச்சார்ந்த ஒவ்வொரு பெரியார்க்கும் மிகத்தெளிவாக விளங்கும். நமது மகாசமுகத்துள் தியானபோகத்திலமர்ந்த எத்துணையோ பெரியார் "மௌனம்சர்வார்த்தசாதகம்" என்பதையுணர்ந்து "இருந்தார்சிவமாகி யெங்குந்தாமாகி, இருந்தார்சிவன் செயலியாவையுநோக்கி, இருந்தார்முக்காலத்தியல்பைக்குறித்தங்கு, இருந்தாரிழவுவந்தெய்தியசோம்பே" "சோம்பரிருப்பதுசுத்தவெளியிலே, சோம்பர் கிடப்பதுசுத்தவெளியிலே, சோம்பருணர்வுசுருதிமுடிந்திடம், சோம்பர் கண்டாரச்சுருதிக்கட்டேக்கமே" 'தூங்கிக்கண்டார்சிவலோகமுந்தம்முள்ளே, தூங்கிக்கண்டார் சிவயோகமுந்தம்முள்ளே, தூங்கிக்கண்டார் சிவபோகமுந்தம்முள்ளே, தூங்கிக்கண்டார்நிலை சொல்வதெவ்வாறே" "சொல்லெல்லாம் நாதமென்னவும்பெற்றோம், "சும்மா" இருக்கைதொழிலாகப்பெற்றோம்' இம்மகாமந்திரங்களைப்போன்று வாளாயிருக்கிறார்கள். அவர்களுக்கு "செல்லல் நிகழல், வருங்காலமூன்றினையுஞ்சொல்லும் மௌனத்தொழில்" என்ற

எமதரும்பாட்டியின் திருவாக்குப்போன்று முக்காலத்தும் நிகழ்வன ஒருங்கும்மிகச்செவ்வனே விளங்கும். அவர்களுக்கு நமது ஞாலவாழ்க்கையொருங்கும் நாடகமாகலின் வேடிக்கை பார்த்துக்கொண்டுதா னிருப்பார்களே அல்லாமல் ஒன்றினுந் தலையிட்டுக்கொள்ளமாட்டார்கள். ஆனால், வேடிக்கைபார்ப்பதில் இன்ன, இன்ன "பார்ட்" நல்லாயில்லையே எனக்களங்கமற்ற பளிங்கம்போன்ற அவர்களின் மனக்கண்ணாடியிற் பதிந்ததொன்றே எம்மையோர் "அயன்ராஜபார்ட்" போடும்படி கற்பித்துவிட்டன. மேலும். நமது புத்தகத்தைத் தருவித்து அவர்கள் பார்க்காதொழியினும் நமது புத்தகத்திலுள்ள விஷயங்கள் ஒருங்கும் அவர்களின் அகக்கண்ணாடியில் பதியப்பட்டேயிருக்கும். இங்ஙனமாக சிரமுண்டிதத்தின் மாட்சி அளவு கடந்தனவேயாகும். இதனைப்பற்றி மறுப்புக்கூறுவார் எத்துணை பெரியராகவிருப்பினும், அவரையுமடக்கி, அவர்தம் கூற்றையுமறுத்து சிரமுண்டிதமேமிக மேலாகச் சிறந்ததென பசுமரத்தாணிபோல் எவர்க்கும் விளங்கத் தெற்றென நிலை நாட்டவுங்கூடும்.

என்னையோய் ஐயீர்! நீயிர் மிகவும் நல்லீர்போலும்! ஊமையனிடத்தில் உளறுவாயன் சண்டப்ரசண்டஞ் செய்ததுபோலன்றோ காணப்படுகிறது, கேள்வி கேட்பாரில்லையெனின் நீயிர், கூறுவதொருங்குஞ் சட்டமேபோலும்! வேதமேபோலும்! சற்றேபொறும் நும்முடைய மனம்போகிற போக்கிலே அடித்து முழக்கிக் கொண்டுபோகாதிரும். நமது மகாசமுகத்துக் கிழவர்களுக்குப் பொருத்தமான விஷயங்களாகவே நீயிர்வரைந்துகொண்டு போனால் அஃது யாவருக்கு நன்மை? எங்களுக்குப் புகழ் வேண்டியதில்லையென்று நான் முன்னொருமுறையும் கூறியிருக்கிறேனல்லவா? நமது இளைய சகோதரர்களுக்கும், நமது மகா சமுகத்துப்பின் சந்ததியார்களுக்கும் பொருத்தமில்லாதொழியின் நும்முடைய புத்தகத்துக்கு எவ்வித மதிப்பும், எவ்விதப் பெருமையும் ஒரு சிறிதளவுகூட ஏற்படமாட்டாது. அக்கிழவர்கள் கண்ணாடி போட்டுக்கொள்ளாமற்கூட நுமது புத்தகத்தை விரிப்பதுமில்லை. எங்களின் வைசிய மகா சமுகத்தை முழு மொட்டையடிக்கும் பழங் கதையை நீயிரும் தூக்கிக்கொண்டீரா? ஆ! ஆ! பேஷ்! மிகநல்லாயிருக்கிறது! கொஞ்சங்கூட பகுத்தறிவில்லாத ஓய் நூலாசிரியரே! ஒரு சிறிதளவுகூட விசுவாசமற்ற ஓய் வெறு மனிதரே! நான் பிடித்த முயலுக்கே மூன்று காலென்னும் ஓய் மூர்க்கரே! காலதருமத்தைக் கருதிப் புத்தகம் வரையத் தெரியாத ஓய் கயவரே! கால தருமத்தின் இயற்கையையும், அதன் வன்மையையும்பற்றி ஒரு சிறிது ஞாபகப்படுத்துவாம் கேண்மின். அஃதாவது:

கால பேதத்தாலுண்டாகும் சீர்திருத்தம், நாகரீகம், பற்பல உலகவியவகாரங்கள், நடையுடை பாவனை முதலியவைகளுக்குத் தருமம் என்னும் பெயர் வருவானேன்? அவ்வாறு எதற்காக நம் பண்டைக்காலத்தான்றோர்கள் வகுத்துவைத்திருக்கிறார்களென்பதை ஓய் ஐயீர்! கவனித்தீரா? காலங்

களுக்கேற்ப நூன்முறைச் சட்டங்களும், நடையுடை பாவனைகளும், இன்னும் ஏனைய பற்பல உலக வியவகாரங்களும், ஒருங்கே மாறுதலடைந்து, எத்துணை தூரங்கடந்த தத்துவ ஞானிகளுங்கூடக்கண்டு அதிசயிக்கத்தக்கவாறு புதிய புதியனவாகத் தோற்றப்படினும், அவைகளுந் தருமவழியேயாமென்பதை எவர்களுந் தெற்றெனத்தெளிதற் பொருட்டேயாம். எந்த யுகம் அல்லது எந்தக்காலத்தை நாம் நல்லனவாகக் கருதப்படுகிறோமோ அல்லது கெட்டனவாகக்கருதப்படுகிறோமோ? அந்த யுகம் அல்லது அந்தக் காலத்திலுண்டாம், நடையுடை பாவனை முதலிய வியற்கைகளுக்கும், யுக தருமம் என்றுதானே பெயர் வைத்திருந்ததாகக் காணப்படுகிறது. அப்படியாயின் பழைய முறைகண் மாறி, புதிய முறைகளைக்கையாண்டுவந்த உயர்தரமான எந்த மேதாவிகளும் கவலைகொண்டிருந்திருப்பார்களென்பது யாங்ஙனம் விளங்குகிறது. எத்துணை தூரம் யுகதருமங்கள் தலைகீழுங் கான் மேலுமாக மாறுதலடையினும், ஈசனென்பானொருவன், நேற்று, இன்று, நாளை அஃதாவது மூன்று காலங்களுக்கும், அதனைச்சார்ந்த பற்பல யுகங்களுக்கும், எற்றானும் மாறுதலடையாது, ஒரே தன்மையதாக நடுவு நிலைமையிலேயே நின்று, அந்த, அந்த யுகங்கள் அல்லது அந்த அந்தக்காலங்களினும், நல்வழக்கம் ஒன்றால் குவலயம் கேடுறாவண்ணம் தம் சங்கற்பத்தை பற்பல வழிகளானும், நிறைவேற்றிவருகிறானென்பது அறிஞர்கள் எவரும் தெள்ளிதிலுணர்ந்த விஷயமேயாம். இன்னும், ஏகமாயும், அகண்டமாயும் என்றுமாறாத நித்தியமாயும், ஆத்மஸ்வரூபியாயும் விளங்கப்படுகிற நம்முடைய பரசிவப்பெருமான் எற்றேடும் பூரணமாக நிறைந்திருக்கிறானென்பது நிச்சயமேயாயின், காலதருமமாய் விளங்குகிறதும் அவனேயாமென்பதிற் சந்தேகமென்னை?

கால தருமமானது எவ்வாறு நிகழ்கிறதென்பதைக் கவனியுங்கள். நமது பரதகண்டத்துள் பெருந்தகையான எந்த எந்த மேதாவிகளின் தூய்மையர்ன அறிவினிடத்தே புகுந்து வேலை செய்கிறதென்பதையுங் கவனியுங்கள். கால தருமகர்த்தாவென்னுங் கதிரவன் தோற்றப்படுகிற முச்சகங்களுக்கும் ஒருவனே என்பதூஉம், அவன்றன் கிரணங்கள் தோற்றப்படுகிற எந்த ஒவ்வொரு வஸ்துக்கள், அல்லது ஒவ்வொரு பொருள்களின் உள்ளும், புறமும், ஒருங்கே எங்கணும் தோய்ந்துகொண்டிருக்கிறதென்பதூஉம், அறிவாளிகளாயுள்ள ஒவ்வொரு சகோதரர்களும் நன்குணர்ந்த விஷயமேயாம். கால தருமத்தை ஏற்றுக் கொண்டியலும், ஏனைய கண்டங்களையும், அதன்பாற்றேற்றப்படுகிற பலதலைநகரங்களையும், நமது ஏசியா கண்டத்தையும், இதன்பாற் றேற்றப்படுகிற ஒவ்வொரு தலைநகரங்களையும், நமது நாட்டுக் கோட்டை நாடு நகரங்களையும், மிகச் செவ்வையாகச் சீர்தூக்கிப்பாருங்கள். கால தருமமானது எற்றானும் வஞ்ச நெஞ்சமற்றதாமென்பதை யுணருங்கள். மிகுந்த சீர் சிறப்போ

டும், அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு புருஷார்த்தங்களோடும் பொருந்தி, பற்பல சீர்திருத்தங்களினும், நானுவித நாகரீகங்களினும், முச்சகங்களும் மெச்சத்தகுந்த வியாபார முறைமைகளினுமளவிலாத் தேர்ச்சியடைந்து காலத்துக்கேற்ப வியலுமாற்றலில் மீசுரமான ஆண்டகையுட்டங்கி வாழ்தற்குரிய தேசாபிமானம், பாஷாபிமானம், மதாபிமானம், ஜனுபிமானம், ஜாதிய ஐக்கிய உணர்ச்சி, பொதுக்காரியத்திலக்கரை, கூட்டுறவு, அடக்கமுள்ள நன்னடக்கை, விடாமுயற்சி, தளர்ச்சியின்மை, மனேதைரியம், அன்பு, தயை, பொறை, ஆண்மை, அடைந் தோரைக்காத்தல், இந்தியதேயத்துட் பிறந்த எந்தமனிதரும் நம்மோடுடன் பிறந்த நம் சகோதரரே யாமென்னும் உண்மையுணர்ச்சி, நம் நகரத்தாரெல்லாம் ஏகாங்கமான ஒரே குடும்பமாக வாழ்தல் வேண்டுமென்ற ஞாபகசக்தி, இன்னும் இவைபோன்ற பலவிதமான நற்குணங்களேயும் தானே நம்முடைய நாடுநகரங்களிற் கொணர்ந்து பரப்புஞ் சக்தியுள்ளதாமென நினையுங்கள். எற்றுனுந் தூக்கமின்றி உயர்தரப்பட்ட எந்த நாகரீகங்களேயும், எந்த நவீனசக்திகளேயும், எந்தத்தேவவுலகத்திலே உள்ளனவாக இருப்பினும், ஒருவருடைய வேண்டுகோளின்றித் தானே ஆங்காங்கு சென்று நமக்குவேண்டுவனவற்றையெல்லாம் ஆராய்ந்து தெளிந்து பொருக்கியெடுத்து, பெரிது, பெரிதான மூட்டை மூட்டைகளாகக்கட்டிக்கொணர்ந்து நம்முடைய நாடுநகரங்களிலே அவிழ்த்துக்கொட்டிப்பரப்பும் ஓர்வித நீராவியந்திரமாமென நம்புங்கள். காலதருமத்தை எதிர்க்க எவராலும் முடியாதாமென்க. அதனையொட்டி ஒழுகுதலே நமது கடமையாமென்க எந்தபகுதியார்களாலும், எந்த அரச வகுப்பார்களாலும், எந்தமேதாவிகளாலும் அதனை அடக்கி வைத்துக்கொள்ளமுடியாதாமென்க. தற்காலவரை ஆய்ந்து நோக்குமிடத்து நம்முடைய கலியுகதருமத்தின் காலக்கிரமமானது, வளர வளர பாரதமாதாவின் புத்திரர்களாகிய நம்மவர்களின் கருத்துக்களும், நடையுடைபாவனை முதலிய சுகாதாரங்களும், வெறுப்புவிருப்புக்களும், நானுவிதமான கல்வியபிவிருத்தியும், ஒற்றுணர்ச்சி முதலிய ஆசாரச்சீர்திருத்தங்களும், முற்காலத்து நிலைமையைப்போலிராமல், நாளுக்கு நாள் ஏனைய பகுதிவர்க்கங்களே நேரொப்பப் புதிய, புதியனவான நுண்ணியநாகரீகங்களாயும், தோன்றி வளர்ந்துவருவதே போதிய சான்றும். காலதருமத்தின் தன்மையை இற்றென நமது வகுப்பைச்சார்ந்த ஒவ்வொரு சகோதரர்களும், தெரிந்துகொள்ள வேண்டியதும் ஆவசியகமேயாம். அவ்வாறு தெரிந்துகொண்டாற்றான் இவ்வுலகவாழ்க்கையானது நமக்கு இன்பத்தைக் கொடுக்குமாம். கடந்த மூன்று யுககாலதருமத்திய நூன்முறைச் சட்டங்களேயும், அக்காலத்திய மனிதவியற்கை முதலாய உலகவியற்கைகளேயும், அக்காலத்தியவர்களின் அற்புத சக்திகளேயும், ஆயுட்பிரமாணங்களேயும், அரசியன் முறைகளேயும், அவ்வரசர்களின் வல்லுநத் தன்

மையையும் இங்ஙனமியலும் கலியுககால தருமத்தின் மேற்கண்ட எல்லா விஷயங்களையும் நன்கு சீர்தூக்கிப் பார்த்தலும்வேண்டும். காலவியற்கை மாறுதல்களைப்பற்றி மிகச்செவ்வையா யுணர்தலும்வேண்டும். அவை களைப் பற்றி நமது நெஞ்சிடை எற்றும் பயங்கரம் வேண்டாம். கால தரு மத்தால் நம்மனதில் பிறக்கவேண்டுமென்று கருதப்படுகிற குண குணங் களைக் கவனித்தல் வேண்டும். அதனை நாம் எதிர்க்கவேண்டாம், ஒருவாறு கவனிக்குமிடத்து அஃது முடியாத வொருகாரியமுமாகும். அதுகொண்டு வந்து பரப்பும் எந்த வியற்கைகளையும், எந்த விஷயங்களையும் நாம் உபயோ கப்படுத்துதலே நலம். காலதருமமாகிய புதிய நூன்முறைச் சட்டங்களில் ஆராய்ச்சியோடு புகுங்காற்றடுக்கும், முரட்டுச்சுபாவங்களைச் சிதைத்தலும் வேண்டும். கழிந்துபோன மூன்று யுகதர்மகால வர்த்தமானங்களையும், அரச கர்த்தர்கள், வேத கர்த்தர்கள், ஆகம கர்த்தர்கள், இதிகாச கர்த்தர் கள், தர்க்க கர்த்தர்கள், தர்மகர்த்தர்கள், அற்புதகர்த்தர்கள்; கீர்த்தி கர்த் தர்கள், பாஷா கர்த்தர்கள், ஞான கர்த்தர்கள், வீர கர்த்தர்கள் முதலிய பெருந்தகையாளர்களின் இலக்கணங்களையும், தற்காலத்திய 5000 வரு ஷத்துக்குட்பட்ட காலவர்த்தமானங்களையும், மேற்படி கர்த்தர்களின் இலக் கணங்களையும், எவர்க்கும் எளிதில் விளங்குமாறு சர்வகலா நிபுணரான ஒருவரையோ, அல்லது பலரையோகொண்டு ஒப்பத்தக்கதாயுள்ள நமது செந்தமிழ் நாட்டுச்சரிதம் ஒன்றைத்தயார்செய்து வைத்தலும் வேண்டும்.

ஆம் ஐயா! இத்தகைய காலதருமத்தைப்பற்றி ஒரு சிறிதளவுகூட நீயிர் சிந்திக்காமல் முன்னையப்பெரியார், முன்னையப்பெரியார் என்று வில் அடித்துக்கொண்டு போகிறீர். இக்காலத்திய நிலைமையைப்பற்றி ஈண்டுஞ் சிறிது விவரிக்கப்புகுந்தால் அஃதொருபாடு சாத்தியமாகாது. நுமது புத் தகமும் இடம் கொடுக்காது. காலதருமத்தைக் கவனித்துப் பலதேயவர்த் தமானங்களையும், நவீன சக்திகளையும், திருத்தமார்க்கங்களையும் பொது ஜன மனோநிலைகளையும், சமுகமுன்னேற்றத்தையும் தீரத்தெளிந்து தெரிந் தல்லவா ஒரு நூல் நோற்கப் புகுதல்வேண்டும். "Home Rule, Home Rule" அஃதாவது "சுய ஆட்சி, சுய ஆட்சி" என இக்காலம் நமது பரதகண்டம் எங்கெங்கு பார்த்தாலும் வெகு ஆட்டபாட்டம், அழகிய கொண்டாட்டமாகவும், மிகு தடபுடலாகவும் காணப்படுகிறதே? அது விஷயத்தில் நீயிரென்னை தலையிட்டுக்கொள்கிறதில்லையோ? மேலும், பூர் வீக கொள்கைகளில் நீயிர் பெரும்பற்றுடையவர்போலுங் காணுகிறது. நமது மரபார் சிகை வைத்துக்கொள்ளவேண்டும் விஷயமாய் நுமக்கோன் நல்ல அபிப்பிராயமில்லையோ? நமதுமரபார் காவிரிப்பூம் பட்டினத்தில் வா சஞ்செய்து கொண்டிருந்தகாலத்தில் சிகைவைத்துக்கொண்டிருந்தார்களெ ன்பதற்குப்போதிய ரிக்கார்டுகள் காணக்கிடைக்கிறதல்லவா? சமீபத்தில் முன்

னேற்றமடைந்து தற்காலம் குன்றின்மேலெழுந்த செங்கதிரவன் போன்று பிரகாசிக்கும் ஜப்பான் தேயத்தை நியிர் கண்டிராதொழியினும், அத்தேயச் சரித்திரத்தையாவது படித்துப்பார்த்திருக்கிறீரோ இல்லையோ? பூர்வீகக் கொள்கைகளில் ஒரு சிறிதளவு (அஃதாவது அணுவளவு) கூட விலகியிய லுவதற்கு இடங்கொடுககாத மனோவன்மையோடு கூடிய சீனர்களும், ஜப்பானியர்களும் தாங்கள் மிகு அன்போடும், பக்தி சிரத்தையோடும், பூர்வீகக் கொள்கையாமென்கவும், அழகாமெனவும் நினைந்து வழக்கத்தில் வைத்துக் கொண்டு வந்த நீட்டமான சிகையை (அஃதாவது நீண்டுவளர்ந்திருந்த உரோமங்களை ஒரேதன்மையதாக ஒவ்வொரு ஆண்மக்களும் Crop (கிராப் அஃதாவது கத்தறித்துச் செயற்கையமைப்பில் ஒருவித அழகாயிருக்கும் படி மிகுதியும் நாகரீக நிலையம் பெற்ற நமது அரசியன் வகுப்பாரான மேனாட்டார் பழக்கவழக்கத்திற் கிணங்கச்செய்து அது விஷயமாய் எவ்வளவு சீக்கிரத்தில் முன்னேற்றமடைந்திருக்கிறார்கள். மேலும், சிறிது கவனிக் கப்புகுந்தால் மேனாட்டு நாகரீகங்கள் இங்கிலவுலகம் முழுதினுமே பரவி யிருக்கிறதென்னலும் மிகையாகாது. இஃது பல தேயசஞ்சாரஞ்செய்தார் பலர்க்கும் மிகத்தெளிவாக விளங்கும். மேலும், நமது பாரதகண்டத்தும் சிறிது நினைக்கில் தோட்டி முதற்கொண்டு தொண்டமான்வரையும் அந்நாக ரீகம் மிக அழகாகப் பரவியிருக்கிறதே? காலதருமத்துக்கேற்ற வெளிப் படையான இத்தகைய ஒரு பெரிய திருத்தமார்க்கத்தை கூடிய பாகத் தாரல்லாத ஒரு சிறிய பகுதியார் எம்மாதிரி மறுத்து விடக் கூடும்? உலகமே இன்னதெனத் தெரியாத நும்போல்வார் சிலர் பூர்வீகக் கொள்கை, பூர்வீகக்கொள்கை எனத் தப்பட்டை கொட்டத் தயாராய் வெளிக்கிளம்பி ஒரு சிறிதளவுகூட நாணவெட்கமின்றி முன்னோடி வந்து விடுகிறார்கள். அஃது "நூற்றைக்கெடுக்குங் குறுணி" என்பது போன்றும், "முடப்புல் முக்குறுணி தண்ணீரைச்செறுக்கும்" என்பதுபோன்றும், "ஒரு குடம் பாலுக்கு ஒரு துளி விஷம் போதும்" என்பது போன்றும் ஆய்விடு கிறது. குற்றமெனக்கூறல்குற்றமே எனத் தாம் பெரியாரென நினைத்துக் கொண்டிருக்கும் எத்தகையாரும் நினைக்கிறார்களில்லை. ஏனையோரைக்குறித் துப் பிழையெனக்கூறும் ஒருவன் தான் பிழையெனக்கூறுதலே தனக் கொரு பெரிய பிழைபாடே எனத்தெளிவானேயாயின். ஆ! ஆ! இஞ்ஞா லம் எத்துணைத்திருத்த முடையதாகக் காணப்பெறும். மேலும், ஆய்ந்து நோக்குமிடத்து இஞ்ஞாலத்தைச் சீர்திருத்தஞ்செய்வதற்காவது நானாவித நாகரீக மார்க்கங்களைப் பரவச் செய்வதற்காவது, இன்னும் ஏனைய பொது நன்மைகளை நிலை நாட்டுவதற்காவது எத்தகையபெரியாரும், எத்தகைய சிறந்தாரும், எத்தகைய மேதாவிகளும் நான், நான் என்று வெறும் பறை கொட்டித்திரிய வேண்டும் ஆவசியகமில்லை. முன்னோடிகளாய் நின்று பல பிரசங்கங்கள் செய்யவேண்டுவதுமில்லை. கவனிக்கு மிடத்

துப் பல பத்திரிகைகள் நடாத்தவேண்டும் ஆவசியகமுங்கூட ஏற்படவு மில்லை; இவைகளுக்குத்தான் அக்பர்மணியமென்று பெயர். சாதாரண மாக சிகையைக் கத்தறிக்கும் பழக்க வழக்கம் உயர்ந்த நாகரீகமார்க்கமாக இக்காலங் கொண்டாடுவதற்கு உரிய மகோன்னத நிலையில் விளங்குவதற்கு ஆதியாரம்ப முதற்காலத்தில் இக்காரியம், இத்துணை நன்மையையுடைய தாக்கும், இத்துணைச்சிறந்த நாகரீகத்தன்மைவாய்ந்ததாக்கும், நிறைந்த சுகாதார முடையதாக்கும், நவீன வனப்பு வாய்ந்ததாக்கும் என எந்தப் பெரியராவது, எந்த மேதாவியாவது, எந்தப் பத்திராதிபராவது, உபந்நியா சம் செய்ததாவது, வியாசம் வரைந்துத் துண்டுப்பபத்திரிகைகளாக விளம் பரப்படுத்தியதாவது, பத்திரிகை நடத்தியதாவது உண்டா? யாவருடைய பிரயாசையினல் அப்பழக்க வழக்கம் நமது பாரதகண்டத்தும் வந்து வேரூன்றி முளைத்துச் செடி கொடிகளாகிப் படர்ந்து, அழகிய பூம்பிஞ்சுக ளாய்க்காய்த்து இக்காலம் நறுங்கனிகளாய் (கொம்பிற் பழுத்த மல்ஹோவா மாம்பழம்போன்று ஜாதி மத வித்தியாசமென்பது ஒரு சிறிதளவு மின்றி நமது இந்தியதேயம் ஒருங்கும் ஒரே ஜனங்கமாவதற்குரிய அறிகுறியோடும் பெரும்பான்மை ஒவ்வொருவரிடத்தும்) உபயோகப்படுகிறதல்லவா? இம் மாதிரியாகவே ஒவ்வொரு நவீன சக்திகளும், ஒவ்வொரு புதிய நூன்முறை களும், ஒவ்வொரு திருத்தமார்க்கங்களும் ஒருவருடைய வேண்டுகோளின் றியும், தூண்டுகோளின்றியும், எவ்விதப் பிரஸ்தாபங்களுமின்றிச் சிறிது அறிவு விளக்கமாகிய மனிதக்கூட்டத்தார் வசிக்கும் ஒவ்வொருதேயம், ஒவ்வொரு நாடுநகரம், ஒவ்வொரு பட்டிதொட்டி, கவனிக்குமிடத்து ஒவ்வோரில்லங்களினும் வலிது வலிதாகத்தானே நுழைந்து அடிமை களாக்கிக் கொள்ளுமென்பதில் ஒரு சிறிதளவும் சந்தேகமின்றாம். மேலும், ஒரு ஜனசமுகத்துப் பெரும்பான்மையோருக்குப் பிரியமாயுள்ள ஒரு விஷயத்தை மறுத்துக் கூறுவான் யாவனே எனினும், அவனெரு பெரியமடயனேயல்லவா? இவ்வித மேலான உணர்ச்சியற்ற நும்போன்ற காவோலை, கருக்குமட்டைகளெல்லாம், நூல் நோற்கவும், பத்திரிகை கள் நடத்தவும், உபன்னியாசங்கள் செய்யவும், வியாசங்கள் வரைய வும் வெளிக்கிளம்பி விடுகிறார்கள். ஐயா! நீயிர் மனவருத்த மடையா திரும். அந்தோ ! நுங்களின் அறிவின்மைக்காக நானே மனவருத்த மடைதல் வேண்டும்? என்செய்கிறது. நியாயஞ்சொன்னல் ஆமெனத்தெளி மின். வீண்கொர்வங்கொள்ளன்மின். காலதருமத்தின் கணக்கைநன்றாகக் கணக்கெடுத்துக்காண்மின். எவ்வித அசங்கியமான வார்த்தைகளுமின்றி "குன்றக்கூறன், மிகைபடக்கூறன்" முதலிய பத்துக்குற்றங்களில் நின்றும் நீங்கி, "சுருங்கச்சொல்லல், விளங்கவைத்தன்" முதலிய பத்து அழகோடுங் கூடப்பொருந்தி, "உலகத்தோடொட்டவொழுகல் பலகற்றும், கல்லா ரறி விலாதார்" என்ற தேவர் திருவாக்கையுங்கருதி வரைந்துவம்மின். "நன்

றூற்றவுள்ளுந்தவறுண்டு, அவரவர் பண்பறிந்தாற்றுக்கடை" என்ற அமுத வாக்கை நமது ஞாபகத்தில் வைமின். இந்நூலைச் சாதாரணமாக தற்கால நாகரீகந்தங்கிய பெரியார் பலரும் பார்த்துவரல்வேண்டுமேயென நினைமின். எத்தகையாருக்கும் எளிதில் விளங்கக்கூடிய தெளிவான தமிழ் வார்த்தை களாற் கேளமின். என்னுடைய மனோபீஸ்டம்போல் நும்மை நூல்வரை யுமாறு இவ்வளவு தூரம் செல்லுகிறேனென நினையன்மின். மேலும் ஒரு சிறிதளவுகூட நமக்கு ஞாபகமில்லையென்று நினைக்கிறேன். தற்கால நாக ரீகத்துக்கு தக்கபடி உரோமங்களைக் கத்தறித்து செயற்கையமைப்பில் ஒரு வித அழகாயிருக்கும்படி செய்துகொள்வதை நமது மகா சமுகமும் ஆமோ திக்கும்படி நீயிரும் ஆமோதித்து ஏன் வரைதல் கூடாது? அதன் மாட்சி யைப்பற்றி மிக நன்றாக விவரித்து இச்சிவகோத்திரவைசிய விருத்தியிலும் ஏன் வரைதல் கூடாது? வருங்கால வியற்கையின் அறிகுறியான இவ்விஷயத் தை மறுத்துவிடக்கூடுமா?

ஆம், தம்பி அழகு வாய்ந்த நுங்களின் திருவடிகளுக்கு அநேக கோடி நமஸ்காரம். நீங்கள் கூறிவந்ததொருங்கும் எவர்களும் ஒப்பத்தக்கதாயுள்ள மிக மேலான நல்ல நியாயங்களேயாகும். நியாயக்கோட்டமென்பது ஒருசிறி தளவுகூடவின்றி பல நல்ல புத்திமதிகளையே கூறிவந்தீர்கள். அதற்காக என்றைக்கும் மறவாத நன்றியறிதலுடையேமாகவிருக்கிறேம். பிசாசம் பிடித்தான்போன்று வியாசம் வரையப்புகுவான் யாவர்க்கும் இஃதொருங் கும் ஞாபகக்குறிப்புகளேயாகும். எமதிடத்தும் சிற்சில சமயத்து அப்படிப் பட்ட குணங்கள் நிகழப்படுவது வழக்கமாகத்தானிருக்கிறது. தாங்கள் தரையிட்ட சுள்ளாணிகளே போதுமானது. முன்னையப் பெரியாரென்றும், பூர்வீகக்கொள்கைகளென்றும் யாம் கூறிவந்ததை வில்லடித்துக்கொண்டு போவதாயிழித்துச்சொன்னீர்கள். என்செய்கிறது. யாவரைத்தான் நொந் துகொள்கிறது. நுங்கள்போல் காலதருமத்திற்கேற்றவாறு மனோசக்தியை மாற்றிக்கொள்ளச் செய்வது எவர்களிடத்தும் சாதாரணமல்ல. கவனிக்கு மிடத்து, "அன்னை தந்தையரிருவரும் ஆங்கொருமித்து, என்ன செய்தனர்? நமையுருச்செய்தனர் இறைவன், தன்னை முன்னிலைப்படுத்திய யாதலாற் றரணி, அன்னை தந்தையர் குணத்தியலாதியென்றறிமின்" என்றவாறுபோல் எத்துணையோ ஜென்ம ஜென்மங்களாய் அருமையான தாய் தந்தையர்களின் ஆனந்த சாகரத்தில் நின்றும், நான், நான் என்று கருப்பிடித்துக்கொண்டு வந்த நாதத்தோடுகூடிய பூர்வீக வாசனையாதலால் அப்பற்று திடீரென்று நீங்கேன் என்கிறது. மேலும், தாட்சண்யத்திற்குட்பட்டுச் சிலவியாசங்கள் வரைகிறதாயுங் குறிப்பித்தீர்கள். அவ்விதமாக நமது வைசியம் தொடக்க முதற்கொண்டு நாளிதுகாறும் இல்லவே இல்லை. இனிமேலும்; நமது சண் முகநாதன் நியாயக்கோட்டமென்னும் நரகிடை எம்மை எவ்விதக்காரணம்பற் றியும் அமிழ்த்திவிடமாட்டான். அது விஷயம்பற்றி நீங்கள் ஒன்றுக்கும்

யோசித்தல் வேண்டாம். மேலும், இனி வருங்கால தருமம் நோக்கி நம்முடைய ஆன்மப்பாதுகாப்புக்காக அழகிய ஒரு சரீரமும் அச்சரீரத்தில் முதன்மைபெற்ற கண்களின் பாதுகாப்புக்காக இமைகளும் இயற்கையமைப்பிலேயே ஏற்பட்டிருத்தல்போன்று, நமது சிரத்தின் பாதுகாப்புக்காக எல்லாம் வல்ல இறைவன் கிருபையால் முளைத்தெழும் உரோமங்களை முன்னைய நாண்மாதிரி நீட்டமாக வளர்த்து முடிபோட்டுக்கொள்ள விருப்பமில்லையாயினும் கிராப் செய்துகொள்ளல் வேண்டும் பழக்க வழக்கத்தைக் கட்டாயச் சட்டமாக ஒவ்வொரு ஆண்மக்களும் அஃதாவது நமது வகுப்பைச்சார்ந்த ஒவ்வொரு சகோதரர்களும் அங்கிகரித்தே தீரல் வேண்டும். எதிரதுபோற்றலென்னும் உத்திக்கு இதுவே முதல் அறிகுறியாதல் வேண்டும். என்றால், "சொல்லுதல் யார்க்கும் எளிய அரியபோம் சோல்லியவண்ணம் செயல்" என்பது போன்று, தாங்களுங்கூடச் சின்னாட்களுக்கு முன்னர் கிராப் செய்துகொண்டிருந்தீர்களன்றோ? இப்பொழுது சர்வாங்க வபனஞ் செய்து கொண்டிருக்கிறீர்கள். அது விஷயம்பற்றி எத்துணையோ சொல்லுந்தங்களையும், அப், பூர்விகவாசனை இலகுவிலே விடேன் என்கிறது கண்டீர்களா? இயற்கையில் அஃதொரு இலகுவானகாரியமல்ல வென்பதை நன்கு உணருங்கள். இஃதே மாதிரியாக நமது, மகாசமுகத்தைச் சார்ந்த ஒவ்வொரு பால்யச் சகோதரர்களும் தங்கள் தங்களின் பால்யச் சரீரத்தின் வனப்பு நோக்கி ஏதோவொருசமயம் நமது, பூர்விக மரபியல்களுக்குச் சிறிது மாறுதலடையினும், காலக்கிரமத்தில் நுங்களைப்போன்று, பேரறிவாண்மையிலக்கணம் யாவெனக்கண்டுபிடிக்கக் கருதி, அதன் வனப்பாதிகளை எண்ணி நோக்கத் துணிந்து விடுவார்கள் என்பதில் சிறிதும் சந்தேகம் இன்றும். இஞ்ஞான்றும் அங்ஙனந்தான் இயன்று வருகிறார்கள். ஆகலின், தங்களின் அரிய திருவாக்கையும், மனம்போன போக்கிலே சின்னாட்கள் இயலும் சில்லோர் சில சிறு செய்கைகட்கும், யாம் உடன்பட்டுச், சிறு துரும்பு போல்வாரைச் சின்னாட்கள் சங்கடப்படுத்தும் காலசக்தியையும் திரமாகவெண்ணி, தாங்கள் கேட்டுக்கொள்ளும் மேற்கண்ட விஷயம் பற்றி எம்மட்டில் ஆமோதிக்கிறதுடன் நின்றுகொள்ளாமல், நமது, மகாசமுகத்தையும் ஆமோதிக்க வேண்டுமென இங்ஙனம் வரைவேமானால், எம்போலும் அறிவிலி இஞ்ஞாலத்தில் எவருமே இரார். அங்ஙனம், வரையப்புகுந்த எம்முடைய இந்நூலும், திரிநூலேயாம். மேலும், நமது, மரபார் காவிரிப்பூம் பட்டினத்தில் வாசஞ் செய்துகொண்டிருந்த அக்காலம், சிகைவைத்துக்கொண்டிருந்தது வாய்மைதான். அம்மாதிரி தற்காலம் அநுட்டானத்துக்குக் கொண்டுவருவதென்னினும் அஃது மிக நன்றுதான். அதற்கும், நம்மனமாதி இடங்கொடுக்கமாட்டாதுதான். ஏனென்றால், நமது, மகாசமுகத்துள் அஃது தானே வந்து நுழைந்து கொள்ளாதவரை அங்ஙனமான பொது விஷயங்கள் பலவற்றையும் பற்றிப் பகர்ந்து பேசும் அவசரமுடையார் எவருமே

இல்லையாகலினுலாம் என்க. மேலும், சிரமுண்டிதமானது, நமது, மரபிற்கு உயர்தரக் கொள்கையாயும், சமூகவபிவிருத்திக்கு ஓர் ஏதுவாயும், வரன் முறைக்கட்டுக்கு ஓர் அழகியதாயும், பன்னெடுங்காலம் அநுட்டானத்துக்கு வந்துவிட்டதாயும், உள்ளனவாகலின், அதனை நீக்குவதென்னின், நம்மன்னோரால், இலகுவில் முடியாதவோர் காரியமாகத்தான் முடியும். நமது, மகாசமுகத்தைச் சார்ந்த ஒவ்வொரு கூட்ட நாட்டங்களுக்கும், அநேகப் பொது நன்மைகளுச்கும், பாது காப்புக்களுக்கும், அஃதொரு பெருஞ்சக்தியுள்ளதாம் என்க. மீண்டுஞ் சிறிது கவனிக்கப்புகின், நம்மோடு, இரண்டறக்கலந்து, நம்மைப் பற்றித்தொடர்ந்து கொண்டு, நம்மை, எவ்வகை முகாந்தரங்களைக் கொண்டும் நுங்களை விடேமென "செம்போடு சார்ந்தகளிம்பே" போன்ற நமது, பூர்வீக வாசனையின் இலக்கணங்களைப்பற்றிச் சிறிது உய்த்து நோக்கி ஆராயப்புகின், அஃதொரு அபாரசக்தியாகவே காணப்படுகிறது. அதன் வன்மைகளைப்பற்றி எவர்க்கும் வரையுந்தரத்து அன்ரும். யாங்ஙனமெனின்? நமது, மகாசமுகத்தைச் சார்ந்த ஆண்பால்களுக்காவது, சிகைவைத்துக் கொள்ளவேணடிய மார்க்கம் இனி, புதிதாக நாம் அமைத்துக்கொள்ள வேண்டியதாய்ப் போயிற்று. அஃதிருக்கட்டும். நமது, அருமைச்சகோதரிகளுக்கோ அங்ஙனமன்று. இயற்கையில் எந்த ஞான்றுமே சிகையுள்ளவர்கள்தான். அங்ஙனமாகப் பெண்பால்களுக்குப் பொதுவாகக்கவனிக்குமிடத்து, "மயிரையுச்சியின் முடித்தற்கு முடியென்றும்" "சுருட்டிமுடித்தற்குக் குழல் என்றும்,, "மயிரை முடித்துத் தூங்கவிடுதற்குத் தொங்கல் என்றும்" "பின்னிவிடுதற்குச் சடையல்லது பனிச்சை என்றும்" "பின்னே அள்ளிச்சொருகிக்கொள்ளற்குச் சுருள் என்றும்" ஆகவே, முடி,குழல், தொங்கல், பனிச்சை, சுருள் என்பன ஐம்பான் முடியென்பது பெரும்பான்மை அறிவாளிகளாயுள்ளார் எவர்களும் நன்குணர்ந்த விஷயமேயாமன்று? அங்ஙனமாக, நமது, அருமைச் சகோதரிகளின் சிரத்தில் "சுருள்" அஃதாவது, மயிரைப் பின்னாலே அள்ளிச் சொருகிக் கொள்ளுதலான ஒன்றைமட்டுந்தானே காணப் பெறுகிறோம். அதற்குக் காரணம் என்னை? பூர்வீகவாசனைதான். மற்ற நான்கையும் பழக்க வழக்கதிற்குக் கொண்டுவரவிடமாட்டேன் என்கிறது. ஆகவே,மேற்கண்ட அவ், ஐம்பான் முடிகளையுமே நம் அனுபவத்துக்குக்கொணர்வதில், நமது, மகாசமுகத்துக்கு, உயர்தர நாகரீகமும், நன்மைகளுமே ஆகும். ஆகலின், நமது, சகோதரர்கள் கவனிப்பார்களாக. நமது, பாரதகண்டத்து ஏனைய பலபகுதி பெண்பாலாரிடத்தும், மேனாட்டுப் பெண்பாலாரிடத்தும் பெரும்பான்மை நான்கும், ஐந்துமே வழக்கத்தில் இருந்து வருகிறது. கவனித்துக்கொள்க. நமது, மரபைச்சார்ந்த ஒவ்வொரு ஆசாரசீலங்களையும் நன்கு கவனியுங்கள். ஆகவே,நமது, மரபாரின், சிரமுண்டிதத்தால் நிகழும் நன்மைகளைப்பற்றிச் சிறிது கவனித்து முடிபுரையாகச் சிலவற்றைக் கூறிமுடித்து மேற்றொடங்

குமேவாம். அஃதாவது, தற்காலவரை, நமது வருணத்தார் பலபகுதியார் கள், பல வருணத்தார்கள் வாசஞ்செய்யப்படுகிற, எந்தக் கண்டங்களைச் சார்ந்த எந்த அயல் நகரங்களுக்குச் சென்றிருந்தாலும், இனிச்செல்வோர் களாயினும், எத்துணை வருணத்தார்கள், எத்துணைப் பாஷைக்காரர்கள் கூடியிருக்கும் எத்துணைப் பெரியக்கூட்ட நாட்டங்களுக்குச் சென்று லும் இனிச் செல்வோர்களாயினும், ஆங்கு ஒரு சிறிதளவுகூடச் சந் தேகவிபரீதங்களுக்கு இடனின்றி இவர்கள் இன்ன தேயத்திலே உள்ள இன்ன வருணத்தார், இவர்கள் இன்னசமயத்தார், இவர்கள் இன்ன பாஷையார், இன்ன தன்மையார், இன்ன வன்மையார், இவர்கள் இத்து ணைச் சிறந்த செல்வவர்தர்கள், இன்ன இன்ன மார்க்கங்களிலே சிறந்த தருமச் சிந்தையுடையவர்கள், இத்துணைச் சிறந்த கட்டுப் பாடுடையவர் கள், இத்துணைச் சிறந்த ஒருமைப்பாடுடைவர்கள் முதலிய இன்னும் இவைபோன்ற பேரருஞ் சக்திகளையும், பெருங்குணங்களையும், நமது, பெருஞ்செயல்களையும், நமதுதெய்வக்கொள்வகைகளையும்இன்னும்,நம்மைப் பற்றிக்கொண்டிருக்கும் ஏனைய பல நல்ல விஷயங்களையும் பற்றி, நாம், வாய்திறவாத நிலைமையிலும், நமக்காக ஏனையவொருவர் நம்முன்னின்று, நம்மை இன்னுரெனச் சுட்டிக்காட்டிச் சொல்லிக்காட்டாத நிலைமையி லும், நம்மைக் கண்டமாத்திரத்தே அவைகள் ஒருங்குந் தானேநிகழ்ந் துவிளங்கும். (அஃதாவது, நமது, மரபார்க்குரிய சிரமுண்டிதமே, மிக நன்ருகத் தெரிவித்து, முன்னதாகவே, அவர்களைக்கொண்டு நமக்கு நடை பெறக்கிடக்கும், வந்தனோபசாரங்கள் முதலிய இனியவார்த்தைகளையுந், தந் து, நம்மை மிக நன்ருக திருப்தி செய்யத்தகுந்த நமக்கு வேண்டும் பணி களையும் நாம் சொல்லாமலே செய்து முடித்து நிற்கும், நமது, உத்தம அடி மையாட்களாகவுஞ் செய்து, நம்மை, இந்தநாள்வரை கௌர்வப்படுத்திக் கொண்டு வந்ததூஉம், தற்காலம் கொண்டுவருகிறதூஉம், இனிமேலும் கொண்டுவரூஉம் என்பதும் சாதாரணமாக யாவரும் உணர்ந்த விஷயமே ஆகும்) மேலும், விரிப்பிற்பெருகும். நமது, வகுப்பைச்சார்ந்த ஒவ்வொரு ஆசாரசீலங்களுக்கும், இஃதொரு முதல் அடிபீடமாக இருக்கிறதென்ப தை நமது, வகுப்பைச்சார்ந்த ஒவ்வொரு சகோதரர்களும் மிக நன்ருகக் கவனித்து ஞாபகத்தில் வைத்துக் கொள்ளல்வேண்டும். மேலும், நமது கலியுகம் ஐயாயிரத்து இருபஃதுக்கு, ஆங்கிலம் ஆயிரத்துத் தொளாயிரத்து இருபஃதாகிய இக்காலம். முடியை வளர்த்து ஒரேசிரத்தில் இரண்டு மூன்று விதங்களாக ஒட்ட ஒட்டக்கத்தறித்து, ஒருமாதிரிக் கோணல் வகுப்பெடுத் துச், சீவிச், சிங்காரித்துத் திரியும், நமது, இளயசகோதரர்கள், நமது, உள் நாட்டு, நகரங்களிலே உடைத்தாக நிகழும், ஒரு, பெரிய விசேடத்தில் ஆங் கு, நமது நகரத்தார்கட்கு மாத்திரம் தனியாக அமைக்கப் பெற்றிருக்கும் போஜனசாலையினுள் நுழையின், ஆங்குடைத்தான நமது ஏனையோர்கள்,

அவர்களை ஏற இறங்கப்பார்க்கவும், அவர்களைப்பற்றிச் சந்தேகிக்கவும், பின்னர் அவர்களையே நீங்கள் யாரென நேரிற் கேட்கவும், அதற்குநம்ம னோர் உண்ணச் சென்றவர்களாகலின், முக்கித், தேக்கி, முணமுணத்து, வெட்கி நாணி விடைபகரவும் நேர்ந்து விடுகின்றன. நண்ப! ஆய்ந்துநோக் குழி இங்ஙனமே, இங்ஙனமாமானால், இங்ஙனமல்லாத ஏனைய அயல் நாடு நகரங்களில் பலபகுதியார்களும், பலவருணத்தார்களும் கூடிய ஒரு கூட்ட நாட்டஇடங்களாகிய அங்ஙனம்,எங்ஙனமாமோ வென்பதைநீங்களே சிறிது நன்குணர்தல் வேண்டும்.ஆகவே, நெடுநாட்களாக நம்மைப்பற்றிக்கொண்டு வந்த பழக்க வழக்கமாகையால், அதனையொழித்து, ஏனையவோர் புதியமார்க் கத்தை நாம் கைபாண்டு தற்காலம் நமது, சிரமுண்டிதத்திற்கு உடைத்தாக நிகழும் கௌரவத்தைப்போல, கௌரவத்துக்குக் கொண்டுவருகிறதென் றால், குறைந்தபாகம் இருநூறுவருடங்களுக்கு மேற்பிடிக்கும், அதற்கும், நமது, பூர்வீகப் பெரியவர்களிடத்துத் தங்கியிருந்த அபாரசக்திகளைப் போன்று, தற்கால நமது,வகுப்பின் பெரியார்களிடத்து இல்லையென்பது மிக நன்றாக யாவரும் உணர்ந்தவோர் விஷயமேயாம். அஃது, எங்ஙன மெனின்? நமக்குக் குடியரசாக நம்மைச் செங்கோலோச்சிவந்த "கோயில் வாசற் கூட்டம்" "மடத்து வாசற் கூட்டம்" "சர்வநகரக் கூட்டம்" "நகரக் கூட்டம்" முதலிய சங்கங்களையும், வரன் முறைக் கட்டுச் சட்டங்களையும், நிர்வகித்து அவைகளை, நடுநிலை கோடாமல்கொண்டு நடாத்த இக்காலத்து நமது பெரியார் பேரறிவாண்மைகட்கும், நிறைந்த செல்வமாதிகட்கும் கூடாமலிருக்கிறதொன்றே போதிய சான்றாம், இஃதொன்றே நமது பூர் வீகப் பெரியவர்களினின்றும், இக்காலத்திய பெரியார் எத்துணையோ பன் மடங்கு தாழ்ந்த சக்தியுள்ளவர்கள்தான் என்பது, மிகத் தெளிவாக நன்கு "வெள்ளிடைமலை போல" தெள்ளிதில் விளங்குகிறதன்று, மேலும், நமது, மகாசமுகத்துக்குரிய, வரன்முறைக்கட்டுக்கள் என்னும் கற்பகதருக்களின் கண்படர்ந்தேறி ஒவ்வொரு கிளைகள்தோறும் தாவிச் செல்லும், புல்லுறு களை இந்தக்கணமே வேரறக் களைதல்வேண்டும். அறிவிற் பெரியரான ஒவ்வொருவரும் கவனித்துக் கொள்க. "வெள்ளம் வருவதற்கு முன்னர் அணைகோலிவையார், பெருகுதற்கண் என் செய்வார் பேசு" என்றும்,"அறி வுடையார் எல்லாம் உடையார்" "எதிரதாக் காக்கும் அறிவினார்க்கில்லை அதிர வருவதோர் நோய்" என்றும் வரும் பெரியார் திருவாக்குகளையும் நன்குணர்க. இனி, நமது, மரபின் திருமண மாட்சிகளையும் பற்றிச் சிறிது நன்கு விளக்கத் தொடங்குவாம். நடு நிலைக்கோடு இன்றியும், கூடியான வரை நியாயாநியாயங்களைச் சரிவர நன்குணர்ந்தும் வரையத்துணிகிறோம். மேலும், யாம் இக்காலத்துள் மீளமே அன்றி அக்காலத்துள்ளேம் அன்று, பூர்வீகக் கொள்வகைகளை உயர்த்தியும் நிகழ் கால வருங்கால நாகரீகங் களைத்தாழ்த்தியும் வரைதல் வேண்டுமென்ற எண்ணம் எம்மனத்திடை

ஒரு சிறிதளவுமில்லை. "வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங் கள் ஐந்தும் அகத்தே நகும்" என்ற வேதவாக்கு எமக்கு ஞாபகந்தான். ஆகலின், இதன்மேல் வரும் விஷயங்களைப்பற்றிச் சிறிது ஊன்றி நோக்கிக் கவனியுங்கள். நமது, மகாசமுகத்தைச் சார்ந்த சில சகோதரர்களுக்கு நமது, பூர்வீகக் கொள்வகைகளைப்பற்றி எற்றைய ஞான்று அருவருப்பு நிகழ்ந்தனவோ, அற்றைய ஞான்று முதற்கொண்டே நமது, மகாசமுகம் என்னுஞ் சரீரகத்துக்கும் சிறிது அசௌக்கியமாகத்தான் இருந்து வருகிறது. இது விஷயங்களைப்பற்றிச் சிறிது ஞாபகமாக நீங்கள் கணக்கெண்ணிப் பார்ப்பீர்களாயின், கலியுக வருஷம் ஐயாயிரத்து ஏழுக்கு, ஆங்கிலம் ஆயிரத்துத் தொளாயிரத்து ஏழிலிருந்தே என்பதை நன்குணர்வீர்கள். நமது, பூர்வீகக் கொள்வகைகளை மிகபக்தி சிரத்தையோடும் பற்றியியலுங்கள். சிறிதளவும் நழுவ விடாதேயுங்கள். நாம், இவ்வளவு தூரம் மகோன்னத நிலைமைக்கு வந்ததன் காரணம், அப்பூர்வீகக் கொள்வகைகளும், கட்டுப்பாடுகளுமே என்பதை நன்குணருங்கள். நமது, தாய் மொழியான தமிழ்ப் பாஷையின் மகத்துவங்களை நன்கு எண்ணி ஆய்ந்தோர்ந்து பாருங்கள். நமது, மகாசமுகத்து ஒவ்வொரு குடும்பத்தார்களுக்கும், தலையெழுத்துவிலாசங்களாயும், அழகிய பெயர்களாயும், நிகழ்வது நம்,தமிழ் எழுத்துக்களே அன்ரு? அவ்எழுத்துக்கள் தேடிக் கொணர்ந்திருக்கும் பொருட்குவைகளிற் சில ஒன்றுக்கும் உதவாத இரண்டொரு ஆங்கில எழுத்துக்களுக்காக, வீணே வெறும் பாழாய் வெளியாவதற்குங் காரணம் நமது, பூர்வீகக் கொள்வகைகள் நழுவி நிற்பதேயாம். அதினும், மங்கலகரமான விவாகாதிக் கொள்வகைகளிற் சிறிதும், நழுவவிடாத வண்ணம் ஓம்புதலும் வேண்டும். மேலும், 'நட்புப் பிரித்தல், பகைநட்டல், ஒற்றிகழ்தல், பக்கத்தார் யாரையும் ஐயுறுதல், தக்கார் நெடுமொழிக்கோறல், குணம் பிறிதாதல், கெடுவது காட்டுங்குறி" இந்நீதி நெறி விளக்கத்தை நன்கு கவனியுங்கள். நமது, பண்டைக்காலத்து நீதி மார்க்கங்களில் நின்றும் ஒருசிறிதளவும் வழுவாதொழுகுங்கள். அதுதான் நமது முதற் கடமையுமாகும். மேலும், நமது,பூர்வீகக் கொள்வகைகளில் அருவருப்புடையார் சிலரும் நமது, சகோதரர்களேயாகலின் அவர்களின் அருவருப்புக்குத்தகுந்த ஔடதம் கொடுக்க வேண்டுவதும் தெரிந்தார் பலரின் கடமையேயாகும். எனெனில்? "நெல்லுக் கிறைத்த நீர் வாய்க்கால் வழியோடிப் புல்லுக்கு மாங்கே பொசியுமாந், தொல்லுலகில் நல்லார் ஒருவருளரேல்,அவர் பொருட்டு எல்லார்க்கும் பெய்யுமழை" என்ற வேதவாக்குப்போன்று, இஞ்ஞாலத்தில் நல்லார் ஒருவர்க்காகப் பெய்யுமழையானது, அந்நாடு நகரங்களிலுடைத்தான சகல ஜீவ கோடிகளுக்கும் உபயோகப்படுகிறதைப்போன்று, கெட்டார் ஒருவருக்காக நிகழும் கேடுகளும் அந்நாடு நகரங்களிலுடைத்தான சகல ஆன்ம கோடிகளையும் தாக்குமாமாகலின் என்க. இஃதிங்ஙனமாக, நமது, பூர்வீகப் பெரி

யார் தாபித்திருக்கும், ஒவ்வொரு அடிபீடங்களையும் சிறிது கவனித்து ஆராடப் புகுவார்க்கு அவைகளிலிருந்து புதையல்களிளம்புந் தனக்குவையல்களைப்போலவே பொருள்கள் வெளிப்படுகின்றன. அஃதெங்ஙனமெனின் "இசைகுடிமானம்" இஃது, நமது, மாபின் விவாகாதி விஷயங்கள் சம்பந்தப்பட்டமட்டில், சில முதன்மையான, ஒழுக்க நூன்முறைச் சட்டங்கள் அமைந்துள்ள ஒரு சிறு பத்திரமாகும். இம்மாதிரிப் பத்திரம் ஒன்றமைத்துக்கொள்ளல் நமது தமிழ்த் தேயத்து ஏனைய எந்த வருணத்தார்களிடத்து மின்றும், இவ்வழகிய செந்தமிழ்ச் சிறுதொடர் வாசகத்தின் மாட்சியையும், இப்பத்திரத்துள் என்ன, என்ன பொருள்களடங்க வரைகின்றாரென்பதையும், இதில் யாவர், யாவரெல்லாங்கை யொப்பங்கள் வைக்கப்பெறுகிற தென்பதையும், திருமாங்கல்ய நாள்களுள், எந்த ஞான்றில் இஃது, வரையப் பெறுகிற தென்பதையும், மணமக்களிருவரில், யாவருடைய இல்லத்தில் அஃது, சுதந்தரமுடையதாக உட்கார்ந்து கொண்டிருக்கிற தென்பதையும் நாம் நன்றாகவுணர்வோமன்றோ? இஃது, புதிய நாகரீகமா பழைய நாகரீகமா? இச்சட்டத்தை முதன் முதலாக உண்டாக்கி அதற்கு "இசைகுடிமானம்" என, ஒரு அழகிய தலைப் பெயரையுஞ் சூட்டினார், இக்காலத்தவர்களா? நமது, பூர்வீக அக்காலத்தவர்களா? இப்பத்திரம் எதற்காக வரைந்துகொள்ளல் வேண்டும்? இப்பத்திரத்து மணமகனைச் சார்ந்த ஒரு தலைவரும், மணமகளைச் சார்ந்த ஒரு தலைவரும், நெட்டெழுத்தாரும் எதற்காக கையொப்பம் வைத்தல் வேண்டும்? இம்முறிப்பத்திரங்கள் எதற்காக மணமகளில்லத்திலேயே இருந்துவரல் வேண்டும். அம்மண மக்களிருவருக்கும், ஒருவருக்கொருவர் இடையே நிகழும் பாத்திபா பாத்தியதைத் தொடர்புகள் அவ்விருவரையும்விட்டு நீங்காத வண்ணம், எந்தக்காலமும் அவ்விருவரும் ஒருமை பெற்று, அவர்களின் குடியானது வான்குடித்தோற்றமே என்க புத்திர பௌத்திரர்களோடும் பெருகி வாழ்ந்து வருவான் கருதித் தொடங்கியதேயாமன்றோ? இஃது, மேனாட்டவருள்ளும், கீழ் நாட்டவருள் சிலபகுதியார்களுள்ளும் தற்காலம் அனுபவத்துக் காணப்படும் விவாகாதி காரிய ரிஜிஸ்டர் தஸ்தாவேஜியைப் போன்றதாமோ அன்றோ? இப்புதிய நாகரீகவொரு செய்கையை, நமது, பூர்விகப் பெரியார் எத்துணை நெடுங்காலங்களுக்கு முன்னரே இருந்து நமதனுபவத்துக்குக் கொண்டுவந்திருக்கிறார்கள். இது விஷயம் நாம் நன்குணரத்தக்க விஷயங்கள் பலவற்றுள்ளும் முதன்மை பெற்ற தொன்றேயாமன்றோ? இதில் நின்றேனும் நமது, பூர்விகக் கொள்வகைகளொருங்கும் உயர்தரமேம்பாடுடைய தென்பது நமக்கு நன்றாக விளங்குகிறதோ வன்றோ? இங்ஙனமாக முன்னுள்ள நமது, ஒவ்வொரு கொள்வகைகளும், அருங்கருத்துக்களும், பொருள்களும் அடங்கியுள்ளன வென்பதை நாம் நன்குணர்ந்து, அருவருப்புடையார் சிலர்க்கும் நன்கு விளங்குமாறு, நூன்முறை வகுத்துப் பான்முறை விரித்துக்

காட்டிப்போதித்து அவர்களை நல்வழிப் படுத்தலும் வேண்டாமா? இனி நமதுமரபியன் முறைப்படி திருமாங்கலியம் பூட்டுகிற முறைமையைப் பற்றியும் சிறிது கவனித்து நன்கு விளக்குவாம். அஃதாவது, கல்விபறிவுநிறைந்த மனந்தூயராயும்; புத்திரர், பௌத்திரர்கள் முதலிய மக்கட் பேறுடையராயும்; நடுநிலைக்கோடின்றி வந்து பெருகிய செல்வப் பேறுடையராயும்; தக்க கௌரவமுடையராயும்; நற்குண நல்லொழுக்கங்கள் நிரம்பிய ஆசாரமுடையராயும்; கொடிவழிச் சுதந்தர முடையராயும் உள்ள ஒருவயோதிகப் பெரியரால், அம்மணமக்கள் இருவரும், எந்த ஞான்றும் எம்மார்க்கத்தும், தங்களைப்போன்று மிக நீண்டநாள் வளர்ந்தோங்கி வாழ்ந்துவரல் வேண்டுமென்ற பெருங்கருத்தோடும் எல்லாம் வல்ல நமதிறைவனையுஞ் சிந்தித்து, அம்மணமகனும் அத்திருமாங்கலியத்தைத் தொட்டுக் கொடுக்கப்பெற்று, அத்திருமணத்துக்காக அவ்வமயம் ஆங்கு நிறைந்துள்ள நமது பல பெரியாரும், பிராமணோத்தமர்களும், தங்களின் திருக்கரத்தால் தொட்டு ஆசீர்வதிக்கப்பெற்றும், அத்திருமாங்கலியத்தை குறித்த முகூர்த்த காலத்துப் பலவகை மங்கல வாழ்த்துக்கள் ஏகபோகமாக ஒலிப்பதன் இடையே, அம்மணமகளின், மிடற்றில் அத்திருமாங்கலியத்தைப் பூட்டப் பெறுகிறது. அங்ஙனம் பூட்டப்பெறுவதுதான் நமது, மரபிற்குரிய பூர்வீகக்கொள்வகையுமாம். ஆய்ந்து, நோக்குமிடத்து, இஃதிலென்னை அநாகரீகம் உள்ள து? மணமக்களிருவரையுங்குறித்து, தங்களின் சொந்த பந்துவாயுள்ள ஒரு பெரியாற் செய்யப்பெறுகிற ஒரு நற்செய்கையாங்ஙனம் இழுக்காகும்? இக்கட்டுப்பாடென்னும் பூட்டையுடைப்பதற்கும் சில நமது பால்யசகோதரர்கள்கங்கணங் கட்டிக்கொள்ளலாகுமா? ஆழ்ந்த கருத்துடன் யோசனை பண்ணி விஷயத்தை நன்குவிளங்கத் தெரிந்துகொள்ள வேண்டாமா? எந்த வகையானும் நம்மை, நாஸ்தியாக்கக் கங்கணங்கட்டிக் கொண்டு நம்மை விட்டகலாமல் நிழலைப்போன்று, நம்முடன் திரியும் மனமாகிய அனுமனின் மனோபீட்டம்போன்று பத்திரிகைகளாகவும், புத்தகங்களாகவும் வரைந்து விடலாகுமா? நமக்குண்டாகும் நன்மைகளை நாமே, கெடுத்துக் கொள்ளலாகுமா? அஃதத்துணைச் சிறந்த பேரறிவுமாகுமா? நம்முடைய பூர்வீகப் பெரியார், நமர்குத் தீங்கு பயக்கும் விஷயங்களை மங்கல காரியக் கட்டுப்பாடுகளில் ஒன்றாகக் கட்டி வைப்பார்களா? சிறிது, நிதானிக்க வேண்டாமா? எமது, ஆப்த நண்ப! நமது, பாரத கண்டத்து, பார்ப்பன வகுப்பாரே, உயர்ந்த வருணத்தார் என்பதை எவர்களேனும் மறுக்கக்கூடுமோ? அதற்கடுத்தாற்போல், அப்பார்ப்பன வகுப்பார், பழக்க வழக்க ஒழுக்கங்களை பின்பற்றியவர்களாய்க் காணப்படும் சைவர்களாகிய வேளாளர்கள் என்பதையும் எவர்களேனும், மறுக்கக் கூடுமோ? இவ்விருபாலார் வகுப்புள்ளும், மணமகள் மிடற்றில் திருமாங்கலியத்தை பூட்டுகிறவர்கள் யாவர் என்பது நுங்கட்குத் தெரியுமா? மணமகன், தானாகவே திருமாங்கலியத்தை மணமகள் மிடற்

றில் பூட்டுகிற வழக்கமில்லை. சிறிது விசாரிப்பீர்களாயின் நன்கு விளங்கும். பின்னர் அத்திருமாங்கல்யத்தைப் பூட்டுகிறவர்கள் யாரென்னில், மணமகனுக்குத் தமக்கை தங்கை முறைமை வாய்ந்த ஓர் சுமங்கலியேயாம், திருமாங்கலியத்தைத் தொட்டு மணமகள் மிடற்றுக்கு நேரே நீட்டுங்கடமைதான், அம்மணமகனுக்குரியதாம் ஏனெனில்? இது, விஷயத்தில், எவர்களுக்கும் எளிதில் விளங்கக்கூடாத இரகசியார்த்தம் ஒன்று காணக்கிடக்கின்றது. அஃதாவது, சுபகாரியங்களுக்குரிய சடங்குகளைச் செய்யக்கடமையுடையவர்கள், ஆண்பாலாரேனும், பெண்பாலாரேனும், சுமங்கலம் உடையவர்களாய் இருத்தல் வேண்டும் என்பதேயாம். சுபகாரியச்சடங்குகளை ஏற்றுக்கொள்வதற்கு உரியராய் நிற்பவர்களில் நின்றும், சிறிதேனும் ஆண்டின் முதியாராய் இருத்தல் வேண்டுமென்பதூஉமாம். இதன், வெளிப்படையான கருத்து. ஒரு காரியம் முற்றுப்பெற்றாலொழிய அக்காரியத்துக்கு அதன் பெயர் நிகழாமைபோன்று, அம்மணமக்களிருவருக்கும், நடக்கும் திருமணச் சுமங்கலச் சுபகாரியச் சடங்குகள் ஒருங்கும் முறையே நடந்தேறி முற்றுப் பெற்றாலொழிய, அவர்கட்குச் சுமங்கலம் உடையார் என்னும் பெயர் நிகழாமையான், அவர்கள், சுமங்கலம் உடையாரல்லர் ஆகலின், அவ்விருவருள் ஒருவனான மணமகன், அம்மணமகட்குத்திருப்பூட்டுஞ் சுதந்தரமுடையான். அல்லன், என்பதேயாம். மேலும், ஒருவருக்கொருவர் தங்களுக்குத் தாங்களே அவ்வகைச் சடங்குகளைச் செய்துமுடித்துக் கொள்ளுகிறதென்னின், அஃது, தான், தன்பாதமே கதியென்று சொல்லி ஆற்றிலிறங்கிய அண்ணாவியின் செயலாமென்க. ஒருவாறு, அங்ஙனம் அவர்கள் செய்து கொண்டாலும் அஃது, அந்தணர் அருமறை மன்றல் எட்டினுள் கந்தருவ வழக்கமாகிய களவியலாமென்க. ஆகவே, நண்ப! இங்ஙனந் திருப்பூட்டுதலைக்குறித்துக் கவனிக்குமிடத்து, அச்சடங்கினை, ஒரு மடமை நீங்காத பெண்பால் உஞற்றுவதில் நின்றும், எத்துணையோ சிறந்த ஒரு பெரியார் உஞற்றுவது, எத்துணைச் சிறந்ததென்பதை நீங்களே நன்குணருங்கள். இதில் நின்றும், நம்முடைய வகுப்பின் பெரியரே பெரியாரென்பதூஉம், அவர்கள் கொண்ட கொள்வகைகளே உயர்ந்த கொள்வகைகளாம் என்பதூஉம் நாம் நன்கு தெளியக்கிடக்கின்றன. இனி நண்ப! நமது, பூர்வீகப்பெரியார், சிறியவோர் மகனுக்குப் பெரிய வோர்மகளைத்திருமணஞ் செய்யும் இவ்வழக்கத்தைச்சிறுபான்மையாகக் கையாண்டு வந்திருக்கிறார்கள் இவ்வழக்கம் தற்காலமும் சிறிது நடந்தேறிவருகிறது. என்றாலும், இஃது, கூடிய சுருக்கில் நின்றுவிடும். கவனிக்குமிடத்து, இஃதொருவாறு, சிறிது நமக்கு நாணத்தையும், நமது, பூர்வீகப் பெரியோர்களிடத்துச் சிறிது அருவருப்பையும் உண்டாக்குகிறதன்றோ? அதுவாய்மைதான்! நீங்கள் சிறிது நன்றாகப்படித்துணர்ந்தவர்களன்றோ? ஆம், வாய்மைதான்! நீங்கள், "சமன் செய்து சீர்தூக்குங் கோல்போலமைந்தொருபாற் கோடாமை சான்றோர்க்

கணி'' என்ற நமது, தேவபெருமான், வேதவாக்கிற் கிணங்க, ஒரு விஷயத்தில் சிறிதும் நியாயக்கோட்ட மென்பதின்றி நன்குச்சீர்தூக்கி ஆராய்ச்சி செய்துக்கவனித்துத்தான் பார்ப்பீர்கள். நமது, செந்தமிழ்ப்பாஷையிலுடைத்தான, பூர்வீகச் சில அரிய, பெரிய நூற்களிடத்தும், நமது சைவசமயத்தைச்சார்ந்த சில அரியபெரிய பூர்வீகஸ்மிருதிகள், புராணங்கள் முதலிய நூற்களிடத்தும், நாற்பஃதெட்டாட்டைப்பிராயமுடைய ஒரு புருடனுக்குப் பன்னிரண்டாட்டைப் பிராயமுடைய ஒரு சிறு இளங்கன்றையே நிகர்க்கும் ஒரு சிறு மகளிரை விவாகஞ் செய்துகொடுத்தல் வேண்டுமென்று காணப்படுகிறதன்றோ? இதற்காக யாவர் நாணுகிறது? யாவர் மேல் யாவர் அருவருப்புக்கொள்கிறது? இங்ஙனங்கூறும் நூற்களும், ஸ்மிருதிகளும், உயர்ந்தனவாகக் கருதிப், பார்ப்பனவகுப்பார்களும், அவர்களைச் சார்ந்த ஏனையபலரும்,எத்துணையோ அறுத்த முண்டர்களாயிருந்தும், திரும்பத், திரும்பச் சிறிது அணுவளவு கூடப் பொருத்தமல்லாதச் சிறுமிகளைக் கட்டி, அணைத்துக்கொள்கிறார்களே? இதற்கென்னை நியாயம்? இஃதொன்றற்கு நிகழ்ந்த காரணமென்னை? இஃதொரு நியாயமும், இஃதொரு நாகரீகமும்,இதற்கொரு காரணமும், ஆருங்கால், நமது, பெரியார் கொண்ட மேற்கண்ட அக்கொள்வகைக்கும் போதிய நியாயமும், காரணமும் நன்கு விளங்கக்கூடும். ஆனால், நமது, பெரியோர்கள் எந்தக்கொள்வகைக்கும், எத்தகை யாரும் ஒப்பத்தகுந்தவும், வியப்பத்தகுந்தவுமான காரணத்தைக் கண்டு பிடித்துத்தான் காரியத்தை அமுலுக்குகொண்டு வந்திருக்கிறார்கள் என்பதை மட்டும் நாம், மறந்துவிடுதல் கூடாது. பொருத்த முடைமை காண்டல் பெறிவாண்மைக்கே உரித்தாம். மேலும், இக்காலம், நமது, பால்யசகோதரருள் பலர் தங்களின் மனையாள் சிறிது ஆண்டின் முதியராய் இருத்தல் நோக்கியும், தங்களைச் சூழ்ந்து கொண்டிருக்கும் அநாகரீகமுடையார் பலர்க்காக நாணியும், தங்கட்கு இளையமனையாளாக ஒருமகளிரைத் திரும்பவும் ஒரு விவாகஞ் செய்துகொள்ளுகிறார்கள். இஃது எத்துணை தூரம் இழிந்தவோர். செய்கை என்பதையும், நியாயக்கோட்டம் என்பதையும் நண்பர்கள் நன்றாகக் கவனித்தல் வேண்டும். மேலும், காமாதிபோக இன்பத்துள் உண்மையுணர்வான் புகின் "இளமுலை மானுர் வலியவணைத்த சுகம்'' போல் என ஸ்ரீ அருணகிரிநாதர்திருவாய்மலர்ந்தருளியவாறு, தக்க பருவமுடையார் இருவருள், ஒருவன், ஒருத்திக்குச் சிறிது யாண்டின் இளமையாயும், ஒருத்தி, ஒருவனுக்குச் சிறிது யாண்டின் முதியோளாயும், இருப்பிற்றுன், ஒருத்தி,ஒருவனைத் தானகவே, வலிதாக விரும்பி, காமசாத்திரமுறைப்படி, அமிழ்தம்போன்ற நவரதமொழிகளாற் பேரானந்தம் விளங்க அவனுக்குக் காதலை மூட்டி, "தொடிற் சுடினல்லது காமத்தீபோல விடிற் சுடலாற்று மோ தீ'' என்றவாறு சிறப்புற்றோங்கிய காமத்தீயையும் அவனுடைய மனமாகிய சரீரத்திலே, கொழுந்துவிட்டெரியு

மாறு வளர்த்து, அன்னோன், அஃதாற்றாது புலம்ப, விட்டுங் காண்டும், அங்ஙனமுடைத்தாம் பேராநந்த சாகரத்தழுந்த வின்பத்தை வலியக் கொடுத்தும், அணைத்தும், ஐம்புலாதிகருவி கரணங்கண் முதலிய தத்துவக் கட்டுக்களொருங்கும் நெகிழ்ந்து, "தாரையினுடைய வின்பாதி போகத் தான் சந்திரன் பரவசம் அடைந்தான்" போன்று, அப்பரமசுகத்தைக் கொடுக்க ஒருத்திக்குக்கூடுமே அல்லது ஐய்பது வருடத்துப் புருடன் ஒருவனுக்கு பதினைந்து வருடத்து மனையாள் ஒருத்தி "இளமுலைமானார் வலியவணைத்த சுகத்தை" காட்டிக்கொடுக்கக் கூடுமோவெனின் அஃது, ஒருக்காலுங்கூடவே கூடாது. இத்துணையு மல்லாத எத்துணையோ சிறந்த இளமுலைமானார் வலியவளைக்குஞ் சுகத்தையுங் கெடுத்துக்கொண்டும் வரும் காலகதிக்கு நாமென்செய்வேம். நண்ப! திருமணமுடிந்த மணமக்களிருவரையும் இரட்டைப்புரவிகள் பூட்டிய நான்கு சக்கரச் சகடம், அல்லது இரதம், அல்லது பல்லக்குகளில் வைத்து, ஏனைய உயர்தர வருணத்தார் போன்று, நகர்வலஞ் செய்வித்தல் நமது, மரபிற்குரியதன்றாம். ஏனெனில், இதன் காரணத்தைப் பற்றிச் சிறிது நன்கு விளக்குவாம். மிகவும் பெரிதான, இப்பூமண்டலத்து, வரையறுத்துக் கூறுவதற்குப் பன்னெடுங்காலங்கட்கும் முன்னரே இருந்து, உயர்தர நாகரீகதசையுட்டங்கி வாழ்ந்து வந்த தேசங்கள் "இந்தியாவும் சைனாவும்" மேயாகும். இவ்விரண்டு தேசத்து ஆண்சாதியார்களும், பெண்சாதியார்களை, நம்போன்ற மனித சுதந்தரம் உடையாரல்லரென்றே தீர்மானித்து, எட்பிளவானுங் கூட சந்தேகவிபரீதங்களற்ற பூரணமான வஞ்ச நெஞ்சத்தோடுங்கூடிய சுயசுகநயங்கருதியமடக்கயவோர்களாய், அவர்கள்தம் கண்களை மறைத்தும் காதுகளைக் குத்தித் தொளைத்தும், மூக்கந்தண்டில் துவாரங்களை இட்டும், வேகமாய் நடப்பதற்கும், ஓடுவதற்குமின்றிக் கால்களை ஒடித்தும், போதியகல்வியாதி கருவிகளைக்கொடுப்பின், அறிவுவிளக்கத்தான் நம்மையடக்கியாள முயன்று விடுவார்களென்ற பயங்கரத்தால், பெரும்பான்மையவர்கள் வருக்கத்தார் ஒருங்கையும், பூரணபேதையர்களாக்கியும், சிறிதும் அழகற்ற செம்பு பித்தளை வெள்ளி அணிகளைப் பூட்டியும், நடையுடைபாவனைகளில் தாழ்த்தியும், இத்துணைச் சிறந்த நாகரீககாலத்தும் அவர்களுக்கோர் நிவர்த்தியாக வொட்டாத நிலைமையில் வைத்துக் கொண்டு வந்திருக்கிறார்கள். இஃது, நுங்கட்கு நன்கு தெரிந்ததாமன்றோ? இத்துணைக்கொள்ளையில், நம்முடைய பெரியாரும் அந்த வாண்சாதியார்களுடன் சார்ந்தவர்கள்தானேயன்றோ? "எரிகிற கோள்ளியில் எந்தக்கோள்ளி நல்லகோள்ளி? எல்லாம் விடத் தலங்கோள்ளியே" என்றபடி (இதிலிருந்து. இவ்வாறு ஒன்பது கோவில்களையும், க்ஷேத்திரசுவாத்தியங்களையும் அவரவரும் தனித்தனியே யுரிமைபாராட்டி அனுபவித்துவருகிறநாளில், சாலிவாகன சகாப்தம் ௲அ௱௩-கலியுகவருஷம் ௪௲௯௱௮௰௨-ல், பூங்கொன்றை நாட்டுவேலங்குடியில், மாணிக்

கப் பெருந்தெருவில், வசித்துக்கொண்டிருந்த, நேமங்கோவிலைச் சேர்ந்த இளநலமுடையான் முத்துவீரப்பசெட்டி குமாரனாகிய அருணாசல மென்பவனுடைய புத்திரி ஐந்து வயதுள்ள முத்துமீனாளென்பவளைக் காருண்ய பாண்டியராசன் வேட்டைக்கு வந்தகாலத்தில் நகர்ப்புறத்திற் கண்டு எடுத்துத் தன் வாகனத்தில் ஏற்றிக்கொண்டு தனது நகரத்துக்குப் போய்ச் சேர்ந்தான். பின்பு அதனையறிந்து ஒன்பதுகோவில் நகரத்தாரும் சேர்ந்து கூட்டங்கூடிச் சிறையெடுக்கப்பட்ட பெண்ணுக்குச் சாதிசியாயத்தில் ஏற்பட்டிருக்கிற முடிவான முறையைச் செய்வதாகப் பேசிமுடித்துக்கொண்டு, பாண்டியராசனிடத்திற்குச் சென்று அப்பெண்ணை விடும்படி கேட்க, அவர்களைப்பார்த்து "உங்கள் பெண்ணென்று தெரிந்தால் எடுத்து வந்திருக்கமாட்டேன், அப்பெண்ணை விட்டால் கொலைசெய்து விடுவீர்களென்று பலருஞ் சொல்லுகிறார்கள், ஆயினும் நீங்கள் கேட்டுக்கொள்வதற்காகப் பெண்ணைத் தரச் சம்மதிக்கின்றேன், அப்பெண்ணை நீங்கள் கொன்றதாகத் தெரிந்தால் அந்த ஒரு தலைக்கு எட்டுத்தலையும் எண்ணாயிரம் பொன்னும் உங்களிடத்து வாங்குவோம்" என்று சொல்லி அப்பெண்ணை அவர்களிடம் கொடுத்தான். அவர்கள் அரசன்பால் விடைபெற்றுக்கொண்டு வரும் வழியிலே அப்பெண்ணைச் சாதிசியாய முறைப்படி செய்துவிட்டு ஊருக்கு வந்து ஓரிடத்திற்கூடி அரசன் ஆக்கினைப்படி எட்டுத்தலை அனுப்புவதற்கு, ஏழு வழிக்கும் ஏழுதலை கொடுக்கலாம்; பின்னும் ஒரு தலை வேண்டுமே அதற்கு என் செய்வது? என்று ஆலோசித்துக்கொண்டிருக்கையில் ஏழுவழியாரில் ஒரு வழியாராகிய இளையாற்றக்குடி, இரணியூர், பிள்ளையார்பட்டி என்று சொல்லப்படுகிற மூன்று கோவிலாரும் சேர்ந்து "எங்கள் வழியொன்றாயிருந்தாலும், கோவில் மூன்றா யிருக்கிறதால் நாங்கள் தான் ஒருதலை வியனாகத்தரவேண்டும்" என்று சொல்ல அப்போது இளையாற்றக்குடிக்கோவிலில் ஒரு பிரிவாராகிய ஒக்கூருடையார் எழுந்து வியனாகக் கொடுக்கவேண்டிய ஒரு தலையையும் நாங்கள் கொடுக்கிறோம்; மானம் பெரிதே யன்றிப் பிராணன் பெரிதில்லை; கோவில், குருஸ்தானங்களில் விபூதி முதலான சகல மரியாதையும் முதலிலே எங்களுக்குச் செய்வதாய் நகரத்தார் எல்லாரும் ஒப்புக்கொண்டால் அதுவே எங்களுக்குப் போதுமென்று சொல்ல அவ்வாறே நகரத்தாரும் சம்மதித்துப் பின்பு எல்லாரும் அரசனையடைந்து ஆக்கினைப்படி எட்டுத்தலையும் எண்ணாயிரம் பொன்னும் கொண்டுவந்திருக்கிறோம், என்று சொன்னார்கள். அதுகேட்டு அரசன் மிகத்துன்பமுற்று அவர்களை நோக்கி, "ஒரு பெண்பழிபோதும் நீங்கள் ஒன்றுந் தரவேண்டாம், போய்வாருங்கள்" என்று சொல்ல நகரத்தார் திரும்பித் தம்மூர் வந்து சேர்ந்தார்கள். அந்தப் பெண்பழி நிவர்த்தியின் பொருட்டு உருத்திரபதீசுவரருக்குத் திருப்பணிசெய்து தடாகம் உண்டாக்கித் திருவிழாவும் நடத்தி அந்தத் தருமம் எக்காலமும் நடக்கும்படி க்ஷேத்திர சுவாத்தியம்

களும் வாங்கிவிட்டு, இனி இந்தவூரில் குடியிருக்கலாகாதென்று அவ்வூரை விட்டு அவர்கள் எல்லாரும் மாற்றூர் முதலிய இடங்களில் வந்து குடியிருப்பு நிலைமை ஏற்படுத்திக் கொண்டார்கள். இதுவரை நகரத்தார் சரித்திரம்.) இதன் மேற்கண்ட நமது பூர்வீகப் பெரியார் கொடுஞ்செயல்களைக் கண்டீர்களா? "முத்து மீனாள்" என்னும் அக்குழந்தையின் வனப்பு நோக்கி அம்மன்மகன், "மக்கண் மெய்தீண்டலுடற்கின்பம் மற்று அவர் சொற் கேட்டலின்பஞ் சேவிக்கு" என்பதற்கிணங்க, எடுத்து முத்தமிட்டுத்தன்வாகனத்தில் தன்னுடன் ஒக்க இருத்திக்கொண்டு சென்றான் என்றால், இதற்கென்னே? அச்சிசுவை அவன் என் செய்திருக்கக்கூடும்? அச்சிறுமிக்குஎன்ன தெரியும்? அம்மன்மகன் என்னநோக்கத்தோடு எடுத்துக்கொண்டு சென்றிருப்பான்? அவன், என்னகாமுகனா? சயவனா?முட்டாளா? அதற்காக அக்குழந்தையைப் பெற்றுக்கொண்டு திரும்பவரும் வழியில், ஐயோ பாவம்! ஒன்றுமறியாத இளஞ்சிசு, அத்துணைப் பெரியோர்களும் தங்களின், மனமாற ஆழக்குழி தோண்டியதன் கீழ் அக்குழந்தையை இறக்கி உயிரோடு நிறுத்திக்கொன்று மண்மூடிச் செம்மித்திரும்பினார்கள். மேலும், அவ்வொருசிறுமியின் சிரத்துக்காக எட்டுப் பெரிய முதன்மையான சிரத்தோடும், எண்ணுயிரம் பொன்னோடும், மீண்டும் அம்மன்மகன் முன்னிலைக்குச் சென்று நின்றார்கள். என்றால், அடடா! என்னபராக்கிரம வீரம்! அவர்களின் சமூகப்பாதுகாப்பின் பொருட்டு அவர்கள் செய்துள்ள கொடுந்தொழிலொன்றைக் கண்டீர்களா? அவர்களை ஒன்றுமறியாதவர்களென்று நாம் நினைக்கத்தகுமா? தகாது. தகாது. பின்னர், என்னே? "கொற்கையான் மாறன் குலசேகரப்பெருமான் பொற்கையான் ஆனகதை போதாதோ நற்கமல, மன்றலே வாரிமணிவாசலை யசைக்கத் தென்றலேயேன் வந்தாய் செப்பு" என்ற கம்பர் திருவாக்கிற்கிணங்க, அறிவுடைமையாலோ, அறிவின்மையாலோ, அயலார் வீடுகளின் கதவுகளைத்தட்டியதற்காகத் தன்னைத்தானே தண்டித்துக் கொள்ளக்கருதி தன்கரத்தைத்தானேச் சேதித்துக்கொண்ட பாண்டிவம்சத்து உயர்குடிப்பிறந்த ஒரு மன்மகனுயிருந்தும், நமக்குச் சொந்தமல்லாத ஏனைய எந்தப்பொருள்களின் மீதும் நாம் ஆசை வைத்தல் கூடாது என்ற பேரறிவாண்மையை இழந்து, தூக்கிக்கொண்டு சென்ற ஒரு பெரியமடமன்மகன் கொடுங்கோன் முறைமையானது செங்கோன் முறைமையாகத்திரும்பும் பொருட்டும், தங்களின் மகாசமுகத்தின் பேரறிவாண்மையை அவனுக்குக் காண்பிக்கும் பொருட்டுமே செய்துள்ள ஒருகொடிய தந்திரத்தொழிலாமென்க என்றாலும், மேற்கண்ட நமது, முத்துமீனாள் என்னுங்கன்னியின், பழியானது, நம்மன்னோர் செய்துள்ள பிராயச்சித்தத்தால் விலகிவிட்டதோ என்றால் இல்லை, இல்லை. அஃதுதான், அவர்களின், சந்ததியார்களான நாம் இக்காலம் நாற்பஃது, ஐம்பஃதாயிரம் என்ன பொருட்டொகைகளைக் கொட்டிக் கொடுக்க முன்னின்றாலும், நமது

மகாசமுகத்துள் பெண்கள் கிடைக்காமல் பெண்ணே! பெண்ணே! என்று ஓலமிடவேண்டியதாய் போயிற்று. இதற்காக நாம் இனி என் செய்வோம். இத்துணைத்தன்மையிற்சிறந்த நமது பூர்வீகப் பெரியார் தங்களின் அருமையான பாலியமணமக்களிருவரையும் உயர்ந்த ஆடையாபரணுதிகளோடும், புட்பசந்தனவாசனுதிகளோடும் அலங்கரித்துப் பலவருணத்தார்களும் நிறைந்துள்ள ஒருநகரத்தின் நான்குரத வீதிகளினும், சிவிகை, ரதம், சகடங்களில் ஏற்றி வைத்து, ஏகத்தடபுடலான மேளவாத்தியங்களோடும், எங்கள் மணமக்களிருவரையும் யாவருங்காணுங்களென நகர்வலஞ் செய்யவும் சம்மதிப்பார்களா? சம்மதித்திருக்கவேமாட்டார்கள். அதுதான் நமது, மரபார்க்கு அஃது, உரியவழக்கமல்லாமற் போயிற்று. மேலும், நமது மகாசமுகத்துப் பெண்மக்களுக்கு மத்தியகாலத்துப் பத்து முழச்சேலையே உடையானதும், "நச்சுக்கட்டியும் நல்லமுதும் மிக, வச்சுக்கட்டியமாமுலையாலுலகு, அச்சுக் கெட்டழியும் அழியும் எனக், கச்சுக்கட்டி மறைத்தனர் கண்களே' என்ற அதிவீரராம பாண்டியன் திருவாக்குக்குமாறுதலான கச்சுகட்டின்மையும், கைச்சிரணிகள் கழுத்துச்சிரணிகள், காதுச்சிரணிகள் முதலியன விகாரமாகப் பெற்றதும், மாதர்கட்குரிய ஐம்பான் முடிகளில் நாற்பான்முடிகள், அவர்கள் சிரத்தில் காணுமலிருந்ததூஉம், கூடிய மட்டில் செயற்கையமைப்பில் நிகழவேண்டிய அழகியல்கள் ஒருங்கும் பாழ்படக் கிடந்ததூஉம், அவர்கள் படிப்பின்றி தேங்கிக்கிடந்ததூஉம், அவர்கள் மனிதவர்க்கத்தார்க்குரிய சுதந்தரம் ஒருங்கையும் இழந்து கிடந்ததூஉம், அவர்கட்குக் கருப்பி, சிவப்பி, வெள்ளைச்சி, சோலைச்சி, சிட்டா, வடிவி, அழகி, நாச்சி, தெய்வி, மீனி, சோகி, எனப்பெயர்களைச் சூட்டி, அழைக்கப்பெற்றதூஉம், அவர்களிடத்துக் கற்பியன் முறைகள் மிக ஒழுங்காக அமைந்து கிடத்தல் வேண்டியதன் பொருட்டும், அவர்களைக் கண்டு ஏனையவோராண் மகனுக்குக்காதல் நிகழாதிருக்கும் பொருட்டுமே அன்றி நமது, பூர்வீகப் பெரியார் அறியாத்தன்மையால் அத்தகைய சம்பவங்கள் நடந்தேறி வந்தனவென்று இந்தக்காலத்துடைத்தான எந்தச்சகோதர சகோதரிகளும் நினைத்தல் வேண்டாம். மேலும், அந்தக் காலத்து "ஐம்புலன்களும்போல் ஐவரும் பதிகளாகவும், இன்னும் வேறொருவன், எம்பெருங்கொழுநன் ஆவதற்குருகும் இறைவனே எனது பேரிதயம், அம்புவிதனில் பெண்பிறந்தவர் எவர்க்கும் ஆடவர் இலாமையினல்லால், நம்புதற்கு உளதோ என்றனள். வசிட்டன் "நல்லறமனைவியே அனையாள்" என்ற பாரதக்கவி ஒன்றை நன்கு கவனியுங்கள். இச்செய்யுளின் முடிவான, கருத்துரையாவது என்னவென்றால், ஆண்சாதியார்கள் உள்ள நாள்வரை பெண்சாதியார்கள் எவரையும், புவனபோகாதி விஷயங்களில் இத்தகையாரென தனு, கரண சுத்தியாக நம்பமுடியாது என்பதே. ஆனல், நமது, பூர்வீகப் பெரியோர்களோ ஆண்வர்க்கத்தாரையே இல்லாமற் செய்து விடுவதென்றால் நம்மாலாகாதகாரி

யம், ஏனைய, எத்தகையவாண்மக்களும், நமது, மாதர்களை விரும்பாதிருக்குமாறு நாம் செய்துகொள்ளுவதே தகுதியெனக்கண்டுபிடித்துச் செய்துகொண்டார்களாமென்க. இக்கால தருமம் நோக்கி நாம் திருத்தியமைத்துக் கொள்ளவேண்டிய விஷயங்களைத் திருத்தி அமைத்துக்கொள்வதில் நாம் ஞாபகம் உடையவர்களாயும், சக்தியுடையவர்களாயும் இருத்தல்வேண்டும். மணமக்களிருவரையும், இரதம், அல்லது சகடம், சிவிகை முதலியவைகளில் வைத்து நகர்வலஞ் செய்யவேண்டுவதும், இக்காலத்து நாகரீகமான முதல் விஷயமாம். இன்னும், நமது மரபின் பூர்விகப் பெரியார் பொதுக் காரியத்தில் எத்துணைப்பற்றுடையவர்களாய் இருந்து வந்திருக்கிறார்கள். என்பதைச் சிறிது நன்குகவனித்துப் பாருங்கள். அவர்கள் தங்களின் மகாசமுகமானது, எத்துணையோ அளவுசங்கையற்று பல்லாயிரங்குடும்பங்களாகப் பலுகிப் பெருகவேண்டுமென்ற பேரவாவோடு கூடினவர்கள் என்பது அவர்கள் நிருமாணித்திருக்கும் ஸ்விகாரச் சட்டம் ஒன்றே போதிய சான்றுபகருமன்றோ? ஆகமசம்பந்தம், ஆலயத்திருப்பணி, அறக்கூழ்ச்சாலை, கல்வியபிவிருத்தி, துறவாச்சிரம தருமம், முதலிய எத்துணையோ பேரறச் செயல்களில் பெரும்பற்றுடையவர்களாயிருந்தும், சந்ததியற்றோர் செல்வம் ஒருங்கையும், அவ்வவர்களின் மனோவிருப்பம்போன்று ஏதேனும் ஓர் தருமக்காரியத்துக்கு எழுதிவைத்து விடல்வேண்டும். அஃதே உத்தமச் செய்கை யென ஓர் சட்டத்தை நிருமாணித்து வையாமல் தங்கள், தங்களின் கோவிற் கொடிவழிகளைச் சார்ந்த ஓர் குடும்பத்திற் பிறந்த பிள்ளைகளுள் ஒன்றைத் தங்கள் குடும்பத்துக்கும் தமதரும் புதல்வராகப் பெற்றுக் கொள்ளல் வேண்டுமென்ற சட்டம் ஒன்றையும் பிறப்பித்து, அச்சட்டத்தை வெகு சுலபமாக, அமுலுக்குங் கொணர்ந்து விட்டார்கள். ஆகவே, அவர்களின் ஆழ்ந்தகருத்தானது, எத்துணை தூரம் மேனோக்கிச் சென்றிருந்ததென்பதையும், நாம் கணக்கெடுத்து நன்குணர்வோமாகுக. நமது மரபின்மாட்சியுள் இஃதும் ஒன்றாம். அவர்கள் ஊன்றிவைத்த விதைகளொருங்கும் ஒன்றுகூட வீண் போகாமல், மிக நன்றாக முளைத்து, தக்கவாறு கிளைகளோடும் வளர்ந்து, இக்காலம் நல்லதருக்களாகி, கனிகளாகிய தக்கபலன்களை தந்துகொண்டிருக்கிறது. அப்பலன்களை அநுபவிக்கக் கொடுத்துவையாத சிலர், அவ்விருக்ஷங்களை வேரோடு பிடுங்கி வெட்டி எறிந்துவிடவும் பார்க்கிறார்கள். என் செயலாம் அவர்களின் தெரியாத் தன்மையே காரணமாம். எல்லாம் வல்ல நமதிறைவன் திருமகன் தெரிவிப்பானாகுக. மேலும், எந்தவிதமான தொழின் முறைகள் நடாத்துமிடத்தும், குடும்ப வியவகாரங்களிடத்தும், எத்தகைய அறப்பெருஞ்செயல்களிடத்தும், எத்தகைய மங்கலக்காரியங்களிடத்தும், அஃதாவது, சுருங்கச் சொல்லுமிடத்துச் செலவு செய்யு மார்க்கங்களில் கூடுமானவரை செட்டாகச் செய்வதுதான் நமது, மரபார்க்குரிய மரபாம். அக்காரணம்பற்றியே

"செட்டியார்" என்னும் பட்டப்பெயர் கெழ்ந்ததா மென்றும் பல்லோ ரபிப்பிராயப் படுகிறார்கள். இக்காலம், நமது, மரபைச்சார்ந்த சில்லோர் தாங்களும் செட்டிப் பிள்ளைகள் தாமென்பதைச் சிறிதும் நினைக்காமல் முற் றும் மறந்தவர்களாய், "ஆகாறளவிட்டிதாயினுங் கேடில்லைப் போகாற கலாக் கடை" "ஆனமுதலுக்கதிகஞ் செலவானல் மானமழிந்து மதிகெட் டுப்போன திசை எல்லார்க்குங் கள்ளனுப் ஏழ்பிறப்புந்தீயனுப் நல்லார்க்கும் பொல்லனும் நாடு" "எண்ணித்துணிவது கருமம் துணிந்த பின் எண்ணுவ மென்பதிழுக்கு" "பொருளாட்சி போற்றுதார்க்கில்லை" "கைத்துடையான் காற்கிழொதுங்குங்கடன் ஞாலம்" "பூரியர் தமைவேந்தாக்கும் புவிபுரப் பிக்கும் துய்க்குஞ் சீரியவுண்டி சேர்க்கும் தேவர்தம் முலகம் போக்கும் காரியபணைத்துங் கூட்டும் கருதலர் தம்மை வாட்டும் கூரியதிதன்மேலில்லை தொழும் பொனீர் கொண்மினென்றார்" "கல்லானே யானாலும் கைப்பொரு ளொன்றுண்டாயின் எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வர் இல்லானை இல் லாளும் வேண்டாண் மற்றீண்டெடுத்தகாய் வேண்டாள் செல்லாதவன் வாயிற் சொல்" "இல்லாரை யெல்லாருமெள்ளுவர் செல்வரை எல்லாருஞ் செய்வர் சிறப்பு" இத்தகைய அருமருந்தன்ன தேவர் திருவாக்குகளையும் ஏனைய வேதவாக்கியங்களையும், ஒரு சிறிதளவுகூடத் தெரிந்துகொள்ளா மலும், தங்களின் நிலைமை இன்னதுதானெனவுணர்ந்து தெரிந்துகொள் ளாமலும், தங்களுக்குப் பொருள் வரும் மார்க்கங்கள் இஃதாக்கும் என்ற றிந்து கொள்ளாமலும், மனம்போன போக்குகளிலெல்லாம், அகாவசிய மாகப் பெரும் பொருள்களை விரையஞ் செய்து வருகிறார்கள். "முட்டிகை போல முனியாது வைகலுங் கொட்டியுண்பாருங் குறடுபோற்கை விடுவார்" என்பது, இவர்கள் ஞாபகத்தில் இல்லை. மேலும், "நாம் யார்" நமக்கு இப் பெரும் பொருட்குவையல்கள் எங்கே இருந்து வந்தன, எவர்கள் கொணர் ந்து தந்தார்கள், நாம் எப்படிச் சம்பாதிக்கிறோம், நமக்குள்ள பத்து லக்ஷ ரூபாய்களும், எங்கெங்கே எல்லாம் யாராரிடங்களிலெல்லாந் தங்கியிருக்கின் றன, அவைகளை முறைபாகப் பாதுகாத்து வளர்த்துத் தருபவர்கள் யார், யார், சாதாரண நமது, சகோதரர்களுக்கும் நமக்கு மிடையே காணப் படும் பேதங்கள் என்ன, என்பனவாய பல விஷயங்களையுஞ் சிறிது குந்தி யிருந்து, ஆலோசிக்கத் தலைப்படுவார்களானல், ஒரு பைசா அளவிற் கூட அகாவசியமாகச் செலவு செய்யத்தலைப்பட மாட்டார்கள். இவ் வருமைச் சகோதரர்களுக்கு முதன் மந்திரியா யிருப்பவர்கள் ஒருங் கும் "என்ஸ்வாமி! இக்கற்பாரையில் கத்தரிகாற்று மிகநன்றாகமுளைக்குமே அன்றோவென்னின்? அடடா! இதற்கென்ன ஆக்ஷேபம், கொத்தாயிரம், குலையாயிரமாகக்காய்க்குமே" என்பவர்களாயிருக்கிறார்கள், "இடிப்பாரை யில்லாத வமராமன்னன் கெடுப்பாரிலானுங் கெடும்" "அழச்சொல்லிபல்ல திடித்து வழக்கறிய வல்லார் நட்பாய்ந்து கொளல்" ஆகிய இவ்விரண்டு

குறட்பாக்களும் அவர்களுக்குமிகத் தெளிவாகநன்குவிளங்கவும், "கற்கக்கச டறக்கற்பவைகற்றபின், நிற்கவதற்குத்தக" என்பதற்கிணங்க நின்றொழுக வும், எல்லாம்வல்ல நமதிறைவன் திருவருள் சுரப்பானாகுக. ஆகவே, நமது, மரபார்க்குச் செட்டுத்தான், முதன் முதன்மரபாம் என்பதை நமது, சமுகத்தைச்சார்ந்த ஒவ்வொரு சகோதர சகோதரிகளும், நன்குணர்தல் வேண்டும் இனி, கண்டீர்! பெரிய வீடுகளாகக் கட்டிவாழ்தலும் நமது, மரபார்க்குரியவழக்கமாம். 'கட்டிய வீட்டுக்கு எட்டுவக்கணை'' என்றபழமொழிக்கிணங்கசில, சிற்றறிவாளர்களும், சிலசிறுசெல்வவந்தர்களும், சிலதரித்திரர்களும், பகற்கொள்ளைகாரர்களும், பொறாமைகொண்டவர்களும், அணுவளவுகூடமுன்பின் யோசித்துப் பார்க்காமலும், எதற்காக இப்படிக்கட்டுகிறார்கள், அவர்களுக்கென்னை பேராறிவாண்மையில்லையோ, கல்வியறிவில்லையோ, பெரும்பாடும் பெருங்கட்டமும் பட்டு நாம் தேடிய பொருளாயிற்றே என்பது அவர்களின் நுட்பமதியில் தோன்றாததா நமக்குத்தோன்றப்போகிறது, அவர்களுக்குவேண்டும் அளவுக்குமிகையாக ஏன்கட்டுவார்கள்? அவர்களின் குலாசாரதருமங்கள் நமக்குஎப்படிவிளங்கும், இலக்ஷக்கணக்குகளிற்செலவுசெய்து குபேரநகரங்களா மென்கக்கட்டியபெருங்காரியமானகட்டிடங்களைப்பார்த்து ஒன்றுக்கும் உதவாத நாம் நட்டணைகூறுவது நமக்குத்தகுதியும் அழகுமாகுமா, அவர்களுடையமனமானது சிறிது சலனப்படுமாறு நாமேன் பேசுதல் வேண்டும் என்பனவாய பலமார்க்கங்களையும், சிறிது கவனித்து எண்ணி நோக்காமலும், தங்களின் வாத்தைவாயைப்பிளந்து, அடடா! இஃதென்னை, இப்பாழ்ங்காட்டில் இப்படிப்பொருளை விரையமாக்கலாமா இஃதென்னவீடு, இவ்வளவு பெரியகட்டிடம் எதற்காக வேண்டும், "சிறுகக்கட்டிப் பெருகவாழ்" "இடம்படவீடு எடேல்" என்பது மன்றோ பழமொழி, இஃதென்னபைத்தியகாரக் கொள்கையாயிருக்கின்றது என்றும், இன்னும் இவைபோன்ற தங்களுக்கவசியமல்லாத பலவார்த்தைகளையுஞ் சொல்லித் தங்களைப் பெரியராகத்தாங்களேநினைத்துக்கொண்டு,நகைக்கவுஞ்செய்கிறார்கள். அவர்களின்மதியீனத்தைப்பற்றி இவ்வங்கத்தில் வரைதல் பொருந்தாமைகண்டு விடுத்தாம். நமது, மரபாரைச்சார்ந்த நம்முடைய பெரியோர்கள் அறிவின்மையால்இத்துணைப் பெரியகட்டிடங்களைக்கட்டவில்லை. தங்களுடையகௌரவமும், பெரியதன்மையும் செல்வச்செழுமையும், பெரும்புகழ்நிலையமும்எந்தனாளும், மங்காமல் நிலைநிற்கவேண்டுமாற்றையும், எத்துணையோ ஏழைச்சனங்கட்குப்பிழைப்பும் ஆயிற்றே என்ற பேரறச்செயலையும் நினைந்து, செல்வம் நிலையாமையையும் உணர்ந்து, எத்துணை உயர்ந்த பெரிய செல்வவந்தர்களும் கண்டுவியப்படையத்தகுந்த நன்னிலைமையிலும், வன்னிலைமையிலுங்கட்டிவந்தார்களாம் என்க. அவர்கள் தங்களின் சுதேசத்தில் பெரும்பற்றுடையவர்களாம் என்க. தற்காலம், மதுரைநகரத்துப்போனதுபோக " மீதமாயிருக்கும் திருமால்நாயக்கர்மால் " ஒன்றே போதிய

சான்று பகருமன்று? அறிவிலார் கூற்றை யகலத் தள்ளுதலே நமதுமரபாரின் முதற் கடமையாம். மேலும், நமது, மரபார்க்கு, எக்காரணம்பற்றியோ பெண்களுக்கு, முட்டுப்பாடுறுங்காலங்கள் நேர்படுமாயின், "செட்டிமக்கள் வாசல்வழிசெல்லோமோ, செக்காரப் பொட்டிமக்கள் வாசல்வழிபோ கோமே—முட்டிபுகும் பார்ப்பார் அகத்தை எட்டிப் பாரோமே, எந்நாளும் காப்பாரே வேளாளர்காண்" என்றும், "மேழிபிடிக்குங்கை, வேல் வேந்தர் நோக்குங்கை, யாழிதரித்தேயருளுங்கை-சூழ்வினையை நீக்குங்கை, என்றும் நிலைக்குங்கை, நீடூழி காக்குங்கை, காராளர்கை" என்றும், "காலப்புயல் நிகர் காராளர்தம்மைக்கடலுடுத்த தாலக்குலமங்கை பெற்றதனுற் சதகாலமுமால் கோலத்திருமுகத்தாலே முகந்தனன், கூடலிலே சூலக்கரப்படையான் தலைமீதுசுமந்தனனே" என்றும், மோட்டெருமை வாவிபுக்கு முட்டுவரால் கன்றென்று வீட்டளவும் பால்சொரியும் வெண்ணெயே—நாட்டில், அடையா நெடுங்கதவும் அஞ்சலென்ற சொல்லும் உடையான் சடையப்பன் ஊர்" என்றும் காணப்படுகிற பாசுரங்களைப் போன்று, இன்னும், எத்துணையோ கம்பர் முதலிய அருட்பெரும் பாவலர், நாவலர், புலவர், சிவஞான யோகச்செல்வர் முதலிய எத்துணையோ பேராசிரியன் மார்களாலே போற்றிப் புகழ்ந்து கொண்டாடப் பெற்ற "பூவைசியர்" ஆகிய வேளாளர்குலத்திலே பெண்களை விவாகஞ் செய்துகோடலும் நமது, மகாசமுகத்துக்குரிய பூர்வீகமாயுள்ள மரபேயாகும். அக்காரணங் கொண்டுதான், நமது, மரபார்க்கு "உபயகுல பூபாலவைசியர்" என்றும், "கங்காகுலவைசியர்" என்றுங் காரணப்பெயர்கள் காணக்கிடக்கின்றன. நமது, பூர்வீக மரபியன் முறைகளைச்சிறிதும் நழுவவிடதாவண்ணம், கைபாண்டுவரவேண்டுவதும், நம்முடைய முதற் கடமையேயாகும். மேலும், நண்ப! "கொண்டபடிபோலும் விலைபேசி லாபஞ் சிறிது கூடிவர நயம் உரைப்பார்; கொள்ளும் ஒரு முதலுக்குமோசம் வாராதபடி குறுகவே செலவு செய்வார்; வண்டப் புரட்டர் தாம் முறிதந்து பொன்னடகுவைக்கினும் கடன் ஈந்திடார்; மருவு நாணயமுளோர் கேட்டனுப்புகினுமவர் வார்த்தையிலெலாங் கொடுப்பார்; கண்டெழுது பற்றுவரவினின் மயிர் பிளந்தே கணக்கிலணுவாகிலும் விடார்; காசு வீணிற் செலவிடார்; உசிதமானதிற் கனதிரவியங்கள் விடுவார்; மண்டலத் தூடு கனவர்த்தகஞ் செய்கின்றவணிகர்க்கு முறைமையிதுகாண்; மயிலேறி விளையாடுங் குகனே புல்வயனீடு மலைமேவு குமரேசனே". இப்பாவின் கருத்துக்க ளொருங்கும் நமது, மரபார்க்கே உரியனவாகும் என்பதை நாம் நன்குணர்தல் வேண்டும். மேலும் நமது, பூர்வீகப் பெரியார் "கோயிலில்லா வூரிற் குடியிருக்கவேண்டாம்" என்றும், "திருக்கோயிலில்லாத திருவிலூரும், திருவெண்ணீறணியாத திருவிலூரும், பருக்கோடிப் பத்திமையாற் பாடாவூரும், பாங்கினொடு பலதளிகளில்லாவூரும், விருப்போடு வெண்சங்கம் ஊதாவூரும், விதானமும் வெண்கொடியு மில்லாவூரும், அருப்போடு

மலர் பறித்திட்டுண்ணுரும், அவையெல்லாம் ஊரல்ல அடவிக்காடே'' என்றும், "கண்ணுதல் ஆலயம் நோக்குங் கண்களே கண்கள் ; கறைக்கண்டன் கோயில்புகுங் கால்களே கால்கள்; பெண்ணொரு பாகனைப் பணியுந் தலைகளே தலைகள் ; பிஞ்ஞகனைப் பூசிக்குங்கைகளே கைகள்; பண்ணவன் தன் சீர்பாடும் நன்னாவே நன்னா; பரன்சரிதையே கேட்கப்படுஞ் செவியே செவிகள்; அண்ணல்பொலங் கழல் நினைக்கும் நெஞ்சமே நெஞ்சம்; அவனடிக்கீழடிமை புகும் அடிமையே அடிமை'' என்றும், "முரிந்து வீழ்ந்தன, வெடித்தன, உடைந்தன, முதிய நெரிந்த வாகிய கோபுரம் நெடுமதில் பிறவும், தெரிந்து முன்னையிற் சீர்பெறப் புதுக்குவோர் பண்டு,புரிந்துளோர் பெறும் புண்ணியம் நான் மடங்குறுவார்'' என்றும், "மெய்யன் ஆலயப் பணியுடல் விருத்தியைக்குறித்துச் செய்துளோர் பெறும் பயனும் ஒண்மகமெலாஞ் செய்தார், எய்துமாறரி தென்றிடில் உறுதிபோவடியற்றும், உய்தியாளருக்கு உரைத்திடவேண்டுவது எவனோ'' என்றும், "எட்டுச் செங்கலினுயினும் ஈர்ம்புனல் வேணி, வட்டச் சென்னியான் ஆலயத்திருப்பணிவகுத்தல், ஒட்டிப்பெற்ற இவ்வுடற்பயனுவ தென்றுணர்வீர், அட்டுத் தீவினை ஐந்தவித் தொழுகும் அந்தணர்காள்'' என்றும், காணப் பெறும் வேதவாக்கியங்களை நன்குவுட்கித் தெள்ளத் தெளிந்து உணர்ந்த பேரறிவாண்மையும், சைவசமயாபிமானமும் உடைய அருந்தவப் பெருந்தொண்டர்களாய் ; நமது, தேயத்து சேரர், சோழர், பாண்டியர்கள் என்னும் மூவேந்தர்கள் காலத்தும், அவர்கட்கு முன்னுள்ள பூர்வீக அரசர்கள் காலத்தும், சைவ, வைணவ ஆலயத்திருப்பணிகள், அவ்வக்காலத்து அரசர்களாலே மிகவுஞ் சிறப்பாகப் பரிபாலிக்கப் பெற்றுவந்தன என்பதை நன்கு தெரிந்தவர்களாய் ; அங்ஙனஞ் சிறந்தன ஆயிரத்தெட்டுச் சிவாலயங்களும், நூற்றெட்டு வைணவாலயங்களும், எனச்சந்தேதக விபரீதங்களறக் கண்டுணர்ந்தவர்களாய்; அப்பூர்வீக, மன்மக்களும், தங்கட்கு வரும் வருவாயெல்லாம் கடவுள் உடைமையாகவே கொண்டு, அக்கடவுளின் குற்றேவலாளிகளுள் தாமும் ஒருவராகக் கருதி எந்தக் காலமும், கடவுள் பக்தி யுடையராய், பூஜாகைங்கர்யங்களைச் சிறிதும் வழுவாது நடத்தித் தங்களின் பொருள்களையும் ஆலயங்களிலே சேமித்து வைத்தும், இந்த ஆலயங்கள் மட்டுமே எந்தக்காலத்தும் அழியாமல் விளங்கத்தக்கன வென்றும், நமது, பாரதகண்டத்துடைத்தான நமது, சைவசமயத்தை சார்ந்த சகல வருணத்தார்க்கும், இச்சிவாலயங்களும், இவைகளைச்சார்ந்த இலக்கக்கணக்குகளிலே உள்ளபெரும்பூச் சொத்துக்களும், கைங்கர்யாதிகளால் நிகழும் பல நன்மைகளுமே பொதுச் சுதந்தரமாக நின்று நீடூழிகாலம் திரிபின்றி இலங்கித் துலங்கித் தனுகரணபுவன போகாதிகளைப் பயக்குமா மென்றும், ஆகலின், அவ்வாலயங்களில் அநேக சரித்திரங்களையும் "கல்வெட்டுச், செப்பேடு'' முதலிய சில சாஸனங்களாக எழுதிவைத்தார்கள் என்றும், இங்ஙனம், சில சாஸனங்கள் எழுதிவைத்

திருப்பதனுற்றுன், நமது, முன்னைய பெரியோர்கள் சரிதங்கள் சிலவேனும் இக்காலம் நாம், தெரிந்துகொள்ளாத் தக்கனவாய் இருக்கின்றனவென்றும், நமது, வேதாகம புராணேதிகாசங்களிலே நன்கு தேர்ந்து தெளிந்த தெரிவினர்களாய்; இக்காலம், அத்தகைய மன்மக்களாவார் ஒருவருமின்மைகண்டவர்களாய்; அக்காலம் சமணசமயம் வளர்ந்தன போன்று, இக்காலம், "இயேசுகிறிஸ்து" மதமானது, அரசாங்கம் பெற்று சர்வ சுதந்தரத்தோடு பாரத கண்டமாகிய கற்பகதருவின் கண் புல்லூறுபோன்று, படர்ந்துவருவன கண்டு அஞ்சி ஏ! ஏ! இஃதெவன் இனி நாம் வாளாவிருத்தல் தகுதியன்று, வாள்போன்றிருத்தலே இக்காலம் நமக்குத் தகுதியாமென்று, தங்களின் உள்ளத்து நன்கு எண்ணி நோக்கினவர்களாய் இச்சிவாலயங்களையும், அவைகளின் பூச் சொத்துக்களையும், அன்போடு பாதுகாக்கும் உரிமைகளையும், அவைகளைச்சார்ந்த சகல திருப்பணிகளைச் செய்து முடிக்கவேண்டும் பெருங் கடமைகளையும், இன்னும், நமது பூர்வீக சத்தறத்து ஆறுகளையும், முன்னிருந்த நிலைமையில் நின்றும் எத்துணையோ பன்மடங்கு செழித்தோங்கும் வண்ணஞ் செய்யவேண்டும் பல கடமைகளும் "நம்முடைய மகுடதன வைசிய மரபார்க்கே" உரிமையாகட்டு மென்று, சிறிது ஏறக்குறைய ஒரு நூறு ஆண்டுகளுக்கு முன்னரே இருந்து உரிமையாக்கிக் கொண்டார்களாமென்க. ஆகவே அதினின்றும், நாட்டுக்கோட்டை நகரத்தார்களாகிய, நம்முடைய மரபார் ஒருவர்பின் ஒருவராய், நமது, சமய குரவர்களாலே பதிகம் பெற்ற பூர்வத்தினும் பூர்வீகமாயுள்ள அனேக பல சிவாலயங்களைப் புதுக்கியும், அவைகளின் சொத்துக்களைப் பாதுகாத்தும், அநேக புதிய சிவாலயங்களை கருங்கற்பணிகளாகக் கட்டியும், நமது, சைவசமயத்தைச் சார்ந்த ஒவ்வொரு அறத்து ஆறுகளினும், தாங்கள் தாங்களாகவே வலிதாக நுழைந்து "என் கடன்பணி செய்து கிடப்பதே" என்பதற்கு இணங்க பணி செய்து வருகிறுர்களா மென்க. ஆகவே நமது மரபார்க்கே சிவாலயத்திருப்பணிகள் சுதந்தரமாய் போயிற்று. அஃதாவது, சிவாலய திருப்பணிகளும், ஏனைய பேரறச் செயல்களும், நமது, சைவசமய பரிபாலனமும், சென்ற காலத்து, அரசர்களுக்கு, உரியதாயிருந்தனபோன்று இக்காலம் நமது மரபுக்கே உரியதாம். இதுகாறும், இவ்வுலகத்து, நமது, மரபார்களால் இத்துணை கோடிரூபாய்கட்கு திருப்பணிகள் நடைபெற்றிருக்கின்றன வென்பதும், அவ்வாலயங்கள் காணப்படும் நகரங்களின் பெயர்களும், அத்திருப்பணிக் கர்த்தர்களின் பெயர் விலாசங்களும், காலவரையறைகளும், ஏனைய பேரறப் பணிகளையும், இந்நூலச்சிடுவித்து முடிந்தவுடன் அச்சாகப் போகும் "ஸ்ரீ நாட்டுக்கோட்டை வைசிய மகாசமுகத்தின் அறப்பெருஞ் செயல்கள்" என்ற புத்தகத்து, விரிவாகக்காணலாம். நமது, மரபார்க்குரிய தேசியபாஷை நம் தாய் மொழியான செந்தமிழ்ப்பாஷையேயாம். சமயம் சைவசமயமேயாம். நமது, மரபைச்சார்ந்த ஒருவர் எத்துணை

வெறுமையானகாலத்தும், எத்துணை மாறுதல்களான காலத்தும், தங்களின் வருணத்தாரல்லாத, ஏனைய வொருவரின் கீழ்நின்று அவரேவும் ஏவலைப்புரிகிறதில்லை. மேலும்,எத்துணைச்சிறந்த உத்தியோகமே எனினும், அன்னியவருணத்தார் ஒருவருக்கடங்கி அவர்க்கேனும், அவர் தம் சட்டங்கட்கேனும், மாதவேதனம் பெற்று அடிமைத் தொழில் புரிதல் நமது, மரபார்க்கு உரியதன்றாம். இரத்தினம், சுவர்ணம், ஆடை நூல், வெள்ளி, ரொக்கக் கொடுக்கல் வாங்கல்கண் முதலிய வரத்தகத் தொழில்களே நமது, மரபார்க்கு உரியதாம். சிறிது, கவனிக்குமிடத்து, பெருந்தன்மையான வரத்தகத் தொழில்கள் ஒருங்கும், காலக்கிரமங்களுக்குத் தக்க தக்கவாறு கொண்டு நடாத்தும் எந்தவிதமான தொழிற் சாலைகளும் நமது மரபார்க்கும் உரியனவேயாம். நமது மரபாரைச் சார்ந்த எந்த எந்த வியவகாரங்களையும், நமது, வகுப்பின் பெரியவர்களாலேயே தீர்த்துக்கொள்ளுகிறதென்ற நமது, மரபிற்குரிய சட்டம் ஒன்று மாத்திரம் சற்று ஏறக்குறைய ஐம்பது, அறுபது ஆண்டுகளாக, இக்காலம் பெரும் பான்மையும் நின்று அரசவகுப்பார் நியாயத்தலங்கட்குச் சென்றுத் தன்னுடைய மானுபிமானத்தை இழந்து, அஞ்சி, நடு நடுங்கி, அளவுக் கெஞ்சிய பொருள் விரயத்தோடும், மனவருத்தத்தோடும், கைகட்டி, வாய்மூடி, அணுவளவுஞ் சுதந்தரமற்ற உத்தரஞ் சொல்லித் தீர்த்துக்கொண்டு வருகிறது. பனையோலையிற் கணக்கெழுதி வரலும் நமது மரபுக்குரிய வழக்கமாம். எத்துணை தூரம் மேனாட்டு நாகரீகங்கள் சிறந்து நிகழ்ந்து வளரினும், அவைகள் நமது மரபார்க்குரியவைகளன்றாம். ஆண்மக்களுக்கு இரண்டு மூன்று தரம் விவாகஞ் செய்வதுபோன்று, பெண்மக்களுக்குஞ் செய்தல் நாளிதுகாறும், நமது மரபிற்குரிய வழக்கமாக வரவில்லை. புலாலுண்ணாமையே நமது, மரபிற்குரிய வழக்கமாம். இக்காலம், பெரும்பான்மையோர் புலாலுண்பதற்குக் காரணம் யாதெனின்? நமது, மரபார் இப்பாலைய நாட்டில் வந்து குடியேறியதின் பின்னர், சின்னக்கருப்பன், பெரியகருப்பன், நொண்டிக்கருப்பன், சங்கிலிக்கருப்பன், காளி, காட்டேறி, இயைக்கி முதலிய இந்நாட்டுத் தேவதைகளையே தங்களின் கிராமதேவதைகளாகக் கொண்டொழுகும், கள்ளர், மறவர், வல்லம்பர், வலையர், வேடர், குறவர் முதலியவர்களோடு கொண்ட பழக்க வழக்கங்களே, கோழிக் கறி, ஆட்டுக்கறி, மீன்கறி, முயற்கறி, மான்கறி முதலிய மாமிசாதிகளின் வாசனையைக் காட்டிக் கொடுத்து நாளாவட்டத்தில் உண்ணச்செய்து விட்டனவாம். இஃதொன்று இடைக்காலத்தில் நிகழ்ந்த சம்பவந்தான். இக்காலம் அவ்வூன் உண்ணலை நிறுத்திவிடவேண்டுவதும் நமது, மரபாரின் முதற்கடமைதான். என்றால், அதற்கொரு இலகுவான மார்க்கம் ஒன்றுளது. அஃதாவது, குழந்தைகள் பிறந்து, அக்குழந்தைகள் உண்ணத் தொடங்கும் நாண்முதற் கொண்டே ஞாபகமாக விருந்து, வெகு சாக்கிரதையுடன் கொடுக்காமற் சிறிது

காலம் கிறுத்தி விடுவோமானல் மிக வொழுங்காக புலாலுண்பது நின்று போம். அப்பாவை, அப்பச்சியென்றும், அம்மையை, ஆத்தாளென்றும் அக்காளை, ஆச்சியென்றும், பாட்டியை ஆயாளென்றும், பாட்டனை ஐயா வென்றும், அண்ணன் மனைவியை, "மதனி" என்று சொல்லாமல் "அண்ணன் பெண்டிர்" என்றும், அம்மான் மனைவியை, அத்தை என்று சொல்லாமல் "அம்மான் பெண்டிர்" என்றும், தம்பியை அம்பியென்றும், எம்பி என்றும், முறைப் பெயரிட்டு வழங்கனும், நம்முடைய மரபுக்குரியதாம். நண்ப! நமது, மரபார்க்குரிய பூர்வீகச் சரித்திரங்களைப்பற்றி, நமது மரபார், இப்பாண்டி நாட்டுக்கு வந்ததன் பின்னர், சாபாநுக்கிரக சீலரான பாடுவான் முத்தப்ப செட்டியாரவர்களின் "திருமுகவிலாஸம்" என்னுஞ் சிறு நூலொன்றிற் சிறுகவும், பூங்கொன்றைவேலங்குடி சிலா சாஸனத்துக் கேற்பத் துளாவூர், மடத்திலிருந்த புத்தகத்தைக் கொண்டும், தேவ கோட்டை வீர. லெ. சிங்கயச்செட்டியாரவர்கள், மெ. அரு. அரு. இராமநாதச் செட்டியாரவர்கள், அள. அரு. ராம. அருணசலம் செட்டியாரவர்கள், ஆகிய, இம் மூன்று, மன்மக்களாலும் பரிசீலிக்கப் பெற்று "தனவைசியராகிய நாட்டுக் கோட்டை நகரத்தார் சரித்திரம்" எனவோர் திருப்பெயர் புனைந்து, தஞ்சாவூர், சதாவதானம் பிரம்மஸ்ரீ சுப்பிரமணிய ஐயரவர்களால், தஞ்சை தேசாபிமானி அச்சுக்கூடத்தில் ஆங்கிலம், ஆயிரத்தெண்ணூற்றுத் தொண்ணூற்று நான்காமாண்டில் பதிப்பிக்கப்பெற்று வெளிவந்திருக்கிறது. பின்னர், நமது, மரபார் சீர்திருத்தங்களைப் பற்றி மகிபாலன்பட்டி மு. கதிரேசச் செட்டியாரவர்களால் ஒரு சிறு புத்தகம் ஒன்றும், அவர்களின் தம்பி, மு. சின்னய்யா செட்டியாரவர்களால் ஒருபுத்தகமும் வெளியாகி இருக்கின்றன. அதன் பின்னர், காரக்குடி ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியாரவர்களால் "நாட்டுக்கோட்டை நகரத்தார் என்னும், மகுடதனவைசியரின் மரபுவிளக்கம்" எனச் சிறுபுத்தகம் ஒன்றும், வெளிவந்திருக்கின்றது. இதுகாறும், எத்துணை நூற்கள் நமது, மரபைப்பற்றி வெளிவந்திருப்பினும், இனி, மேல் எத்துணை நூல்கள்வரினும் நமது, மரபார்க்குப் பூர்வீகச் சரித்திரம் என்பது, மேற்கண்ட "தனவைசியராகிய நாட்டுக்கோட்டை நகரத்தார் சரித்திரம்" என்னும் நூல் ஒன்றுதான். அதுதான், நமது, மரபார் பூர்வீகச் சரித்திரங்காண்டற்கு முதனூலுமாம். நிற்க. "நான் கிழவி, என்மகள் குலி பங்கிரண்டு விடேன்" என்ற பழமொழிக்கிணங்க, "ஓங்காரங்கண்டு உள்ளே தமையுணர்ந்து, ஆங்காரம் விண்டு அருட்கொழித்துத்—தேங்காமல், பாரக்குடியாளர் பலமகுட மாவணிகர் காரக்குடி நகரங்காண்" என்று, ஓழச் செவற்பட்டி பாடுவான் முத்தப்ப செட்டியாரவர்களால் அனுக்கிரக சீலம்பெற்ற ஓங்காரைமாநகர், ராம. சொ. சொக்கலிங்க செட்டியாரவர்கள், நமது, மரபாரின் சரித்திர மார்க்கங்களைப் பற்றியும், சீர்திருத்தமார்க்கங்களைப்பற்றியும், நமது, மகாசமுகத்தைச் சார்ந்த அறிவாளிகளாயுள்ளார்

சிலர் வரைந்து வைத்திருக்கிறார்களே, அவர்கள் யாவரும், இனிவருங்காலத்து நமது, மரபைச்சார்ந்த ஒவ்வொருவரானும் புகழ்ந்து, கொண்டாடப் பெறுவார்களன்றோ? நமக்கும் ஏன் அதிற்பங்கில்லாமற் போதல் வேண்டும்? நாமும், அவர்கள் மாதிரி ஓர் அறிவாளியன்றோ? "ஸ்மிருதி, புராணம், இதிகாசம், சித்தாந்தம், வேதாந்த" மென நமது, செந்தமிழ்ப் பாஷையை நாமும் ஓர் கிண்டு, கிண்டுகின்றோம் அன்றோ? நாமும் ஓர் கிழவராய் விட்டோமன்றோ? நம்மைப் பார்க்கினும், கல்வியறிவிற் சிறந்தாரும், ஆராய்ச்சி வன்மையிற் சிறந்தாரும், சுத்தாத்துவித சைவசித்தாந்த நிபுணரும், நல்லொழுக்க ஆசாரசீலரும், நமது, மரபைச்சார்ந்தார் ஒருவர் நமது காரைமாநகரத்தில் வேறுயாவர் இருக்கின்றார்? நம்முடைய கிழத்தன்மையையும், அறியாத்தன்மையையும், அழுக்காற்றையும், யாவர் கண்டு கொள்ளப்போகின்றார்? நமது, மரபியன் முறைகளைச் சார்ந்த பூர்வீகச் சரித்திரத்தையும் ஓர் கிண்டு கிண்டிவைப்போமென்று நல்லுணர்ச்சியற்று, நாட்டுக் கோட்டை நகரத்தாரென்னும், மகுடதனவைசியரின் "மரபுவிளக்கம்" எனச்சிறு புத்தகம் ஒன்று, ஏதோ ஒருவாறு வரைந்து வெளிப்படுத்தியிருக்கிறார்கள். இருபத்தைந்து, நான்கு, ஆயிரத்துத் தொளாயிரத்துப் பத்தொன்பதில் வெளியான அப்புத்தகமானது, அவர்களின், மடத்தன்மையை நன்கு தெளிவாக விரித்துக்காட்டுகின்றது. அஃதாவது, அப்புத்தகம், நான்காம்பக்கத்து, "நான்காம் வருணத்துப் பெண்களை விவாகஞ் செய்து கொண்டு" என்று, இப்பெரியார் விளக்கிய, துளக்கமற்ற விளக்கத்தை நண்பர்காள்! சிறிது நன்கு கவனியுங்கள். நான்காம் வருணத்தார் என்பவர்கள் யார் சூத்திரர்களேயாமன்றோ? சூத்திரர்கள், என்றால் அவர்கள் யார்? வேடரா? வில்லியரா? மறவரா? கள்வரா? அகம்படியரா? இடையரா! பள்ளரா? பறையரா? வலையரா? வல்லம்பரா? சாணாரா? சக்கிலியரா? கைக்கோளரா? புலையரா? பரவரா? தொம்பரவரா? நமது, பூர்வீகப் பெரியார் மேற்கண்ட எந்த வருணத்தாரிடம் பெண்கள் விவாகஞ் செய்துகொண்டார்கள் என இவர்க்கு விளங்கிற்று? நமது, பூர்வீகப் பெரியார் "வைசியவகுப்பாருள் ஒருபகுதியாரான பூவைசியராகிய "வேளாளவகுப்பார்களிடமிருந்தன்றோ பெண்களை விவாகஞ் செய்துகொண்டிருந்தார்கள். "உழவர் மேழியர் காராளர் இளங்கோ புகல் பூபாலர் பூவைசியர் பெயரே" என்பது, பிங்கலந்தையின் சூத்திரம் அன்றோ? வேளாளர் வீட்டுப் பெண்களென்று சொல்லிக்கொள்வது, இவர்க்கென்னே, இன்றைக்கும் வெட்கமாக இருக்கிறதுபோலும்! பூர்வீக நூற்களிற் சிறிதும் ஆராய்ச்சியற்ற இவரேன், நமதுமரபியன் மாட்சியைப்பற்றி விளக்கப்புகுகின்றார்? விளக்குமாறே இஃதெனத் தெளிந்து கொள்ளாத இவர் தமது, மரபாகிய அரண்மனையை விளக்குவதெப்படி? வேளாளர்மாட்சியைப்பற்றி வரையப்புகின் இப்புத்தகம் எடபுத்தாகமானாலும் இடம் போதாததாகவன்றோ முடியும். தலைகீழும், கான்

மேலும் ஆக முறைபிறழ்ந்து கிடக்கும் இக்காலத்துங்கூட நமது, இளய சகோதரர்களுக்கிருக்கும் ஆராய்ச்சிவன்மையும், அறிவாண்மையும் இப் பெரியார்க்கு இல்லாமற் போயிற்றே! அந்தோ! இவர்தம், அறியாத்தன் மைக்கு என் என்றிரங்குவோம்! அம்பலவாண நாவலர் என்னும் மதகரி யைத் தாங்கள் உள்ளநாள்வரை தேவகோட்டைத் திக்கையுங்கூட நோக் கற்கு ஒட்டாமற் கிடந்த வித்வ நரசிங்கமாகிய, பெரியார் வீர. லெ சிங்கபச் செட்டியாரவர்களால் பரிசீலனை செய்யப்பெற்ற புத்தகத்தைப்பார்த்த பார்த்தபடி அச்சடித்து வெளிப்படுத்தியிருந்தாலும் இவர்க்கொருபெரிய கௌரவம் நிகழ்ந்திருக்குமே. அவர்களில் மீன்றும் இவரென்னைப் பெரிய ராகப் போய்விட்டார். வேதாந்திகளான நமது மரபைச்சார்ந்தோர் சில ரைப் பற்றி ஏதேனும் எழுதவேண்டுமாயின் அதற்கு வேறோர் பெயரிட்டு வரைந்து கொண்டாலென்னே? இப்பெரியார், தெரிந்தோ, தெரியாமலோ வரைந்துள்ள மேற்கண்ட அவ்வொரு விஷயத்துக்காக நாம், இவ்வளவு தூரம் எழுதினோமில்லை. மேலும் இனியொரு அறியார் அம்மாதிரி எழுதா திருக்கும் பொருட்டுத்தான் இவ்வளவெழுதினோமென்பதை மேற்கண்ட அப்பெரியாரும், நமது சகோதர சகோதரிகளும் நன்குணர்தல் வேண்டும். இதில் மீன்றும், நமது, நகரத்தார் சரித்திரத்திற் கண்டவாறு, நமது, பூர்வீ கப் பெரியார், பூவைசியராகிய வேளாள வகுப்பார்களிடமிருந்து பெண்களை விவாகஞ்செய்துகொண்ட வரலாறுகளைப்பற்றியும் வரைவாம். அஃதாவது நகரத்தார் சரித்திரம் (மேலும், "அந்நாளில், சாலிவாகன சகாப்தம் ருசுகூமிசு கலியுகவருடம் ௩௲௮௱௭௰௩-ல் அந்த நாட்டில் அரசாட்சி செய்து, கொண்டிருந்த பூவந்திச் சோழராசன் தங்கள் குலத்துப் பெண்களைத்துராக் கிருதமாய்ப் பிடித்துச் சிறைவைத்ததினால் அந்தவைசியர் எண்ணாயிரங் குடும்பத்தாரும் தங்கள் ஆண்பிள்ளைகளை மட்டும் உபாத்தியாயராயிருந்த 'ஆத்மநாதச் சாத்திரியார்' இடத்து விட்டு எல்லாப் பொருள்களையும், அவர் வசம் ஒப்புவித்து, சிசுபரிபாலனமும், மரகத விநாயகர் பூசையும், நடக் கும்படி செய்து மானத்தைக் காக்கும்பொருட்டு பிராண ஹானிசெய்து கொண்டார்கள். பின்புமேலத்தெரு ஆறு வழியில் அறுநூறு பிள்ளைக ளும், தெற்குத்தெரு நான்கு வழியில் நானூறு பிள்ளைகளும், கீழத்தெரு ஏழுவழியில் ஐந்நூற்றிரண்டு பிள்ளைகளும், ஆக ஆயிரத்தைந்நூற்றிரண்டு பிள்ளைகளும், ஆத்மநாதசாத்திரியாரிடம் வாழ்ந்து வருநாளில், சாலிவாகன சகாப்தம் கூ௱டு-கலியுகவருடம் ௩௲௮௱௮௰௪ல் பூவந்திச் சோழமகா ராசன் அந்தியகாலத்தில் புத்திரனை, ராசபூஷணசோழராசனுக்குப் பட் டாபிஷேகம் நடத்தவேண்டியதற்காக ஆத்மநாதச்சாத்திரியாரிடம் வளர்ந் துகொண்டிருக்கிற வைசிய குமாரர்களை வரவழைத்து, நீங்கள் நமது குமார னுக்கு வழக்கப்படிக் கிரீடஞ் சூட்டவேண்டுமென்று சொல்லப் பிள்ளை கள் அரசனை நோக்கி நீங்கள் கிட்ரோஞ் செய்ததனால், எம்முன்னோரை

வரும், மானரெக்ஷணூர்த்தம், மரணமடைந்து விட்டார்கள்; ஆதலால், எங்கள் குலத்தில் பெண்களேயில்லை, பிரமசாரிகளாயிருக்கிற நாங்கள் எப்படி மகுடஞ் சூட்டலாமென்று சொன்னூர்கள். பின்பு அரசன் வைசிய குருவாகிய "ஈசான்ப சிவாசாரியரையும்" மற்றப்பெரியோர்களை யும் வரவழைக்துக் கேட்க அவர்கள் தருமசாத்திரத்தில் "பிரமகுலத்தார் க்ஷத்திரியக்குலத்திலும், க்ஷத்திரியகுலத்தார் வைசியகுலத்திலும், வைசிய குலத்தார் வேளாளர் குலத்திலும் பெண்களை விவாகஞ் செய்துகொள்ள லாமென்று விதியிருக்கிறது" என்று சொல்லப் பின்பு அரசன் வேளாளர் களையும், அவர்கள் ஆதீனக்குருமார்களையும் வரவழைத்து இந்த விஷ யத்தை விவரித்துச் சொல்லிப் பெண்கேட்க, அப்பொழுது வேளாளர் எப்பொழுதுஞ் சம்பந்தம் கொள்ளக்கொடுக்க இருப்பதாயிருந்தால் பெண் கொடுக்கிறோம் என்று சொல்ல, வைசியகுமாரர்கள் "நாங்கள் பெண்ணைக்கொள்ளலாமே யல்லது" கொடுக்கலாகாது என்று சொல்ல, அரசனும், ஆதீனகுருமார்களுங் கேட்டு இது கிரமந்தானென்று அப்படி யே வேளாளர்களை இணக்க அவர்களும் பெண்கொடுக்கச் சம்மதித்துப் பெண்கள் எங்கள் ஆதீனக்குருமார்களிடத்தில் தீட்சாகிரியை முதலான வைகள் செய்துகொள்ள வேண்டுமென்று கேட்டதற்கு அவ்விதமே தீர்வை செய்து விட்டார்கள். பின்பு, கார்காத்த வேளாளர் பெண்களை மேலத்தெரு ஆறுவழி அறுநூறு பிள்ளைகளுக்கும், விவாகஞ் செய்து, அந் தப் பெண்களுக்குத் திருவாரூர் "திருநாவுக்கரசுக்குருக்களை" தீட்சாகுருவா கவும்; காணியாள வேளாளர் பெண்களைத் தெற்குத்தெரு நான்கு வழி நானூறு பிள்ளைகளுக்கும், விவாகஞ்செய்து, அந்தப்பெண்களுக்குக் கும்ப கோணம் "சிவஞானக்குருக்களை" தீட்சாகுருவாகவும்; சோழியர் வேளாளப் பெண்களை கிழக்தெரு ஏழுவழி, ஐந்நூற்றிரண்டு பிள்ளைகளுக் கும் விவாகஞ் செய்து, அந்தப் பெண்களுக்கு ஸ்ரீ "வாஞ்சியம் நிரம்பவழ கியக்குருக்களை" தீட்சாகுருவாகவும்; நியமனஞ் செய்து கொண்டு, அந்தவைசியர் எல்லாரும் ராச பூஷண சோழராசனுக்கு மகுடஞ் சூட் டிச் சகல மன்னிணை மரியாதையும் பெற்று, பின்பு வேளாளர் சீத னச் சீர்வரிசைகள் செய்கிறதென்றும், பெண்களுக்கு வேலை செய்ய வெள்ளாட்டிகள் வைக்கிறதென்றும், பெண்வழியாகிய வேளாளக் குலத்து மாமனுக்குச் சடங்குப் பாத்தியமில்லை யென்றும், பின்பு உபயகுல சம்பந்தமாய் உண்டாகும் இரண்டுவழி மாமன்மார்களுக்கும் சடங்குப்பாத்தியம் உண்டென்றும், இவர்களை யன்றி நன்மை தீமைகள் செய்கிறதில்லை யென்றும் வாக்குறுதி செய்துகொண்டு "உபயகுல பூபால வைசியர்கள்" என்றும், "இரத்தின தனமகுட பூபால வைசியர்கள்" என் றும், "கெங்காகுலவேளாளப் பெண்களை விவாகஞ் செய்து கொண்டதால் சந்திரகங்காகுல வைசியர்கள்" என்றும், இராச சபையிலே பேர் பெற்று

"சைவசமய சிவதரும, சிவாகம புராண விபூதிருத்திராட்ச பஞ்சாக்ஷரமகா மந்திர சித்தாந்தயோக பாக்கிய சம்பன்னர்களாய்" இருந்தார்கள். நண்ப! இத்துணை தூரம், விவரித்து விளக்கவேண்டிய ஓர் விஷயத்தை "மற்றென்று விரித்தல்" என்னும் குற்றமாகிய படுகுழியிலே வீழ்ந்து, "நான்காம் வருணத்துப் பெண்களை விவாகஞ் செய்துகொண்டு" எனச் சுருங்கச் சொல்லல் என்னும் அழகிலே புணர்த்தி "அந்நூற்கு மரபுவிளக்கம்" என அழகிய பெயரொன்றுஞ் சூட்டி விளக்கிய, விளக்கமே விளக்கமாம். ஆ! ஆ! என் சொல்வது! நூல், நோற்கும் ஆற்றல் வெகு அழகு. வெகு சித்திரம். "நகரத்தார் சரித்திரம்" என்ற, நமது, முதனூலைக் காணமல் பின்னூலாகிய, இப் பெரியாரின், நன்னூலைக் கண்டோர்க்கு நமது, மரபியன்மாட்சிகள் நன்கு விளங்கத்தான் செய்யும்! இன்னோரன்ன பெரியோர்கள்தான், நமது, மரபியன்மாட்சிகளைப்பற்றி வரையப்புகுதல் வேண்டும்! எமதன்பார்ந்த நண்ப! எம் அருமைச் சகோதர! எந்த மார்க்கத்தினும் ஆழ்ந்த கருத்தோடுகூடச் சிந்தித்து, விஷயத்தின், உண்மைகளை நன்றாகவுணர்ந்தே ஒரு நூலை நோற்கப் புகுங்கள். துவேஷம், வஞ்சகம் முதலிய தீக்குணங்களை வேரறக்களைந்துவிட்டே ஒரு பெரியராகக் கருதுங்கள், இனி, நமது, முன்னையப்பெரியோர், அனுபவத்துக் கையாண்டுவந்த கூட்ட நாட்டத்தைப் பற்றியும் சிறிது விளக்கத்தொடங்குவாம். அஃதாவது, இக்காலம் நமது, தேயமெங்கும் கூடிக்கூடி எதோவாயில் வந்தபடியெல்லாம் ஆடியோடிப் பாடிப்பாடிப் பேசி, பேசிப் பிரிந்தோடிப் போகும், ஒருசிறிதளவும் பயனற்ற வெறுங்காலிக் கூட்டங்களைப் போன்றதன்று. ஒரு விஷயத்தை எடுத்து, இஃதொரு மேலான நல்லவிஷயமேயாமென்று சகலரும் ஓமென ஒப்புக்கொள்ளுமாறு மெய்ப்பித்து, ஒவ்வொரு சகோதர, சகோதரிகளின் மனிதவுணர்ச்சியினும் அவ்விஷயத்தை நிலைத்து நிற்குமாறு நிறுவி, அதன்படி, ஒரு சிறிதளவும் நழுவாதவண்ணம் இயலுமாறு அதிகார முறைமையோடும், அவர்களின்பால், அவ்விஷயத்தை அமுலுக்குக் கொண்டுவருவதற்காகக்கூடும் கூட்டமேயாகும். அக்கூட்டந்தான் குடியரசின்கூட்டமாம். நமது, பூர்விகப் பெரியார், "வகுப்புக் கூட்டம்" "வட்டகைக் கூட்டம்" "நகரக்கூட்டம்" "மடத்துவாயற்கூட்டம்" "கோவிற்கூட்டம்" "சர்வநகரக் கூட்டம்" (அஃதாவது தொண்ணூற்றாறு நகரக்கூட்டம்)என, ஆறுவகைக் கூட்டங்களாகவகுத்து ஏற்படுத்திக்கொண்டு அதினின்றும், நமது, மகா சமூகத்தைப் பாதுகாத்து வந்திருக்கிறார்கள். மேலும், நம்மன்னோர், அபாரசக்தியுள்ளவர்களாயும், சத்தியவந்தர்களாயும் தத்துவ சாத்திரிகளாயும், சிவஞானயோகச் செல்வர்களாயும், "சமன்செய்து சீர்தூக்குங் கோல்போலமைந்தொருபாற், கோடாமைசான்றோர்க்கணி" "வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப் பிறவுந் தம்போற்செயின்" "கேடும்

பெருக்கமுமில்லல்ல நெஞ்சத்துக் கோடாமை சான்றோர்க்கணி" "நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை அன்றே யொழிய விடல்" என்னும் வேதவாக்கியங்களுக்கும் இலக்காகிய சான்றோர்களாயும், தெள்ளத் தெளிந்த நியாயவாதிகளாயும், "வேதாளஞ் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே பாதாள மூலிபடருமே—மூதேவி சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே மன்றோரஞ் சொன்னார் மனை" என்றும், "உள்ள வழக்கிருக்க ஊரார் பொது விருக்கத் தள்ளி வழக்கதனைத் தான்பேசி—எள்ளளவும் கைக்கூலிவாங்கும் காலறுவான் தன்கிளையும் எச்சமறுமென்றால் அறு" என்றும், "வழக்குடையான் நிற்பவலியானைக்கூடி வழக்கை அழிவழக்குச் செய்தோன் — வழக்கிழந்தோன் சுற்றமுந்தானுந் தொடர்ந்தழுத கண்ணீரால் எச்சம் அறுமென்றால் அறு" என்றும், "கல்வியுடையீர் கருங்கானகத்திடையே நெல்லியிலை யுதிர்ந்து நிற்பதெவன்—வல்லாய் கேள் வெல்லா வழக்கை விலைவாங்கி வெல்விக்கும் வல்லாளன் சுற்றம் போன்மாண்டு" என்றும், காணப்பெறும் வடதுகண்டு பாடமோதியுணர்ந்த அரும் கருத்துடையவர்களாயும், படித்தபடி நடக்கும் பரம யோக்கியர்களாயும், குடியரசாங்கமுறையிற் சமர்த்தர்களாயும், தந்திரமுடையவர்களாயும், மனிதவர்க்கத்தார்க்குரிய ஒரு நூற்றியிருபஃதாண்டுகளையும், அனுபவிக்கும் ஆயுளை உடையவர்களாயும், ஆறு ரூபாய் இடையுள்ள, ஆயிரத்தைந்நூறு இரண்டாயிரம் பலங்கள் வரையுள்ள தேககனத்தையுடைய மிகு வாட்ட சாட்டமான திடகாத்திரர்களாயும், பக்தி வன்மையிற் பரமசிவப்பெருமானே போன்றும் இருந்துவாழ்ந்து வந்திருக்கிறார்கள். அவர்கள், வழக்குப்பேசும் முறைமைகளும், தீர்ப்பு செய்து கொள்கிற மார்க்கங்களும் மிக அழகாகவே இருந்து வந்திருக்கிறது. அவர்கள், ஒவ்வொரு வகுப்பிலும் நேரிடுகிற விவகாரங்களை அவ்வவ் வகுப்பாரே விசாரித்துப் பேசித்தீர்மானித்துக் கொள்வார்கள். "ஆங்காரப் பொக்கிஷம், கோபக்களஞ்சியம், ஆணவத்தார் நீங்காவரண்மனை, பொய் வைத்த கூடம், வின் நீடிவளர் தேங்கார் பெருமதிற்காமவிலாசம் இத்தேகம் கந்தல்" என்பன நன்கு உணர்ந்தவர்களாய், ஆங்காரம், வெகுளி, ஆணவம், பொய், காமம், வஞ்சம், பொறாமை, டம்பம் முதலிய தீக்குணங்கள் ஒன்றினும் சம்பந்தப் படாதவர்களாய் தண்டற்காரன் காண்முறியுமாறு தண்டற்காரனை அலைச்சலுக்கு உட்படுத்தாதவர்களாய், இன்றுகூட்டம், என்று தெரிந்த மாத்திரத்தே அக்காலம் நோக்கி ஒவ்வொரு பெரியாரும், ஒவ்வொரு இளையவர்களும் அணி அணியாகப் பட்டை பட்டையாய்க் கட்டுக் கட்டாக விபூதிகளணிந்து தோய்ந்துலர்ந்ததாற் காவி ஏறிய இரட்டை வத்திரங்களை முழங்காலுக்குமேல் இடையிலே மிகவழகாக, ஆர்த்து, மிடறிலே ஒற்றையுருத்திராக்கமாகிய திருநீலகண்ட மிலங்க, அழகிய சிரத்திலே பட்டு நூற்கம்பிச்சவுக்கமாகிய வெள்ளைக்கலையார்த்து,

ஒருவர் பின் ஒருவராய்ச் சென்று, பெரிய தன்மை என்னும் அமுதமானது ஒவ்வொரு பெரியார்வதனத்தினும் ததும்ப, பூரணமாக நிறைந்த மனவமைதியோடுங் கூடக்கூடிக் கோயில்வாயல், அல்லது மடத்து வாயலாகிய பேரவையின்கண் உட்கார்ந்து "ஆக்கமும் கேடும் அத னால் வருதலால் காத்தோம்பல் சொல்லின் கட் சோர்வு" "சொல்லுக சொல் லைப் பிறிதோர் சொல் அச்சொல்லை வெல்லுஞ் சொல்லின்மை அறிந்து" "பல சொல்லக் காமுறுவர் மன்ற மாசற்ற சில சொல்லல் தேற்றாதவர்" என்னும் பொய்யாமொழியாகிய இலக்கியத்துக்குக் கர்த்தர்களாய், ஒருவ ரோடு ஒருவராய், ஒருவர்பின் ஒருவராய் ஒரு விஷயத்தைப்பற்றி அவர்கள் பகர்ந்து பேசும் ஆற்றலும், வன்மையும், அமைதியும், சிரமசைத்து, அவ் விஷயங்களைக் கேட்டுக் கொண்டிருக்கும் ஆசாரசில மரியாதையான ஒழுக்க மும், மிக்க அழகினும் அழகாகவே காணப்பெறும். நகரக்கூட்டம், கோ யில் வாசற் கூட்டம் என்பன ஒரு பொருட் சொற்களாம். வகுப்புக் கூட் டம் என்பது ஒருகோத்திரத்தார்மட்டும் கூடுங் கூட்டமாம், நகரக்கூட்டம் என்பது ஒருநகரத்திலுள்ளார் யாவருங்கூடுங் கூட்டமாம். நமது செட்டி மண்டலத்துடைத்தான ஒருகோவிலைச்சார்ந்த சர்வகோத்திரத்தார்களுங் கூடுங் கூட்டந்தான் மடத்து வாயற்கூட்டமாம். நமது, ஒன்பது கோவி லையுஞ் சார்ந்த சர்வநகரத்தார்களும், கூடுமோர் கூட்டந்தான் நமது, முற்கால தொண்ணூற்றாறு நகரக் கூட்டமாம். வட்டகைக் கூட்டம் என்பது ஓர் எண்ணிக்கையுள் அகப்பட்ட சில நகரத்தார் ஒன்று கூடிப் பேசும் கூட்டமாம். தாங்கள் ஏற்படுத்திக் கொண்டவரன் முறைக் கட் டுச் சட்டங்களுக்குத் தாங்கள் அடங்கி ஒடுங்கி நின்று ஒழுகும் ஆற் றலில் அவர்களின் மகாவல்லுநத்தன்மையை "உலகமென்பது உயர்ந் தோர்மாட்டே" என்பதற்கிணங்க ஆய்ந்து நோக்குழி உலகமும், உயர்ந் தோருமே பாராட்டிப்போற்றிப் புகழத்தக்கனவாகவே தான் முடியும் என் பதை எத்தகையாரும் மறுக்க முடியாது. படிப்படியாக ஒன்றுக்குமேல் ஒன்று பேரவையாகவே நியமித்து வைத்திருந்தார்கள். எந்தவாற்றானும் பெரியவோர் குற்றஞ் செய்யப்பட்ட ஒருவரை நமது மகாசமூகத்தினின் றும் களைதலில் அவர்கள் ஓரணுவளவு கூடப்பின் வாங்கினவர்களாய் இருந் தார்களில்லை. "குடிபுறங்காத்தோம்பிக் குற்றங் கடிதல், வடுவன்று வேந் தன் தொழில்" என்றும், "கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ், களைகட்டதனொடு நேர்" என்றும், காணப்பெறும். மகாவாக்கி யங்கட்கு இலக்காக நின்று, செல்வவந்தர் என்றும், சுற்றத்தார் என்றும் நட்பினர் என்றும், பங்காளி என்றும், இவர் ஒரு படித்த பெரியார் என் றும் நியாயக்கோட்டமாகிய நரகிடை வீழ்ந்து அவர்கள் அமிழ்ந்து விடா மல், பூரண நியாயத்தர்களாயிருந்து, நமது, இம்மகாசமூகமாகிய. மனிதப் பயிர்கள் நிறைந்த, கழனியின்கண், முளைத்தகளைகளை வேரறப் பிடுங்கி

எறிந்து களைந்தே வந்திருக்கிறார்கள். இக்காலத்து ஒரு செல்வவந்தருக்காகச் சகல செல்வவந்தர்களும், தங்களின் பேரறிவாண்மையை இழந்தவர்களாய், இனத்துரோகிகளாய், மனிதப் பதருகளாய், பெருந்தன்மையற்றவர்களாய், கயவர்களாய், பழியாளர்களாய், அநியாயக் கோட்டமாகிய நரகசாகரத்திலே வீழ்ந்து துன்புறுகின்றார்கள் போன்று அக்காலத்துள்ள அவர்கள் துன்புற்றார்கள் இல்லவே இல்லை. அவர்கள் அக்காலத்துச் சங்கங்கள் கூடுவதற்காகப் பிரத்தியேகமான ஒரு கட்டிடம் கட்டிக்கொள்ளவில்லை ஆங்காங்கு உடைத்தான நகரவிடுதிகளிலேனும், மடத்து வாயல்களிலேனும், கோயில் வாயல்களிலேனுந்தான் கூடுவார்கள். சர்வநகரக் கூட்டம் அபூர்வமாக ஒருசுமார் நான்கைந்து வருஷங்களுக்கு ஒரு முறைதான் இலகுவிலே தீர்த்துக்கொள்ள முடியாத சில பெரியவழக்குகள் கையிருப்புக்கணக்கு நோக்கித்தான் கூட்டப்பெறும். அந்தக் கூட்டத்தும் சுமார் நாற்பதைம்பது பெயர்களிலிருந்து கூடியபக்கம், ஒரு நூற்றைம்பது பெயர்களுக்கு மேல் தலைவர்கள் வந்திருக்கமாட்டார்கள் அக்காலத்து ஒரு தலைவர்க்கு நான்கைந்து பெரிய நகரங்கள்கூட அடங்கி ஒழுகிற்று. தனித்தனியாக ஒவ்வொரு கோவிலையுஞ் சார்ந்த பொது நகரக்கூட்டங்கள்தான் ஒவ்வொரு வருஷமும் முறை முறையாக ஏதோ ஒருமாஸத்துச் சந்தற்பம் நோக்கிக் காரியக்காரரின் இயற்கையையும், வன்மையையும், தன்மையையும் பொறுத்துக் கூட்டப்பெறும். காரியக்காரர்களின் அழகிய உள்ளங்கையிற்றான் நமது, மரபைச்சார்ந்த ஒவ்வொரு சுதந்தரங்களும் நன்கு நிலைபெற்றுத்தங்கி இருந்து வந்திருக்கின்றன. வழக்குப் பேசத்தொடர்ந்து, முறை விசாரிக்கப் புகுந்ததில் மின்றும் "வாதி பிரதிவாதிகளாகிய இருவரும்" அந்தக் கூட்டத்தில் நகரத்தார்களுடன் எவ்வகை முகாந்தரங்களைக்கொண்டும், உட்கார்ந்து கொள்வதற்குச் சட்டமே கிடையாது. அவர்களுக்கு நகரத்தார்களுடன் போசனமும் கிடையாது. "நீர்த்துறை விலக்கும், நெரிப்புத்துறை விலக்கும்" எங்ஙனம் நம்மைவந்து சூழ்ந்து கொள்ளுமோ, நமது, மரபை விட்டு "விலக்கப்பட்டு" போய்விடப் போகின்றோமோ, அந்தோ! நம்மைக் குறித்து நகரத்தார் யாவரும் எள்ளற்கிடமாயிற்றே, என் செய்வோம் என்னுங்கவலையானது அவர்களுடைய "கேடு சூழ்ந்த நெஞ்சத்தைப் பிளந்துகொண்டேயிருக்கும், அவர்கள் வழக்குத் தீர்ந்து விடுதலையாகிறவரை பட்டதரையிற்றான், படுத்திருப்பார்கள். ஒட்டைப் பொழுதுக்கு ஒருதரம், இரண்டு கரங்களும் சிரமிசை கூப்பிய நிலைமையில் அவர்கள் கீழே அடியற்றமரம்போன்று விழுந்து, விழுந்து, எழுந்திருந்து முறையிரந்து கொள்ளும் புதுமை, புதுமையினும், புதுமையாகவே காணப்பெறும். எவர்களுக்கும் பரிதாபமாகவே இருக்கும். ஆய்ந்து நோக்குமிடத்து, அக்காலத்து அவர்களிடமிருந்த பயபக்தியான அமைதியையும், மரியாதைகளையும், நல்ல ஒழுக்கங்களையும், நமது மரபைச் சார்ந்துதான்

நாம் எந்தஞான்றும் இவ்விலவுலகில் வாழ்தல் வேண்டுமென்ற பேரவாவை யும், இத்துணைக்கும். காரணகாரியங்களாக ஒன்றுபட்டிருந்த அப்பேரவை யின் அரும்பெருஞ் சக்தியையும், அப்பெரியார், காரியக்காரர் வன்மைகளை யும்பற்றி வரைந்து முடிப்பதென்றால், அஃது எவராற்றான் சாத்தியமாகும். ஒரு சுமார் இற்றைக்கு எழுபது வருடங்களுக்கு முன்னர், நமது மரபைச் சார்ந்த மலடியான ஓர் விதவைக்குப் பிள்ளை கூட்டும் வழக்கம் நமது மரபுக் குரியனவாயிருந்து வந்ததில்லை. அவட்கு பிள்ளை கூட்டிக்கொள்ள வேண்டு மென்றால், அவள் தன் கொழுநன் இருக்கிற காலத்திலேயே பிள்ளைகூட் டிக் கொண்டிருத்தல் வேண்டும். ஓர் விதவைக்குப் பிள்ளைகூட்ட வேண்டு மென்றால் அவள் ஒரு பெண்குழந்தையை எனும் பெற்றுச் சாகக்கொடுத்தி ருத்தல் வேண்டும். அல்லாதவரை பிள்ளை கூட்டுஞ்சுதந்தரம் இல்லவே இல்லை. இது நிற்க, இலுப்பைக்குடிக் கோவில் நகரத்தாரும், மாற்றூர்க் கோவில் நகரத்தாரும் சம்பந்தப் புறத்தார் என்பது நண்ப! நன்கு உணர் வீர்களன்றோ. அவர்களுள் தேவகோட்டை நகரத்து இரண்டு பெரிய செல் வவந்தர்கள் தங்களைச் சார்ந்த ஒரு பெண்மலடியாயிருக்க, அவள் தன் கொ ழுநன் சிவலோகமடைந்த அன்று, அவர் சிவலோகமடைந்த விஷயம் ஒன் றையும் அணுத்துணைகூட அங்ஙனம் வெளிக்காட்டாமல், ஏதோ சிறிது அசௌகரியமாக படுத்துக்கொண்டிருக்கிறாரென்று ஒரு சிறு பாசாங்கு பண்ணி அம்மலடான விதவைப் பெண்ணுட்கு ஒரு பிள்ளையைக் கூட்டிக் கொண்டார்கள். அக்கொடுஞ்செய்கையின் செய்தியானது, தென்றல் காற் றுடன் கலந்து அஃது நகரமெங்கும் உலாவவே தற்காலம் நகரத்தார் வாசம் அற்றுப்போன "செம்பொன்மாரி" என்னும் நகரத்து, அதற்காக சர்வநகரக்கூட்டம் கூடவேண்டியதாய்ப் போயிற்று, கூடியும் ஆயிற்று, என்றால் பிரதிவாதிகளான இரண்டு வகையாரும், தக்க கௌரமும் பெருஞ் செல்வமும் இன்றைக்கும் உள்ளவர்கள் ஆகலின், சூரிய நமஸ்காரஞ் செய் யச் சம்மதித்தார்கள் இல்லை. அன்று நாண்முதற்கொண்டு நமது மரபாரைச் சார்ந்த "சர்வநகரச் சங்கமாகிய சக்தியானவள்" நமது, அரசாங்க வகுப் பாரை மணம்புரிந்து கொண்டாள். அக்காலத்துக்கு முன்னுள்ளவர்களை "அக்காலத்தவர்கள்" என்றும், அக்காலத்துக்குப் பின்னுள்ளவர்களை "இக் காலத்தவர்கள்" என்றும் நமது, நண்பர்கள் கவனித்துக் கொள்ளல் வேண் டும். அதினின்றும், அந்நகரத்தார் கோவில் வாயற்கூட்டம், முதலியகாரி யத்தன்மைகளும் சரிவர நடக்குமாறின்றி நின்று போய்விட்டன. ஆனால் திருவிளக்குக்காணிக் கைமட்டும் ஒருவாறு நடந்து வரும் என்று நினைக் கிறேம். அதுவும் சில கோவில்களில் நின்று போய்விட்டன. இற்றைக்கு மூன்று நான்கு வருடங்கட்கு முன்னர், அரசாங்கத்தாரால், பெருந்தீர் வைகள் ஏற்படுத்தி இலக்கக் கணக்குகளில், மூன்று நான்குவருடம் தொடர்ந்து, பெருஞ் செல்வவந்தர்களிடமெல்லாந் தொகைகளைப் பிடுங்கப்

புகுந்தகாலத்தில் அந்தோ! முன்னர் என் செய்தோம்! நமது, பூர்வீக சர்வ நகரசக்திக்கு இனி எவ்வாறு நாம் மணமக்கள் ஆவோம் எனச்சில செல்வ வந்தர்கள் சிந்திக்கத்தான் செய்தார்கள். ஆனால், அவ்வெண்ணம் பலிக்காமல் போயிற்று. எப்பொழுது, நமது மகாசமுகத்தைச் சார்ந்த செல்வந்தர்கள் " ஆடம்பரம்" "டம்பம்" "பயனுணராத கெர்வம்" "வீணன அகங்காரம்" முதலிய சால்வைகளைப் போர்த்துக்கொண்டு, சமூகப் பொதுக் காரியங்களுக்குக் கட்டுப்பட்டு ஒழுகாதவண்ணம் கோணற்கால் சாற்றத் தொடங்கினர்களோ அப்பொழுது முதற்கொண்டு " ஒட்டட்டுங்குண்டி உலரட்டுங் குண்டி உனக்கில்லாக்குண்டியெனக் கென்னை ?" என்று நமது பூர்வீக சங்கங்களாகிய சக்திகளும், ஆடையணி ஆகாராதிக்கொடுத்து ஆதரிப்பாரைக் கண்டு ஒதுங்கி அவர்களைச் சார்ந்து கொண்டார்கள். அன்று நாண்முதல் அநாவசியமான ஒழுக்கங்களும், ஒருமாங்காய் பறித்ததற்காக நாற்பதினாயிரம், ஐம்பதினாயிரம் எனப் பணச் செலவுகளும், கொலைகளும் நேர்ந்துகொண்டன இக்காலம், "உலகம் இன்னதென்றும்" "சுதந்தரம் இன்ன தென்றும்" "மனிதவினத்தாரின் பூரணவுணர்ச்சி இன்னதென்றும்" "அரசாங்கம் இன்னதென்றும்" "ஆண்மை இன்னதென்றும்" நாம் இன்னாரென்றும்" "தெய்வம் இன்ன தென்றும்" "நமது வாழ்க்கை இன்னதென்றும்" "வேதர்கமபுராணம் இதிகாசம் தர்க்கம் வியாகரண முதலிய கலைகள் இன்னதென்றும்" கண்டு தெளிந்த நமது மரபைச் சார்ந்த நம்முடைய இளயசகோதரர்கள் "வனப்பும்" இளமையும் செல்வமும் தெய்வீகத்தன்மையும் நிரம்பவாய்ந்த மேற்கண்டசக்திகளாகிய அவ்விளம்பருவ மங்கையர்களுடன் புணர்ந்துக் கூடிக்கலந்து இன்பாதி போகங்களை அனுபவிக்க நினைந்து நினைந்து தங்களின் உள்ளம் உருகக், கண்ணீர்ததும்பப்பொருமிப் பொருமி விம்மி விம்மி மீண்டும், மீண்டும் தங்களை அறியாமல் மேலெழும் வெப்பத்தை அடக்கமுடியாமல் பத்திரிகைகள் வாயில்களாகவும், உபந்நியாசங்கள் வாயில்களாகவும்,மெய்ம்மயிர் பொடிப்ப,உரைதடுமாறகோவென்று இரங்கி, ஓ! எங்கள் சங்கமோ! சங்கம் என்று அரற்றி, புலம்புவான் கண்டு ஆற்றுவார் ஒருவர் தேற்றுவார் ஒருவாறு, எவரையுமோ காணமல் தாங்களே ஓயவேண்டியதாயும் போயிற்று. எல்லாம் வல்ல இறைவன் திருவருட்குமரன் இனிக்கூட்டிவைப்பானாகுக. நண்ப! இனியதற்காக வருந்தற்க. சிறிதும் அஞ்சற்க. பின்னர், சிறிது, ஏறக்குறைய இற்றைக்கு இருபத்தைந்தாண்டுகட்கு முன்னர் கானுகொத்தான் சா. ராம. மு. புரத்தாரும், சா. ராம. அரு. புரத்தாரும் கொண்ட போராட்டத்தால் "இளையாற்றக் குடிக்கோவில் நகரத்தார்களின், கோவில்வாயல்க் கூட்டம்" நின்று போய்விட்டன. மேலும், அக்கூட்டத்தையுடைத்து, மேலும், நடக்கவொட்டாமல், முடிக்கவேண்டும் ஆற்றின், ஆற்றலில், சா. ராம. அரு இராமசாமி செட்டியாரவர்கள் செய்துள்ள வேலைப்பாடுகள் ஒவ்வொன்றும்

நமது, மகாசமுகத்தைச்சார்ந்த எத்தகைய ஒருவரும் அப்பா! அடோ! அப்பா! என வியத்தற்கு உரியனவாகவே முடியும். மேலும், நமது, மரபைச்சார்ந்த பல பெரியார்களின் சரித்திரங்களுள் அவர்களின் சரித்திரம் மட்டும் வேறு தனியாக எழுதவேண்டிய ஒன்றாயும் முடியும். அவர்கள் எடுத்துக்கொண்ட எந்த வியவகாரங்களும் ஜெயம் பெற்றனவேயாகும். இளையாற்றக்குடிக் கோவில் நகரத்துப் பூர்வீகப்பெரியோர்கள் பலரும் ஒன்றுகூடிக் கூட்டிக்கட்டிவைத்தவோர் பூர்வீக அபாரசக்தியை இக்காலத்து ஒரு சிறு பெரியாரின் ஒரே ஒரு சிறு சக்திமட்டும், எதிர்த்து, நின்று அச்சக்தியை ஓரணுவளவுகூடத் தலையெடுக்க வொட்டாமல் துரத்திப் புறங்காட்டியோடுமாறு, செய்துவிட்டதென்றால், இக்காலத்திய நம்மவர்களின் சக்திகள் எத்துணைச் சிறப்புற்றோங்கியதென்பது ஒருவர் கூறாமலே நன்கு விளங்குவதொன்றாம் அன்றோ? என்றால், இக்காலத்திய நமது, மரபைச்சார்ந்த செல்வவந்தர்களின் பேரறிவாண்மை யென்னும் சக்திகள் நடுநிலைக்கோடின்றி, உலகத்தையுணர்ந்து, நமது, சுதந்தரத்தைப் பாதுகாக்கக் கருதி, நாட்டுக்கோட்டை வைசியர் என்றால், யாவரும் ஒரேதாயின் மக்கள் தான் என்னுந் தன்மையான உண்மையைத் தெரிந்து, சமூகமுன்னேற்றமாகிய சுவர்க்க வழியிலே நுழைந்து, சர்வ நகர சங்கமாகிய சக்தியோடும்கூடிப் போகாதி இன்பங்களை அனுபவிக்கத் தலைப்பெற்று விடுமேயானால், காணப்படுகிற சர்வாண்டபிண்டசராசரங்கள் ஒருங்கையுமே, நமதுமகாசமுகம் திக்குவிஜயம் செய்துவிடும் அன்றோ, (இன்னும்வரும். இத்தொடர்ச்சி இதற்கடுத்து வரும் புத்தகத்துக் காண்க.)

---

உ

திருச்சிற்றம்பலம்.

# அறுவது அத்தியாயம். நமது சமயக் கொள்வகையும், சுதேச பாஷையும்.

"உளகளவில்லதோர் காதல் என்னெஞ்சில் வன் கஞ்சம் உண்ட
வளரிள மாமணிக்கண்டன் வண்டாடு வண்கோதை பங்கத்
திளவள மாமதிக்கண்ணி எம்மான் மகன் கைமுகத்துக்
களகள மாமதஞ்சோர் கரியானைக் கணபதியே" (ஔவையார்)

"பண்ணும், பரதமும், கல்வியும், தீஞ்சொற்பனுவலும், யான்
எண்ணும்பொழுது எளிதெய்த நல்காய் எழுதாமறையும்,
விண்ணும், புவியும், புனலும், கனலும், வெங்காலும், அன்பர்
கண்ணும், கருத்தும் நிறைந்தாய் சகலகலா வல்லியே" (குமரகுருபரர்)

"மாவாழும் ஏழுவழிநகரத்தார்க்கு என்றும்
கோவாழும் செல்வக்குல தெய்வம்—மாவாழ்
மரகதவிநாயகனை மாமலர்தூய் வாழ்த்த
வரநல வாழ் வெல்லாம் வரும்" (நகரத்தார் சரித்திரம்)

பன்னிருதடந்தோண் மன்னியகுருபரன் தன்னிருமலர்த்தாள் எம் சென்னிமீக்கொண்டு நண்ப! இங்ஙனம் "நமது சமயக்கோள்வகையும் சுதேசபாஷையும்" என்ற அங்கத்தை வரையத் தொடங்கி, முதன் முதலாக நமது சமயக் கொள்கைகளைப்பற்றிக் கவனிப்பாம். அஃதாவது, நமது, மகாசமூகத்தைச் சார்ந்த ஒவ்வொரு சகோதர சகோதரிகளுக்கும், மிகச் செவ்வனே நன்கு விளங்கியதோர் விஷயந்தான். என்றாலும், தற்கால வியற்கை நோக்கியும்; காலமாறுதல்களையும், வருங்கால நாகரீகங்களையும், நன்கு சீர்தூக்கியும்; நமது, மகாசமூகத்தைச்சார்ந்த நமது பினசந்ததியார், தங்களின் பூர்வீகச் சரித்திரச் சுருக்க நன்னூலாமென்று தங்களின் உச்சி மேலேற்றிப் புகழ்ந்து கொண்டாடத் தக்கவாறு ஊக்கியும்; நமது மரபைச் சார்ந்த எத்தகைய பெரியாரும், ஆமென ஒப்பத்தகுந்த அரியபெரிய நூன் முறைச்சட்டங்கள் ஆக்கியும், எவர்கட்கும் எளிதில் விளங்கத்தக்க செந்தமிழ் மொழிகளாகத் தாக்கியும். இந்நூற் பூர்த்தியாங்காறும், எம்பானிகழும் "மறதி, வஞ்சம், பொய், மயக்கம், புல்லறிவாண்மை" ஆகியகள்வர்களை ஐந்தெழுத்தோதலாகிய வாளாயுதத்தால் போக்கியும்; மேற்கொண்டும் நிகழுஞ் சிலதீபதுணங்களை நீக்கியும் வரையத் தொடங்குவாம்.

உ. எண்ணிக்கையல்லாத எத்துணையோ பல சமயங்களாலே போர்த்தப்பட்ட மிகவும் பெரிதான இப்பூமண்டலத்தின் கண் "நாட்டுக் கோட்டை வைசிய மகாசமுகத்தார்" என்று, ஏனைய பல சமுகத்தாராலும் கொண்டாடப்படுகிற நமது மரபார்க்குரிய சமயம் "சைவ" சமயமே ஆம். அதன் கொள்வகையைப் பற்றியாய்ந்து நோக்குமிடத்து சிறிது ஏறக் குறைய ஐயாயிரமாண்டுகளுக்கும் (அஃதாவது நமது மரபார் தொண்டை மண்டலம் இலாக்காவிற்குத் தலைநகராக விளங்கிய காஞ்சிபுரம் வந்து குடி யேறுவதற்கும்)முன்னரே இருந்து"பல்லுயிர்த் தொகுதியும் பயன்கொண்டு உய்கென, குடிலையென்னுந் தடவயல் நாப்பண் அருள்வித்திட்டுக், கருணை நீர்பாய்ச்சி, வேதமென்னும் பாதபம்வளர்த்தனை, பாதபம் அதனிற்படு பயன் பலவே, அவற்றுள் இலைகொண்டுவந்தனர் பலரே, இலையொரீஇத் தளிர்கொண்டுவந்தனர் பலரே, தளிரொரீஇ அரும்பொடு மலர்பிஞ்சருங் காய் என்றிவை விரும்பினர் கொண்டு கொண்டுவந்தனர் பலரே, அவ்வாறு றுப்பும் இவ்வாறு பயப்ப ஒரும் வேதாந்தமென்றுச்சியிற் பழுத்த ஆரா வின்ப அருங்கனிபிழிந்த சாரங்கொண்ட சைவசித்தாந்தத், தேனமுது அருந்தினர் சிலரே"என்றவாறு மிக்க அபூர்வமான சுத்தாத்துவித சைவசித் தாந்தக் கொள்வகைகளே ஆம். இங்ஙனமின்றி" உலோகாயதம், மாயா வாதம், நிரீச்சுரவாதம், பௌத்தம் வைணவம்" முதலிய ஏனைய எவ்வகைப் பட்ட மதங்களினும், அம்மதக் கொள்வகைகளினும் ஓர் கணப்பொழுதுங் கூடப்புக்கிருந்தனவும் அல்லனவாம்.

ந. சைவசமயத்தும், அதன் கொள்வகைகளிடத்தும், நமது மகா சமுகம் பெரும் பற்றுடையனவாம் என்பதற்குச் சான்று எண்ணிறந்தன வாயிருப்பினும் "பிள்ளையார் நோன்பு" "திருவாதிரைப் புதுமை" "கார்த் திகைப்புதுமை" இம்மூன்றுமே சாலும். மீண்டுஞ்சிறிது கவனிக்கப்பு கின், நமது, பாரதமாதாவின் தேகத்திலுடைத்தான, அநேக சிவாலயத்தி ருப்பணிகளும். அறக்கூழ்ச்சாலைகள், குருபூசை மடங்கள், வேதாகமப்பாட சாலைகள், நீர் நிலைகள், நந்தனவனங்கள், பசுமடங்கள் முதலிய ஏனையபோ றச் செயல்களும், நமது, மகாசமுகத்துக்கு அமைக்கப் பெற்றிருக்கும் கோத்திராதிகளின் தூலசூக்குமங்களுமே போதியசான்றாம். பிள்ளையார் நோன்பு விநாயகப் பெருமானைக் குறித்தது என்பதூஉம்; திருவாதிரை சிவபெருமானைக் குறித்தது என்பதூஉம்; கார்த்திகை அறுமுகக்கடவுட்கு உரியது என்பதூஉம் நமது, மகாசமுகம் தெற்றெனத் தெளிந்ததேயாம்.

ச. "வேதம் பசு அதன்பால் மெய்யாகமம் நால்வர், ஓதுதமிழ் அதனின் உள்உறும் நெய்—போதமிகு நெய்யின் உறுசுவையாம் நீள் வெண்ணெய் மெய்கண்டான் செய்ததமிழ் நூலின் திறம்" என்றவாற் றிற்கு இணங்கவும் "படிக்கும் நூல்கள் சிவாகமம் பசு பாசமோடு பதித் திறம்,எடுத்தியம்புவது ஈசன்வார் கழல் ஏத்திடுந் தொழில் என்றுமே,விடுத

திடும் பொருள் காமமாதிகள் வேண்டிடும் பொருள் ஈண்டருள் முடித்து மும்மலம் விட்டு நின்மலனோடு நின்றிடன் முத்தியே" என்றவாற்றிற்கு இணங்கவும் "வேதம், ஆகமம், நால்வர் ஓதுதமிழாகிய தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், திருமந்திரம், மெய்கண்டசாத்திரங்கள், ஏனையதிருமுறைகளுமே" நமது, மரபார் நன்கு ஓதியுணர்ந்து தெள்ளத் தெளிந்து வீடுபேறு அடைதற்கு உரித்தாய வேதாகம நூற்களாம். இவைகள்தான் நமது சைவசமயக் கொள்வகைகளுக்கு ஆதார பூதங்களுமாம். மீண்டுஞ் சிறிது கவனித்துச் சுருக்க முடிபுரையாகக் கூறப்புகுமிடத்து, நமது சைவ சமயத்தைச் சார்ந்தனவாய்பதிபசுபாசமாகிய திரிபதார்த்த இலக்கணங்களையும், அதன் உண்மைகளையும் பற்றி சந்தேக விபரீதங்களறக் கூறும் நூற்களொருங்கும், சிவனடியார்கள் சரித்திரங்களொருங்கும், இறைவன் திருவிளையாடல்களைப்பற்றியும், அவன் திருவருட் குமாரர்களின் திருவிளையாடல்களைப்பற்றியும் கூறும் நூற்கள் ஒருங்கும், நமது சைவ சமயக்கொள்வகைகளேயாம். நமது, மரபார் தொன்றுதொட்டு அனுட்டித்துக் கொண்டு வந்த சமயக்கொள்வகைகளும் இவைகளேயாம். இவைகளே என்பது இதன்மேல் வரும் பல விஷயங்களாலும் இனிது நன்கு விளங்குவதாகும்.

ரு. "வெண்டாது" "திருநீலகண்டம்" "நெற்றிக்கண்" முதலியவைகள் நம்மை "இவர் இன்னசமயக்கொள்வகைபார்" என்பதை நமது சரீரத்தினின்றும் பொதுவாக வெளிப்படையாகக் காட்டும் அறிகுறிகளாம். அவ்வறிகுறிகள் சிறப்பாகக் காட்டுவது என்னையோ வெனின் விளக்குதும் "காடுடைய சுடலைப்பொடி பூசி என் உள்ளங்கவர்கள்வன்" என்று நமது, ஞானசம்பந்தப் பிள்ளையார் திருவாய் மலர்ந்தருளியதற்கிணங்க உலகெலாம் வெந்தொழிந்த நன்காட்டிலே நடமாடும் பெருமானே எங்களின் சைவசமயத்துப் பழம் பொருளான முழுமுதற்கடவுளாம் என்பதை நமது, தேகத்தினின்றும் வெளிப்படையாகக் காட்டாமற் காட்டிச் சொல்லாமற் சொல்லும் வாசகமே, உத்தூளனமாயும், திரிபுண்டரமாயும் நாடோறும் நாம் நியமமாக அணிந்துகொள்ளும் விபூதியாம் என்க. (கர்ணபரம்பரை) இனித்திருநீலகண்டமோவெனின், பண்டைய ஞான்று பாற்கடல், கடைந்தாங்கு வெளிப்பட்ட நஞ்சத்தைக்கண்டு, பிரமாதி தேவர்கள் முதலிய பழயவடியார்கள் ஒருங்கும், அஞ்சி நடுநடுங்கி ஓலமிட்டு இரைந்தெழுந்தோட அதுகண்ட அடியார்க்கு எளியவனும், பசுபதி பெயரிய தனிமுதற் கடவுளுமான, எங்களின் எல்லாம் வல்ல சைவசமயத்துத் தனிநாயகனுரே! ஏ! இஃதெவன்வியப்புஎனப் புன்முறுவல் கொண்டு, ஓ! எமதன்பார்ந்த முனிபுங்கவர்களே! நீங்கள் ஒன்றுக்கும் அஞ்சன்மின், ஆங்கெங்கும் ஓடன்மின், ஈங்குவம்மின், எனக்கூவியழைத்து, அவர்களுக்கு அபயஸ்தங்காட்டி அவர்களையோம்பி "சர்வலோக சரணியன்" என்பதை அங்ஙனம் மெய்ப்பித்துக் காட்டி அந்நஞ்சத்தைத் தாமே பருக, அதனைக்கண்ட உமா

தேவியார் நமது நாயகன் "எல்லாம் வல்லவர்" "எல்லாமாய் அல்லதுமாய் நிற்பவர்" "என்றும் உள்ளவர்" என்பனவாய சர்வ வல்லமைகளும் உடையர் ஆம் என்பதனை மறந்து "ஐயோ! எங்கொழுநர்க்கு" யாது நேரிடுமோ என்றஞ்சி மயங்கி அந்நஞ்சத்தை அவர் தம் கண்டத்தை விட்டு அதற்குங் கீழ் இறங்காவண்ணம், தமது, அழகிய வலக்கரத்தான் தடுத்து, நிறுத்த, அஃதெங்களின் இறைவர்க்கு எந்த ஞான்றும் அவர் தம் கண்டத்து, அஃது, திருநீலமாக நின்று அழகுபெறச் செய்தலின் "அவர் தேவாதி தேவன் திருநீல கண்டராம்" என்பதைக்காட்டாமற் காட்டிச் சொல்லாமற் சொல்லும் வாசகமே நாம், நமது கண்டத்து ஒற்றையாகக் கட்டிக்கொண்டிருக்கும் உருத்திர ஆக்கமாகியதிருநீலகண்டமாம் என்க. (கர்ணபரம்பரை) இனி, நெற்றிக்கண்ணேவெனின்? காணப்படுகிற சர்வாண்டபிண்ட சராசரங்களாகிய மூவுலகத்தும் "எங்கள் இறைவர்க்கு" உயர்ந்தாரும், ஒப்பாருமில்லை. ஒருக்கால் எவரேனும் ஒருவர் தம்மயக்கவுணர்ச்சியான் "யாம் ஒப்பேம்" "யாம் உயர்ந்தேம்" என்று, கெர்வங்கொள்ளின், அவர்தம், கெர்வத்தையும், அவரையும், அந்தக்கணமே சாம்பராக்குவதற்கு உரியநேத்திரம் ஒன்றும், அவர்தம் அழகிய திருநுதற்கண்உளதாம் என்பதனைக் காட்டாமற் காட்டிச் சொல்லாமற் சொல்லும் வாசகமே, நமது, நெற்றியின்கண். நமது சைவசமய ஆசாரசிலமாக நாம் வைத்துக்கொள்ளும் நேத்திரம் போன்ற செஞ்சந்தனப் பொட்டேயாம் என்க. (கர்ணபரம்பரை.)

௬. நமது, மரபார்க்கு "விக்கிரக ஆராதனை" தான் நமது, சைவ சமயக் கொள்வகைகளில் முதன் முதல் அடிபீடமாம். நமது, மகாசமுகத்துக்கு உரிய ஆலயங்கள் சிவாலயங்களும், சிவாலயங்களைச் சார்ந்த ஏனைய ஆலயங்களும் ஆம். நமது, மரபார் செபித்தற்கு உரிய மகாமந்திரங்கள் "விண்ணுறவடுக்கிய விறகின் வெவ்வழல், நுண்ணிய புகிலவை யொன்றுமில்லையாம், பண்ணியவுலகினிற் பயின்றபாவத்தை, நண்ணி நின்றறுப்பது நமச்சிவாயவே" "கற்றுணைப் பூட்டியோர் கடலிற்பாய்ச்சினும், நற்றுணையாவது நமச்சிவாயவே" "நற்றவாவுனை நான்மறக்கினும், சொல்லும் நா நமச்சிவாயவே" என, நமது திருநாவுக்கரசர் நவின்றவாறு "நமசிவய" என்னும் ஐந்தெழுத்தாகிய மகாமந்திரமேயாம். சிறப்பு விதியாகக் கவனிக்கப்புகின், நமது, மரபார்க்கு தீக்கைபுரியும், ஆசாரியன்மார்கள் உபதேசிக்கும் அக்கரங்களுமாம். மீண்டுங் கவனிக் நமிடத்து, ஓரெழுத்திலிருந்து முறையே பதின்மூன்று அக்கரங்கள் வரையும் காணப்பெறுவதோடு ஐம்பதொன்று அக்கரங்களுமாம். இவைகளைப்பற்றி விரும்புவோர் முறையே ஆசாரியர்களிடமிருந்து கேட்டுத்தெரிந்துகொள்ள நன்கு விளங்குவதாம். மேலும், ஜீவகாருண்யமும், கொலைமறுத்தலும், இன்னும் நமது, சைவசமயத்தைச் சார்ந்த, பலவகையான ஆசாரசிலங்களும், பலவித நல்லொழுக்கங்களும் நமது, மகாசமுகத்தையுஞ் சார்ந்தனவேயாம்;

எ. சமபக்கொள்வகை நான்குவகைப்படும். அஃதாவது, அகக்கொள்கை. அகப்புறக்கொள்கை. புறக்கொள்கை. புறப் புறக்கொள்கை என்பனவாம். அகக் கொள்கையாவது, தங்கள் தங்களின் மனத்தகத்துக்கொள்ளும் தற்சமயக் கொள்கையாம். அகப்புறக் கொள்கையாவது, தங்கள் தங்களின் மனத்தகத்துக் கொள்ளும் தற்சமயக் கொள்வகைகளோடுங் கூட புறச்சமயக் கொள்வகைகளையுங்கொண்டு, அவைகளினுந் தாங்கள் ஈடுபட்டு, அவைகளையும் அனுட்டிக்குங் கொள்கையாம். புறக்கொள்கையாவது, எவர்களுக்கும், தெற்றென அஃதாவது, வெளிப்படையாக விளங்கும்படி தங்கள் தங்களின் சரீரத்தின் புறத்துக் காணப்பெறும் தற்சமயக் கொள்வகைகளான அறிகுறிகளாம். புறப்புறக் கொள்கையாவது, தங்கள் தங்களின் சரீரத்தின் புறத்துக் காணப்பெறும் தற்சமயக் கொள்வகைகளான பல அறிகுறிகளோடும் புறச்சமயக் கொள்வகைகளான சில அறிகுறிகளையும், மேற்கொண்டு அவைகளினுந் தாங்கள் ஈடுபட்டு அவைகளையும் அனுட்டிக்குங் கொள்கையாம்.

அ. பொதுவாகக் கவனிக்குமிடத்து, தொன்றுதொட்டு தங்கள் தங்களுக்கு உரித்தாக இயற்கையிற் கிடைக்கப் பெற்ற ஒரு சமபக்கொள்வகைகளிலே தான் தங்கள், தங்களின் அகமும், புறமும் ஒன்றுபோல ஈடுபட்டு நின்று ஒழுகவேண்டுங் கடப்பாடே நம்போன்ற ஆறறிவோடுங்கூடிய பேரறிவாண்மை உடைத்தாய மனிதவர்க்கத்தார்க்கு உரிமையாம். அஃதல்லாமல், தங்களின், ஒரு சமயத்தினின்றும், மற்றொரு சமயத்திற்புகுதல் எத்துணையோ ஒரு கேவலமான இழிந்த செய்கையென்பது, அறிவிற் சிறந்த எப்பாலவரும், எத்தகையாரும் ஒப்ப முடிந்து விளங்குவது ஒன்றும். மேலும், சிறிது கவனிக்கப் புகுந்தால் ஏதோ ஒருவாறு அபூர்வமாக ஊழ்வினைவயத்தாலோ, அறிவின்மையாலோ, தீராதமிடியாலோ, ஓரிளம் பெண் மீது ஏற்பட்ட பெருங்காதலாலோ, தவறி ஒருவர் ஒருசமயக் கொள்வகைகளில் நின்றும், அகமும் புறமும் ஒன்றுபோல வேரறத்துறந்து விலகி மற்றொரு சமயத்துப் புகுந்து அதன் கொள்வகைகளிலே ஈடுபட்டு நின்று ஒழுகினும் ஒழுகலாம். அதனைக்கூட அறிவுடை ஒருவரான் அத்துணை இழுக்கெனப்பட மாட்டாது. பின்னர் அதனினும், மிக்க இழுக்காம் தன்மையுள்ளவோர் செய்கையும் உளது. அதுதான் அறிவிலார் சிலரானும். அறிவுடையோர் ஒவ்வொரு எவரானும், எள்ளத்தக்கது. சிவஞானயோகச் செல்வர்களானும் நகைக்கத் தக்கது, எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளானும் முனியத்தக்கது. இறையியலுணராவியற்கையுள்ளது. அறிவிலார் இவரென அறிவிக்கத் தக்கது ஆள்வார் இலியாய் அலையத்தக்கது. அளவிலாக் கேடுகளடையத்தக்கது. ஆம் ஐயா! அது தான் என்னையெனிற் கூறுதும்.ஞாபகமாகக் கவனியுங்கள்,அதுதான் அகப்புறக் கொள்கைகளினும் புறப்புறக்கொள்கைகளினும் சிக்கி உழலல். அஃதாவது, தஞ்

சமயக் கொள்வகைகளில் சிலபாகங்களை ஒட்டியும் அனுஷ்டித்தும் தஞ்சமயக்கடவுளைச் சிலகாலம் வணங்கியும்; ஏனையவொரு சமயக் கொள்வகைகளில் சிலபாகங்களை ஒட்டியும், அனுட்டித்தும்; அச்சமயக்கடவுளைச் சிலகாலம் வணங்கியும்; ஆகவே, அங்ஙனம் ஒரு சமயக்கொள்வகைகளின் உண்மை இலக்கணங்களையும், அக்கடவுளின் உண்மை இலக்கணங்களையும் உண்மையில் சரிவரத் தேர்ந்து, தெரிந்து தெளிந்து கொள்ளாமையால் அவ்விரண்டு பக்கத்து சமயக் கொள்வகைகளிடத்தும், இறைவர்களிடத்தும் பூரணநம்பிக்கையும், பேரன்பும், முதிர்ந்த பக்தி விசுவாசமும், இன்றியனுட்டித்துக் காலத்தை யோட்டும் ஓர் இழிந்த செய்கைகளேயாம். இவ்வாறு சிக்கி உழலுவதான இவ்விழிந்த செய்கைகளானது சிறிது ஆய்ந்துநோக்குமிடத்து, நமது செந்தமிழ் இந்தியாவின்கண் சாதாரணமான "பள்ளர் பறையர், வேடர், வில்லியர், கள்ளர், மறவர், அகம்படியார், வல்லம்பர், சாணூர், சக்கிலியர், சலுப்பர், வலையர், புலையர், இருளர், பரவர், தொம்பரவர், குறவர், கூத்தாடிகள்" முதலிய சில கீழ்த்தரவகுப்பார்களிடத்துங் கூடக் காண்டல் அரிதாகவே முடியும். பின்னர் யாவர் பாலென்னின்? உயர்ந்தவகுப்பார் என்றும். கல்வி அறிவு நல்லொழுக்க முதலிய நாகரீகங்களிற் சிறந்த சில ஆசார சீலமான பழக்க வழக்கங்களிலே மிக்கத் தெளிந்து, தேர்ந்த வகுப்பார் என்றும், தங்களைத் தாங்களே உயர்த்துக் கூறிப் புகழ்ந்து கொண்டாடிக் கொள்ளப்படுகிற வேளாண் மரபைச் சார்ந்த சில சைவவேளாளர், கார்காத்தார், தொண்டைமண்டலத்தார், சில்வகைவணிகர், கம்மியர், பார்ப்பார் முதலிய வகுப்பார்களிடத்துத்தான், பெரும்பான்மையும் காணப்படுகின்றன. என்றால், இவ்வகுப்பார்களின் விஷயத்தைப்பற்றி எவ்வகை முகாந்தரங்களைக் கொண்டும், ஈண்டு விவரித்தல் எட்பிளவும் நியாயமாகாது. ஆனால், நமது மகாசமுகத்துண்மட்டும், இதுகாறும், அக்கொடுஞ் செய்கைகளானது, வந்து நுழைந்து கொள்ளவில்லை. இனிமேலும் அவைகள் வந்து நுழைந்து கொள்ளாத வண்ணம் முன்னதாகவே அணைக்கோலிக் கொள்ளவேண்டுவதுஉம் நமது, மகாசமுகத்தைச்சார்ந்த பேரறிவாளர்களின் முதற்கடமையும் ஆகும். இது விஷயத்தின்மட்டும் நமது, மரபார் எந்தனூன்றும் ஞாபகமாயிருத்தலும் வேண்டும். ஆம், என் ஐயா! நுமக்கென்னை ஞாபகமில்லையோ? வஞ்சமாகவேன் வரையத்துணிகின்றீர்? நமது,மகாசமுகத்துண்மட்டும் இதுகாறும் அக்கொடுஞ் செய்கைகள் வந்து நுழைந்து கொள்ளவில்லை என்பது நுமக்கு எப்படித் தெரியும்? தெரியாத தொன்றை ஏனோ தெரிந்ததாய்க் கூறத்துணிகின்றீர்? பெரியதோர் சாம்பர் பூசணைக்காயைப் பிடிசோற்றில் அமுக்கிக் கொள்வதென்னின் அஃதெப்படி நுமக்குச் சாத்தியமாகும்? நமது நாடு நகரங்களின் வளப்பங்களையும், தற்கால இயற்கைகளையும், நமது மரபார் சிலரின், கொள்வகைகளையும் நீவிர், என்னை அறிந்தி

வீர்போலும்! நீவிர் எப்படி இந்நூல் வரைதற்கு முற்பட்டீர்? யாம் சில கூறுவாம் கவனித்துக் கேண்மின், நமது, மகாசமுகத்துள் இக்காலம் சிறு பான்மையோர் முடியைச் சிறிதுவளர்த்து வெட்டிவிட்டுக் கொள்கிறார்களே அக்கொள்கை புறபுறக்கொள்கையோ அன்றோ? புறக்கொள்கை என்பது யாங்ஙனம் பொருந்தக்கூடும்? அக்கொள்கை மேனாட்டார் கொள்கையன்றோ? அவர்களுக்கு உரியசமயம் நமது சைவசமயந்தானோ? சிறிது ஏறக்குறைய இற்றைக்கு இருபஃதாண்டுகளாக அகப்புறக் கொள்கைகளும், புறபுறக்கொள்கைகளும் நமது, மரபார் இடத்தும் வந்து நுழைந்து கொண்டனவென்றால், நுமக்கெவன்கேடு? நமது, இதுதான் போகட்டும், நமது மகாசமுகத்தைச்சார்ந்த எத்துணையோ பலர் தங்களின் கொடிவழிகளுக்கும், லௌகிக வைதிகமுதலிய வியவகாரங்களுக்கும் அடிபீடமாய் நிற்பது "சிவாலயம்" என்பதையும், அவ்வாலயத்துக்கு அடிபீடமாய் நிற்பது "நமது பரமசிவப்பெருமானே" என்பதையும், அவர்க்கு அடிபீடமாய் நிற்பது, "சைவசமயம்" என்பதையும், அச்சமயத்துக்கு அடிபீடமாய் நிற்பது நமது, "சுத்தாத்துவிதச் சைவசித்தாந்தக் கொள்வகைகளே" என்பதையும், ஒரு சிறிதளவுகூட ஞாபகம் இன்றி முற்றமறந்து, "விபூதி, உருத்திராக்க தாரணிகளாய், சமயதீக்கை உற்றவர்களாய் இருந்தும், ஆழ்ந்த கருத்தோடுகூடிய பேரறிவாண்மை இன்மையால், அணுவளவுகூட நாணமெட்கமின்றிச் செத்துச் செத்துப்பிறக்கின்ற தேவாலயமாகிய வைணவாலயங்கள் உள்ளும் பிறர்யாவரும் காணப் பிரவேசிக்கின்றார்களே அஃதெவன் கருதியோ? அஃதெவன் அகப்புறக் கொள்கையும், புறப்புறக் கொள்கையும் அன்று? அஃதெவன்நுங்கட்குத் தெரியாததும் ஆமோ? அவர்களுடன் சார்ந்த சிலர் புரட்டாசி சனிக்கிழமைகளினும், ஏனைய சில தினங்களினும் ஒற்றை நாமத்தையுஞ் சாற்றிக் கொள்ளுகின்றார்களே, அஃதென்னை நீங்கள் கேள்விப்பட்டதும் இல்லையோ? மேலும், "அரியக்குடி நகரம் அத்தனைபேர் அத்தனையும் வரிசைக்குடியாக வாழ்கவே" என்று பாடுவான் முத்தப்பசெட்டியார் அவர்களால் சாபம் ஏற்றுக்கொண்ட அரியக்குடி நகரத்தையும், சில சமயங்களாங்கு நடைபெறும் வேடிக்கைகளையும் நீங்கள் கண்டதுமில்லையோ? கொடிய வைணவர்களைப் போன்றுங் காணப்படுவார்கள் "சிவா" என்ற மந்திரம் அவர்கள் செவிக்கு நாராசம்போன்றதாகவே காணப்படும். சிலவாண்டுகட்கு முன்னர் காலஞ்சென்ற கானாடுகாத்தான், க. வெ. சித. சிதம்பரஞ்செட்டியார் அவர்கள் என் நெற்றியில் "அரியக்குடிப்பெருமாள்" நேரில் வந்து ஒற்றை நாமத்தைச் சாற்றிவிட்டுப் போயினர் என்றுஞ் சொல்வார்களன்றோ? அவர்களால் அரியக்குடிபெருமாள் கோவில் "திருப்பணிகளானதும்" இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் தேவகோட்டை முத்துக். கரு. வெ. அழகப்ப செட்டியாரவர்களால் "மதுரை" யில் ஓர் பெருமாள் கோவில் பெரியதிருப்பணியாக நடந்

ததும், திருமயம் பெருமாள் கோவிலுக்கு நமது, மரபைச் சார்ந்தார் எத்துணையோ பலர் சிறப்புக்கள் நடத்துவதும், இன்னும் எத்துணையோ நடப்பதும், வெள்ளிடைமலைபோன் தெள்ளிதில் எவர்கட்கும் வெளிப்படையாகத் தெரிந்ததோர் விஷயமே ஆம் அன்று? மேலும், "சத்தாதியைந்தினுந் தாக்காத தெய்வம் தனிமறையும் கத்தா வெனுந்தெய்வம் தில்லையம்பலத்தே கண்டோம் கண்களிருபத்தானவன் மைந்தன் பொய்ச்சீதையை வெட்டப் பார்த்தழுது பித்தானவன் தன்னையோ தெய்வமாகப் பிதற்றுவதே" என்று சாதாரண எவர்களும், படித்தும், பேசியும் கொள்ளப்படுகிற காளமேகப்புலவரின் கவியையுங்கூடக்கேட்டிரார்கள் போன்று "இராமன்காதை" யிற் பக்தி சிரத்தையோடு கூடியவர்கள் எத்துணையோ பலர் நமது,மகாசமுகத்தும் உளர் என்பதும் நீங்கள் அறிபாததாமோ? அகப்புறக் கொள்கைகளும், புறப்புறக்கொள்கைகளும் நமது, மகாசமுகத்தையும் வந்து சூழ்ந்து கொண்டனவாம். அந்தோ! என்செயலாம்! காலகதியேபோலும்! மாறுதலான காலத்தை மறுத்து; எங்களின் சைவசமயக் கொள்வகைகள் ஒருங்கையும் எங்களின் மரபாரை விட்டு எந்தக்காலத்தும் நழுவவிடாதவண்ணம் நிறுத்து; ஏனைய சமயக் கொடிகள் எங்களின் மகாசமுகத்துள்ளும் வந்து படரவொட்டாத வண்ணம் அடியொட்டவேரோடும் அறுத்து; எங்களின் பூர்விகக்கட்டுக்களைச் சிறிதும் நெகிழவிடாத வண்ணம் திரும்பவும் இறுக்கிக்கட்டற்கும் உரிய ஒருவன் இன்னும் பிறக்கவில்லைப்போலும்! "தமது அரியதிருக்கரத்தில்வேலாயுதம் ஏந்திச் சிலதிருவிளையாடல்களைப்புரிதற்கும் விரைவில் ஒருவன்வருவான் போலும்"! மேலும், நமது, சித்தாந்த சாத்திரங்களிலும், சமயாசார நிலங்களினும், எத்துணையோ சிறந்த சில பிரபுக்களும், ஏனைய சில சகோதரர்களும் நமது சைவசமயத்து முதற்குரவர் பெருமானாகிய மாணிக்கவாசக சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய, "புற்றில் வாளரவும் அஞ்சேன் பொய்யர்தம் மெய்யும் அஞ்சேன் கற்றை வார்சடை எம் அண்ணல் கண்ணுதல் பாதம் நண்ணி மற்றும் ஓர் தெய்வந்தன்னை உண்டென நினைந்தெம் பெம்மாற் கற்றிலாதவரைக் கண்டால் அம்ம! நாம் அஞ்சும் ஆறே" "வெருவரேன் வேட்கைவந்தால் வினைக்கடல் கொளினும் அஞ்சேன் இருவரான் மாறுகாணா எம்பிரான் தம்பிரான் ஆம் திருவுரு அன்றி மற்றோர் தேவர் எத்தேவர் என்ன அருவராதவரைக் கண்டால் அம்ம! நாம் அஞ்சும் ஆறே" "பிணியெலாம் வரினும் அஞ்சேன் பிறப்பினோடு இறப்பும் அஞ்சேன் துணிநிலா அணியினான் தன் தொழும்பரோடு அழுந்தி அம்மால் திணிநிலம் பிளந்தும் காணாச் சேவடிபரவி வெண்ணீறு அணிகிலாதவரைக் கண்டால் அம்ம! நாம் அஞ்சும் ஆறே" இப்பாசுரங்களை நன்கு ஓதியுணர்ந்தவர்களாய் இருந்தும், நாடோறும் பாராயணஞ் செய்பவர்களாயிருந்தும், சிறிது, ஞாபகமும் இன்றி புறப்புறக்கொள்வகைகளையுஞ் சார்ந்து, அவ்வாலயங்கட்கு எத்துணைச் சிறப்புக்கள், எத்துணை அருச்சனை

கன் முதலிய பூசைகளை நடாத்தி வருகிறார்கள், மேலும் நமது, சைவசமயத்து பத்தாந் திருமுறையாகிய திருமூலர் திருவாய்மலர்ந்தருளிய திருமந்திரத்து "சிவனோடு ஒக்குந்தெய்வம் தேடினும் இல்லை அவனோடு ஒப்பார் இங்கு யாவரும் இல்லை புவனம் கடந்தன்று பொன்னொளி மின்னும் தவனச் சடைமுடித் தாமரையோனே" "அவனை ஒழிய அமரருமில்லை" அவனன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை, அவனன்றி மூவரான்ஆவதொன்றில்லை, அவனன்றி ஊர்புகும் ஆறறியேனே" "முன்னை ஒப்பாயுள்ள மூவர்க்கு மூத்தவன், தன்னை ஒப்பாய் ஒன்றும் இல்லாத் தலைமகன், தன்னையப்பா வெனில் அப்பனும் ஆயுளன், பொன்னை ஒப்பாகின்ற போதகத்தானே" "தீயினும் வெய்யன், புனலினும் தண்ணியன், ஆயினும் ஈசன் அருள் அறிவாரில்லை, சேயினும் நல்லன், அணியன், நல் அன்பர்க்குத் தாயினும் நல்லன் நற்றாழ் சடையோனே" "அடிமுடிகாண்பார் அயன் மாலிருவர், படிகண்டிலர் மீண்டும் பார்மிசைகூடி அடிகண்டிலேன் என்று அச்சுதன் சொல்ல, முடிகண்டடன் என்று அயன் பொய் மொழிந்தானே" இன்னோர் அன்ன சிவாகம திருப்பாசுரங்களும் அவர்களுக்கு ஞாபகம் இல்லைப்போலும்! மேலும், எங்களின், மகாசமுகம் தோன்றிய நாண்முதற்கொண்டு இல்லாத சில கொடுஞ் செய்கைகள் இக்காலம் நிகழ்கின்றன. இத்துணை தூரம் புறப்புறக் கொள்வகைகள் வந்து நுழைந்துகொண்ட இக்காலம் நமது, மகாசமுகத்துள் மட்டும் இதுகாறும் அக்கொடிய செய்கைகள் வந்து நுழைந்து கொள்ளவில்லையென, யாது காரணம் பற்றி வரையத்துணிந்தீர்கள்" "வஞ்சகம் பேசேல்" "வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள் ஐந்தும் அகத்தே நகும்" என்றும் பெரியார் திருவாக்குகள் பல காணக்கிடக்கின்றனவாகலின், அணுவளவுங்கூட வஞ்ச நெஞ்சத்தை ஒழித்து இந்நூலை வரையப்புகுங்கள் ஆம் எம்பி! மெய்மைதான் நல்ல தருணத்தில் ஞாபகம் ஊட்டினீர்கள். என்றாலும், நமது, மகா சமுகமும், நமது மரபாரும் அத்துணை தூரந் தெரிந்துகொள்ளாமலில்லை. எல்லாம்வல்ல நமதிறைவர்க்கு "தனு அது, விழியுடன் ஓராயிரங்கமலப் புதுமலர் கொண்டரி பூசனையாற்றன்" முதலிய எத்துணையோ சிறந்த திருத்தொண்டுகளும், பக்தியும், அன்பும் உடையாராய் பழவடியார் கூட்டத்துட் சிறந்த கிழவடியாராய்த் தோன்றும் காரணங் கொண்டே ஒருவாறு நமது, மகாசமுகத்துட்சிலர் தாங்கள் கூறிவந்த மேற்கண்டவாற்றிற்கு உடன்பட்டும் இருக்கலாம். என்றாலும், நியாயம் ஆய்ந்து நோக்குமிடத்து, அடியார் நிலைமையில் வைத்து, எத்துணையும் பல சிறப்புக்களும் செய்யலாந்தான். அதற்கு மறுதலையான ஏனைய பலமார்க்கங்களினாலும் எண்ணி நோக்கிச் சிறிது, உயத்துணர்ந்து ஆராயப்புகின், "தனியாலயங்கள் நாம் கட்டிவைக்கவேண்டுவதும், அருச்சனைகண் முதலிய பல சிறப்புக்கள் நடாத்துவதும், திருப்பணிகள் செய்வதும், சுத்தாத்துவித சைவசித்தாந்தக் கொள்வகைகளை உடைய நமது, மகா சமுகத்துக்குக் கூடாத

காரியந்தான் என்பதை அறிவாளிகளாய் உள்ளார் ஒவ்வொருவரும் நன்குணர்தல் வேண்டும். மேலும், நவரத்தினங்கள் உள்ளுங்கூடத் தாழ்ந்த குணங்களை உடையவைகள் சில விருத்தல் இயற்கையேயாம் அன்ரு? ஒரு நெற்குவை ஒருங்குங் கவனிக்குமிடத்து உயர்ந்த சீரகச் சம்பாவே எனினும் உள்ளீடு அற்ற சிலபதர்களும் அக்குவை நெற்களுடன் கலந்திருத்தலும் இயற்கையேயாம் அன்ரு? அஃதேபோன்று, நமது மகாசமுகத்தும்; உண்மைகளையும் நமது பூர்வீகக்கொள்வகைகளையும் சமயவிலக்கணம் கடவுள் இலக்கணங்களையும் வரன்முறைக்கட்டுக்களையும் நன்குதெள்ளத் தெளிந்து உணர்ந்து தங்கட்குரிய கட்டுக்களுக்கு அடங்கி ஒழுகவேண்டும் பேருருங் குணங்களாகிய உள்ளீடு இல்லாத சில போலிச்சகோதரர்களும் இருக்கத்தான் செய்வார்கள். அதற்காக யாவர்தான் என் செயக்கூடும்? காலக்கிரமத்தில் மிக நன்ருகத் திருந்திவிடுவார்கள்.

கூ. இனி நமது மகாசமுகத்துக்கு சமயதீக்கைபுரியும், பேராசாரியன் மார்களைப்பற்றியும், அவர்களின் பரம்பரையைப் பற்றியும் சிறிது எமக்குத் தெரிந்த மட்டில் நன்கு வரையத் தொடங்குவாம். அஃதாவது, சிவாகம சித்தாந்த நெறியின்ருெழுகும், சிவப்பிராமணருள்ளும், உயர்ந்த சுத்தாத்துவித சைவசித்தாந்தக் கொள்வகைகளையே, மேற்கொண்ட அந்தணுேத்தமப் பெரியோர்களே நமது மரபாரின் ஆண்பாலாருக்குச் சிவதீக்கை புரியும் சிவாச்சாரியர்களாம். அவர்களுக்குரிய ஆச்சிரமம் சந்நியாசி ஆச்சிரமமேயாம். இவ்வாசாரியன் மார்களின் சரித்திர ஆராய்ச்சியினின்றும், நமது மகாசமுகம் எந்தக்காலத்தும் நமது சைவசமயத்தைமட்டுமே சார்ந்துள்ளன வென்பது மிகத்தெளிவாக நன்கு விளங்கக்கூடும். ஆதியில் நாகநாட்டிலே சாந்தியாபுரி என்னும் நகரத்து, நமது, மரபர்க்கு "சதாசிவகுருபீடம் என்பதும்" "தொண்டை மண்டலமிலாக்காவுக்குத் தலைநகரமாகவிளங்கிய காஞ்சீபுரம் என்னும் நகரத்து நமது மரபார்க்கு அருணகிரி சிவசங்கராச்சாரியக்குருபீடம் என்பதும்" அதற்குப் பின்னர் காவிரிப்பூம்பட்டினத்து நமது மரபார்க்குச் சிதம்பரத்திஉள்ள பதஞ்சலிச்சேத்திரத்தில் "ஈசான்யச் சிவாச்சாரியகுருபீடம் என்பதும்" அதன்பின்னர் மேற்கண்ட ஈசான்யச்சிவாச்சாரியார் திருமுகப்படி நமது மரபார்க்கு இப்பாண்டிநாட்டின்கண் பாண்டிநாட்டாச்சாரியகுருபீடம் என்பதும்" தனவைசியராகிய நாட்டுக்கோட்டை நகரத்தார் சரித்திரம் என்ற சிறுபுத்தகத்து மிக நன்கு விளங்குவதொன்ரும். மேலும், நமது மரபின் பெண்பாலார்கள் தீக்கை பெற்றுக்கொள்ளும், ஆசாரியக்குருபீடச் சரித்திரங்களையும், மேற்கண்ட ஆசாரியச்சரித்திரத் தொடர்ச்சிகளையும் "நாட்டுக்கோட்டைவைசிய மகாசமுகத்தின் மடாதிபதிகள்" என்னும் புத்தகத்து நன்கு விரிவாகக் காணலாம்.

ம. இனி, நமது, மரபார் பூர்வீகமாய்த் தொன்று தொட்டு அநுட்டித்துக் கொண்டுவருகிற "பிள்ளையார் நோன்பு" என்னும், விஷயம் பற்றியுஞ்சிறிது, நன்கு விளங்க இனிது விளக்குவாம். அஃதாவது, "என்னரே ஆயினும் யாவதொன்றெண்ணுதன், முன்னரே உனது தாண்முடியுறப் பணிவரேல், அன்னர்தஞ் சிந்தைபோல் ஆக்குதி! அலதனே, உன்னலார் செய்கையை ஊறு செய்திடுதி. நீ! என்று எல்லாம் வல்ல நமது முழுமுதற் கடவுளால் கட்டளைபெற்ற கணபதி நாயகரும்; சர்வாண்ட பிண்ட சராசரங்களாகிய ஒருங்கும் அடங்கப்பெற்ற சுவர்க்கமத்திய பாதாளமாகிய மூன்று வுலகங்களுக்கும் ஞான நாயகரும்; நான்மறை நாயகரும்; வான நாயகரும்; பரம்பொருள் நாயகரும்; ஆதி நாயகரும்; அருமறையுணரா அறுமுக நாயகர்க்கு முன்னே தோன்றிய அநாதி நாயகரும்! நிருமலமாகிய பிரணவ சொரூப சோதி நாயகரும்; சர்வ ஆன்மகோடிகளாலும் துதிக்கப்படுற துதிக்கையைப் பெற்று அத்துதிக்கையோடுகூடிய யானை நாயகரும், தம் அடியவர்கட்கு நிகழும் சர்வ விக்நங்களையும் ஒழித்து, தனுகரணபுவன சகலபோகாதிபாக்கியங்களையும், நித்தியமாகிய சித்தி முத்திகளையும், கொடுத்தருளத்தக்கப் பூதநாயகரும்; ஆகிய எல்லாம் வல்ல விக்நவிநாயகரை நமது, பூர்வீகப் பெரியார், தங்களின் குலங்கோத்திராதிகள் ஒருங்கும், எந்த ஞான்றும், புத்திர பௌத்திரர்களோடு சகலசம்பத்துக்களையும், குபேர நகரங்களையும் இந்திராதிபோகங்களையும் பெற்று நீடூழிவாழ்ந்து நிலைத்திருக்கும் பொருட்டும், தங்களின் செல்வச் செழுமையும், பக்தியின் வனப்பும், அன்பின் பெருக்கமும் யாவர்க்கும் நன்கு விளங்கும் பொருட்டும், விலையேறப்பெற்ற உயர்ந்தவோர் மரகதத்தாலே செய்வித்து, அவ்விக்கிரகத்துக்கு மரகத விநாயகர் எனத் திருப்பெயரையும் புனைந்து, வேண்டிய சீர்சிறப்போடும் வைத்துப் பூஜித்து வந்தார்கள். அந்த நாட்டொடக்கம் அவ்விநாயகர் நோன்பாகிய விரதத்தையும் கெட்டியாகக் கையாண்டு அநுபவத்துக்குக் கொண்டுவந்திருக்கிறார்கள், அவ்விநாயகர் எந்தஞான்றும் பிள்ளையாயிருக்கும் காரணங்கொண்டும், எல்லாம் வல்ல இறைவர்க்கு "தந்தைக்கு முன்னே மகன்பிறந்தானே" என்றவாறு முதற் பிள்ளையாக முன்னேதோற்றிய காரணங் கொண்டும் "பிள்ளையார்" எனவும், அப்பிள்ளையாரைக்குறித்து வருஷத்துக்கொருமுறை யாண்டும் சிறப்பு வகையிலே நியமமாக நோற்கும் தவவொழுக்கத்தின் ஆற்றலுக்கே "விரதம் அல்லது நோன்பு" எனவும் பெயர் பெறுகின்றன. மேற்கண்ட இப்பிள்ளையார் நோன்பாவது,நமது மரபைச்சார்ந்த ஒவ்வொருசிறுவர் சிறுமிகளும் ஒவ்வொரு சகோதர சகோதரிகளும் தொன்று தொட்டுப் புராதனமாக அநுட்டித்துக் கொண்டுவரும் ஓர்தவவொழுக்கமாகும். அஃதாவது கார்த்திகைத்திங்கள் கிருட்டிணபக்கத்துப் பிரதமதிதியின் காலையினின்றுந் தொடர்ந்து, மார்கழித்திங்களின் சுக்கில பக்கத்துச்சட்டித்

திதிமுடிவோடு முடிவடைகிறதாம். அருமையான ஓர் பெரியகாரியங்களை ஒழுங்காகச் செய்துகொண்டு முடிக்கவேண்டுமென்றால் அதற்காக ஓர் காப்பு அல்லது கங்கணங்கட்டிக்கொள்வது நமது,பாரதகண்டத்தின் பூர்வீக வழக்கமாம். ஆகலின், மேற்கண்ட இந்நோன்பானது நன்கு நடை பெற்று மிகச் செவ்வனே முடிவுபெறவேண்டுமோற்றைக் கருதி "நீ இராடல், நிலக் கிடைகோடல், தோஒலுடுத்தல், தொல்லெரிபோம்பல், ஊரடையாமை. உறுசடைபுனைதல்" காட்டிலுணவு, கடவுள் பூசை, ஏற்றதவத்தின் இயல் பெனமொழிப" என்றாராகலின், புதுக்கொட்டையினுறைற்ற நன்னூலா கக்கண்டு, அந்நோன்பு நாட்களான இருபத்தோர் நாட்களுக்கும் இருபத்தோர் இழைகளையும் ஒருங்கு ஒன்று சேர்த்து எடுத்து, திருமஞ்சனீராட்டிக் கன்னிநூற்காப்பாக்கி விநாயகர் முன்னிலையிலே வைத்து. அவர்க்குரிய பதார்த்தங்களொருங்கையும் படைத்து தூபதீப கற்பூராராதனைகள்செய்து ஏ ஈஸ்வரா! ஏ விக்நவிநாயகப்பிரபோ! யாம் யாண்டும் உள்ளேமாக" "இற் றைநாண் முதல் இந்நோன்பு முடியும் நாண்மட்டும், ஒவ்வொருநாளும் காலை மாலை உச்சி ஆகிய மூன்று காலங்களினும் நன்கு ஸ்நானஞ் செய்வேனாக" பட்டாடை தரித்துக்கொள்வேனாக நித்தியவனுட்டான கருமங்களையும், ஜெபதவங்களையும் நுமக்குச் செய்ய வேண்டும் ஆராதனைகளையும், தோத்திராதிகளையும் முறையாக ஒவ்வொரு நாட்களினும், அந்தந்தக் காலங்களைத் தாழ்த்தாது செய்து முடிப்பேனாக; வெறுந்தரையிலே கிடந்து நித்திரை செய்வேனாக; இன்றைநாண் நும சந்நிதியிலே ஏற்றியதீபத்தை யாம் எடுத்துக்கொண்ட இந்நோன்பானது பூரணமாகிற வரை அன்று ஏற்றிய தீபமே எனயாவரும் வியப்ப வோம்பு வேனாக; "நும் சந்நிதியாகிய இக் கோயிலை விட்டு வெளியேறு திருப்பேனாக; "இந்நோன்பு முடிவாகும் வரை முடிவளர்ப்பேனாக; காய்கனி கந்த மூலாதிகளையுண்பேனாக, இன்றேல் ஒருபொழுது உண்பேனாக; சிற்றின்பாதி போகங்களைக்கன விலும் நினையேனாக; எவ்விதமான தீய செய்கைகட்கும் உடன்படேன் ஆக; நும்முடைய புராணத்தை மிகச் செவ்வனே படித்துமுடிப்பேனாக, யாம் எடுத்துக்கொள்ளும் எந்தவிதமான தொழின்முறைகளிடத்தும் எவ்வித விக்நனங்களும் நிதழாதவண்ணம் எல்லாம் வல்லநீவிர் எம்முன் னின்று செய்து முடித்துத் தந்தருளுவீராக. இஞ்ஞாலம் ஒருங்கும் நல் வாழ்க்கைகளைப் பெற்றுய்யுமாறு திருவருள் புரிவீராக; என்பனவாதிய மகா மந்திரங்களைப்போன்ற வீரதீரமான வைராக்கிய மொழிகளாலே பல காரியங்களையும் சிந்தித்து நன்கு சங்கல்ப்பித்துக்கொண்டு, அந்தப் பிரதமதிதியின் முதற்காலத்தில் ஆண்மக்கள் யாவரும் தங்களின் வலக்கரத்தினும், பெண்மக்கள் யாவரும் தங்களின்இடக்கரத்தினும் சுமங்கலம் உடையார் ஒருவரைக்கொண்டு மேற்கண்ட அந்நூற்காப்பைக் கட்டிக் கொள்வது. நமது மரபாரின் பூர்வீக வழக்கமாம். நமது சமயக் கொள்கையுமாம்.

அது தான் பிள்ளையார் நோன்பாகிய தவவொழுக்கத்தினின்றும் எட்பிளவும் நழுவவிடாதவண்ணம் நம்மைக்காக்கும் ஓர்காப்பும், கங்கணமும் சக்தியும் ஆகும். இனி நண்ப! இத்தவவொழுக்கத்தின், முறையே தாங்கள் சொல்லிக் கொண்டதின்படி மேற்கண்ட ஒவ்வொருநாளும் அநுட்டித்து வந்து, ஈற்றிலே முடிவாகிறதினத்தன்று, அவ்விநாயகருக்கு அபிடேகாதி அலங்காரங்கள் செய்து, பட்டாடைசாற்றிப் புட்பமாலைகள் புனைந்து, ஆவரங்கொம்பொன்றில் நெல்நாறும், கண்ணு மூலிகையும், கொன்றைப்பூ அவாரம்பூக்களையும் கூட்டி ஒன்றாகச் சேர்த்துக்கட்டி அவ்விநாயகரின் வலத்தோட்பக்கத்திலே சாற்றி, பல்வகைநைவேதனங்களுஞ்செய்து, அவல் பொரி, கடலை, அப்பம், எள்ளுண்டை, தேங்காய் பழம் முதலியவைகளையும் சிறப்பாகப் படைத்து, பச்சரிசிமாவுடன் தேன் சர்க்கரை நெய்கலந்து, சிறிது ஏலஞ் சுக்குகளையும் பொடித்திட்டு நன்றாகப் பிணைத்து அவ்விநாயகர்திருமுன்னே பண்ணையிட்டுப் படைத்து அப்பண்ணையின் மிறைய ஆநெய்வார்த்துத் தங்கரத்திலார்த்துக்கொண்டிருக்கும் காப்பு நூலையவிழ்த்துத்திரிநூலாகத்திரிதுப் போட்டுத்தீபமேற்றி அம்மாவிளக்குத் தெரிசனத்தையும் நன்றாகப் பார்த்துப் பூராத்திரியும் எரிந்து சாம்பிராணவுடன் தூபம் தீபம், கற்பூராராதனைமுதலிய சகல ஆராதனைகளையும் முறைகளாகச்செய்து, நமஸ்கரித்து "வாக்குண்டாம்; நல்லமனமுண்டாம்; மாமலராள் நோக்குண்டாம்; மேனிநுடங்காது; பூக்கொண்டு துப்பார்திருமேனி தும்பிக்கையான் பாதம், தப்பாமல் சார்வார்தமக்கு" என்றும் "சீதக்களப" என்று தொடர்ந்து அவ்விநாயகர் அகவல் முதலிய தோத்திரங்களையும்பாடி "அம்மாவிளக்குமா முதலிய அன்னபானாதி பிரசாதங்களை யாங்குடைத்தான யாவருக்கும் வினியோகப்படுத்தித் தாங்களும் அன்புடன் அருந்தி" அந்நோன்பாகிய தவத்தினைப் பூர்த்தியாக்க வேண்டுவதே நமது பூர்வீகக்கொள் வகையாம். மேலும், நண்ப! ஆவாரங்கொம்பும், ஆவாரம்பூவும் நெல் நாறும், கண்ணுமூலியும், ஒன்றாகக்கட்டி எதுக்காகச் சாற்றுதல் வேண்டும்? அங்ஙனஞ்சாற்றும் முன்முறை யாண்டுள்ளது? நமது வைசியவகுப்பாருக்குரிய க்ஷேமலாபங்கள் உண்டாகவேண்டும் மார்க்கங்கள் ஒருங்கும் துலாக்கோல் சம்பந்தம் பற்றியே அன்றோ? நமது, வைசியமர பார்க்கு மட்டும் உரியனவாகக் காணவேண்டுமாயின் அங்ஙனம் துலாக்கோல் சம்பந்தமானபாவனை ஒன்றல்லவா காணுதல்வேண்டும்? இஃது எக்காரணம் கொண்டு என்னில்? நண்ப! விளக்குதும். அஃதாவது, "மேழிபிடிக்குங்கை வேல்வேந்தர் நோக்குங்கை" என்றும் "வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான்" என்றும் காணப்படுகிற நமது, மரபாரின் மாதுருவர்க்கத்தாராகக் காணப்பெறும் "பூவைசியர்கள்" இன் க்ஷேமலாபங்களையும் குறித்து வணங்கும் "அறிகுறியான" ஓர்வணக்கக்கொள் வகையுமாம். இதுநிற்க. நண்ப! நமது, பூர்வீகப்பெரியார் போற்றிப்

புனேந்து, ஆராதித்துக் கொண்டுவந்த "மரகதவிநாயகர்" இக்காலம் யாண்டுள்ளார்? அதன் விருத்தாந்தம் என்னையெனின்? சிறிது விளக்குவாம் அஃதாவது, நமது, பூர்வீகப்பெரியார் காரைமாநகரம் வந்து சேர்ந்ததன் பின்னர் சவுந்தரபாண்டியராசன் தான் முன்பு வாக்களித்தபடியே "வைசியர்களை" நோக்கிக்கடலுக்கு மேற்கு, வைகைக்கு வடக்கு, பிரான்மலைக்குக் கிழக்கு, வெள்ளாற்றிற்குத் தெற்கு, இந்நான்கெல்லைக்குட்பட்ட இந்த நாடு வேளாளர் பூமியாயிருப்பதினால் நீங்கள் மூவகையாரும் இங்கேகுடியேறி வசித்திருங்களென்று சொல்லி அரியூர் நகரமும் பிரான்மலைக்கோவிலும், சுந்தரபட்டணமும் அவ்வூர்க்கோவிலும், சோபசாந்திபுரமாகிய இளையாற்றக்குடி நகரமும் அவ்வூர்க்கோவிலும், க்ஷேத்திரசுவாத்தியங்களும் விட்டுக்கொடுத்து, கூடஅழைத்து வந்தக் குருஸ்தானங்களுக்கும், க்ஷேத்திரசுவாத்தியங்களும் விட்டு மரியாதையுஞ் செய்து சுகசீவிகளாய் இருக்கும்படி கட்டளையிட்டு பாண்டியராசன் மதுரை மாநகரஞ் சேர்ந்தான். பின்பு வைசியர்கள் தாங்கள் மூன்று வகுப்பாயுள்ள வேளாளர் குலத்தில் கலியாணஞ் செய்திருத்தலால் எப்பொழுதும் ஒற்றுமையாயிருப்பது முடியாதென்று மேலத்தெரு ஆறுவழியாருக்கு அரியூர் நகரமும், பிராமலைக் கோவிலும்; தெற்குத்தெரு நான்குவழியாருக்குச் சுந்தரபட்டணமும் அவ்வூர்க்கோவிலும்; கீழத்தெரு ஏழு வழியாருக்கு இளையாற்றக்குடி நகரமும் அவ்வூர்க்கோவிலும்; உரிமையுள்ளவைகளாகப் பாகித்துக் கொண்டு மூவகையார்க்கும் பொதுவாயுள்ள மரகத விநாயகரை அரியூர் மேலைத் தெருவில் கோவில் உண்டாக்கி வைத்துப் பூசைசெய்து வருகிறதென்றும், அதற்கு நித்திய நைமித்திக பூசை திருப்பணி முதலியவை மூவருக்கும் பொதுவில் நடத்துகிறதென்றும், மூன்றுவகையாரும் ஈசான்யசிவாச்சாரியார் திருமுகப்படிப் பாண்டி நாட்டாசாரியரிடத்துத் தீட்சாகிரியை முதலானவை தங்கள் தங்களுக்கு இஷ்டமானகாலத்தில் பெற்றுக் கொள்கிறதென்றும், பேசித் தீர்வைசெய்து கொண்டார்கள். ஒவ்வொரு வகுப்பிலும் நேரிடுகிற விவகாரங்களை அவ்வவ் வகுப்பாரே விசாரித்துத் தீர்வை செய்கிறதென்றும், மாதா, பிதா, குரு, தெய்வம், வைதீகர் முதலிய பெரியோர்களுக்குமட்டும், வந்தனைவழிபாடு செய்கிறதென்று, அரசர்களையும், உத்தியோகத்திலிருக்கிற பிராமணர்களையும், மற்ற எவரையும் வணங்குகிறதில்லை யென்றும், மூன்று பிரிவாரும் பேசிமுடிவுசெய்தார்கள். சௌந்திர பாண்டியராசனும் இவர்களுக்குக் கொடுந்தண்டனைகள் விதிக்கிற தில்லையென்று உறுதிகூறி ஆணையளித்தான். இவ்வாறு, நெறிவழுவாமல், ஏழுவழி இளையாற்றக்குடி நாட்டுக்கோட்டை நகரத்தார் ஒருமித்து இளையாற்றக்குடியில் வாழும்நாளில், பின்பு தங்களுள் ஒற்றுமைப்படாமல் சிலர்தவிர மற்றையோரெல்லாரும், எண்வகையான கூட்டத்தாராகித் தங்கள் தங்களுக்கு வேறு வேறு கோவில்கள் விட்டுக் கொடுக்கவேண்டு

மென்று பாண்டியராசனைக் கேட்டுக்கொள்ள அதற்கிணங்கிச் சாலிவாகன சகாப்தம் கூ௱ங௰ச—கலியுகவருஷம் ங௲அ௱௰ங-ல்.

க. ஓர்வகைக் கூட்டதார்க்குக் கேரளசிங்கவள நாட்டில் திரிபுவனசக்கரவர்த்தியால் "ஐந்நூற்றீசரையும் பெரிய நாயகியம்மையாரையும்" பிரதிஷ்டைசெய்த, க்ஷேத்திரமாகிய் அதிவீர பாண்டிய புரமென்னும் "மாற்றூர்க்கோவிலும்"

உ. மற்றொருவகைக் கூட்டத்தார்க்கு, வளவேந்திரராசனால் "வளரொளி நாதரையும், வடிவுடையம்மையாரையும்" பிரதிஷ்டை செய்த க்ஷேத்திரமாகிய "வைரவன்பட்டிக் கோவிலும்"

ங, சாலிவாகன சகாப்தம் கூ௱ங௰கூ கலியுகவருஷம் ங௲அ௱௰ரு-ல் மற்றொரு கூட்டத்தாருக்குக் காருண்ய பாண்டியராசனால் "ஆட்கொண்டநாதரையும், சிவபுரத்தேவியையும்" பிரதிஷ்டை செய்தக்ஷேத்திரமாகிய சொர்னபுரமென்கிற "இரணியூர்கோவிலும்"

ச. மற்றொரு கூட்டத்தார்க்கு நேமநாட்டில் நந்திராசனால் "கற்பகவிநாயகரையும் திருவீசரையும், சிவகாமவல்லியையும், மருதீசரையும், வாடாமலர் மங்கையையும் பிரதிஷ்டை செய்த க்ஷேத்திரமாகிய நந்திபுரமென்னும் "பிள்ளையார்பட்டிக்கோவிலும்"

ரு. மற்றொரு கூட்டத்தாருக்கு நேமநாட்டில் நேமராசனால் "செயங்கொண்ட சோளேசரையும், சவுந்தர நாயகியையும்" பிரதிஷ்டை செய்த க்ஷேத்திரமாகிய மதுநந்திபுரம் என்னும், "நேமங்கோவிலும்"

சா. மற்றொரு கூட்டத்தாருக்கு திரிபுவன சக்கரவர்த்தியால் "தான்றோன்றி யீசரையும், சவுந்தரநாயகியையும்" பிரதிஷ்டை செய்த க்ஷேத்திரமாகிய அதிவீர பாண்டியபுரம் என்றும், பிரமபுரம் என்றும் வழங்குகிற "இலுப்பைக்குடிக்கோவிலும்"

எ. சாலிவாகன சகாப்தம் கூ௱ச௰—கலியுக வருஷம் ங௲அ௱௰கூ-ல் மற்றொரு கூட்டத்தாருக்கு "தேசிகநாதரையும், ஆவுடைய நாயகியையும்" பிரதிஷ்டை செய்த பெதரிகாபுரமாகிய "சூரைக்குடிக் கோவிலும்"

அ. மற்றொருகூட்டத்தாருக்குக் "கண்டீசுவரரையும், காமாட்சியம்மையையும்" பிரதிஷ்டைசெய்த கெந்தகாபுரியாகிய "வேலங்குடிக் கோவிலும்" அவைகளுக்குத் தனித்தனியே க்ஷேத்திரசுவாத்தியங்களும் அரசன் விட்டுக் கொடுத்தான்.

கூ. மேற்குறித்தபடி அரசனிடத்திற்கு வாராதிருந்தவர்கள் "கைலாச நாதரையும், நித்திய கல்யாணியம்மையையும்" பிரதிஷ்டைசெய்த இளையாற்றக்குடிக்கோவிலையும் அதற்குரிய க்ஷேத்திசுவாத்தியங்களையும் தங்களுக்குவைத்துக் கொண்டார்கள்.

இப்பால் சாலிவாகனசகாப்தம் ௲௨௱௰, கலியுக வருஷம் ௪௲௬௱அ௰௩ சருவதாரிவருடத்து நடந்த கலகத்தில் அரியூர் பட்டணம் எடுபட்டுப் போனதினால் அந்த வூரிலிருந்த மேலைத் தெருவாராகிய அறுபத்து நான்கு வைசியர்கள் திசைதப்பி மலையாளம் போய்ச்சேர்ந்து கோட்டாற்றங் கரையில் குடியிருப்பு நிலைமை பெற்று மரகத விநாயகருக்குக் கோவிலுங் கட்டி நித்ய நைமித்திய பூசை முதலியவைகளும் நடத்திவருகிறார்கள். நக ரத்தார் சரித்திரம். என்றாலும், அம்மரகதவிநாயகர் இங்கும், அவர்க்காகச் செய்த விக்ரகந்தான் அங்குமாக தற்காலம் விளங்கி வருகின்றார். மேலும், அப்பிள்ளையார் நோன்பாகிய தவ ஒழுக்கத்தினைப்பற்றியும், நோற்கவேண் டும் முறைகளைப்பற்றியும், அவ்வாறு நோற்றார் இன்னார் இன்னாரென்றும் அதனாற் பெற்றபயன் இன்ன இன்னவென்றும், இடையில் அலட்சியஞ் செய்து விடுத்தோரின் கேடு இன்னதென்றும், அதற்கு விக்கிரமார்க்கன் மனைவியருள் ஒருத்தியாகிய இலக்கண சுந்தரியே சான்றாமென்றும் மிகத் தெளிவாக உணர்த்தப்படுகிற "அகத்தியமகா முனிவரான்" திருவாய்மலர்ந் தருளப்பெற்ற அகவற்பாவை ஈங்குதந்திருக்கிறேம். நண்ப! நன்குணர் விர்களாக. "பொன்னிறங்கடுக்கும் புனல் தருகுடுமித் தென்மலையிருந்த சீர்சான் முனிவரன் கந்தமும் மதக்கடவுள் தன் கதையினைச் செந்தமிழ் வகையாற் தெளிவுறச் செப்பினன். மந்தரகிரியில் வடபால் ஆங்கோர் இந்து தவழ்சோலை இராசமாநகரியில்; அந்தணனொருவனும் ஆயிழை பொருத் தியும், சுந்தரப்புதல்வரைப் பெறுதல் வேண்டிக், கடவுளாலயமும் கடிம லர்ப் பொய்கையும், தடமணிப்பள்ளியும் தாம்பல சமைத்துப், புதல்வரைப் பெறுவரம்புக்கு எமக்கு அருள்கென; மதர் விழிப்பாகனை வணங்கி நின் றேத்த, மற்றவர் புரிந்திடும் மாதவங்கண்டு, சிற்றிடையுமையாள் சிவனடி வணங்கிப், பொற்சிலைவளைத்துப் புரமெரிப்படுத்த, பரனே! அன்பர் பழ வினை அறுக்கும் அரனே! மறையவர்க்கருள் புரிந்திடுக என; நச்சு வேல் விழியாய்! நற்குடிப்புதல்வர் இச்சகத்து, இவர் தமக்கில்லை என்றலும்; அம் பிகை மனந்தளர்ந்து, அருவினையறுக்கும், தம்பிரான்றிருச் சரணம் வணங் கி, நம்பிநோற்று உலைந்தார் நாயேன் பொருட்டால், எம்பிரானே இவர்க்கு இன்னருள் புரிகென; மறுத்து உமைஉரைத்த மாற்றம் பொறாமல், கறுத்த உளத்தொடு கவுரியை நோக்கிப், பேதாய்! நீ! போய்ப்பிறவென மொழியக் காதார் விழியாள் கையறவெய்தி, "உருக்கும் நின் ஐந்தெழுத்து ஓதாது, ஒழியாக்கருக்குழிவீழக் கடவதோ" என்று, திருத்தாள் வணங்கிச் செய் பிழையடியேற் கருத்தா நீ! பொருத்தருளென மொழிய, தேங்கமழ் சடை யோன் சிறிதே முறுவல் செய்து, ஆங்குறுதுணையாய் அணுகுவம் யாம் என மீதார் செவ்வத்து விண்ணோர் பயந்த, மாதாங்கொல்லென மாதராகி, ஆர்கலி ஞாலம் அழகுடன் தழைப்ப, சீர்மலி குழலிமுன் சிறுவுருத்தாங்கிப் பாவை சிற்றிலும் பந்தொடு கழங்கும் யாவையும் பயின்ற இயல்பினளாகி, ஐபாண்

டளவுமை ஆடிவளர்ந்த பின், எய்தாமகிழ்வு பெற்று ஈன்றவர் இயல்பினோர் மானிடமறையோர்க்கு வதுவை சூட்ட, வாணுதல் தன்னை மகிழ்வுடன் கேட்க, பிறப்பிறப்பில்லாப் பெரியோர்க்கு அல்லது, அறத்தகு வதுவைக் கண் அணுகலன்யான் என மற்றவன் தன்னை மணமுறவெய்துதல் பொற்றொடி மடந்தை கிற்கு அரிதெனப் புகல அருந்தவ முயற்சியால் அணுகுவன் யான் என திருந்து நல்லறம் சீர்பெறவமைத்து மணிமதுக் கமல மலர்த்தடம் குறுகி, அணிமலர்க்குழலி அருந்தவம் புரிய அரிவை தன் அருந்தவம் அறிகுவன் யானென, இருவரும் அறியா இமையவர் பெருமான், மான் மழு ஏந்தும் வண்ணமது ஒழித்து, ஒருமானிடயோகி மறையவனாகி, குடை தண்டுடன் கிழக்கோலங்கொண்டு, மடமயில் தவம்புரிவாவியிற் குறுகி, தண்ணுறுங் கூந்தல் தையலை நோக்கிப்,பண்ணுந்தவம் "என்பயன் வேண்டி" எனக் கொன்றையஞ்சடையனைக் கூடவென்றுரைக்க, நன்றென நகைத்து நான் மறையாளன், உடுப்பது கோவணம், அடுப்பது சுடலை, எடுப்பது மழு, மான்' ஏறுவது எருது, பாம்பும், எலும்பும், பலகலன் மாலையும், சாம்பரும் அணிந்து, தலையோடேந்தி, பிச்சை கொண்டுழலும் பிஞ்ஞகன் தன்னை, நச்சிநீ, செய்தவம், நகைதரும், நாம் உனைக், கடிமணம் புரியக் கருதி வந்தனம்; பசுந்தொடியணி மடந்தை கிற்கிதுவோ துணிபெனப், பூங்கொடியருந்தவம் பூசுரன் விலக்க, ஆங்கவள் நாணமுற்று அயன்மனை புகுதச், சேடியர் வந்து செழுமலர் குழலியை, வாடுதல் ஒழிகென வணங்கி நின்றேத்தி, சிந்துரவாணுதல் தெரிவையர் அவர்தாம், தந்தைதாய் இருந்த தடமனைக் குறுகி, வாவிக் கரையில், வந்தொரு மறையவன், பாவைதன் செய்கைப் பற்றினன் என்றலும், தாள்தொழுது அடிகளை தருதிர் இவ்விடையெனத், தோடலர் கமலத்தொடைமறை முனிவனை மாடகயாழ்மொழி மங்கையர் கூடி, நீடிய புகழோய் நீ எழுந்தருள்கென, "மைமலர்க்குழலி" வந்தெமையழைக்கின், அம்மனை புகுவன் என்று அந்தணன் கூறப், பொற்றொடி நீ! போய், பொய்கையில் நின்ற, நற்றவமுனியை நடத்திக்கொணர்க என, சிற்றிடை மடந்தை சிறினளாகி, மற்றம் மாதர் மதிமுகம் நோக்கி, நெற்றியிற் கண்ணுடை நிமலனுக்கு அல்லது என், பொற்பமர் கொங்கை பொருந்துதல் அரிதென, மணமிடா தொழியினும் மாதவமுனியை, இணையடி தொழுதிடல் உலகியலாமென, தந்தையும், தாயும் தாழ்ந்து நின்று உரைப்பச் சிந்தை கரைந்து சீறுதல் ஒழிந்து தாயின்சொல் மறுத்தல் பாவமென்றஞ்சி. நாயகியதற்கு நன்றென விசைந்தே, ஆயிழைமடந்தை அவனெதிர் சென்று சேயிழை தாமரைச் சீரடி பணிந்து, மற்றவன் தன்னை மனையிற் கொணர்ந்தபின், பொற்பமர் பலகையிற் பொலிவுறவிருத்தி, வண்ணப் பரிபுர மலரடியவர்க்கங்கு, எண்ணெய்க் காப்புடன் இயைந்தன சாத்தி, மஞ்சனமாட்டி மணித்துகில் புனைந்து, விஞ்சியதவிசின் மேற்பட விருத்தி, ஆடகப் பெருங்கலத்து அறுசுவையடிசில், சூடகக்கையார் துலங்கப்படைக்க, அந்தணன் அமுது செய்த

ருளிய பின்னர், சந்தனம் குங்குமம் சாந்தொடு பனி நீர் இந்தன நுதலார் இயல்புடன் கொணர்ந்து செந்துவர் மேனியில் திகழச்சாத்திச் செவ்வந்தி செண்பகம் செங்கழு நீரொடு, திவ்விய பிறவும் திருமுடிசாத்தி, தக்கோலத் தொடு சாதிக்காயும், சற்பூரத்தொடு கலந்த வெள்ளடைகாய், ஒள்ளியபல வும் உவந்துடன் வைத்து, வள்ளி நுண்ணிடையார் வணங்கி நின்றபின், ஆங்கவள் அருத்திகண்டு அகமிக மகிழ்ந்து, பூங்கொடிக்கு இனியருள் புரிகு வன் யானென, கற்றைச் சடையும், கங்கையும், மதியமும், நெற்றியில் நயன மும், நீலகண்டமும், கரமிருநான்கும் கன்றுமான் மழுவும், உரகக்கங்கண மும் ஒப்பிடற்கரிய பவளமேனியிற் பாங்குடன் அணிந்தத் தவளவெண்ணீ றும், தயங்குமுந்நூலும், கோவணவிடையில் கொடுஞ்சின வேங்கையின் பூவணமான புலித்தோலுடையும், ஏழையடியார் எழுபிறப்பறுக்கும், தாளி டைச் சிலம்புஞ் சதுர்மறைச்சிலம்பும், மாலயன் தேடியுங்காணுவடியும், பா லின் நன்மொழிக்குப் பரிந்து காட்டலும், தாமக்குழலித்தனைப் பயந்தவர் கள், ஏமமுற்றூர்களின் எழுமடிமகிழ்ந்து, பாவையைப் பெற்றுப் பயன் பெற் றோமென, காவண மிட்டுக் காலுறப் புனைந்து; பஞ்சினும் பட்டினும், பழு தறவிதானித்து, மஞ்சுசூழ்கூட மதில்வாயில் எங்கணும், தோரணம் நாட் டித்துகிற்கொடியெடுத்து, பூரண பொற்குடம் பொலிவுறவைத்து கரும்பும் கமுகும் கதலியும் நிரைத்து, குரும்பையந்தனத்தியைக் கோலஞ் செய்து சங்கரன் எங்கள் தார்குழல் தனக்கு, மங்கல நாணிடும், மண நாள் இன்றெ னத் தங்குவான் முரசு சாற்றெனவள்ளுவன் மங்கல முரசுமறுகு தோற்று தலும், மாலயன் முதலியவானவ ரெல்லாம், ஆலமர்க்கடவுள் அணிமணங் காண்பான், விரும்பிவந்தீண்டிவிமலனை எதிர்ந்தே, அரும்பவிழ் தாமரை அடி வணங்கியபின், வலம்புரி முதலாம் மன்னுவாத்தியங்கள், புலம்புகடலெனப் புடவிமுழுதார்ப்ப, கொங்கு அலர்தாமரைக் கொடியிடை தனக்கு அங்கு, ரார்ப்பண அருந்தொழின் முடித்தபின், வார்சடையானையும், மட மயில் தனையும், ஓர் தனி ஆதனத்து உவந்துடன் இருத்தி, விதிமுறைச் சடங்கு விரிஞ்சனபேணப், புதிய மங்கல நாண் பூட்டியருமறை, ஆகமநூல் வழி யாகுதிவேட்டபின், கோகனகக்கொடி கொழு நன் முதலோர், குரவார்கூந் தல் கொடியிடை தன்னுடன், அரவார்கண்டனுக்கு அறுகுபாலேந்த, அரி வையும் இறைவனும் ஆகுதிவலம் வந்து, உரிய மணவறையுட் புகுந்தருளி அரம்பையர் வாழ்த்த அமளியிற்றுயில் கொண்டு, உரம்பயில் கதிரோன் உத யஞ் செய்தபின், விண்ணோர்க்கெல்லாம் விடை கொடுத்தருளிப், பண்ணேர் மொழிமடப்பாவையை நோக்கி, ஓத நீர் வேலி சூழுஞ்சையம் பதிபுகப்போது கவென்று போகிய வந்நாள், இளமதியணிசடை எந்தை தன் அருளால், வள முடன் வழியின், மலைச்சாரலில் "ஓர் களிறும் பிடியுங் கலந்தது காணு ஒளிர் மதி சடையோன் உமைமுகம் நோக்கி, ஓர்வழியன்றி மற்றோர் திசைதன் னைப் பாராதேவா! பணிமொழியாய்! என, வாரார் முலையாள் மற்றும் உண்

டோவென, மெல்லியல் உமையவள் விரும்பினள் பார்த்தே, அல்லி சேர்குழலாள் அரன்முகம் பாரா, இவ்வகையாக வேண்டும்? ஈங்கென, அவ்வகை அரனும் அதற்குடம்பட்டு, மதகரியுரித்தோன் மதகளிறுகவும் மதர்விழியுமை பிடி வடிவமாகவும் கூடிய கலவியிற்குவலயம் விளங்க" நீடியவானோர் நெடுநிலைபோற்றத் தங்கு வெண்ணீறுந் தருமமுந்தழைப்பத், திங்கண் மும்முழை எங்கணும் பெருக, முண்டகமலர்போன் முழுதுஞ்சிவந்த தண்டையும் சதங்கையும் அலம்பு தாளிணையும், குண்ட வண்டியும் தண் தரளமாலையும், மண்டொளிதழைத்த புண்டர நுதலும், முடிவு கண்டறியா முப்புரிநூலும், சுடர்விடுங்கனகத் தோளொரு நான்கும், சோதி வண்டாளத்தொடை புனை கழுத்தும், பூதலம்புரக்கும் பொற்கரிமுகமும், தவளக்கிம்புரி தருமருப்பிரண்டும் பவளத்து ஒளிவாய் பைந்துவர் இதழும், இமையா முக்கணும் இருதழைச் செவியும் அமையா நிலவுமிழ் அவிர்சடை முடியும், அந்தி வண்ணமும், அங்குசபாசமும், உந்திச் சுழிமேல் உதரபந்தனமுடன், ஐங்கரக்கரிமுகன்வந்து அவதரித்தலும், பொங்கரவணிந்தோன் புதல்வனை நோக்கி, வானோர் மண்ணோர் வந்து வழிபடல் ஆமேனார் வல்வினை ஆசறவகற்றித், தண் துளவோன்; அயன், சதமகன் முதலோர்க்கு, இன்றுமுதல் இறையாய் "இருத்தி' என்றருளி, தெய்வநாயகியாம் திருந்திழை உமையுடன், மைவளர் சோலைமா நகரம்புகுந்து அமையாக்கூட்டத்து அநேககாலம், இமையாமுக்கண் இறை இருந்தருளினன். அந்நாள் தன்னில் அசுரர் வந்தடைந்து, பொன்னுடரசு செய் புரந்தரன்முதல், இமையவர் தங்கட்கு இடரேசெய்ய, இமையவர் தலைவனுமிலே கருமாலும், மதுமலரயனொடு வந்தெம்பிரான்தன், பதிதனிலணுகிப் பரிந்து நின்றேத்தித், தம்பிரானைத் தாளிணைவணங்கி, எம்பிரானே! எங்குறைமுடியெனச்? சுடர்விடுமணிமுடிச்சூரனை வெல்லக், கடல்பருகு அயில்வேல் கைத்தலத்து ஏந்தும், புதல்வனைப் பயந்து தருகுவம் யாமென, அமரர்கோனுக்கு அரன்விடை கொடுத்து, சமரவேல் விழித்தையலும் தானும், கூடியகலவியிற் கூடாதாடலும், நெடியவானோர் நேர்ந்துடன் கூடிப், பாவகன் தன்னைப் பரிவுடன் அழைத்துக், காவளர் சாரற்கைலையிற் சென்று, சூரன் வன்மையும் சுரர்படும் இடுக்கணும், ஊரரவணிந்தோர்க்கு உணர்த்திடு நீ யென! காமனை எரித்த கடவுள் என்றஞ்சலும், எம நாட்டரசன் இயல்புடன் நவில்வான், அஞ்சாதே நீ அரன்முன்செல்ல, நஞ்சார் கண்டன் நயனம் மூன்றனுள், நெற்றியின் நயனம் நீயாம் ஆதலின், குற்றம் வந்தடாது நீ கூறுதிசென்று என, வானமன்மொழிய மற்றவன் தானும், ஈனமின்றுமென இருதயம் ஒருப்பட்டு, எமையாள் இறைவன் உமையாளுடனே, அமையாவின்பத்து, அமர்ந்தினி திருந்த பள்ளிமண்டபம் பாவகன் குறுகத் தெள்ளுதேன் மொழியாள் திகைத்து நாணுறப், பாவகன் வரவு பரமனும் அறிந்து தன், மூவிரு நுதல்விழி முளரியினுதித்த, அறுமுகப்பொருளை அவன் கையிலளித்தலும், வழியவன் பெற்றவான் பொருள்

போல, சோதிநீண்முடிச் சுடரோன் கொணர்ந்து, வாதராசன் வலக்கையிற் கொடுப்ப, போர் புனைவாயுவும் பொறுக்க ஒண்ணுமல், தார்புனற்கங்கை தன் கையிற்கொடுப்ப, தரும்புனற்கங்கையும் தாங்கவொண்ணுமல், பொரும் புனல் சரவணப்பொய்கையிலிடுதலும், சரவணக்கமலம்தனில் நிலையுற்று குரவணிமூவிரு குருமணிமகுடம், தோளிரண்டாறுந் துலங்கு குண்டல மும், தாளிரண்டுடனே தாமரைவதனமும், மலையும் தானவர் வாழ்வினைத் தொலைத்திடு, சிலையும் வேலும் செஞ்சரமும்கொண்டு, அறுமுகக்கடவுள் வந்து அவதரித்திடுதலும், கறைமிடற்று இறையொடு கவுரிசென்றெடுத்து, தம்பதி இழந்த சதமகன் முதலிய, உப்பர்சீரருளென உயர்விடை வழங்கா வாரந்திகழுஞ் சீர்புனைவெற்பும், சூரன்மார்புந் துளைபடநூறி, அமரர்கோ வுக்கு அமருலகளித்துக் குமரவேளுங் குவலயம் விளங்கிட, அமராவதியின் அமர்ந்தினிது இருந்தபின், சமரவேலுடைத் தாரகன்தன்னைக், கண்டுள மயங்கிக் கடவுளர் மகளிர், விண்டனர்போன்று மெலிவதுகண்டே, அண்ட ரெல்லாம் வந்தடைவுடன்கூடி, மாதொருபாகன் மலரடிவணங்கி, தாதணிக் கொன்றைச் சடைமுடிக்குன்றே, பிறவாதவனே பேரருட்கடலே, இறவா தவனே இமையவர்க்கரசே, மருவளர் கடம்பன் மாநகர்புகாமல், அருளல் வேண்டும் அமலவென்றிறைஞ்சி, இமையோர்சொல்ல இறைவனும் வெகு ண்டு, குன்றெறிசுடர்வேற் குமரனைமுனியக், காவல்கொண்டோர் வினைகட் டறுத்தருளும், சேவலங்கொடியோன் தேசம் போகத்திருந்திழை உமை யாள் அருந்துயரெய்தி, வருந்திட அவள்தனை வானவன் நோக்கி, மங்கை நீதான் வருந்துதல் ஒழிகென, சக்கரபாணியைச் சான்றுவிருத்தி, அக்கணி மார்பனும் ஆயிழை உமையும், மிக்கநற்சூது விருப்புடன்ஆட, மன்றலார் கூந்தல் வென்று மனமகிழ்ந்து, கன்றினல் விளவெறிக் கண்ணனைநோக்கிச் சூதினில் வென்ருர் யார் என? மொழிய, ஆதிவென்று ஆயிழை தோற்று யென்று, தாதிமிரளகைத் தையலைநோக்கி, நீதியில்லா நெறியவனுரைக்க, மலைமகள் வெகுண்டு மற்றவன்தன்னை, நிலமிசைக் குருட்டுப்பாம்பாய் நீ போய், வாரணமுகத்து மதலைமுன்னிருந்த, ஏரணியாலின்கீழ்க் கிடந்திடு கென, நாரணன் தானும் நாகமாய்க் கிடந்தபின், சீரணிக்கரிமுகத் திரு முகக்கடவுள், கரும்பும் கிழங்கும் கதலியும் வருக்கையும், விரும்புமாங்கனி யும் வேண்டுவவளித்து, வழிபடும் அடியார் வல்வினை தீர்த்தே, எழில்திகழா லின்கீழ் இனிதிருந்த, கம்பமாமுகக்கடவுள் தன் பெருமையை, அம்புவி யோருக் கறிவிப்போம் என, உம்பருலகத்து ஓர் எழுகன்னியர், தம்பனு லேணியில் தாரணிகுறுகிக், கரிமுகக் கடவுளைக் கைதொழு தேத்திப், பொரியவல் அடைகாய் பொற்புறவைத்துக் "கார்த்திகைக் கார்த்திகைக் கழித்தபின்னுள், ஆர்த்தகலிங்கத் தணிபிழைவாங்கித், திருவைத் தோய்ந்த திகழ்மணிப் புயத்தில, இருபத்தோரிழை இன்புறக்கட்டி" வேதத்து ஆதி யும் பூமியிலெழுத்தும், ஆதிநாயகற்கு ஆகியவெழுத்தொடு, மூன்றெழுத்

தாலே மொழிந்தமந்திரம், தேன்திகழ் குழலியர் சிந்தையுளடக்கிப், பொரு வருமலரடிப் பூசனைபுரிந்தே, இருபதுநாளும் இக்கதைகேட்டு, மற்றைநாள் தன்னின் மதிமுகமலர்விழிக், கற்றைவார்குழல் கன்னியரெல்லாம், வாரண முகத்தவன் வாழ்பெருங்கோயில், சீருடன் விளங்கத் திருவிளக்கிட்டுக், கோமயங்கொண்டு குறைவற மெழுகி, ஏமுறு கரும்பும் எழிலுடைக் கதலி யும் தாளுடைக் கமுகும் தழைபடு மஞ்சளும், சேறுடைச் செந்நெலும் திசைதொறும் நிரைத்தே, கோசிகம் கோடிகம் கொடுவிதானித்து, நீடிய நூல்வளை நிறைகுடந்திருத்தி, ஐங்கரன் திருவுருவமைத்து உள் அன்பொடு, தெங்கிளநீரும் சீர்பழுக்காயும், விரிந்த பாளையும் மேதகுநீர்பூச், சொரிந்த கேதகைத் தொல்கனியுடனே, பொருந்தியகவரி புனைமணிமாலை, தெரிந்த வையெல்லாந் திருந்தத்தூக்கி, மலைமகண் மதலையை மஞ்சனமாட்டி, பல நிறப்பட்டும் பழுதறப்புனைந்து, சிந்துர நுதலில் செறிந்த பொறப்பட்டமும், இந்திரதனுவென இலங்குமணியாரமும், மகரப்பகுவாய் வாகுவலயமும், நிகரற வொளிவிடும் நித்திலமாலை, திகழ்மணிமுடியொடு சிலம்பு செஞ்ச தங்கை, பகருபூண்கள் பொலிவுறப்பூட்டி, சந்தனம் குங்குமம் சாந்தொடு பனிநீர், இந்தன நுதலார் இயல்புடன் கொணர்ந்து, செந்துவர்மேனியில் திகழ்தரச் சாத்திச், செருந்தி சண்பகம் செங்கழுநீரொடு, குருந்து மல்லிகை கொங்கு குன்றுத்தி, தாதகி பாதிரி தாது மந்தாரம், மாதவிகடம்பு மகிழ்சிறுசெண்பகமும், நெய்தல் அல்லம் நீலம் தாடிமம், கொய்திடு குல்லை கொன்றைபைங்குரவு, நரந்தை அலரி நந்தியாவர்த்தம், கரந்தை கமலம் கமழிரு வேலி, செவ்வந்தி பிச்சி சிறு சண்பகமலர், மவ்வல் செவ்வல்லி மயிலை இருவாட்சி, தும்பை அறுகு துழாய் இரும்பூளை, வம்பலர் பட்டிகை மத்தமொடு எருக்குக, காந்தள் கூதாளம் காக்கணம் அடம்பு, மாந்தளிருடனே வளர் பஞ்சவில்வம், பூந்தொடைக் களபம் புழுகு கத்தூரி, ஏந்திள முலையார் இசையச் சாத்திக், கதிர் நெற் பொரியும் கண்ட சர்க்கரையும், உதிர் நெற் கட்டியும் உரித்ததிண் கரும்பும், தேங்காய் செவ்விள நீர் பல கிழங்கும், மாங்கனிவருக்கை வாழைப் பழமும், எட்பொரியிருவி இருதினைமாவும், அப்பமும் அவலும் ஆலங்காயும், வெள்ளிலை அடைக்காய் விரவு கற்பூர மொடு, ஒள்ளிய பலவும் உகந்துடன் வைத்துப், பல்லியமார்ப்பப் பழுதறு திருவிளக்கு, எல்லியும் பகலென இருளற விளங்கக், கற்பகக் கடவுள் களிப்புறச் செய்து, மிக்கபுகழை விருப்புடன் ஆங்கவர், கேட்பது கண்டு, கேளாதிருந்த பாம்புருவாகிய பழமறையாளன், யாப்புறு கொங்கையீர்! யானும் நோற்பேன் என, காப்பிடுவித்துக் கனிவகை பலவும், ஆங்கவன் தனக்கு வேண்டுவ கொடுத்துப், பாங்குடன் இக்கதைப்பரிவுடன் கேட்ட பின், தெய்வமங்கையர் சிந்தித்தவை பெற, வைய நாயகியால் வாளரவா னவன், பண்டையின் வண்ணம் பார்மிசை யெய்தி, அண்டர்நாயகன் அரி வையோடிருந்த, உஞ்சை மாநகர் புகுந்து உமையடி வணங்க, வெஞ்சின

மிகுத்தவள் விமலனை நோக்கி, யானிடும் சாபம் நீக்கினர் யார் என? மானன கண்ணி மனைக்கதவடைக்க, இறையவன் இதற்குக் காரணம் ஏதென? மறையவன் உரைப்பான் மற்று முன்மதலை, தந்தருள் புரிந்த தவப்பயனீ தென, சிந்தையுண்மகிழ்ந்து தேவர் தேவனும், பூங்கொடியடைத்த பொற் றுணீங்கயாங்கதை கேட்போம் எனமிளைந்தருளிச், சக்கரபாணிதான் கதை சொல்ல, அக்கணிமார்பன் அன்புடன் கேட்ப, மாதுமையடைத்த வன்றுணீங்க, மாதுமைதன்னை அரன் நகை செய்ய, நானேவர நீ! நகை புரிந்ததுவென், றேனுர்சடையாய்த் தெளியச்செப்பெனப், பொன்மலை மூலை யாய்ப் புகலக்கேளாய், உன்மகன் நோன்பின் உறுதியை யறிந்து, சிந்தை யுண்மகிழ்ந்து சிரித்தேன் யான் என, அந்தமில்லானை ஆயிழை வணங்கித், தேங்கமழ்கடம்பன் தேவர் சேனுபதி, ஈங்கு வரும்படியானும் நோற்பேன் என, இறையவன் கதைசொல ஏந்திழை கேட்டபின், குறமடமகளைக் குல மணம் புரிந்து, சரவணசம்பவன் தான் வந்தெய்தி, அரவணியமலன் அடி யிறைஞ்சியபின், பரிவுடனிக்கதை பார்த்தலந்தன்னில், விரைகமழ் நறுந் தார் விக்கிரமார்க்கன், தன்பெருமனையும் தானுமிக்கதையை அன்புடன் கேட்டே அரசு பெற்றபின், மற்றவனகரின் மடந்தையர் தம்முள், எற் பிறை நுதலாள் இலக்கணசுந்தரி, கழைபொரு தோட்கையிற் கட்டிய விழையை விழைவிலளாகி விதிவழிகளைந்து, வற்றிய கொவ்வையின்மாட் டேபோடக், கற்றைபஞ்சடை முடிக்கரிமுகன் அருளால், ஆங்கது தளிரும் அடைவுடன் பூவும், நீங்கறப் பொலிந்து நிற்பது கண்டு, வேப்பஞ் சேரி யின் மேய்ச்சிறையிருந்த, பூப்பயிலுங்குழல் பொற்றொடியொருத்தி, கொவ் வை அடகது கொய்வாள் குறுகி, செவ்வியவரசன் தேவிமுன்போட்ட, இழையதிற்கிடப்பக் கண்டவள் எடுத்துக், குழையோடிகல் விழிக்கோதை முன்காட்டக், கரிமுகக்கடவுளைக் கைதொழுதேத்தி, இருவினைதீர இந் நோன்பு நோலென, அப்பமொடடைகா யந்நாட்கொண்டு, புட்பமுன் வைத்துப் போற்றி நோற்றபின், பண்டையினிரட்டிப் பதமவட்கருளக், கொண்டுபோயரசன் கோயில் வைத்தனளே, விக்கிரமார்க்கன் விழி துயிலளவில், உக்கிரமான உடைமணிகட்டி, தண்டையும் சதங்கையும் தாளில் நின்றொலிப்ப, கொண்டல்போல்வரும் குஞ்சரக்கடவுள், கலைக்குல வரசன் கனவிலெய்தி, அலக்கண் எய்தும் அரசர்கள் அரியே! இலக்கண சுந் தரி இம்மனையிருக்கில், கலக்கம் வந்திடும் கழித்திடு புறத்தென, துண் ணென விழித்துத் துணைவியை நோக்கி, அண்ணலுரைத்திடும் அளவை தன்னில், ஆனைகுதிரையவை பலமடிந்து, மாநகர் கேடுறும் வகையது கண்டே, அணியிழையாளை அயன்மனை யகற்ற, வணிகன் தன்மனை புகுந்த வளிருப்ப, மணியும் முத்தும் வன்கல்லாயிட, அயன்மனையவனுமகற்றிய பின்னர், மயிலியன் மேனி மடந்தையுண்மறுகி, குயவன்தன்மனை புகுந்த வளிருப்ப, குயக்கல முடைந்து கொள்ளைபோக, அயற்கடையவனும்

அகற்றிய பின்னர், குயிற்பெடை நிகர்மொழிக்கோதையும் ஏங்கி, தூசு களார்க்குந் தொழிலோன்மனைபுக, தூசுகளெல்லாந் துணிந்து வேறுய்விட ஆசறையவனும் அகற்றியபின்னர், காசறையளகக் காரிகை புலம்பி, மாலைக் காரன்மனையிடை புகுந்தபின், மாலைபாம்பாம் வகையது கண்டே, அயன் மனையவனும் அகற்றியபின்னர், புயலின் வார்ந்த பூங்குழல்வாடி, உழவன் தன்மனை புகுந்தவளிருப்ப, வளர்பயிரழிந்து பலவழமுங்குன்றப், புரி குழல் தனைப்புறம் போவென்றகற்ற, ஔவைதன்மனை புகுந்தவளிருப்ப, ஔவைச் சென்றவகங்டோறும், வைதனர் எறிந்தனர் மடியத்தள்ளினர், கைகொடுத்தினர் கள்ளியென்றியம்பினர், ஔவை சால அறிவுதளர்ந்து, வெளவியதுயரொடு மனையிடை புகுந்த, கன்னியால் வந்த காரணம் இஃ தென, மின்னிநுண்ணிடை மெல்லி நல்லாளே! சாணகம் எடுத்துவா வெனப்புகலச், சாணகத்தைத் தையல் சென்றெடுக்கச் சாணகம் புழுவாய்த் தண்ணீர் வற்றிப், பேணிய வெல்லாம் பெரும்புழுவாக, மானுர் விழியாள் வருந்தக் கண்டு, தானே சென்று சாணகம் எடுத்துக், கோலமா கக்கொழுந்தரை மெழுகிப், பாலின் மென்மொழிப் பாவையை நோக்கிப், புத்தகமெடுத்து வாவெனப் புகலப், புத்தகம் பாம்பாய்ப் புரிந்து நின்றுடக், கொவ்வை இதழ்வாய்க் கொடிவிழுந்தேங்க, ஔவைதானவளை அஞ்சல்! என்றழைத்து, புத்தகம் எடுத்துப் பொருந்தப் பார்த்து, முத்தமிழ் அறிந்த மூதறிவாட்டித், தவநெறிபிழைத்த தையலே நீதான் சிவன் மகன் நோன்பு தெளிவுறப் புரிகென, பொரியவல் அடைகாய் முற்பல பொருள்களும், தெரிவுறப்படைத்துச் சீர்வழிப்பாட்டுடன், செவ்விய கரத்தில் திருந்திழை யாத்தே, ஔவை மூவேழ்தினம் அருங்கதை சொல்ல, மவ்வலங்குழலாண் மனமகிழ் கூர்தரச், செவ்வியோடிக்கதைத் தெளிவுறக்கேட்டபின், பொற் புறு விநாயகர் பொலிதிருவருளால், விக்கிரமார்க்கன் வேட்டையிற் சென்று தண்ணீர் வேட்டுத் தன்கிளைவிடுப்ப, உண்ணீர்க்கரகம் உவப்ப மொண்டு டனே, பண்ணேர் மொழியாள் பரிந்துடன் கொடுப்பச், சேனையும் தானும் தேக்கிடவுண்டு, யானைகுதிரையவைகளும் அருந்திப், பின்னுந்தொலையாப் பெருமையைக் கண்டுக், கன்னிகையிடத்திற் கடிதின் அடைந்து நீயாரென? வினவ இளமயிற் சாயாள், பேருரையாது நாண்பெருக நின்றிடலும், மின் னேர் இடையன நடைமெல்லியலைத், தன்மனையாளெனத் தாணிபன் அறிந் தே, ஒண்தேர் ஏற்றி உளமகிழ்வதனுடன், கொண்டேர் புகுந்த கொற்ற வேந்தன், தலைநம்பிராட்டித் தலைமை பெற்றுயர, நிலையருள் புரிந்த நிமலா போற்றி கற்பவர் தலைவாபோற்றி, கருதுவோர்கண்ணே போற்றி, நற்பதம் எவர்க்கும் நல்கும் நாயகக்களிறே போற்றி, பொற்கரமைந்தாய் போற்றி, புகர்முகக்குன்றே போற்றி அற்பமாய் மகத்தாய்நின்ற வாகுவாகனனே போற்றி, அன்று நீடவனித்தேரை அச்சறுத்தமரர் போற்ற, நன்றருள் புரிந்தவேத நாயகக் களிறே போற்றிப், பண்டுதொன் மேருவெற்பில் பார

தம் எழுதிவைத்த வண்டமிழ் முதல்வா! விண்ணோர் வணங்குமாமுகவ! போற்றி, ஈண்டு மாங்கனியை வேண்டி இறைவனை வலஞ்செய்தங்ஙன், நீண்டகை முதல்வாவென்று நினைப்பவர் தலைவா போற்றி, எத்துவார் முதல்வா போற்றி, இறையவன் புதல்வா போற்றி, சீர்த்த நல்லுமையா ளீன்ற செல்வனும் சிறுவ! போற்றி, அன்பொடுபரவி நாளும் அடிதொழு வார்கட்கெல்லாம் துன்பம் வாராமல் இன்பமே தோன்ற நின்றருள்வாய் போற்றி, கண்ணே போற்றி கருத்தே போற்றி, எண்ணுறுந்தாரக எழுத்தே போற்றி, ஆறணிச் சடையோன் அருளே போற்றி, நீறணிமேனி திருமலபோற்றி, கரமைந்துடைய களிறே போற்றி, பரமன்தரு நற்பாலா போற்றி, செய்யதாள் போற்றி போற்றி, திரிபுரஞ் செற்றோன் பெற்ற, ஐய! என்வினைகள் தீர்த்தே அஞ்சலென்றருளுவாயே'' "கல்லாதவர் நோற்பிற் கற்பவை நன்றாக உறும் இல்லாதவர் நோற்பின் இன்மைபோம் பொல்லாத பாவம் போம் மிக்கப்பழவினை நோய்தானும் போம் வேக மலம் போமே மிக'' "வெள்ளை எருதேறும் விரிசடையோன் ஈன்றளித்த பிள்ளையார் நோன்பின் பெருங்கதையை—உள்ளபடி கற்றவரும் நோற்றவரும் காதலுடன் கேட்டவரும் பெற்றிடுவார் கற்பகத்தின் பேறு'' "பொற்பனைக்கை முக்கட் புகர்முகத்து நீண்மௌலிக் கற்பகத்தின் நோன்பைக் கருத்துடனே- -சொற்றபடி நோற்றோர் மிக வாழ்வர் நோலாது இருந்து கதை கேட்போர்க்கும் வாராது கேடு'' இங்ஙனம் நண்ப! அகத்தியமகா முனிவரால் திருவாய்மலர்தருளப் பெற்ற பிள்ளையார் கதை முடிந்தன. இந்நூல், யாழ்ப்பாணம், தாவடி, அ. பொன்னம்பல பிள்ளையவர்களால் ஆங்கிலம், ஆயிரத்து எண்ணூற்றுத் தொண்ணூற்றைந்தாமாண்டிற் பதிப்பிக்கப்பெற்றது. இதில் "ஆர்த்தகலிங்கத்து அணியிழைவாங்கி" என்றுதானே காணப்படுகிறது ஆகலின், "கட்டியவத்திரம்" "புடவை"களில் நின்றும், இருபத்தொரு இழைவாங்கிக் கங்கணமாக, ஆண்மக்கள் வலக்கைப்புயத்திலும், பெண்மக்கள் இடக்கைப்புயத்திலும் கட்டிக்கொள்ள வேண்டியதே இத்தவ வொழுக்கமானது, முறையே நிறைபெறுவதற்குரிய உத்தம மார்க்கமாம். பின்னர் முடிந்தத் தினத்தன்று அக்காப்பு நூலிழையை அலட்சியஞ் செய்து விடாமல் மாவிளக்காகச் சோதியைக்கண்டு பூரணமாகதரிசித்து, அதனையம்மாவுடன் நன்றாகப் பிணைத்து ஆகாரமாக உட்கொண்டு விடவேண்டுவதே முக்கியமான கடமையாம். இனி நண்ப! நமது மரபைச் சார்ந்த "கார்த்திகை" "திருவாதிரை" புதுமைகளைப் பற்றியும் விளக்கத் தொடங்குவாம்.

கக. அஃதாவது, எத்துணையோ பல செல்வமாதிகளும், சிறப்புகளும் நிறைந்துள்ள இம்மனித உலகத்திலே நமது, செந்தமிழ்த் தேயத்துக் கவனிக்குமிடத்து, இஞ்ஞாலத்தைப் புதியனவாகக் கண்ட தங்கள் தங்களின் குழந்தைகள் தீர்க்காயுளும், ஆரோக்கிய திடகாத்திரமான தேகமும்,

பலவித ஐஸ்வரியங்களும் பெற்று, காலக்கிரமத்தில் பேரின்பப் பெருவாழ்வு, எய்தும்பொருட்டு ஒவ்வொரு வருணத்தார்களும் ஒவ்வொரு விதமான சடங்குகளைத் தங்கள் மக்கட்குச் செய்து வருகிறார்கள். அஃதேபோன்று நமது, பூர்வீகப் பெரியாரும், நம்முடைய மரபுக்கு உரியனவாகச் சில சடங்குகளை தங்கள் தங்களின் ஆண் குழந்தைகளுக்கும், பெண்குழந்தைகளுக்கும், சுமங்கலமாகச் செய்துவரும்படி, உயர்தரநாகரீகமும், ஆசாரசீலமும், சமயபக்தியும், தெய்வ சக்தியும் பெருமையும் பொருந்திய சில உயர்தர வரன்முறைக்கட்டுக்களாக அமைத்து, நியமித்து, வைத்து ஆண்டு, அநுபவித்துக்கொண்டு வந்திருக்கிறார்கள். அவைகளைப்பற்றிச் சிறிது, ஊன்றி நோக்கிக் கவனிக்குமிடத்து, நமது, பூர்வீகப் பெரியாரின் மாட்சிகள் மிக நன்கு புலப்படுவதாம். யாங்ஙனம் எனின்? அச்சடங்குகட்கு நமது, தமிழ்த் தேயத்து உடைத்தான எந்த வருணத்தார்களும், "புதுமை" என்று பெயர் கொடுத்துக் கொண்டார்களில்லை என்பதேயாம். மேலும், இம்மனிதவுலகத்து தங்களின், அருமைப் புதல்வர்கள் எந்த மார்க்கத்தானும், முன்னேற்றம் அடையவேண்டும், என்று ஆழ்ந்தகருத்தோடும், ஆறுதலடைந்த சிந்தையோடும், பூரணமாக நிறைந்த மெய்ஞ்ஞானத்தோடும், சர்வகலைகளினும் தேர்ந்த பேரறிவாண்மையோடும் கூடி "கார்த்திகை மாதத்து கார்த்திகை நாளையும்" "மார்கழிமாதத்து திருவாதிரைநாளையும்" நன்கு தெளிந்து எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். நமது, பூர்வீகப்பெரியார், அச்சடங்குகட்கு "புதுமை" என்று, தங்களின், தாய் மொழியான தனித்தமிழ்ப் பாஷையினின்றும், அச்சுமங்கலச் செய்கைகட்டு மிகுதியும் பொருத்தமான ஓர் வார்த்தையைக் கண்டு பிடித்து, எடுத்து பெயர்புனைந்து வைத்திருக்கிற "புதுமை' யைப்பற்றிச் சிறிது, ஆய்ந்தோர்ந்து கவனிக்கும் ஒவ்வொரு பேரறிவாளர்க்கும் அஃது, புதுமையினும் புதுமையாகவே விளங்கிப், புதியவுலகத்துப், புதிய மனிதக்குழந்தைகட்குப், புதியனவாகச் செய்யும் ஒவ்வொருசடங்குகளும் இஃது, புதியன புதியனவென்று ஒலமிடும் "புதுமை" என்பதையும் நன்குணர்த்துவதாகவும் விளங்கும். மேலும், தற்காலம், நமது மரபைச்சார்ந்தார் சிலர், "காலற்றன உடலற்றன தலையற்றன நாளில், கோலக்குய மடவார்தமைக்கூடின் மலடாவர்" என்றும், "ஆதிரை பரணி ஆரல் ஆயிலியம் முப்பூரங்கேட்டை தீதுறும் விசாகம் சோதி சித்திரை மகம் ஈராறும், மாதனங் கொண்டார் தேறார் வழிநடைப்பட்டார் மீளார் பாய்தனிற்படுத்தார் தேறார் பாம்பின்வாய்த் தேரையாமே" என்றும் காணப்படுகிற சில வாக்கியங்களை கண்டுங் கேட்டும், மயங்கி, அவைகளின் உண்மையுணர்வான் புகாது தேங்கி, அக்கார்த்திகையையும் அத்திருவாதிரையையும், இஞ்ஞாலத்து உடைத்தான எந்தவிதமான நற்காரிய வியவகாரங்கட்கும், உதவாதனவாகவே உலகம் ஒதுக்கி விட்டனவாக நினைந்து, நமது, பூர்வீகப் பெரியார் மாத்திரம், நமது மரபைச்சார்ந்த முதன்மையான

அதினும் முதற்சடங்குகட்கு கையாண்வெருதல் யாதுகாரணம் என்று சிந்திக்கிறார்கள், என்றால், அச்சிந்தனை தெளியவேண்டுவதும் ஆவசியகந்தான். அஃதாவது, மேற்கண்ட அந்நாட்களில் "கடன்கொள்ளல்" "யாத்திரை செய்தல்" "நோய்கொண்டு படுத்தல்" "போகஞ் செய்தல்" ஆகிய இந்நான்கு விஷயங்களுந்தானே ஆகாதெனச் சொல்லப்படுகிறதே தவிர, வேறு ஏதேனுஞ் சொல்லப்பட்டிருக்கிறதா? இதற்காக ஏன்மயங்குதல் வேண்டும். குறிப்பாகவும் பொருளுணரவேண்டிய மார்க்கங்கள் அவ்வாக்கியங்களில் ஏதேனுங்காணப்படுகிறதா? இலலையே. ஆகலின், நமது, பூர்வீகப்பெரியார் ஒவ்வொரு காரியங்களினும் சந்தேகவிபரீதங்களற நன்குதெளிந்தே அவைகளை அநுட்டானத்துக்கு கொண்டுவந்திருக்கிறார்கள். என்பதை நாம் எக்காரணம் கொண்டு மறவாதிருத்தலும் வேண்டும். மேலும், நமது, மரபைச்சார்ந்த ஆண்மக்கட்குச் செய்யும் புதுமை நாளாகிய கார்த்திகையைப்பற்றிச் சிறிது விளக்குவாம். அஃதாவது (அக்கார்த்திகை) சர்வாண்டபிண்ட சராசரங்கள் ஒருங்கையும், உண்டாக்குங் கர்த்தாவாகிய பிரமாவுக்கு "பௌத்திரியும்" "தக்கனுக்கு மகளும்" எல்லாம் வல்ல நமது இறைவனுக்குச் சதாகாலமும் அவன் சிரத்திலுட்கார்ந்து கொண்டே அமுதத்தை உகுத்துக் கொண்டிருக்கும் சந்திரனுக்குக் காதன் மிக்குற்ற "மனைவியும்" ஆம். ஆறு வான்மீன்கள் கூடிய ஓர் பெயர்கொண்ட நட்சேத்திரமுமாம். இக்கார்த்திகைப் பெண்கள் அறுவரின் மாட்சிகளும் கவனிக்குமிடத்து அஃது, எவரானும் அளவிடற்கரிதாம்.. பேசவும், எழுதவும், முடியாதனவுமாம். உலகமாதாவுக்குங் கூட ஒப்பிட்டுங் கூறலாம். யாங்ஙனமெனில், "தேசுதிகழ் பூங்கயிலை வெற்பிற் புனைமலர்ப் பூங்கோதையிடப் பாங்குறையு முக்கட்பரஞ்சோதி, ஆங்கொருநாள் வெந்தகுவர்க் காற்றாத விண்ணோர் முறைக்கிரங்கி, ஐந்து முகத்தோடு அதோமுகமுந்தந்து. திருமுகங்கள் ஆறாகி செந்தழற்கண் ஆறும், ஒரு முகமாய்த் தீப்பொறிபாறுய்ப்ப, விரிபுவனம் எங்கும் பரக்க இமையோர் கண்டஞ்சுதலும், பொங்குதழற் பிழம்பைப் பொற்கரத்தால், அங்கண் எடுத்தமைத்து வாயுவைக் கொண்டேகுதி, என்றெம்மான் கொடுத்தளிப்ப மெல்லக்கொடுபோய் அடுத்ததொரு பூதத்தலைவ கொடுபோதியெனத் தீக்கடவுள் சீதப்பகிரதிக்கே சென்றுய்ப்பப், போதொருசற்றன்னவளும், கொண்டமைதற்காற்றாள் சரவணத்திற் சென்னியிற் கொண்டுய்ப்பத் திருவுருவாய் முன்னர் "அறுமீன் முலையுண்டு" இஃது கந்தர் கலிவெண்பா; எமது, ஆப்தநண்ப! பண்டையஞான்று சூரபன்மனால் துன்புற்ற தேவர்கள், நமது இறைவனிடத்துச் சென்று, ஓலமிடுதலும், சிவபெருமான் நீங்கள் சிறிதும் வருந்தாதொழிமின். புதல்வனைத் தருவேம்" என்று திருவாய்மலர்ந்து, தமது, பழைய ஐந்துமுகத்தோடு அதோமுகம் ஒன்று கூட்டி ஆறு திருமுகங்களையும் கொண்டு, அத்திருமுகங்களினுள்ள நெற்றிக் கண்கடோறும், ஒவ்வோர் அக்கினிப்பொறியைத் தோற்றுவித்தருளினர்.

அவ் ஆறு பொறிகளும் பிரம விட்டுணு முதலிய யாவரும் சிறிதும் அணுக லாற்றாத மிக்க வெம்மையை உடையனவாகி, உலகமெங்கும் பரந்தன. அப்பொழுது வாயுக்கள் உலைந்து ஓய்ந்தன; கடல்களெல்லாம்வற்றின; வடவாமுகாக்கினியும் தன் செருக்கு நீங்கிற்று ; பூமிபிளந்தது; மலைகளெல்லாம் நெக்கன; அட்டநாகங்களும் நெளித்து நீங்கின; அட்டதிக்கயங்களும் அழுதுதியங்கின; உயிர்களெல்லாம் நடுங்கின; சிவபெருமானுடைய நெற்றிக் கண்களினின்றும் தோன்றிய அக்கினிப் பொறிகள் பெருங்கருணை செய்யும் வண்ணம் பிறந்தனவாதலால் ஒருயிரையும் நாசஞ்செய்தில; எவர்களையும், எவைகளையும் அச்சமாத்ரஞ் செய்தன; அப்பொறிகளின் வெம்மையைக் கண்டு, சிவபெருமான் பக்கத்தே எழுந்தருளியிருந்த உமா தேவியார் வேர்த்துத் திருவுளங் கலங்கி எழுந்து, தமது திருவடிகளிலுள்ள சிலம்புகள் புலம்பித்தாக்க தமது திருக்கோயிலினுள்ளே ஓடினர். சிவபெருமான் திருமுன்னர் நின்ற பிரமா முதலிய தேவர்களெல்லாரும் அவ்வக்கினிப் பொறிகளைக் கண்டு அஞ்சி நடுநடுங்கி இடந்தோறும் வெருவியோடினர்கள். கடனடுவிலுள்ள தெப்பத்தின் பாய் மரத்தை நீங்கிய காகம் பின்னும் அதனையே அடைதல்போல அவ்வாறு ஓடிய தேவர்களெல்லாரும் பெருமூச்செறிந்துகொண்டு மீண்டும் எப்பெருமான் திருமுன் வந்து வணங்கித் துதித்து "பரம பிதாவே, அசுரர்களைக் கொல்லும் பொருட்டு ஒரு திருக்குமாரரைத் தந்தருளும் வண்ணம் வந்து பிரார்த்தித்தேம். நீர் முடிவில்லாத அக்கினியை தோற்றுவித்தருளினீர். எம்பெருமானே அடியேங்கள் உய்வது எங்ஙனம். முற்காலத்திலே உமாதேவியாருடைய திருக்கரத்தினின்றும் தோன்றிய கங்கைபோல இப்பொழுது உமது, நெற்றிக் கண்களினின்றும் தோன்றிய அக்கினிப் பொறிகளும் உலகமெங்கும் பரந்தன. ஒரு கணத்தினுள்ளே அவைகளை மாற்றாதொழிவீராயின், அவைகள் சருவான்மாக்களையும் அழித்துப்போடும். அக்கினிப் பொறியின் வெம்மையை ஆற்றாது அஞ்சியோடிய நாங்கள் மீண்டும் உம்முடைய திருவடிகளையே அடைந்தேம். ஆராயுமிடத்து, அடியேங்களுக்கு புகலிடம் உம்மையல்லாது பிறிதுண்டோ, இல்லை. அடியேங்களுடைய துன்ப முற்றையும் நீக்குதற்குரிய நீர் அடியேங்களுக்குத் துன்பமே செய்வீராயின் அதனை விலக்க வல்லவர் வேறியாவர்! உலகமுழுதையும் இமைப்பொழுதினுள்ளே முடிக்கின்ற இவ்வக்கினியை'நீக்கி எங்கள் குறையை முடித்தருளுக" என்று விண்ணப்பஞ் செய்தார்கள். அப்பொழுது சிவபெருமான் தேவர்களை நோக்கி "அஞ்சாதொழிமின்கள்" என்று கையமைத்து, புதியனவாகத்தோன்றிய ஐந்து திருமுகங்களையும் மறைத்து, ஒரு திருமுகத்தோடு முன்போல எழுந்தருளியிருந்து, தம்முடைய நெற்றிக்கண்களினின்றும் தோன்றி உலகெங்கும் பரந்த அக்கினிப் பொறிகள் தமது திருமுன்வரும் வண்ணம் திருவுளங் கொண்டருளினர். உடனே எங்கும் பரந்த அக்கினி

முன்போல ஆறுபொறிகளாய் வந்து சந்நிதியை அடைந்தது. அதுகண்டு சிவபெருமான் வாயுதேவனையும், அக்கினிதேவனையும் நோக்கி "நீங்களிருவீரும் இவ்வக்கினிப் பொறிகளைத்தாங்கிக் கொண்டுசென்று கங்கையிலே விடக்கடவீர்கள். அஃது இவைகளைச் சரவணப் பொய்கையிலே கொண்டு சென்றுய்க்கும்" என்று பணித்தனர். வாயுதேவனும், அக்கினிதேவனும் அதுகேட்டு மனவருத்தமுற்று நடுநடுங்கி மும்முறைவணங்கி "எம்பெருமானே ஒருநொடிப் பொழுதினுள்ளே உலகங்களெல்லாம் பரந்த இவ்வக்கினிப் பொறிகள் உமது திருவருளினாலே சிறுகின. அரிது அரிது! இவைகளை அடியேங்கள் தாங்கவல்லமா! உலகத்தைச் சங்கரிக்கும் உமது நெற்றிக்கண்ணினின்றும் தோன்றிய இவ்வக்கினியை பிரம விட்டுணுக்களாலும் ஒருகணப்பொழுதாயினும் தாங்கவல்லவர்களா! முற்காலத் தெழுந்த ஆலாகலம்போலப் படர்ந்த இவ்வக்கினியைக் கண்டவுடனே நில்லாது வருந்தி ஓடினோம். இவற்றை அணுகவும் அஞ்சுகின்றோம். இவ்வாறாக இவற்றை நாங்கள் சிரமேற்கொண்டு செல்லுதல்கூடுமா! இவ்வக்கினியை அடைதற்கு நினைப்பினும் எமது உள்ளம் வெப்புறுகின்றது. சரீரம் வேர்க்கின்றது. நாங்கள் எப்படித்தாங்குவோம்" என்று விண்ணப்பஞ் செய்தார்கள். சிவபெருமான் "இவ்வக்கினிப் பொறிகளைச்சுமந்து சென்று கங்கையில்விடும்பொருட்டு உங்களுக்குத்திண்மை உண்டாகுக" என்று திருவாய் மலர்ந்தருளினர். வாயுதேவனும், அக்கினிதேவனும் அதற்கியைந்து சிவபெருமானைத் துதித்தார்கள். அதுகண்ட பிரம விட்டுணு முதலிய தேவர்களெல்லாரும் துளக்கநீங்கி, "எங்கள் துன்பம் இன்றே நீங்கியது" என்று மனமகிழ்ந்து சரீரம் பூரித்தார்கள். சிவபெருமான் அவர்களை நோக்கி இவ்வக்கினி சரவணப் பொய்கையிலே சேர்ந்து, ஒரு குமாரனாய்வளர்ந்து, சூரன் முதலிய அசுரர்களைக் கொன்று உங்களுக்கு அருள்செய்யும். நீங்களெல்லீரும் போங்களென்று" திருவாய் மலர்ந்தருளினர். பிரம விட்டுணு முதலிய தேவர்கள்" உய்ந்தனம் உய்ந்தனம், இனிஅடியேங்களுக்கு ஒருகுறையுமில்லை" என்று சொல்லி சிவபெருமானை வணங்கிக்கொண்டு அங்குநின்றும் நீங்கினர்கள். வாயுதேவன் சிவப்பெருமானுடைய திருவடிகளை அக்கினிதேவனோடு வணங்கி எழுந்து, அவருடைய திருவருளினாலே அக்கினிப் பொறிகளாறையும் சிரமேற்றாங்கிக் கொண்டு திருக்கோயிலை நீங்கிச் செல்வானாயினன். அதனை பிரம விட்டுணு முதலிய தேவர்களெல்லாரும் பெருமகிழ்ச்சியோடுகண்டு "சுத்தசிவசோதியாகிய எம்பெருமான் தமது நெற்றிக் கண்ணினின்றும், ஒரு திருக்குமாரரை அக்கினிவடிவமாகத் தோற்றுவித்தருளினர். சூரபன்மன் இறத்தற்கும், நாம் முன்னையாக்கத்தைப் பெறுதற்கும் இன்னஞ்சில நாளிருத்தலால் சிவபெருமான் தம்முடைய திருக்குமாரர் சரவணப் பொய்கையிலே குழந்தையாக வளரும் வண்ணம் அருள் செய்தார் சிவபெருமானுடைய செயல்களெல்லாம் திருவருளே. இங்கே அக்கினி

யை தோற்றுவித்ததும் எம்மாட்டுள்ள பெருங்கருணையாயிற்றே. இதுவே அதற்குச் சான்று. இனி அசுரரெல்லாம் இறந்தனர். நம்குறை தீர்ந்தது. நாமும் சரவணப்பொய்கைக்குச் செல்வேம், என்றார்கள். அக்கினிப்பொறிகளைத் தாங்கும் வாயுதேவன் தங்களுக்கு முன்செல்ல, திருக்கைலாசமலையைக்கடந்து செல்வாராயினார்கள். ஒருநாழிகை செல்ல வாயுதேவன் இவ்வக்கினிப் பொறிகளைத் தாங்குதல் அரிது அரிது என்று புலம்பி, சிவபெருமானுடைய திருவருளினாலே வலிமைபெற்ற அக்கினிதேவனுடைய சிரசிலே அப்பொறிகளைச் சேர்த்தினான். சேர்த்தலும் அக்கினிதேவன் சரீரம் வேர்த்து மிகமெலிந்து, ஒருநாழிகையிலே தாங்கிக்கொண்டு, பிறிதொருநாழிகைதாங்கலாற்றாது, விரைந்து சென்று அவைகளைக் கங்கையிலே விடுத்தான். அப்பொறிகள் வந்தடைந்தவுடனே கங்கையானது சிவபெருமானுடையசடையின் மறைந்தமைபோல வறந்தது. சிவபெருமானுடைய திருவருளையறிந்து கங்கையானது, அப்பொறிகளைத்தன் சிரமேலேந்திக்கொண்டு ஒருநாழிகையினுள்ளே சென்றுசரவணப் பொய்கையில் விடுத்தது. பிரம விட்டுணு முதலிய தேவர்களெல்லாரும் அதுகாறும் வந்து அண்ணியதாகிய விளைவைநாடிக் காக்கும் வழியார்போலச் சரவணப் பொய்கையைப் பேருவகையோடு சேர்ந்தார்கள். பிரமா ஆகாயத்தினும், விட்டுணு பூமியினும், இந்திரன் முதலிய திக்குப்பாலர்கள் எண்டிசைகளினும் நின்று காத்தார்கள். கங்கையும் வறக்கும் வண்ணம் புகுந்த அக்கினிப் பொறிகளாலும், இமையமலைச்சாரலிலுள்ள சரவணப் பொய்கையிலே புகுதலும், அது சிவபெருமானுடைய திருவருளினாலே வறத்தலின்றி முன்போலிருந்தது. அருவமும் உருவமுமாய் அநாதியாய் ஒன்றாய்ப் பலவாய்ப் பரப்பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பே திருமேனியாக, கருணை வெள்ளம், பொழியா நின்ற ஆறுதிருமுகங்களும் பன்னிரண்டு திருக்கரங்களுங் கொண்டு முருகக்கடவுள் உலகம் உய்யும் வண்ணம் திருவவதாரஞ் செய்தருளினார். செய்தருளலும் ஆகாயத்திலே துந்துபிகள் ஒலித்தன; வேதங்களெல்லாம் ஆர்த்தன; பிரமாவும் விட்டுணுவும் இந்திரனும் பூமாரிபெய்து "அடியேங்களுக்கு அருள்செய்க" என்று துதித்துச் சூழ்ந்தார்கள். உலகத்துள்ள உயிர்களெல்லாவற்றிற்கும் உவகைக் குறிப்புண்டாயின. சூரன் முதலிய அசுரர்களெல்லார்க்கும் இறப்பையுணர்த்தும் குறிப்புக்களுண்டாயின. வேதங்களாலும் மனத்தாலும் வாக்காலும் அறியொணாது எங்கும் நிறைந்து நின்ற நிருமலராகிய முதற்கடவுள் ஆறுதிருமுகங்களையுடையராய்த் தோன்றி உயிர்களிடத்துள்ள பேரருளோடும் சரவணப் பொய்கையிலே செந்தாமரை மலரின்மீது வீற்றிருந்தருளினார். அம்முருகக்கடவுள் கைக்குழந்தை போலச் செய்யும் திருவிளையாடலைக்கண்டு விட்டுணு முதலிய தேவர்கள் யாவரும் "கார்த்திகை மகளிர்களை" நோக்கி சரவணப்பொய்கையிலே ஆறுமுகக் கடவுளாய் வீற்றிருந்தருளும் எம்பெருமான் ஒரு குழந்தைபோலத் தோன்

றினர். நீங்கள் அவருக்கு நாடோறும் உங்கள் முலைப்பாலைக் கொடுத்து அவரை வளர்க்கக்கடவீர்கள். என்றார்கள். கார்த்திகை மகளிர்கள் அறு வரும் அதற்கியைந்து சரவணப் பொய்கையில் எழுந்தருளியிருக்கும் முரு கக்கடவுளை அடைந்து துதிக்க அவ்வறு முருகக்கடவுள் தம்மை அடைந் தோர்க்கு வேண்டியன அருள்செய்யும் பெருங்கருணைக் கடலாதலால், வேவ்வேருக ஆறு சிறுவர் வடிவங்கொண்டருளினர். கொண்டருளலும், கார்த்திகை மகளிர்கள் அறுவரும் மிகமகிழ்ந்து அச்சிறுவர்கள் அறுவரை யும் வெவ்வேறு எடுத்து தங்கள் தங்கள் முலைப்பாலை ஊட்ட அவ்வறு முகக் கடவுள் திருமுறுவல் செய்து நீங்காத பேரருளினாலே மிகவருந்தி னோர்போல உண்டருளினர். உண்டபின் ஆறு சிறுவராய் நின்ற ஒரு முதற்கடவுளை அம்மகளிர்கள் சரவணப் பொய்கையினுள்ள தாமரைமலர் களாகிய சயனத்தின்மீது சேர்த்துத் துயில் செய்வித்துத் துதித்தார்கள். அம்முருகக்கடவுள் திருவருளினாலே துயில் செய்ய ஒருருவமும், துயில் செய்து விரைந்தெழுந்து மதலைபேச ஒருருவமும், மாதாவின் முலைப்பாலைச் செம்பவளத் திருவாய் வைத்து உண்ண ஒருருவமும், நகைத்துக் கொண்டி ருக்க ஒருருவமும், விளையாட ஒருருவமும், அழ ஒருருவமும், உடையர் ஆயி னர். தவழ ஒருருவமும், தளர்ந்து செல்ல ஒருருவமும், நில்லாது விரைந்து எழுந்து விழ ஒருருவமும், இருக்க ஒருருவமும், பொய்கை எங்கும் சென் றுழக்க ஒருருவமும், மாதாவிடத்திருக்க ஒருருவமும், உடையராயினர். கூத்தாட ஒருருவமும், செங்கை கொட்ட ஒருருவமும், பாட்டுப்பாட ஒரு ருவமும், பார்க்க ஒருருவமும், ஓட ஒருருவமும், ஓரிடத்தொளிக்க ஒருருவ மும் உடையராயினர். இவ்வாறே ஆறுதிருமேனியும், கணம் ஒன்றினுள் ளே ஆயிரம் பேதமாம் வண்ணம் முழுமுதற் கடவுளாய் நின்ற குமார சுவாமி எண்ணில்லாத திருவிளையாட்டைச் செய்தருளினர். பிரம விட் டுணு முதலிய தேவர்களும் முனிவர்களும், பிறரும் அதுகண்டு அற்புத மடைந்து இவ்வொரு பாலரே பல சிறுவர் வடிவங்கொண்டு நம் முன்னேகணப் பொழுதினுள்ளே எண்ணில் பேதத்தராயினர் ஆராயுங்கால் இக்குமார சுவாமியுடைய திருவிளையாடல் எங்களாலும் அறிவரிது. இவர் எல்லாமாயமுஞ் செய்யவல்லவர். வரம்பில்லாத அறிவினையுடையர். கைக்குழந்தைபோலத் தோன்றிய இவர் செய்யும் இம்மாயைபோல ஒருவரும் செய்யவல்லரல்லர். பிறிது சொல்லி என்னை நாமும் இவ்வாறு செய்ததொன்றில்லை. இவர் உயர்வொப்பில்லாத சிவபெருமானேயாம். என்று சொல்லி வணங்கி நின்றார்கள். கார்த் திகை மகளிர்கள் அறுவரும், அறுமுகக்கடவுளுடைய திருவிளையாடன் முழுதையும் நோக்கி நோக்கி மிக்க அற்புதமடைந்து குழந்தைகளெனக் கொள்ளுதலை ஒழித்துச் சிறிதும் பிரியாது அஞ்சி, வழிபடுகடவுளாகவே கொண்டு மெய்யன்போடு துதித்தார்கள். சிவபெருமான் உமாதேவியாரை

நோக்கி "உமையே முன்னே நமது நெற்றிக்கண்ணினின்றும் தோன்றிச் சரவணப் பொய்கையிலிருக்கும் உன் புதல்வனை நாம் போய் இங்கே கொண்டுவருவோம் வா'' என்று திருவாய்மலர்ந்தருளினர். உமாதேவியார் அது கேட்டு உவகையும், அன்பும் கொண்டெழுந்து, எம்பெருமானே நம்முடைய குமாரனை நாம் கொண்டுவருவேம் எழுந்தருளுக என்றார். உடனே சிவபெருமான் எழுந்து உமாதேவியாரோடும் இடபமீது ஏறியருளினர். அது கண்டதேவர்கள் "நம்முடைய தீவினைகளெல்லாங்கழிந்தன'' என்று, மனமிக மகிழ்ந்து நந்திகணத்தோடு அணைந்து துதித்தார்கள். ஆலாலசுந்தரர் முதலிய கணத்தர்களும், உருத்திரர்களும் வந்து இருபக்கத்தும் நெருங்கித்துதித்தார்கள். ஞானசாரியராகிய திருநந்திதேவர் விடுப்ப, பிரம, விட்டுணு, இந்திரன் முதலிய தேவர்கள் பூமாரி பெய்து திருவடிகளை வணங்கிக் கொண்டு சூழ்ந்தார்கள். பூதர்கள் நானுவித வாத்தியங்களை முழக்கினர்கள். நான்கு வேதங்களும், பிரணவமும், பலகலைகளும் ஒலித்தன. விஞ்சையர்கள் கீதம்பாடினர்கள். சூரியர்கள் வெண்குடைபிடித்தார்கள். பூதர்கள் சாமரம் வீசினர்கள். நூறுகோடி பூதர்கள் சூழ்ந்தார்கள். இடபக்கொடிகள் நெருங்கிச்சென்றன. அப்பொழுது உமாதேவியாரோடும் இடபமேற்கொண்டருளிய சிவபெருமான் தமது திருக்கோயிலினின்றும் நீங்கி திருக்கைலாசத்தைக்கடந்து, இமையமலைச்சாரலிலுள்ள சரவணப் பொய்கையை அடைந்தார். கைலாசபதியும், பார்ப்பதியம்மையாரும் ஆறுருவங்கொண்ட முருகக்கடவுளுடைய தன்மையைப் பார்த்துத் திருவருள் செய்து, சரவணப் பொய்கைக்கரையிலே நின்றார்கள். அப்பொய்கையிலே ஆறு திருவுருவங் கொண்டொலிவி வீற்றிருந்தருளும் குமாரக்கடவுள் சிவபெருமானையும், உமாதேவியாரையுங் கண்டு, திருமுகமலர்ந்து திருவுளங்களித்தார். அப்பொழுது, மகாதேவர், உமாதேவியாரை நோக்கி "நீ போய் உன் புதல்வனைக் கொண்டு வரக்கடவாய்'' என்று பணித்தருள தேவியார் இடப வாகனத்தினின்றும் விரைந்து எழுந்து இறங்கி திருவுளத்தேகிளர்ந்த பேராசையோடு சென்று, சரவணப்பொய்கையில் எழுந்தருளியிருந்த தமது திருக்குமாரருடைய ஆறுருவங்களையும் இரண்டு திருக்கரங்களினாலும் அன்போடு எடுத்துத் தழுவி, ஆறுதிருமுகங்களும் பன்னிரண்டு திருபுயங்களும் கொண்ட ஒருருவமாம் வண்ணஞ் செய்தருளினர். அக்குமாரசுவாமி உமாதேவியாரால் ஆறுதிருவுருவும் ஒன்றாகி கந்தர் என்னும் திருநாமத்தைப் பெற்றார். உமாதேவியார் தம்மாலே தழுவப்பட்ட குமாரவேளுடைய முடிதோறும் மோந்து, முதுகைத்தடவலும் அவ்வம்மையாருடைய திருமுலைகள் சுரந்து பால் சொரிந்தன. சிவபெருமானது திருவருளாகியும், நிருமலமாகியும் பரஞானமாகியுமுள்ள தம்முடைய திரு முலைகள் பொழிந்த பாலை ஓர் இரத்தினவள்ளத்திலேற்று முருகக்கடவுளுக்கு அன்பினுடன் ஊட்டினர். ஊட்டியபின்பு அக்குமாரக்கடவுளை

கொண்டு போய் எம்பெருமான் திருமுன்னே வணங்குவிப்ப, அவர் தம்முடைய திருக்கரங்களினாலேஎடுத்து மார்பிலணைத்து பெருங்கருணையோடும் தமது பக்கத்து இருத்தியருளினர். பின்பு உமாதேவியாரையும் திருக்கரத்தினால் எடுத்து தமது இடப்பக்கத்திருத்தியருளினர். இடபத்தின் மீது சிவபெருமானுக்கும் பார்ப்பதியம்மையாருக்கும் இடையே ஆறுமுகக் கடவுள் எழுந்தருளியிருத்தலைக்கண்டு பிரமா, விட்டுணு இந்திரன் முதலிய தேவர்கள் கடல்போல் ஆரவாரித்து அணுகிப் பக்கத்தும் முன்னும் பின்னும் நெருங்கி "சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணினின்றும் தோன்றியருளிய குமாரசுவாமியே அடியேங்கள் சூரபன்மனால் மிக வருந்தினேம் இனிச் சிறியேங்களை ஆட்கொண்டருளும்" என்று விண்ணப்பஞ் செய்து பூமழை பொழிந்து வணங்கி எழுந்துவாழ்த்தினர்கள். அப்பொழுது கார்த்திகை மகளிர்கள் சிவபெருமானை பேரன்போடு வணங்கி எழுந்தார்கள். கைலாசபதி அவர்கண்மீது திருவருணோக்கஞ்செய்து நம்முடைய குமாரனாகிய இவன் உங்களால் வளர்க்கப்பட்டமையால் "கார்த்திகேயன்" என்னும் பெயரைப் பெறக்கடவன். யாவராயினும் உங்கள் நக்ஷத்திரத்திலே இவனை மெய்யன்போடு வழிபடுவராயின் அவர் வேண்டும் வரங்களை கொடுத்து முத்தியை அருளிச்செய்வேம் என்று திருவாய்மலர்ந்தருளினர் பின்னர் சிவபெருமான் கார்த்திகை மகளிர்களையும், பிரம விட்டுணுக்கள் முதலிய தேவர்களையும் தங்கள் தங்கள் இடத்துக்குச் செல்லும் வண்ணம் விடுத்து, திருக்கைலாசமலையை அடைந்து முருகக்கடவுளோடும் உமாதேவியாரோடும் இடபவாகத்தினின்றும் இறங்கி நடந்து செம்பொற்றிருக்கோயிலிற் சென்று சிங்காசனத்தின் மேல் வீற்றிருந்தருளினர். திருச்சிற்றம்பலம். (இதுகாறும் கந்தபுராணவசனம் திருவவதாரப்படலம், நண்ப ! இங்ஙனம் சிறிது உய்த்துணர்ந்து நோக்கிப்பாருங்கள். "கார்திகை மகளிர்கட்கு" உரியமாட்சி எற்றென்று நன்கு தெளியுங்கள் "வாயுதேவன்" என்ன, "அக்கினிபகவான்" என்ன, "பாகிரதி" என்ன, "உமாதேவியார்" என்ன "சரவணப் பொய்கைதான்" என்ன ஓரணுவளவு கூட ஆற்றற்கு ஒண்ணாத செந்தழல் உருவங்களான சுத்தமாயாதத்துவ அதீத மாட்சியுட்பட்ட "அவனேதானே இவனும்", "இவனேதானே அவனும்" என அவதரித்த "இறைவனில் இறைவனும்" எல்லாம் வல்ல நமது அறுமுகக்கடவுட்குத் திருமுலை சுரந்த "கார்த்திகை மகளிர்களாகிய" அவ் ஆறு சக்திகளின் சக்தி யிருந்தவாறென்னை; அவர்களின் மாட்சிதான் இருந்தவாறென்னை! உலக மாதா வென்னும் பட்டம் அவர்களுக்கும் அன்றோ உரியதாம். எண்ணிலடங்காத மாயா வல்லபத்தோடு கூடிய சூரபன் மனையும், கணக்கிலடங்காத அவனது சேனை வெள்ளங்களையும், தவிடு பொடிகளாக்கிய நமது குமரகுருபரன் சக்திகளொருங்கும் நமது, கார்த்திகை மகளிர்களின் அரும் பெருஞ்சக்திகளேயாமன்றோ அவர்கள் ஊட்டிய பாலே அன்றோ

பால்! அவர்கள் ஊட்டிய அமுதமே அன்றோ அமுதம்! அவர்களின் முலையே அன்றோ முலை! அவர்கள் பெற்ற பிள்ளைகளே அன்றோ நமது அறுமுகப்பெருமான்! அந்தச் சுடுகாட்டிற் பிணம் பிடுங்கும் பேயனுக்கும் பேச்சிக்குமா" நமது குமரகுருபரன்பிள்ளை! அவர்கள் பெற்றபேறேபேறு! அக்கார்த்திகை மகளிர்களைபற்றி ஈண்டுஞ் சிறிது கவனிக்கப்புகின், "நிலா மண்டபத்தில் நிறைந்த வயிர்துண்ணில் உலாவலாம் அந்தரத்தின்மேல்" என்றார் ஔவையார். அமுதசாகரமே ஒருருவான சந்திர பகவான் மனைவியேயாம். மேலும், பண்டைய ஞான்று ஒரு நாள் நாரதமுனிவர், நல்ல விரதாநுட்டான பலத்தினாலே, எழுமுனிவர்களுள்ளும் தாம் உயர்ந்த பதத்தையும், சிறப்பையும், பெறவேண்டுமென்று எண்ணி, விநாயக்கடவுளுடைய பாதங்களை வணங்கித்துதித்து எழுமுனிவர்களுள்ளும் யானே மேம்பாடடையும்படி அடியேனுக்கு ஒரு விரதத்தைச் சொல்லியருளும் என்றார். விநாயக்கடவுள் அதனைக் கேட்டுப் பேரருள்புரிந்து அவரைநோக்கி முனிவனே நீ! நமது தம்பியாகிய சுப்பிரமணியனை வழிபட்டு கார்த்திகை நக்ஷத்திர விரதத்தை பன்னிரண்டு வருஷகாலம் சிரத்தையோடு அநுட்டிக்கக்கடவாய். நீ நினைத்ததனைப் பெறுவாய். இது திண்ணம். என்றருளிச்செய்தார் நாரதமுனிவர். அதனை அநுட்டிப்பேன் என்று பூவுலகில் வந்து பரணி நக்ஷத்திரத்திலே அபரான்னத்தில் ஒருபொழுதுண்டு கார்த்திகை நக்ஷத்திரத்தில் விடியகாலத்திலே உடுத்த வஸ்திரத்தோடு ஸ்நானஞ் செய்து வெள்ளை வஸ்திரந்தரித்து, நித்தியகர்மா நுஷ்டானங்களை முடித்து, ஐம்புலன்களை அடக்கி ஆசாரியரைத்தியானித்து, சுப்பிரமணியக்கடவுளைப் பூசித்து, அவருடைய புராணத்தை வாசித்து, சுத்தசலத்தை ஆசமித்து, பெண்ணாசை என்பது சிறிதுமின்றித் தருப்பசயனத்திலே படுத்து முருகக்கடவுளுடைய திருவடிகளையே தியானஞ் செய்துகொண்டு அன்றிரவு முழுவதும் நித்திரையின்றி யிருந்து அடுத்த நாட்காலையில் உரோகிணி நக்ஷத்திரத்திலே ஸ்நான சந்தியா வந்தனங்களை விரைவில் முடித்துக்கொண்டு சுப்பிரமணியக்கடவுளைப் பூசித்து, வந்த முனிவர்களோடு பாரணை செய்து பாரணை செய்தவர்கள் அன்று பகர் பொழுதில் நித்திரை செய்தால் வேதத்தில் வல்ல நூறு அந்தணர்களை நிஷ்காரணமாகக் கொன்ற பாதகம் வருமென்று தெளிந்தமையால் அன்று பகன் முழுதும் சிறிதுங்கண்ணுறங்காமல், அன்று சாயாங்கால சந்தியா வந்தனாதிகள் யாவும் குறைவறச் செய்து இவ்வாறு பன்னிரண்டு வருஷகாலம் கார்த்திகை விரதத்தை அநுட்டித்து எழுமுனிவர்களுக்கும் மேலாகிய பதவியைப் பெற்றார். இக்கார்த்திகை விரதத்தை இப்பூவுலகத்தில் ஓர் அந்தணன் அநுட்டித்து, முதல் மனுவாகி உலகம் முழுதையும் ஆண்டான். வேறுமோர் அந்தணன் அநுட்டித்து மனத்தில் நினைந்தன வெல்லாவற்றையும் அடைந்து திரிசங்குமகாராசனாயினான். இப்பூவுலகில் முன்னாளில் ஓர் அரசனும் வேடனும் இவ்விரதத்தை

அனுட்டித்து முதல் வள்ளல்களாகிய அந்திமான் சந்திமான் என்னும் பேர் பெற்று பூவுலகத்தை ஆண்டார்கள் என்பர். இவர்கள் பின்னுளில் மோக்ஷ மடைதல் நிச்சயமாம். இவ்வாறே கார்த்திகை விரதத்தை சிரத்தையோடு அநுட்டித்துத் திரிலோகங்களினும் வேணடியவரங்களைப் பெற்றவர் தொகையை யாவர் அளவிட்டுச் சொல்ல வல்லார்'' என்று கந்தபுராணம் கூறுகிறது. இத்துணைதூரம் எத்துணையோ சிறந்த அபாரசக்திகளும், மாட்சிகளும், உமாதேவியாரை நிகர்த்த பெருங்கருணையும், எக்காரணங் கொண்டும் எந்த வோர் ஞான்றும் அழியக்கூடாத சிரஞ்சிவித் தன்மையும், மெய்ஞ்ஞான சொரூபமும் பொருந்திய கார்த்திகைநாளின் விசேஷத்தன் மைகள் ரூருங்கையும் மிக நன்குதெள்ளத் தெளிந்துக் கண்டுபிடித்துத் தங்களின் ஆண்குழந்தைகளுக்குச் செய்யும் புதுமைச்சடங்குகட்கு உரியன வாக நியமித்துக்கொண்ட நமது பூர்வீகப் பெரியார் மாட்சியே மாட்சி. அவர்களின் படிப்பேபடிப்பு. அவர்களின் ஞானமே ஞானம். அவர்களின் சக்தியே சக்தி. அவர்களின் இயற்கைகளையும், அபூர்வ சக்திகளையும் எண்ணி நோக்கும்பொழுது அவர்களுட் பலர் அவதார புருஷர்களாகவே விளங்கி இருந்தார்கள் என்பதுநன்கு விளங்குகின்றது. அவர்களால் நியமிக் கப் பெற்றுத் தற்காலம் ''இலைமறைகாய்'' போன்று, நமது மரபைச்சார்ந்த சிறுபான்மையோர்களான் மாத்திரம் போற்றிப்புகழ்ந்து கொண்டாடப் பெற்றும், அநுட்டானத்தில் சிறிதும் நழுவாத வண்ணம் நமது மரபாருள் பூரணமாக நிலை நின்றும்விளங்கப்படுகிற "காப்புக்கட்டுப்புதுமை" யைப் பற்றிச் சிறிதுநன்கு விளக்குவாம். அஃதாவது, ஒரு பசுவானது, பாசத் தாலே மிகச்செவ்வனே நன்குகட்டப் பெற்றுலல்லது, அப்பசுவுக்கு இஞ் ஞால வாழ்க்கையும் இஞ்ஞால வாழ்க்கைக்காக வேண்டும் பலதுணை நலக் கருவிகளும், தீர்க்காயுளும், சுவர்க்காதி போகவின்பங்களும் முடிவிலே முத்தி இன்பமும் கிடைத்தல் அருமையாதல் பற்றி அதனை நன்கு ணர்ந்த நமது பூர்வீகப் பெரியார் எவர்களுக்கும் வெளிப்படையாக அஃது தெற்றெனப் "பாசக்கட்டுப்புதுமை" என்றே விளங்கத் தங்கட்கு ஆண் குழந்தை பிறந்து பெரும்பான்மை ஓராண்டு நிறைகிறதற்கு முன்ன தாகவே, பாசசம்பந்தமான சகல சம்பத்துக்களும் பூரணமாக வளர்ந் தோங்க வேணடுமே என்ற பேராவலோடும், அக்குழந்தைக்கு, அப்புது மைச்சடங்குகளை நிறை வேற்றுதற்குரிய நல்ல நாட்களைக்கண்டு தெளிந்து தீர்மானித்துக் கொண்டு, முதன் முதலாகத் தங்களின் பங்காளிகளின் வீடு களுக்கு ஒருவர் சென்று இன்னர் மகன் இன்னுனுக்குப் புதுமை சொல்லல் வேண்டுமெனச் சொல்லுகிறது. அஃது, ஏதுக்காக வெனின்? தங்களின் பங்காளிகளாயுள்ளார் யாவரும் அச்சடங்கு நாட்களாகிய நான்கும் ஒன்று கூடியிருந்து உண்டு உடுத்து ஆநந்தமாகக் கண்டுகளித்து அச்சடங்குகளை எவ்விதத் துவேஷமுமின்றிப் பூர்த்தியாக்குதல் வேண்டுதல் குறித்ததாம்.

என்றால், ஏதேனும், தங்களுக்குள் விவகாரம் உண்டாயிருந்தால் அதனை யாவரும் சமாதானமாகத் தீர்த்துக்கொண்டு அவ்விசேடத்தின் போது ஒருவருக்கொருவர் எவ்வித மனத்தாங்கலும் இல்லாதிருக்கும் பொருட்டே யாம். அதன் பின்னர் புதுமை இன்னநாளென்றும், யாவரும் வந்திருந்து சிறப்பாக நடத்தி வைக்கவேண்டுமென்றும் அழைக்கப்பெறும். அதன் பின்னர் அக்குழந்தையின் தாய மாமா வீட்டினின்றும் வேவெடுத்து வரப் பெறும், அதன் பின்னர், குறித்த முகூர்த்தகாலத்து, அக்குழந்தைக்கு அணியாபரணதிகளால் நன்கு அலங்கரித்து, அழகிய பாசிகளால் உயர்ந்த முத்து ஆரங்களைப்போன்று, நல்ல ஆரங்களாக்கி அக்குழந்தையின் "பசு" அதாவது உயிர் நிலையமாகிய இருதயஸ்தானமாம் மார்பில் மாறுதலாகத் தொங்க விட்டுக் கட்டிச் சாம்பிராணித் தூபங்காட்டி, விபூதியணிந்து சந்தணமிட்டுச் சுவர்னக் கம்பிவஸதிரம் அல்லது, பட்டாடை யார்த்து, ஓர் மரவையின் மீது ஆசனமிட்டு அக்குழந்தையை அதன் மீது உட்கார வைத்து, நடுப்பட்டகசாலையில் நிலைவிளக்கு ஏற்றி வைத்துச் சாணத்தினாலேனும், மஞ்சளினாலேனும் பிள்ளையார் பிடித்து வைத்துப் புஸ்பங்கள் சார்த்தித் தூபதீபங்காட்டி அக்குழந்தையின் "தாயாரும்" "தாயாருடன் பிறந்த அம்மானும்" "அப்பாவுடன் பிறந்த அத்தையும்" ஆகிய இம் மூவரும், அம்மரவையோடுங் கூட அக்குழந்தையைத் தூக்கி ஒன்றிரண்டு மூன்று தரமாக வலஞ்சுற்றி மங்கல மொழிகளான் வாழ்த்திப் பின்னர், ஆங்குடைத்தான ஒவ்வொரு பெரியாரிடத்தும் ஆம் ஐயா! இக்குழந்தையை நோக்கி ஒவ்வொருவரும் நன்கு ஆசீர்வதியுங்கள். இக்குழந்தையானது இன்று முதற்றான் பாசமாகிய பாசியால் பிணைக்கப் பெற்றிருக்கின்றது எனக் கூறிக்கொடுப்ப, ஆங்குடைத்தான ஒவ்வொரு பெரியாரும் எடுத்து முதுகுதடவி, உச்சிமோந்து, முத்தமிட்டு, எந்தவாற்றானும் நிறைந்த முதுமொழிகளானே ஆசீர்வதித்து. பழங் கற்கண்டு சீனி தேங்காய் முதலியன வழங்கப்பெறுகிறது. உடன் மொய்ப்பணமும் எழுதப்பெறும். நான்கு நாள் விருந்துண்டு. ஆண்குழந்தையாயின், நான்காவது நாள் மொட்டையிட்டுக் கொள்கிறது. "நடக்கும் பிள்ளை தவழுமாம் தாயார் செய்த தவப்பலன்" என்பது போன்று, இக்காலத்துப் பெரியவர்களுடைய கிருபையால் புதுமை சொல்லல் வேண்டும், கலியாணஞ் சொல்லல் வேண்டும் என்று, முன்னதாகச் சொல்லிக்கொள்வதும், பங்காளிகளுக்குள் ஏதேனும் வியவகாரங்கள் உளதாயின், அவைகளைக் கோடு நாடு களுக்குப் போகாமல் அவ்வமயம் தீர்த்துக் கொள்வதும் பெரும்பான்மையும் நின்று போயின. சில குழந்தைகளுக்கு ஏழெட்டு ஆண்டுகள் வரைகூட காப்புக் கட்டுப்புதுமைச் சட்டங்குகள் நடத்தப் பெறுமலுமிருக்கின்றன. இனித்திருக்கார்த்திகைப் புதுமையைப்பற்றி வரையத்தொடங்குவாம். அஃதாவது, கார்த்திகை மதியின் திருகார்த்திகை நாளின் அன்று,

இயற்கையாகவே தங்கள் இல்லத்தின் பலபாகங்களினும் ஆங்காங்கு அநேக பல தீபங்கள் மிக அலங்காரமாக ஏற்றி வைத்திருப்பதோடும் அப்புதுமையாகிய புதியசடங்குகட்காகத் தாங்கள் ஆண்டு அனுபவித்துக் கொண்டு சதா வாசஞ் செய்து வருகிற இல்லத்தின் முன்னர் தார் ஈன்ற வாழைமரம் ஒன்றைக் கொணர்ந்து நாட்டி அதன் உச்சியில் பெரியபடிக்குக்கால்படி எண்ணெய் பிடிக்கக்கூடிய ஓர் அகலில், எண்ணெய் நிறைய விட்டுத்திரியும் பெரிதாக போட்டு வைத்தும், அவ்வாழை மரத்தின் நடுவாக இரண்டு சாதாரணத்தீபம் ஏற்றுவதற்கு வேண்டும் மார்க்கங்கள் மிக நன்றாக அமைத்து வைத்தும், அம்மரத்தைச் சுற்றி மிக நன்றாகக் கோலங்களிட்டு அலங்காரஞ் செய்தும், ஏனைய தீபங்களெல்லாம் ஒருங்கே பொருத்துகிற பொழுது மேற்படி வாழை மரத்தில் அமைக்கப் பெற்றிருக்கும் மூன்று தீபங்களையும் நன்றாகப் பொருத்துவார்கள். பின்னர், அச்சடங்குகட்குரிய மணமகனுக்கு ஆடையாபரணாதிகளாலும், விபூதி சந்தன புஷ்பவாசனாதிகளாலும், ஆங்குடைத்தான பல பெரியவர்ளும், பெண்டுகளும் ஒன்று கூடி அன்போடு மாப்பிள்ளைக் கோலமாக நன்றாக அலங்கரித்து மேள வாத்தியங்களோடு மங்கலகரமாகப் புரவியிலேற்றி வைத்துக் கொண்டு, தேங்காய், பழம், கற்பூரம், வெற்றிலைபாக்கு சங்கோசை, நெய் யுடன் சிவாலயம் சென்றுசுவாமி தெரிசனஞ் செய்து சூழ்ந்துகொளுத்திக் கொடுத்துப் பிடிக்கச் செய்து பின்னர், சொக்கப் பனைக் கொளுத்திக் கொளுந்து விட்டுப் பூரணமாக நிறைந்து நின்று சோதி வடிவமாகப் பிரகாசிக்குந்தருணத்து, எலம் அருமை மகனே! இதுதான் "பிரமன்மாலறியாப் பெற்றியோன்" திருவுருவமாம் எனச்சுட்டிக்காட்டித் தெரிசிக்கச் செய்து பின்னர் ஆலயத்தினுட்சென்று சுவாமிக்கு ஆக வேண்டியகாரியங்களை எல்லாம் முறையாக முடித்துக்கொண்டு பிரசாதங்களோடும், அம்மணமகனை அப்புர வியிலேற்றிக் கொண்டு மேள வாத்திய சங்கோசை முதலிய மங்கல வாத்திய கோஷங்களோடுந் திரும்பிப் பழமையும் முறைமையும் அமைந்தவாறு ஊர்ஆலாத்தி எடுக்கப்பெற்றுத் தங்கள் இல்லம் வந்து சேருகிறது. அதுகாறும், அவ்வாழை மரத்திலேற்றிய மூன்று தீபங்களையும், அடிக்கடி கவனித்து, வேண்டும் காலத்து நிறைய எண்ணெய்வார்த்து, அச்சோதி வடிவங்களை மலையேறி விடாமல் அவ்வில்லத்துடைத்தானவர்கள் மிக நன்றாகக் கவனித்துப்பார்த்துக் கொள்வார்கள். சூழ்ந்து கொளுத்திக் கொடுத்துப் பிடிக்கச்செய்யும் இப்புதுமைக்குத் தான் இக்காலம் "காத்திகைச்சூப்பிடி" 'காத்திகைச்சூப்பிடி" என வழங்கப் பெறுகிறது. பின்னர், முன்னும், பின்னுமாக விருந்துண்ணும் முறைகள் ஒழுங்காக நடைபெறும். இதற்கு இடையில் பலகாரம் சாப்பிடுகிறவர்களும் சாப்பிடுவார்கள். புதுமை மணமகனும், ஆண்பிள்ளைகள் யாவரும் ஆலயஞ்சென்றிருக்குங்கால் பெண்மக்களாய்க்கூடி ஓரைந்தாட்டைப் பருவம் உடைய சிறுவனுக்குங் கூடத் தெரியக்கூடாத

சடங்கொன்றும் நடத்தப்பெறும். அஃதாவது, ஓர்குந்தானிக்கும் ஓர் உலக்கைக்கும் புதிய ஆடைகள் ஆர்த்து, வாழைமரத்தில் வைத்திருக்கும் மூன்று திபத்தில் ஓர் தீபத்தை எடுத்துக்கொணர்ந்து, அவ்வுலக்கையின் தலையிலே வைத்து "மாபலியா மாபலியாமஞ்சட்கொத்து மாபலியா" ஈருகொல்லிப் பெண்டுகளை இழுத்தோடும் மாபலியா" "குந்தானிப் பெண்டுகளைக் கொண்டோடும் மாபலியா" என்னும் தொடக்கத்துச் சிலமுது மொழிகளை அவர்களாகமட்டும் கூறிமும் முறைவலமாகவோ இடமாகவோ சுற்றிவந்து அச்சடங்கினை பூர்த்திசெய்கிறது வழக்கமாம். கவனிக்கும்பொழுது அவ்வாக்கியங்களைக்கொண்டு, நமது மரபைசார்ந்தச்சகோதரிகளுக்கு அரிட்டம் உண்டாகக் கூடியனவாகக் காணக்கிடக்கிறது. என்றால், எந்தமார்க்கத்தானும் அவ்வாக்கியங்களை,ஆண்மக்களுக்குச் சொல்லமாட்டார்கள். அஃது திண்ணம் அஃது எமக்குந்தெரியும்.கல்வியறிவுள்ள சகோதரிகள் சிறிது கவனித்துஅவ்வாக்கியங்களைத் திருத்தியமைத்து, அச்சடங்கு முகூர்த்த காலத்துப்பெண்மக்கள் பலவாகப் பல்கிப் பெருக வேண்டிய நன்மொழிகளாக அமைத்து, அஃது, எங்கணும், பரவுமாறு அவர்களைக் கொண்டே செய்து முடிக்கவும் வேண்டும். பங்காளிகளுக்குமட்டுந்தான் விருந்து. நான்கு நாள்தான். இனித் திருவாதிரைப் புதுமையைப்பற்றியும் விளக்கத் தொடங்குவாம். அஃதாவது, ஓர் அணுவளவுகூட சந்தேக விபரீதங்களற்ற சிவசமய சம்பந்தம் உடையதென்பது ஒருவர் சொல்லாமலே நன்கு விளங்குவது ஒன்றும். இப்புதுமை, நமது, மரபைச்சார்ந்த பெண் குழந்தைகளுக்குச் செய்யும் ஓர் முதற்சடங்காகும். இச்சடங்குக்கு உரியநாள் மார்கழிமதியின் திருவாதிரை நாளேயாம். இந்த நாள் அன்று, அப்புதுமைக்குரிய மணமகட்கு, நன்றாக அலங்கரிக்கப் பெற்றிருக்கும். அக்குழந்தையின், தாய் மாமாவால், அன்று நாள் காலையில் ஏழு, அல்லது ஒன்பது ஊருணிகளிலிருந்து கொஞ்சம், கொஞ்சமாக ஈரமண்ணும், ஏழு, அல்லது ஒன்பது செடிகளிலிருந்து பல வர்னமான மலர்களும் எடுத்து வைக்கப் பெற்றிருக்கும். பின்னர் அப்புது மணச்சிறுமி இரண்டு மூன்று தோழிப் பெண்களுடன் மிக வுல்லாஸமாக மனோகரமான அலங்காரத்துடன் தங்களின் வகுப்பைச்சார்ந்த ஏழு அல்லது ஒன்பது இல்லங்கட்குச்சென்று "ஆயாளோ ! ஆத்தாளோ! ஆச்சியோயார் வீட்டில் !" "பூம்பிஞ்சுகாய் கறிக்காய்ப் புதுமையுடன் நான் வந்தேன்" "பாடிப்பாடி நான் வந்தேன் பாவற்காய் போடுங்கள்" "ஆடி ஆடி நான்வந்தேன் அவரைக்காய் போடுங்கள்" "சுண்டிச் சுண்டி நான் வந்தேன் சுண்டக்காய் போடுங்கள்" என்னுந் தொடக்கத்து அக்காலத்திய பழமொழி வாக்கியங்கள் சில கூறிக் காய்கறிகளை வாங்கிக்கொணர்ந்துப் பொங்கலொன்றுமிட்டுச் சில கறிபதார்த்தங்களும் அப்புதுமணச் சிறுமியால் சமைக்கப் பெறும். பின்னர் திருவாதிரை அடையொன்றும் நூற்றெட்டுக் கண்கள் உண்டாகக்கொண்டை எழுத்தாணிக்கொண்டு அச்சிறுமியின் கரத்

தால் துவார மிட்டுக்கொண்டேயிருந்தும் ஆக்கப்பெறும். பின்னர் அப்புது மைச்சடங்குக்காக வந்திருந்த ஆண்பாலார் பெண்பாலார் பலருஞ்சூழ அப் புதுமணச் சிறுமி கணேசர் ஆலயஞ் சென்று அர்ச்சனைகள் செய்து சுவாமி தெரிசனஞ் செய்தவுடன், தன் தாயாராலேனும், தாய்மாமாவாலேனும், காலையில் தயாரித்து வைத்திருந்த மலர்களையும், மண்ணையும் எடுத்து அப் புதுமணச்சிறுமியின் சிரத்தை மும்முறை வலமாகச் சுற்றி அப்புதுமணச் சிறுமியின் திருவடிகளிற் போடப்பெறும். பின்னர் இல்லத்தில் முறையாக விருந்துகள் நடைபெறும். பின்னர் விடியற்காலையில் திருவாதிரை தெரி சனம் சிவாலயத்தில் நடைபெறும். பலகாரங்களும் வழங்கப் பெறும். விருந்து நான்கு நாள்தான். "படைப்பு" "வேவு" "திருமணம்" "ஸ்வீ காரச்சட்டம்" "சஷ்டியப்தபூர்த்தி" முதலிய பல விஷயங்களும் இந்நூல் இரண்டாம் பதிப்பில் "நமது மரபியன் மாட்சி" என்னும் அங்கத்தில் விரிவாக வரையப் பெறும். இனி, விபூதி, ருத்திராக்கம், சந்தனம் அணி ந்து கொள்வதும், பிள்ளையார்சுழி, சிவமயம், திருச்சிற்றம்பலம், கணபதி துணை, முருகன்துணை, அம்பாள்துணை முதலியன ஒன்று முதன் முதலில் வரைந்து பின்னர் விஷயத்தை வரையப்புகுதலும் நமது சைவசமயக் கொள்வகைகளேயாம்.

இனி, நமது தேசிய பாஷை இது என்பது பற்றியும், இனிது நன்கு விளங்கவுரைத்து இவ் அங்கத்தைப் பூர்த்தியாக்குவாம். அஃதாவது, நண்ப! இற்றைக்கு ஏறக்குறைய இருபத்தையாயிரம் யாண்டுகட்கும் முன் னரேயிருந்து உயர்தர நாகரீகதசையுட்டங்கி, எழுத்துச் சொற்பொருள் யாப்பு அணிமுதலிய அநேகபல நல்ல அங்கங்களையும் தம்மகத்துடைய தாயும், இன்னகாலத்திற்றான் இன்னாராற்றான் இப்பாஷையாக்கப்பட்டதா மென்று எத்தகையவொரு எவராலும் வரையறுத்துக்கூறுவதற்கு இயலா ததாயும், எல்லாம் வல்ல நமது முழுமுதற்கடவுளாலும், ஏனைய பல முனி வர்களாலும், போற்றிப் புகழ்ந்து கொண்டாடப் பெற்றதாயும், இஞ் ஞாலத்தில் உடைத்தான அநேக பல எல்லாப்பாஷைகளில் நின்றும், தெய் வசக்தி இஃதாமென்றுணர்த்துவதினும், ஆன்மசக்தியை வளர்ப்பதினும் மிக மேம்பாடுடையதாயும்,

1. "கண்ணுதற் பெருங்கடவுளும் கழகமோடமர்ந்து
பண்ணுறத் தெரிந்தாய்ந்தவிப் பசுந்தமிழேனை
மண்ணிடைச் சிலவிலக்கண வரம்பிலாமொழிபோல்
எண்ணிடைப் படக்கிடந்ததா வெண்ணவும்படுமோ"

2. "தொண்டர் நாதனைத் தூதிடைவிடுத்தது முதலை
யுண்டபாலனை யழைத்ததும் எலும்பு பெண்ணுருவாக்

கண்டதும் மறைக்கதவினைத் திறந்ததும் கன்னித்
தண்டமிழ்ச் சொலோமறுபுலச் சொற்களோசாற்றீர்"

3. "கன்மரக்கலஞ் செய்ததும் ஏடொரு கனலின்
மன்னி நின்றதும் சூலைமாற்றியது மோர்மதமா
முன்னஞ்சுற்றி வீழ்வித்ததும் நீற்றறை முளியா
துன்னச் செய்ததும் தமிழ் மொழியன்றி வேறுளதோ"

4. "இறந்தபாலனை எழுப்பினதெழில் வழுதிவெப்புப்
பறந்து முன்னர்ப் போனின்றது பனைமறு பனையாச்
சிறந்திலங்கிட வைத்தது ஊமைப்பெண் திருவாய்
திறந்ததித்தமிழ் மொழிபலாது எம்மொழி செயுமோ"

5. "பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்
திருப்பிலேயிருந்து வைகையேட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலேநின்று கற்றோர் நினைவிலே நடந்தோரேன
மருப்பிலே பயின்றபாவை மருங்கிலே வளருகின்றாள்"

6. "பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினும் ஓர்
எல்லை யறுபரம்பொருள் முன்னிருந்தபடி இருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையாளமும் துளுவு
முன்னுதரத் துதித்தெழுந்தே யொன்றுபல வாயிடினும்
ஆரியம்போல் உலகவழக்கழிந்து ஒழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயன்மறந்து வாழ்த்துதுமே"

என்று மாட்சிமை பெற்றதாயும், எல்லாம்வல்ல இறைவன், அகத்திய மகா முனிவர், மன்மக்கண் முதலியோர்களாலும் போற்றிப்புகழ்ந்து பயின்று வளர்க்கப் பெற்றதாயும், சங்கப்பலகையிற் கிடந்தும், வைகையேட்டிலே தவழ்ந்தும், சமணர்களிட்ட நெருப்பிலே யாதொரு பின்னமும் உண்டாகாதபடி நின்று, இப்பூவுலகின்கண் பொலிவுற நடந்து அறம், பொருள், இன்பம், வீடு என்னும் அரிய நாற்பொருட்பயனைப் பயந்து, நிலவாநிற்கும் அமிழ்தினுஞ் சிறந்த நம் தாய்மொழியான செந்தமிழ்ப்பாஷையே நமது மரபார்க்குப் பூர்வீகமாகிய தேசியபாஷையேயாம். மேலும், எல்லாம் வல்ல, இறைவனால்,

1. "மதிமலிபுரிசை மாடக்கூடற் பதிமிசை நிலவும் பானிற வரிச்சிறகு
அன்னம பயில்பொழில் ஆலவாயின் மன்னியசிவன்யான் மொழிதரு

மாற்றம் பருவக் கொண்மூப்படியெனப் பாவலர்க்குஉரிமையின் உரிமையினுதவி ஒளிதிகழ் குருமாமதிபுரை குலவிய குடைக்கீழ்ச் செருமாவுகைக்குஞ் சேரலன் காண்க பண்பால் யாழ்பயில் பாண பத்திரன் தன்போல் என்பாலன்பன் தன்பாற் காண்பது கருதிப் போந்தனன் மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே" எனப் பாணபத்திரர்க்குத் திருமுகமாகத் திருவாய்மலர்ந்ததூஉம்

2. "கொங்குதேர் வாழ்க்கையஞ் சிறைத்தும்பி!
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ?
பயிலியது கெழீ இயநட்பின் மயிலியற்செறி
எயிற்றரிவை கூந்தலின் நறியவுமுளவோ? நீயறியும் பூவே" என்று
தருமிக்காகத் திருவாய் மலர்ந்ததூஉம்,

3. "அங்கம் வளர்க்க அரிவாளி னெய்தடவிப்
பங்கம் படவிரண்டு கால்பரப்பிச் சங்கதனைக்
கீருகீரென்றறுக்கும் கீரனோவென் கவியைப்
பாரிற் பழுதென்பவன்" என்று, நற்கீரர்க்காகத்திரு
வாய் மலர்ந்ததூஉம்,

4. "அன்பினைந்திணை" என்றறுபது சூத்திரம்
அகப்பொருள் திருவாய்மலர்ந்ததூஉம்

5. "பித்தா பிறைசூடி" என்றும்,
"தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்"
என்றும் சுந்தரர்க்குத் திருவாய்மலர்ந்து அடியெடுத்துக்கொடுத்ததூஉம்,

6. "உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்"
என்று, சேக்கிழார்க்குத்திருவாய் மலர்ந்ததூஉம்,

7. "அடியார்க்கெளியன் சிற்றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதியகைச் சீட்டுப்—படியின்மிசை
பெத்தான் சாம்பானுக்குப் பேத மறத்தீக்கை செய்து
முத்தி கொடுக்க முறை"
என்று, திருவாய் மலர்ந்தருளியதூ உம்,

8. "திருத்தகு தெய்வத்திரு வள்ளுவரோ
டுருத்தகு நற்பலகை யொக்க—விருக்க"
என்று, நாயனார்க்காகத் திருவாய்மலர்ந்ததூஉம்

9. "மாணிக்க வாசகம்" என்று திருவாய்மலர்ந்ததூஉம், அழகிய திருக்கரத்தால் எழுதப் பெற்றதூஉம்,

10. "நாடா முதனூன்மறை நான்முகனுவிற்
பாடாவிடைப் பாரதம் பகர்ந்தேன்—கூடாரை
எள்ளிய வென்றி இலங்கிலைவேன் மாறபின்
வள்ளுவன் வாயதென் வாக்கு"

என, நாமகள் திருவாய்மலர்ந்ததூஉம், இன்னும் இவைபோன்ற எத்துணையோ பல அற்புதச் செயல்கள் நிகழ்ந்த ஒப்புயர்வற்ற நமது, செந்தமிழ்ப் பாஷையே நமது செந்தமிழ் நாட்டின், நமது மக சமூகத்துக்கும் தேசிய பாஷையேயாம். எல்லாம்வல்ல இறைவன் திருவருள்புரிவானாக. சுபம் சுபம். சுபம்.



உ

திருச்சிற்றம்பலம்

## ஏழாவது, அத்தியாயம்.

# செட்டிமண்டலச் சதகம்.

---

"முன்னிளங்காலத்திலே பற்றினேன் வெற்றி மீனுயர்த்த
மன்னிளங்காமன் தன்மைத்துனனே மணிநீல கண்டன்
தன்னிளங்காய் களிறே இமையோர் சிங்கமே உமையாள்
தன்னிளங்காதலனே சரண் ஆம் உன்சரணங்களே" (ஔவையார்)

"சொல்விற்பனமும் அவதானமும் கவிசொல்ல வல்ல
நல்வித்தையும் தந்தடிமை கொள்வாய் நளின ஆசனஞ்சேர்
செல்விக்கரிதென்று ஒருகாலமும் சிதையாமல் நல்கும்
கல்விப்பெருஞ் செல்வப் பேறேசகல கலாவல்லியே" (குமரகுருபரர்)

பூமணியானை பொற்கழல் நினைக்க
பாமணியணியுறப் பகரற்குறுமே.

கல்விக்கரசி கணக்கறி தேவியின்
செல்வத் திருவடி சிந்தையுள் வைப்பாம்.

கந்தன் திருவடி வந்தென்முடிமிசை
நந்தன்சதகம் தந்தான்தமிழே.

நான்முகன் இந்திரன் மான்முதலோர் தங்கள் நாவெடுத்துத்
தான்சொல்ல வெண்ணினும் சொல்லற்களவிலா இத்தாரணியில்
வான்கொண்ட மட்டில் தான்கொண்ட செம்புகழ் மாவணிகரியல்
நான்கொண்டு சொல்லல் எனக்கேபெருநகை நன்செட்டி மண்டலமே. 1

அக்காலத்தன்ன அங்காவலர் பாவலர் நாவல்லவர்கள்
இக்காலத்தும் உளரேல் இந்நாள்வரை இச்செட்டிமண்டலச்சீர்
மிக்காக வெத்துணையோபல தேம்பாவணிகளும் நூற்களும் மேன்மைமிக
எக்காலமும் தெரியக்கிடக்குமன்றோ செட்டிமண்டலமே. 2

அந்நாளில் சத்திரம் யார்க்கமைத்தார் அஃதியாருணந்தார்
இந்நாளில் சத்திரம் யாவர்க்குள? இஃதியாருணர்வார்
எந்நாளும் சத்திரம் சத்தறத்தார்க்கு என்றியல் வணிகர்
சின்னாளும் ஆயாததுஎன்கொலாம் செட்டிமண்டலமே. 3

சிரித்தவதனமும் இன்சொல்லும் செல்வச்செழுமையும் நூல்
விரித்த நறும்புகழ் பெத்தாச்சி பூபன் விளங்கும் முன்றில்
கரித்தபுன் னெஞ்சரும் பாவலர் நாவலர் காண்டற்கில்லா [மே.
திரித்தவன் னெஞ்சர் காவலென்றால் அஃதென்கொலாம் செட்டிமண்டல

கன்னெஞ்சன் அல்லன் கடுஞ்சொல்லன் அல்லன் நீள் காமுகனில்
மன்னெஞ்சன் நியாயத்து மாநிறைகோனுனி இம்மாநிலத்துப்
பின்னுந்தரித்திரர்க்கு அந்நாளிற்பாரி பெத்தாச்சி என்னில்
முன்காவல் பின்காவல் என்காவல் கொல் செட்டிமண்டலமே. 5

மாம்பூ மணக்குமலர் மேனி மல்லிமணக்குஞ் சிறுசடைசெவ்
ஆம்பன்மணக்கும் கிளிமொழிவாய் அமுதமணக்கும் மதிவதனம்
பூம்பூ மணக்கும் புதியதனம் பூமேன்வாழும் இலக்குமிக்கு ஈங்கு
ஆம்பூ ஐம்பதாயிரமாம் அஃதேன் செட்டிமண்டலமே. 6

காமமணக்கும் கயல்விழிகள் கலவிமணக்குஞ் செவ்விதழ்பூந்
தேமன்மணக்கும் தளிர்மேனி திணைத்துப் பிணைத்து முன்எழுந்து
வாமமணக்கும் இளமுலைகள் வயங்கும் தங்கண் மனையைவிட்டு
ஆமோவேசை தாசிகளும் அ! ஆ! செட்டிமண்டலமே. 7

செல்வத்தலைவிகள் சிங்காரச் செல்விகள் சிற்றிடைசேர்
செல்வக்கிழத்திகள் பாமகள் நாமகள் செல்வத்தின் சீர்நிறை
செல்வக்குழைச்சிகள் வேல்விழிச் சீலிகள் செவ்வியமேனிவிட்டு
செல்வப் பொதுமகள்போக மென்னுங்கொல் செட்டிமண்டலமே. 8

எழுத்தோதலற்றுச் சொல்லுஞ்சொல்லின்றி எழில்யாப்பணியும்
வழுத்தாதொழிந்து பழையசங்கங்கள் வாணர்கள் வழிமறந்து
பழுத்தாழுமன்னன் மொழியே மொழியென்று படிக்கும் இந்நாள்
எழுத்தோடணங்கு பிறந்தனள்காண் செட்டிமண்டலமே. 9

சைவந்திரிந்து தமிழுங்கங்கள் தேய்ந்து தனிநடையுடம்பின்
தைவந்திரிந்து பழையபாவலர் நாவலர் யாவரையுப்
வைவான்றொடங்கி வாழ்வான்றொடங்கிய வழிமாநிலத்துக்கு
ஐவான் முதற்சங்கம் அன்னவொத்தான் செட்டிமண்டலமே. 10

சைவந்தழைக்கக் கலைகணீர் பாயத்தமிழ்த் தேயமெனும்
செய்வான் வபன்மிசைச் சிவம்விளைந்தோங்கச் சிறந்தியார்எவரும்
ஐவாய் மடுத்துண்டு ஆநந்தக்கூத்துகள் ஆடற்கன்றோ
செய்வான் புகுந்தது என்கொலாம் செட்டிமண்டலமே. 11

செல்வஞ் சிறக்கச் சிங்காரமல்கச் செகமே புகழ்ந்துலகம்
நல்லாரெனச் சொல்ல நாட்டார்கள் யாவரும் நன்குவந்து வந்து

எல்லாருங்காண எழிலத்தங்காட்ட எழில்வான் பதியாய்ச்
செல்லாகத் தஞ்சொற் கொலுவிருப்பார் செட்டிமண்டலமே. 12

இல்லார்க்குமீயும் இருப்பார்க்குமீயும் எழின்மாமறை நூல்
கல்லார்க்குமீயும் கற்றூர் கயவர்காமுகர் காளையர்கள்வர்களோ
நல்லார்க்குமீயும் பெத்தாச்சி வீரப்பன் நன்பொருள்போல்
எல்லார்க்குமீயும் என்கொலாம் செட்டிமண்டலமே. 13

துறந்தாரெவர்க்குந் துறவாதபேர்க்குந் துக்கமாமனத்தாறு
இறந்தாரெவர்க்கும் இறவாதசாமிக்கும் இறைகொடுங்கோற்
சிறந்தாரெவர்க்கும் நாரியர்பூரியர் சிரியர் யாவர்க்குமே
அறந்தானெனக் கொடுக்கும் என்கொலாஞ் செட்டிமண்டலமே. 14

ஆலயங்காக்க அரன்பூசை யாக்க அறத்துறைகள்பல
சாலவுண்டாக்க சைவசமயத்துக் காக்கஞ் சம்பூரணமாய்
காலங்கடோறும் நியமங்களாக்க இக்காரையா வணிகர்
சீலங்கள்மாட்சி எவர்தான் புகலுவர் என்கொலாஞ்செட்டிமண்டலமே.

வையாமற்றிட்டாமல் வாழ்த்தவுஞ் செய்யாமல் இவ்வையத்திலேன்
ஐயாவெனச்சொல்லும் இன்மொழி யொன்றையுமே ஆய்ந்துணரின்
மெய்யாய் மூவைபம்பெறுமென்று வாழ்த்துவர் மேலேநிலச்
செய்யோர் இளசை நகரத்தார் சீர்செட்டிமண்டலமே. 16

சாத்தன் கருப்பன் திட்டாணி வெள்ளையன் நாச்சிமுத்தன்
தீத்தன் சிவப்பன் சோலையன் காடன்சின்னன் அழகன்
ஆத்தன் உடையன் அடைக்கப்பன் ஆவிச்சி ஆண்டியப்பன்
காத்தன் வைரவன் குட்டையன் காண்செட்டிமண்டலமே. 17

வீரப்பன் சிங்கயன் காளிவெளத்தன் பெரிச்சியப்பன்
சீரப்பன் பெத்தாச்சி மெய்யப்பன் சேவுகன் சீர்சிறந்த
ஆரப்பன் சூழ்ந்த அகிலத்தின்மேலந்த நாள்வணிகர்
பேரப்பன்காணும் பெரியாரவர் செட்டிமண்டலமே. 18

குமரன்முருகன் குழந்தையன் வேலன் குன்றும்பழநி
அமரன்கதிரன் வடிவேலன் சண்முகன் ஐயிரண்டிரதன்
குமரன் இலக்குமணன் கோவிந்தன் சாமிகுறிக்கும் இந்நாள்
அமரர்க்கதி பதியாம் பெயராஞ் செட்டிமண்டலமே. 19

சோமன்நடேசன் சிதம்பரம் சுந்தரம் சொக்கலிங்கம்
கோமன்மகன் திருமான் முதனுமங்கள் யாவுங்கொண்டு
சோமன்பரமன் கதிரவன் இந்திரன் சொக்கத்தேவரெல்லாஞ்
சேமம்பிறக்க எழுந்தோடி வந்தனர் என்கொலாம் செட்டிமண்டலமே. 20

சிட்டாட்டமின்றிச் சிரித்துவிளையாடிச் சினந்து கொள்ளக்
கூட்டாட்டம் ஒன்றும் வேறில்லையோ இந்தக்குவலயத்தில்
நாட்டார் நகைக்க வீட்டாருந்தூற்ற நன்னெஞ்சம் ஒல்கச்
சிட்டாட்டம் என்ன நமக்கழகோ இதுசெட்டிமண்டலமே. 21

சூதாடித்தோற்றவர் மெத்தவுண்டே கடல்சூழ் புவியில்
வாதாடிஎண்ணினும் சேடனுந் தோற்பான் வலிதாகவெற்றி
போதாடிக்கிட்டினும் பஞ்சின் பொதியில்ஓர் அணுவாந்
தீதாவியற்று ஆம் பெருஞ் செல்வம் செட்டிமண்டலமே. 22

நெஞ்சம் உறங்காது நீங்காக்கவலை இந்நீணிலத்தில்
அஞ்சேலெனச் சொல்ல யாருங்கிட்டார் ஓரமயத்தில்நாம்
தஞ்சமென்றாலும் சூதாடியென்பர் தாய் தந்தையரும்
நஞ்சாயிருப்பர் நமக்கழகோ இது செட்டிமண்டலமே, 23

திருவின் பெருமையும் கல்வியின்மாட்சியும் திரண்டெழுந்த
வுருவின் பெருமையும் ஒண்டொழின்மாட்சியும் உயர்கற்பகமாந்
தருவன்ன வண்மையும் குலநலத்தன்மையும் இத்தாரணியில் [மே.
இருவிற்பெருமையும் எவரோவரைகுவர் என்கொலாஞ் செட்டிமண்டல

வண்டாடுங்கூந்தல் வாதாடும் வேல்விழி வளங்கொண் மாமுகமோ
கொண்டாடுங்கற்பு குழைந்தாடுமேனிக் கொம்மை முலைசுமந்து
திண்டாடுஞ் சிற்றிடைச் சிறந்தாடுந்தங்கள் தேவியல்லாப்
பெண்டாடல் என்கொல் பேதைமைதான் செட்டிமண்டலமே. 25

பாவேந்தர் அந்தணர் பார்ப்பார்அமரர் பதியுணர்ந்தோர்
காவேந்தர் தங்களின் காரியக்காரர் கணிதக்கணக்கியலோர்
மூவேந்தர்தங்கண் முறைமையெலாஞ் சொல்லிமுக் குறையிரப்ப
தேவேந்திரபோகம் என்னே கொலாம் செட்டிமண்டலமே. 26

எட்டுத்திசையும், பதினறுகோணமும் எங்கும் ஒன்றாய்
முட்டித்ததும்பி முளைத்ததையா முச்சகமும் எங்கள்
செட்டித்திருவட்ட மண்டலத்தார்புகழ் செய்ய வான்தருவாம்
வட்டக் கொடிக்கிளையாரேவரைகுவர் வாழ் செட்டிமண்டலமே. 27

மங்காதகீர்த்தி இலையென்னுஞ் சொல்லில்லை இம்மண்டலத்துச்
சங்கீதவல்லிகள் நடனசிங்காரிகள் சம்மோகினிகள்
திங்கள் வதனிகள் தேசத்துமட்டங்கள் திரள்திரளாய் [மே.
எங்கெங்குபார்த்தாலும் காணக்கிடைப்பது என்கொலாம் செட்டிமண்டல

மெத்தத்தவஞ்செய்து மேலோரை வேண்டி மெய்யாகமத்துச்
சித்தவிரதங்கள் நோன்புகள்நோற்று சிவபுராணம் எல்லாம்

நித்தமுங்கேட்டு பெற்று வளர்த்திட்ட நெடுங்காளைகட்கு
எத்துணைகோடி காமச்சொறிகள் என்கொலாஞ் செட்டிமண்டலமே. 29

வாதுக்குப்போகார் வழக்கோரஞ் சொல்லார் வஞ்சநெஞ்சச்
சூதுக்குப்போகார் அடைந்தோரைக் காப்பார் கடல்சூழ்புவியில்
சாதுக்கண் முன்னோர் கெட்டநோய்களெல்லாம் சாந்தமக்களுக்கு
ஏதுக்குத்தான் வரும் என்கொலாஞ் செட்டிமண்டலமே. 30

அழகான மேனியும் ஆண்மையும் அரியசெல்வமும்போய்
விழலாகும் குமரனும் விலைக்குவேண்டவரும் வேசையின்னுழையும்
குழவன் பழக்கத்தைக் கொள்ளன்மின் இளையகோவணிகீர்
அழகான செல்வம் மேன்மேலும் ஆம் செட்டிமண்டலமே. 31

செட்டிக்குச் செட்டுச்சிறந்தன சிக்கனமாய்ப் பொருளை
வட்டிக்குவட்டி ஒட்டிக்கிரட்டி கூட்டி வளர்ப்பதன்றோ
செட்டிக்குலத்தொழில் சிதம்பரம் வீரப்பன் செய்கையன்ன
வெட்டிகரைப்பதுவோ என்கொலாம் செட்டிமண்டலமே. 32

வெட்டைவெடிசூலை வெண்கிரந்தி வெண்குட்டம் வெய்யவளிக்
கட்டியரையாப்புக் காசம்இளைப்பு இருமல் கண்டமாலைகள்பல்
ஒட்டுக்கொடுநோய்கள் ஒட்டுவதேன்வந்து ஓங்காரங்கொண்ட
செட்டித் திருமண்டலத்து என்னைகொலாஞ் செட்டிமண்டலமே. 33

பாட்டும் படிப்பும் பலநூற் பயிறலும் பண்புமிக்கோர்
கூட்டும் உறவும் குறைகடன் ஞாலத்துக் கொண்டுமிக்க
ஈட்டும்பொருளும் முயர்ச்சியும் ஆண்மையும் எய்தியகம்
வீட்டுக்குவீடு வயித்தியரேன் செட்டிமண்டலமே. 34

வடக்கே வெள்ளாறு வைகையுந்தெக்காம் வளர்மண்டலத்து
குடக்கேபிரான்மலை குணக்காஞ் சமுத்திரம் குறிக்குமிந்த
இடக்குக்குத் தென்வடனூற் காதமாமியலுங் கிழமேல்
மடக்குக்குமப் படித்தான் சுற்றுதல்காண் செட்டிமண்டலமே. 35

மானபிமானம் மரியாதை மாண்புதொன் மரபொழுக்கம்
நானவகையினும் யோக்கியங்கெட்டு வாக்குநாணமும் போய்ச்
சீனாயெனத்தூற்ற நம்மண்டலத்துஞ் சில்லோருளர் எனினும்
ஆனனுமிக்கவழகாம் தமிழ்ச் செட்டிமண்டலமே. 36

நானவகையினும் மேனவகையினை மேனவகைஎன்று மேனவுடையோர்
ஏனையியம்பினர் அஃதுகேட்டிலையோ இந்த ஞாலமிசை
ஆனலும் போனலும் அறத்தாற்றுக்காகட்டும் என்று சொல்லித்
தானயெழுதி வைத்தார் இருபஃதிலக்க முதற்றமிழ்ச் செட்டிமண்டலமே.

அந்த நாட்டொட்டு இந்தநாட்காறும் அறத்தாற்றிற்புக்கிச்
சொந்த நாளன்று நம்சொந்தநாளன்று என்றுதங்கட் சொந்தமுள்ள
எந்தநாளும் பொருள் எத்துணையோ இலக்கக்கணக்குகளில் [மே.
இந்தநாளும் அறஞ்செய்தலினாலன்றோ சத்தறத்தாரெனல் செட்டிமண்டல

எத்துணையாலயம் எத்துணைச்சத்திரம் எத்துணையோ பசுமாமடங்கள்
எத்துணை விவாகம் எத்துணையகரம் எத்துணையோ பலஊருணிகள்
எத்துணைச்சீட்டுகள் அந்தமேனுவகை எழின்மாபுரத்தார்
எத்துணைமாட்சிகள் தேவமாநகராமென் செட்டிமண்டலமே. 39

தலைதேவ கோட்டை முகங்காரைமாநகர் தக்ககண்கள்இரு
மலைபோன்ற கண்டனூர் கோட்டைமாநகர் மாதனமிரண்டோ
கலையோங்கு பள்ளத்தூர்ச் செவற்பட்டிகரம் இரண்டோ
நிலைபாம் புதுவயல் கோநகர்நீள் செட்டிமண்டலமே. 40

காலிரண்டேதெனின் கானாடு காத்தான் கடியாபட்டினமும்
மேலுள்ளன வெல்லா மற்றவங்கங்களாம் இம்மேனிலத்து
ஆலிலைபோன்ற வயிறன்றோ நம்பாலையந்திணையான் மவாதிகளோ
சாலச்சிறந்தன சங்கங்கள் கட்டுக்கள்சால் செட்டிமண்டலமே. 41

கிரமமாகிய சாத்திரம் பலவிலக்கணமுறைபுறக் கிளந்தெடுத்தாய்ந்து
வரந்தரும்பல பூசையும்யோகமும் வழிமுறையாற்றி நன்குறத்தேர்ந்து
பரமஞானியாய்ப் பதியுணர்ந்தருள்வழி பழவடியா ருடன்கூடித்
திரமதானவர் எத்துணையோபலர் தீம் செட்டிமண்டலமே. 42

நல்லமார்க்கமும் பெரியவரிணக்கமும் நவிலுதற் கொண்ணாத
எல்லையற்றதோர் சிவாநந்தபோகமும் எய்தியே எஞ்ஞான்றுஞ்
சொல்லுமற்று நற்பொருளையுமறந்து சுத்தநிர்க் குணமாகி
இல்லஞானியாய் எத்துணையோ பலர்இருப்பராம் செட்டிமண்டலமே. 43

மாவுமக்களும் வாழ்ந்திடும் மாநிலத்தொருபேரூர்க்குத்
தேவமாநகரென்னலென் அவ்வாசகந் தெளியினுங் குள்ளோர்
யாவருஞ்சுத்தசைவராம் புலாலுணா அருண்முறைபரவுமேற்
சேவராதலாற் றேவமாநகராயின என்கொலாஞ் செட்டிமண்டலமே. 44

மாற்றார் இளையை மணிவைரவன் பட்டிமா சூரைக்குடி
சாற்றார் இரணிப்பிள்ளையார் பட்டிசத்திவேலன் குடி
ஆற்றார் இலுப்பைக்குடிநேமம் ஆங்கோவி லொன்பதுமே
சாற்றும் நகரத்துமுதல் வகுப்பாஞ்சால் செட்டிமண்டலமே. 45

கல்வாசனாட்டில் குலசேகரபுரம் கார்பொழி விளசை
நல்வாசற் கோவிற்கொடி வழிக்கேழு நற்கோத்திரந்தான்

சொல்வான்புகில் ஒக்கூருடையார் அரும்பாற்கிளையான் சொந்தப்பட்டி
செல்வாக்குறும் பெருமருதூருடையார் செட்டிமண்டலமே. [னத்தார்

கழனிவாசக்குடியார் நான்கு கிங்கிணிக்கூ ரைந்துகாண்
பழநிவாசற்புகும் பேரசேந்தூர்சிறு சேத்தூர்மிகு பண்புடையார்க்
கழகொழுகாவழி ஏழிந்தக் கோத்திரம் ஆமிளைசை
பழவழியா மென்று பார்ப்பார்பகருவர் பார்செட்டிமண்டலமே. 47

கேரளசிங்கவள நாடு மாற்றார்க்குக் கேள்பிரம்பூர்
பேரளவற்றபுரம் வீரபாண்டியம் பேசப்புகிலோ
சேரளவானவுரையூர் அரும்பாக்கூர் செய்ய மணன்மண்ணூர்
தேரளவாங்குளங்கண்ணூர் கருப்பூருடையார் தெளிசெட்டிமண்டலமே. 48

சாற்றற்கரிய வைரவன் கோவிற்குச் சாற்றிடிலோ
மாற்றற்கரியவள நாடுகேரளம்மாபுரம் வீரபாண்டியிம் மண்டலத்து
ஏற்றற்கரியவேழகப் பெருந்திருவான எங்கள்
சாற்றற்கரியசிறு குளத்தூர்மூன்று சால்செட்டிமண்டலமே. 49

மூன்றிற்பெரியார் தெய்வநாயகர் பிள்ளையார் மூன்றுமாம்
ஊன்றிக் கவனிக்கமரு தேந்திரபுரம் உடையார்கழனி
ஆன்றதிருவாசல் அழகாம் வைரவன் கோவிலுக்கு
சான்றசிவ கோத்திரம் மூன்றென்றனர் சால்செட்டிமண்டலமே. 50

இத்திரு வேட்பூர் இளநல முடையார் இயல்நேமம்
பித்திரு வேட்பூர் பேரிலு சூடாமணி புரமாம்
நித்திய சூரைக்குடிபுகழ் வேண்டிய நிகழ்பாக்கம்
சத்திய வடிவேல் கழனிநல் லூருடைசால் செட்டிமண்டலமே. 51

இத்தகையாறு கோவிற்கியல் வழிகோத்திரங்கள்
ஒத்தது ஒவ்வொன்றேதான் உவமையிற் பெரியதாமாம்
நித்தமாமாலயங்கள் நிகழ்வழி யொன்பானுக்கும்
நத்தியவிருபாணைந்து நலங்கிளர் கொடிசெட்டிமண்டலமே. 52

இங்கிலீஸ் கொடிபறக்க இளையாற்றங் குடியைச்சார்ந்த
நங்கடங் குலங்கள்யாவும் நன்றாகச் சிறக்குமென்றே
தங்களிற்காளமேகம் தகையினுஞ் சிறந்தோன் முத்தன்
இங்குளாரெவர்க்குஞ் சொன்னான் என்கொலாம் செட்டிமண்டலமே. 53

ஒருமையும் அறிவும் ஆன்றவுயர்தரக் கல்வியாவும்
தருமருட்டன்மை செட்டுத்தற்கால நிலையுமோர்தல்
இருமையுந்தருங் கூழோம்பல் எஞ்ஞான்று மியங்குமேனம்
பெருமையூழ்சிறக்கு மென்று பேசுவாஞ்செட்டிமண்டலமே. 54

சத்திகளொன்று கூடிச்சங்கத்தை நடத்தப்புக்கில்
நித்தியமாவேம் நங்கள்செல்வமு நிலைத்து நிற்கும்
எத்திசையாருந் தங்களியற்கை யிலொன்றென்றஞ்சச்
சத்திய நிலைக்குஞ் சைவசமயமாஞ் செட்டிமண்டலமே. 55

வீரப்பன் செல்வமாதி விழலுக்கு இறைக்குமாபோல்
யாருமேஇறைத்தல் வேண்டாம் அவனியிற் செல்வமுண்டேல்
பாரப்பாமுவுல கொருங்குங் காக்கப்பக்குவ முனக்குண்டென்று
வீரப்பன்செங்கோலீவன் விளங்கும்வேல் செட்டிமண்டலமே. 56

பாத்திரங்கண்டு பிச்சைபகருதல் வேண்டுமென்று
சாத்திரமெல்லாஞ் சொல்லச்சற்று நல்லறிவில்லாமல்
கோத்திரம் கெடுக்குங் கெட்டகொள்கைக்கும் கட்குங்காயப்
பாத்திரமளவிலீதல் பழிப்பன்றோ செட்டிமண்டலமே. 57

அறிவையு மிழக்கலாமா நம் ஆண்மையுமிழக்கலாமா
நெறியையுமிழக்கலாமா மிகநீண்டதோர்செல்வமெய்தின்
பொறிபுலன் கோடலாயாப் பொன்றினும் புகழ்வேண்டாமா
அறிவுடையோர்காமன்றோ அழகாந்தமிழ்ச் செட்டிமண்டலமே. 58

திருமயம் கடியாபட்டி திருவரிமழம் நேமுத்துத்
திருமயப்பட்டி பள்ளத்தூர் திருசொக்கனேந்தல்
திருமயக்கோட்டை கண்டனூர் திருசார்ந்தகோட்டை
திருமயக்காரைக்குடி ரெண்டு சத்திரங்காண் செட்டிமண்டலமே. 59

திருமலிதேவ கோட்டைசிறந்ததோர் திருக்கானப்பேர்
திருமலிமதகுபட்டி திருப்பெருந்துறைதான் தொண்டி
திருமலிகுன்றுக்குன்று தீதிற் கீழ்ச் செவலாம்பட்டி
திருமலிக்கல்லல் நல்ல சத்திரங்காண் செட்டிமண்டலமே. 60

கோநகர் பழைபசாதங் கொடுக்குமே சாதுக்கட்கு
போனகம்போன்றே கீழச்செவற்பட்டி கொடுக்கும்புத்தூண்
தேனப்பன்பழைய செல்வன் திருமுத்தன் பிறந்தபூமி
யேனப்பாவென்னுந்தர்மம் என்கொலாஞ் செட்டிமண்டலமே. 61

அன்னம் பாலிக்குந்தில்லையப்பா னல்லன்னமோடுஞ்
சொன்னம்பாலிக்கு நாளுஞ்செக்கன் வாழ்நகராங்கீழ்செவ்
வன்னம்பாலிக்கும் பட்டியடியவர்க் கமுதமூட்டும்
பன்னலம்பல்கும் செங்கூழ்ப்பழநகராஞ்செட்டிமண்டலமே. 62

பஞ்சாங்கஞ் சொல்லும் பார்ப்பாரிலக்காதி பதியாய்வாழ்தல்
கஞ்சார்ந்த நாட்டிலெங்கு காங்கண்டோம் நகர்த்தார்கள்

தஞ்சார்ந்த நாட்டிலல்லால் அந்தத்தரணியிற் பிரமனுக்கும்
பஞ்சாங்க வாழ்வு இந்தப்பான்மையோபதி செட்டிமண்டலமே. 63

நித்தியமந்தணர்க்கு நிறைவின்றிக் குறைவோவில்லை
மத்தியம் மார்க்க மாகும்திருமையந் திருப்புத்தூர்க்கு
நத்தியவாத்தன் கூடிநகரத்தார் காக்குமந்தச்
சத்திரத்தெவர்க்கும் நல்லசாப்பாடுகாண் செட்டிமண்டலமே. 64

செட்டிவீடென்றிந்தச் சீமையெல்லாஞ்சொல்லத் தேவகோட்டையிலோர்
செட்டியார்வீடென்ற செப்புவதேனந்தவீடெந்த வீடந்தச்செய்தியென்ன
நெட்டியார் பூசித்த விராமேச்சரத்தின் நெடியசத்திரத்தின்
செட்டியார் வீட்டினைத்தான் செட்டியார் வீடென்பர் செட்டிமண்டலமே.

செட்டியார்வீட்டின் சிறப்பினைச் சொல்ல விச்செகந்தனிலோர்
செட்டியாரானு முடியாது குட்டையன் செட்டியார் மரபில்வந்த
செட்டியாரெல்லாரும் வல்லவர் நல்லவர் செல்வர்கள் தத்துவ நூற்களிலும்
செட்டியார் வீடென்று செப்புவார் என்கொலாஞ் செட்டிமண்டலமே. 66

பட்டப்பகல் வெயிற்றீயா யெரிந்திடப் பாழ்ங்காட்டினடுச்
சொட்டவாளங் குட்டிபோலொருமன்மகன் சோர்ந்து விழுந்திடவேக்
கட்டிச்சோறிட்டுக்கஞ்சியும் வார்த்தகருணையினு லந்தக்காலத்திலே
செட்டியார் வீடென்று வந்துகண்டான் தெரிசித்தான் என்கொலாஞ்
[செட்டிமண்டலமே. 67

வாதம்வைத்தியம் மணிமந்திரமாதி வகைகள் எல்லாம்
ஏதுந்தெரிந்தவர் போலேயனேகர் இருந்து இருந்து
பாதகஞ்செய்வார் பழியும்பல செய்வார் பலவேடமிட்டோர்
ஏதுக்குக்காணும் அவரோடுகூட்டு என்கொலாஞ் செட்டிமண்டலமே. 68

தெய்வந்தெரிந்து தனையுணர்ந் தோதியாவுந் தெளிந்தவர்போல்
பொய்வேடங்கொண்டு கைவல்யங்கற்றுப் போதிக்கும் போதனையாம்
மெய்வேடங்கண்டு மயங்கன்மின் பெய்யை மெய்யாலுணர்ந்து
மெய்வேடங்கொண்டாரை மெய்யாகநம்புமின் மெய் செட்டிமண்டலமே.69

மடக்கல்விகற்று மடத்தாரைச்சார்ந்து மடத்தார் இயல்கள்
இடக்கல்வியால் அஃதெற்றென்றுணரா அது இகல்விளைத்துக்
குடக்குக்கும் மேக்குக்கும் அடியளப்பான் அன்னகுரைத்து நிற்கும்
விடக்குஅற்ற நாய்கட்கும் நமக்கும்என்னும் வியன் செட்டிமண்டலமே. 70

சித்தாந்தமீது என்றும் வேதாந்தமீது என்றும் சிவந்தெளிந்த
பத்தாந்திருமுறை ஓமென்றுணர்ந்தவர் இப்பாதலத்துச்சைவ

சித்தாந்தங்கொண்டு வேதாந்தத்தாரோடெச் சினமிகுத்து
எத்தாலிகல்விளைப்பர் என்கொலாஞ் செட்டிமண்டலமே. 71

நச்சாண்டி பட்டி நகரத்தார் சத்திரத்து அந்நால் வருக்கும்
வச்சாண்டி கட்டளை வளமாக அந்தநாள் முதலேன்
பிச்சாண்டி மக்கட்கும் பேயர்க்கும் பெரிய அந்தணர்க்கும்
நச்சாம் பசியென்று கண்டார் நலஞ் செட்டிமண்டலமே. 72

நன்றாய் விளங்கிடும் அரசன்ன வாழ்ந்திடும் நமது மண்டலச்சீர்
பொன்றாது ஒருநாளும் பொன்காய்த்துத் தூங்கும் புகழ்வளரும்
குன்றும் பழனிக்குடிக்குமரன் குலதெய்வம் என்றே
நின்றார்க்கு ஒரு நாளுந் தீங்கில்லையே நீள் செட்டிமண்டலமே. 73

எதிரதாக்காக்கும் அறிவுடையோர்க்கில்லை எந்த நாட்களிலும்
அதிரவருவதோர் நோய்என்று சொன்ன அறிவுடையார்
முதிரக்களிகூர்ந்த திருக்குறளான்முறை முற்றமுற்ற
எதிரதாக் கற்றனும் நமக்கெழிலாஞ் செட்டிமண்டலமே. 74

சங்கீதக் கல்விக்கு அங்கமெல்லாந் தங்கச் சல்லடமாம்
மங்காத கீர்த்தி புகழ்ராமன் காதைக்கும் மாவாயிரமாம்
தங்காதல் காட்டிக் கால்தூக்கும் கல்விக்குத் தனிவயிரங்களாம்
எங்கீதக் கல்விக்கு ஆண்டியப்பாவென் செட்டி மண்டலமே. 75

வெள்ளாறு வைகை வியன்தாமிர பரணி விளங்கு கங்கை
கள்ளாறு மூன்று புகழ்மாமலையோ நற்பொதிகை நன்னுடதமிழ்
தெள்ளார்ந்த பாண்டி வளநாடுதென் இந்திய தேயத்திலே
கள்ளார்ந்தபூம் பொழில் மேவுஞ்சீர்காண் செட்டிமண்டலமே. 76

தார்முத்துமாலை துலாக்கோற் கொடிதனி மாமுரசோ
பார்கொள் பைநாகம் பதியோ விளசைப்பழம் பதியாம்
கார்கொண்டயானை ஜெயவாரணமென்பர் கமலக் கண்டிகைத்தேர்
ஊர்தற்கு வாகனம் உவிமாருதப் புரவிஷூழ் செட்டிமண்டலமே. 77

சமயமோ சைவம் தங்கள் பாஷையோ தமிழாம் தெய்வம்
இமயவன் புதல்வன் முன்னோன் மரகத விநாயகன்பேர்
சமயமுங் கடந்தங் கெங்குஞ் சமைந்தது சண்முகந்தான்
இமயவன் குடியாய் வாழ்வாம் எங்குமாஞ் செட்டிமண்டலமே. 78

நகரத்தார் நாட்டுக் கோட்டை நகரத்தார் என்றீண்டாங்கும்
நகரத்தார் எவரும் போற்ற நாம்வாழ்தல் ஆய்வான் புக்கில்
நகரத்தார் ஐவர்க் காதியந்தமு மற்றோன் நற்றாள்
நகரத்தார் சமயம் சைவமாதலால் நன் செட்டிமண்டலமே. 79

நகரத்தார் என்னும்நாமம் நன்றாகத் தொடர்ந்து ஒன்பான்
நகரத்தார்க் குரியநாமம் நம்மன்னோர் மரபாம் பண்டை
நகரத்தார் கொண்டசெம்பேர் நாமும் நன்றாகவோர்ந்து
நகரத்தார் கொண்டுவாழ்தல் நன்றாந்தமிழ்ச் செட்டிமண்டலமே. 80

இலங்கு நல்லிலங்கை வங்கம் எழின்மிகு மேனாடெங்கும்
வலங்கொளச் சுற்றிவந்தோர் வானஞ்சூழ் இவ்வையத்தெங்கும்
நலங்கொள வீங்குகாணும் நல்லில்லங்கள் போன்றின்றென்றே
இலங்கு நாவெடுத்துச் சொல்லின் என்கொலாஞ் செட்டிமண்டலமே. 81

இல்லங்கள் ஆலயங்கள் இயங்கு நற்சத்திரங்கள்
சொல்லுமாமடங்கள் கல்விச்சாலைகள் சுத்த சித்திர
நல்லிளம் பங்களாக்கள் நலமிகு சவுக்கைகள் பூஞ்
செல்வங்கள் நடனமாடல் என்கொலாஞ் செட்டிமண்டலமே. 82

துறவிகள் மடங்கள்என்ன தூய்மைசேர் பரவும் ஒவ்வோர்
அறநகர் தோறும்சைவத் தடியராம் எழுபான் மும்மைப்
பெறுமருட் குருவாம்பூசை பெரியமா மடங்கள்என்ன
நறுமலர்த் தடாகங்கள்சூழ் நன்செட்டிமண்டலமே. 83

இலலத்தழகும் ஆங்குடைத்தாய் இயங்குமங்கண் மாமகளிர்
செல்வத்தழகும், அணியழகும் சிறார் சூழ்ந்திலங்கும் சிறியவொரு
இல்லத்தழகும் செட்டழகும் இன்னுமிவைபோன் பலவழகுஞ்
சொல்லத்தகுவார் அவர்எவரோ சொல்வாய் செட்டிமண்டலமே. 84

நல்லநாட் பார்த்து இலக்கினங்கண்டு நடுநகரை விட்டுஞ்
செல்வான் தொடங்கி சகுனங்கள் கண்டு சிங்காரச் சீர்சிறப்பாய்
நல்வான் மடம்புக்கி வருவார்க்கும் போவார்க்கும் நல்லசேதி சொல்லி
செல்வான் இரண்டொரு நாளிருந்தாங்கு சீர் செட்டிமண்டலமே. 85

எல்லா நிலைமையிலும் எண்ணுவோமாமாயின் இவ்வுலகில்
செல்வரும் நல்லரும் ஞானரும் தேவரும் செந்தமிழ்ச் சீர்நிறைந்த
தொல்வரும் யோகரும் பேரரும் போகரும் தூய்மையொடு
நல்வரம் பெற்றவரும் நடுவரம்போரும் நன் செட்டிமண்டலமே. 86

பாவமின்னது புண்ணியமின்னது பழிப்பன விதுவென்று
யாவுமெண்ணுவர் நற்கலைகளும் ஆய்குவர் ஆய்ந்தனவதுகண்டு
தேவரென்னவும் இயலுவர் தெளிந்தவர் நசைஇயவொருங்கும்
தாவல்சீர் பெறவன்பொடு மீகுவர் தண்செட்டிமண்டலமே. 87

செல்வம்மல்கிடும் கல்வியுஞ்செழித்திடும் செகந்தனிலெவர் யார்க்கும்[போல்
அல்லல் தீர்ந்திடும் சைவமுந் தழைத்திடும் அப்பராதியோர் அந்நாட்கள்

நல்லவானமும் மாதத்து மும்முறை பொழிந்திடும் அவரவர் நடுநிலைத்தவ
செல்லு மாறுறிற் செய்வதென் பிறவுள செஞ்செட்டிமண்டலமே. [றின்றி

காலமோதலை கீழுங்கான்மேலுறத்தங் கொடுங்கோனுட்டிச்
சாலவோச்சுதல் யாவருமுணர்ந்துளார் இத்தரணியில் நாமாரும்
ஏலக்கண்டதன் சீலத்தோடுறழ்தர வெய்துநம் நெஞ்சழியாமல்
காலம்வென்றுளான் காலத்தை யொட்டிக்காண் செட்டிமண்டலமே. 89

பெரியராய்விடக் கருதுவோர் எவர்களும் பெரியார்
பெரியவாக்குக்குப் பெருகிடா அதடங்கியே பெருகல்
பெரியராவதற் குரியவாமஃது பேருலகில்
பெரியராக்கிடும் பெரியரோ பெருஞ் செட்டிமண்டலமே. 90

கட்டிவைத்ததோர் கட்டினுக் கடங்கியே கடவாஅ
திட்டுவாழ்தலே எவர்க்கும் நல்லொழுக்கமா மீண்டு
திட்டுவந்ததாலென் திருத்துட்டு வந்ததேற் சாலுமென்றெணிய
செட்டிமாமணிக் கொடிவழிகாண் செட்டிமண்டலமே. 91

அறமாக்க மன்பு அடக்க மோடாண்மை இவ்வவனியிலே
பெறுமாக்கஞ் செய்தொழில் திரைகடலிற் செல்லல் பெரியதன்மை
உறுமார்க்கம் பல்வழியானும் ஒப்பும்உயர்வுஞ் சொல்ல
துறவாக்கத்தானும் பிறயாவர் கொலாந்துஞ் செட்டிமண்டலமே. 92

எங்கெங்கு பஞ்ச நிகழ்ந்தாலும் இளசைமாவணிகர்
தங்குந்தமிழ் நாட்டிற் பஞ்சமில்லைத் தயவோமிகுதி
அங்கம்வளர்க்க ஏழைகட் காங்காங்கு அதிகவேலையுண்டு
எங்கும் பெருஞ்செல்வர் தங்கும் எழில் செட்டிமண்டலமே. 93

கலகமும் பஞ்சமும் காணுன்றியோங்கிய காலயுத்தியிலே
இலகுந்தமிழ்ச் செட்டிநாடென்று வந்துற்ற வேழைகட்கோர்
அலகற்ற கஞ்சியுஞ்சோறும் பணமும் அங்கவத்திரமும் [மே.
கலகலவென்னக் கொடுத்ததற்கோர் கணக்குண்டோகாண் செட்டிமண்டல

எட்டியும் பாலையும் கள்ளியும் கொள்ளியும் இயங்குமுண்மா
கட்டியநாயும் நரியும் முபாலும் கரியபன்றிகளும்
ஒட்டிய வேடுவர் குறவோர் வலையர்முன் செய்த வூழ்வயத்தால்
செட்டிநாடானதும் பட்டினமானதுஞ் சீர் செட்டிமண்டலமே. 95

பார்ப்பார்கள் வாசமும் சைவர்கள் நேசமும் பழையதமிழ்ப்
பூர்ப்பான காலமும் சித்தாந்தவேதாந்த சீலங்களும் பூரணமாய்ச்
சார்ப்பான தேனிந்தப் பாலையிலேவந்து சைவமாவணிகர்
தேர்ப்பாகரோடு மிக்குற்ற புண்ணியத்தான் செட்டிமண்டலமே. 96

சங்கங்களென்ன பிரசங்கமெத்தனை சார்ந்தமந்திர வேதாதி
அங்கங்களென்ன திருத்தங்களெத்தனை யடியாவடிபிடிகள்
பங்கங்களென்ன தர்க்கங்களெத்தனை படபடவென்
றெங்கெங்குகாணினும் பெருமுழக்காஞ் செட்டிமண்டலமே. 97

நாடகமாக்கும் நாடகக்காரர்க்கு நல்லநாடகமாம்
பாடகமாக்கும் பாடகக்காரர்க்கு நல்ல பாடகமாம்
வீடகமாக்கும் வீடகக்காரர்க்கு நல்ல வீடகமாம்
ஏடகமாக்கும் புலவோர்க்கு எழில் செட்டிமண்டலமே. 98

இல்லார்க்கும் நல்லது இருப்பார்க்கும் நல்லது இரந்துதின்னும்
பொல்லார்க்கும் நல்லது புலவோர்க்கும் நல்லது புகழ்வணிக.
நல்லார்க்கும் நல்லது நவலோகநவரத்ன நன்குகொண்டுவிற்கும்
எல்லார்க்கும் பேரம் எழிலாய் நடக்கும் எழில் செட்டிமண்டலமே. 99

கானுடுகாக்கும் கணக்குந்திருப்போக்குங் கண்டுணர்ந்து சொல்லின்
மேனாடுக்கொக்க விளங்கும் மிகுபுகழ் மேனுகரிகம்
வானுடு காக்கும் அந்த அண்ணுமலைதன் வண்மையன்றோ
கானுடுகோத்தான் எனச்சொல்லி நின்றதுகாண் செட்டிமண்டலமே. 100

இல்லங்கள் கயிலையன்ன எழின்மிகும் இரம்பையன்ன
நல்லணிமகளிராகும் நற்சிறூர்களும் பொம்மை போல்வார்
பல்லணியொன்பான் ரத்னம் பசும்பொன்னி லிழைத்ததச்சீர்
சொல்லுதற் கொண்ணுதிந்தப் பாலைசூழ் செட்டிமண்டலமே. 101

தில்லானுடப்பா தேம்பாகு பாடற்குத்தின மோட்டார் வண்டிகளாம்
சொல்லார்ந்த தேவாரந் திருப்புகழாதிக்கு வெண்சோற்றுச் சீட்டுக்களாம்
அல்லார்ந்த கூந்தல் வேசைக்குந்தாசிக்கும் நல்ல திட்டங்களாம்
இல்லார்ந்த பெண்களுக்கென்னை கொலாமீஞ் செட்டிமண்டலமே. 102

ஆவாரம்பூவும் ஆயிரத் தெண்மாற்றிற் கரியபொற்றகடும்
மேவாதமேனி இலக்குமி, சானகி, மேற்சீதையு மற்ற மாணவர்க்கு
மோவாமனுளும் பொன்னழகன் கோட்டைமா நகரிலோ வியமாய்ச்
சாவாத கல்வியன்றோ போதனையாஞ்சால் செட்டிமண்டலமே. 103

நண்ணுங்கிளிமொழி அங்கயற் கண்ணி நன்மதிவதனக்
கண்ணம்மைகாதலன் சீராமனேடு நற்காளைகளாம்
எண்ணும் எழுத்துந் தெரிந்தார் இச்செந்தமிழ் ஞாலத்தில்யாம்
பண்ணுமிந் நூற்களுக்காதாரங் கோட்டைமாநகர் பார்செட்டிமண்டலமே.

வாழ்க இவ்வையம் வாழ்க வகுத்தவன் யாண்டும் வாழ்க
வாழ்கநம் மண்டலத்தார் வாழ்க நீடூழி வாழ்க
வாழ்க நம்செல்வம் வாழ்கவரத்தகத் தொழிலும் வாழ்க
வாழ்க நம் ஒன்பான் கோவில்வகைகளும் வாழ்கவாழ்க.

முற்றிற்று.

---

"கோட்டையூர் மாவணிகர் கொண்டுவிற்றுக் கொண்டுவரும்
எட்டையே யாங்கண் டியம்பினேம்—கோட்டையூர்
நாட்டை விட்டுச் சென்ற நகரத்தார் யாவரும்பொன்
கோட்டையுடன் வருவார் கொண்டு"

"நீர்பெருகி யூற்றெடுக்கும் நீண்டபுகழ்க் கோட்டை
யூர்பெருகி யூற்றெடுக்கும் ஊருணிகள்—சீர்பெருகி
அன்னவோரன்ன அருஞ்செல்வம் ஊற்றெடுக்கும்
பின்னும் ஒரூழி பீறிட்டு."

மேற்கண்ட இவ்விரண்டு பாக்களும், ஸ்ரீமகாவித்வான் பாடுவான் முத்தப்பசெட்டியாரவர்களின் தனிப்பாட்டுகள். இப்பாக்கள், கானாடு காத்தான், கு. எ. மா சிதம்பரஞ் செட்டியாரவர்களிடமிருந்து முன் கிடைக்கப் பெற்றன. எல்லாம் வல்ல இறைவன் திருவருள் சுரப்பான் ஆகுக. சுபம்! சுபம்! சுபம்!

திருச்சிற்றம்பலம்.



உ

திருச்சிற்றம்பலம்.

எட்டாவது அத்தியாயம்

# நமது தற்கால மாட்சியும், நம்மனோர் வசிக்கும் நகரங்களும்.

---

"ஆனைமுகத்தான், பொருவிடையான்சேய், அழகார்
மானமணிவண்ணன், மான்மருகன்—மேனிகழும்
வெள்ளக்குமிழி மதத்து விநாயகன் என்
உள்ளக் கருத்தின் உளன்."

(ஔவையார்)

"மண்கண்ட வெண்குடைக் கீழாக மேற்பட்ட மன்னரும் என்
பண்கண்டளவிற் பணியச் செய்வாய் படைப்போன் முதலாம்
விண்கண்ட தெய்வம் பல்கோடியுண்டேனும் விளம்பிலுன்போற்
கண்கண்ட தெய்வம் உளதோ சகலகலாவல்லியே"

(குமரகுருபரர்)

திருமலி நிலத்துச் செட்டியன் மரீஇச் சிறந்தோங்கி வாழும் எம தாப்த நண்ப! அருமறையங்கட்டு வெளி அமர்ந்தோன் திருவடிவணங்கற்கு உறுப்பெனும் புலவர் ஓரைந்தெழுத்தினை உண் நெஞ்சிருத்தி இங்ஙனம் "நமது தற்காலமாட்சியும் நம்மனோர் வசிக்கும் நகரங்களும்" என்னும் அங்கத்தை எதோ அடியேமுடைய சிற்றறிவுக்கு எட்டிய ஒருவாறு பாகு படுத்தி மிகச்செவ்வனே வரையத் தொடங்குவாம். அஃதாவது, "தன்னுழைப் பலவுயிர் தனித்தனி படைத்துப் பரப்பிக்காட்டலிற் பதுமனுகியும்; அவ்வுயிர் எவ்வுயிர் அனைத்துங் காத்தலிற் செவ்விகொள் கருமுகிற் செல்வனுகியும்; கட்டிய கரைவரம்பு உட்புகவழித்து நீர்தலைதரித்தலின் நிமலனுகியும்; தருவும் மணியும் சங்கமும் கிடைத்தலின் அரிமுதிர மரர்க்கு அரசனுகியும்; மூன்றழல் நான்மறை முனிவர் தோய்ந்து மறை நீர் உகுத்தலின் மறையோனுகியும்; மீனுங்கொடியும் விரிதிணையைந்தும் தேனுறை தமிழும் திருவுறை கூடலும் மணத்தலின் மதிக்குல மன்னவனுகியும்; நவமணி எடுத்து நற்புலங்காட்டலின் வளர்குடிமயங்கா வணிகனுகியும்; விழை தரும் உழவும் வித்தும் நாறும் தழைதலின் வேளாண் தலைவனுகியும்; விரிதிரைவையைத்திருநதி சூழ்ந்த, பூம்பணை திரிந்து பொதியவிழ் முளரியிற் காம்பு பொதி நறவம் விளரியோடருந்தி கந்தித் தண் தலைவந்து வீற்றிருந்து கடிமலர்ப் பொழிலிற் சிறிது கண்படுத்து மயக்கம் நிறைகாமத்தியக் கங்கொண்டு நின்ற நாரணன்பரந்த யார்பிற் கலவாக்குங்குமம் நிலவிய

தென்னக் கார்வான் தந்தபேர்கொள் செக்கரில் வீதிவாய்த்தென்றன் மெல்லென்றியங்கும் மூதூர்க்கூடல்" (இஃது கல்லாடம்) தலைநகராக, அஃதாவது, நமது, பாண்டிய தேசத்துக்கு இராஜதானியாயும்; வைகைக்கரையின் கண் உள்ளதாயும், முன்னர் கடம்பவனமாக இருந்ததாயும், பின்னர் அதனை நகரமாக்கிச் சிவபெருமானைக் கொண்டு அவர் சடைக்கங்கை நீரால் சுத்தி செய்வித்தபோது அந்நீர்த்திவலைகள் மதுரமாயிருந்தமையால் அந்நகரம் "மதுரை" எனப் பெயர் பெற்றதாயும், "சந்தனப் பொதியச் செந்தமிழ் முனிவனும், சௌந்தரபாண்டியனெனுந் தமிழ் நாடனும், சங்கப்பலகையும் தழைத்தினிதோங்கு மங்கலப் பாண்டி வளநாடென்ப" எனப் புகழப்பெற்றதாயும், பாண்டி நாட்டுக்கு முகம்போல்வதாயும், மிக்கப்பழமையும், மிக்கச் செல்வமும், மிக்ககீர்த்தியும், மிக்கத்தெய்வத்தன்மையும், மிக்க அலங்காரமும் உடையதாயும், பாண்டியர்களுக்கு இராஜதானியாக நெடுங்காலம் விளங்கியதாயும், உமாதேவியாரது அவதாரமாகிய தடாதகைப் பிராட்டியாரும், சோமசுந்தரக் கடவுளும், உக்கிரப்பெருவழுதியாகிய குமாரக் கடவுளும் உண்மையாகத் திருமுடிசூடி அரசாளப்பெற்றதாயும், பல்லாயிரம் வருஷங்களாகப் பல்லாயிரம் புலவர்சிகாமணிகளிருந்து, பல்லாயிரம் நூல்களை இயற்றியும், ஆராய்ந்தும் தமிழ்ப்பாஷையைவளர்க்கப் பெற்றதாயும், முதற்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம், என்னு முச்சங்கங்களியலப் பெற்றதாயும், சிவபெருமானால் அநேகபல அற்புதத்திருவிளையாடல்கள் நிகழ்ப்பெற்றதாயும் இன்னும் வரையறுத்துக் கூறுவதற்கு இயலாத பலமாட்சிகள் உடையதாயும் பெற்ற மதுரைமாநகரத்தைத் தலைநகரமாகக்கொண்ட பாண்டிமா நாட்டின்கண், பிரான்மலைக்குக் கிழக்கும் கடலுக்கு மேக்கும், வெள்ளாற்றுக்குத் தெக்கும், வைகையாற்றுக்கு வடக்கும் உடைத்தான பாலைத்திணையே நமது, செந்தமிழ்த்தாய் நாடாகும். இந்நாட்டில் தற்காலம் நம்மனோர் வசிக்கும் நகரங்கள், க. தேவகோட்டை. உ. காரைமாநகர். ங. கோட்டையூர். ச. கண்டனூர். ரு. பள்ளத்தூர். சு. கானாடுகாத்தான். எ. புதுவயல். அ. கடியாபட்டி. கூ. கொத்தமங்கலம். க0. ராயவரம். கக. அரிமழம். கஉ. நேனீப்பட்டி. கங. இலக்குமிபுரம். கச. செயங்கொண்டபுரம். கரு. நேமுத்துப்பட்டி. கசு. அரியக்குடி. கஎ. அமராவதிபுதூர். கஅ. கல்லல். ககூ. ஒசிறுவயல். உ0. ஆ. முத்துப்பட்டினம். உக. ஆத்தங்குடி. உஉ. சொக்கலிங்கம்புத்தூர். உங. அழகாபுரி. உச. மாநகரி. உரு. கல்லுப்பட்டி. உசு. பலவான்குடி. உஎ. தாணிச்சாவூருணி. உஅ. சண்முகநாதபுரம். உகூ. கோநகர். ங0. நாட்டரசன் கோட்டை. ஙக. பாகனேரி. ஙஉ. நடராசபுரம். ஙங. ஒக்கூர். ஙச. பூங்குடி. ஙரு. அலவாக்கோட்டை. ஙசு. சக்கந்தி. ஙஎ. சொக்கலிங்கபுரம். ஙஅ. கானையார்மங்கலம். ஙகூ. சொக்கநாதபுரம். ச0. நா. அழகாபுரி. சக.

கருங்குளம். சஉ. சோழபுரம் சஙூ. வெத்தியூர். சச. செம்பூனூர். சடு. அரண்மனை சிறுவயல். சசு. பனங்குடி. சஎ. நெற்குப்பை. சஅ. பரியாமிர்தபட்டி. சகூ. கண்டவராயன்பட்டி. டுO. பூலாங்குறிச்சி. டுக. விராய்மதி. டுஉ. நாச்சியார்புரம். டுஙூ. மகிபாலன்பட்டி. டுச. சிறுவயல் டுடு. ஆவனிப்பட்டி. டுசு. பிள்ளையார்பட்டி. டுஎ. சிறுகூடற்பட்டி. டுஅ. செவ்வூர். டுகூ. ஆ. தெற்கூர். சுO. கீழச் செவற்பட்டி. சுக. கண்டமாணிக்கம், சுஉ. பட்டமங்கலம், சுஙூ. வலையபட்டி. சுச. புதுப்பட்டி. சுடு. வேகுப்பட்டி. சுசு. கொப்பனுபட்டி. சுஎ. உலகம்பட்டி. சுஅ. மேலச்செவற்பட்டி. சுகூ. வேந்தன்பட்டி. எO. நச்சாண்டிபட்டி. எக. பனையப்பட்டி. எஉ. மிதுலைப்பட்டி. எஙூ. குறுகிக்கொண்டான்பட்டி. எச. ராங்கியம். எடு. விரையாச்சிலை. எசு. லெட்சிமிபுரம். எஎ. கூழிபிறை. எஅ. பொன்னமராவதி. ஆகிய நகரங்களும், ஒன்பது சிவாலயங்களுமாம். இவைகள்தான் நமது, மரபார்க்குரிய நாடு நகரங்களும் ஆலயங்களும் ஆம். என்றால், நமது, செந்தமிழ்த் தேயத்தின் பூர்வீக முறையான அமைப்பின்படி, இப்பாலைத் திணைக்கு உரிய அங்கங்களைப் பற்றி, இனிது விளக்கத்தொடங்குவாம்.

1. பாலைத்திணையாவது, நல்ல சுவையோடுகூடிய யாற்று நீரோட்டமும், அதனுலுண்டாகும் பூவளப்பங்களும், அடர்ந்த தோப்புக்களின் நிழலும் அல்லாத சுரமும், சுரஞ்சார்ந்த இடங்களுமாம்.

2. அத்திணைக்குரிய மக்கள் " கள்ளர், மறவர், அகம்படியார், வல்லம்பர், பள்ளர், பறையர், வலையர், புலையர், குறவர்கள் " முதலியவர்களாம்.

3. அத்திணைக்குரிய மக்கள் வணங்குந் தெய்வங்கள். "பத்திரகாளி, துர்க்கை, கருப்பன், காட்டேறி, பட்டன் சிலபேய்களுமாம்."

4. அத்திணைக்குரிய ஊர், ஊரும், குறும்பும், பட்டியுமாம். அத்திணைக்குரிய நீர், அறு நீர்க்கூவலும் சுனையுமாம். அத்திணைக்குரிய பறை சூறை கோட்பறையும், நிரை கோட்பறையும், துடியுமாம். அத்திணைக்குரியபுள், கழுகு, பருந்து, புறு, காசுக்கட்டிக் குறுகியுமாம். அத்திணைக்குரியபூ, கள்ளி, பாலை, பூளைகளாம். அத்திணைக்குரிய மரம், ஓமை, கள்ளி, குரா, பாலை முதலியனவாம். அத்திணைக்குரிய விலங்கு, செந்நாய், பன்றி, நரி முதலியனவாம், அத்திணைக்குரிய மக்களின் தொழில் "பதிப்பறியும், வழிப்பறியும், கொள்ளையாடலுமாம்"

5. இனி அத்திணைக்குரிய மக்களின், இயற்கைகளையும், குணுகுணங்களையும், அவர்களின் நடையுடை பாவனைகளையும் பற்றிச் சிறிது விரிக்கத் தொடங்குவாம். அவர்கள், காக்கை, களா, நவ்வற்கனிகளினும் அமாவாசையிருட்டினும். சிறந்து, நிறைந்த கருமை நிறம் வாய்ந்தவர்

களாயும், வன்மை மிகுந்த திடகாத்திரமான தேகத்தை உடையவர்களா யும், அடர்ந்து நெருங்கி வளர்ந்த முடிபோடத்தகுந்த சிகையை உடையவர்களாயும், இளநெஞ்சுடையாரும், சிறுரும் கண்டஞ்சத்தகுந்த பயங்கரமான மீசைகளை உடையவர்களாயும், மனுஷியவர்க்கத்தார்க் குரிய ஒரு நூற்றியிருபஃதாண்டுகளையும் ஆண்டு அநுபவிக்கத்தகுந்தப் பெரும்பான்மையான ஆயுட்பாகத்தை உடையவர்களாயும், தங்களின் குலா சாரதருமத்திற் சிறிதும் வழுவாதவர்களாயும், அன்பு, அருள், பொறை, கண்ணோட்டம் பேரறிவாண்மை முதலிய உயர்தரக் குணங்களோடு நட்பற் றவர்களாயும், எந்த மார்க்கத்தானும் மறவாத வைராக்கியம் உடையவர் களாயும், தீர வீர பராக்கிரமம் உடையவர்களாயும் இருப்பார்கள். அடி பிடி சண்டைகளினும், வேட்டையாடுவதினும், எவர்களுங் கேட்டு வியக்கத் தகுந்த பச்சை, பச்சையான கொச்சை வார்த்தைகள் பேசுவதினும், பல வகையான மாமிச பதார்த்தங்களினும், கள்ளப்புணர்ச்சியினும், மிக்கப் பிரி யம் உடையவர்களாயும் இருப்பார்கள். தாங்கள் ஏற்படுத்திக் கொண்ட வரன் முறைக்கட்டுக்களுக்குப் பெரும்பான்மை அடங்கியே ஒழுகுவார்கள். கூட்ட நாட்டங்களும் மிக ஒழுங்காகவே நடைபெறும். இவர்களுள் ஆண் மக்களுக்கு எத்துணை சுதந்தரம் ஏற்பட்டிருக்கிறதோ அத்துணைச்சுதந்த ரங்களும் பெண்மக்களுக்கும் உண்டு. ஆண்மக்களைப் போன்றே பெண்மக் களும் தங்களிட்டம்போன்று பலதரம் விவாகஞ் செய்துகொள்வார்கள். புருஷன், பெண்சாதி இருவருள் ஒருவரைவிட்டொருவர் விலகி வேறொரு கலியாணஞ் செய்துகொள்ள வேண்டுமாயின், ஆண்குழந்தைகளிருப்பின் புருஷனையும், பெண் குழந்தைகளிருப்பின் பெண்சாதியையும் சார்ந்தன வாம். பெண்மக்கள் கட்டிக்கொள்வது, "கண்டாங்கி" என்னும் பெயரை யுடைய பத்து முழமுள்ள ஆடைகளேயாம். பெண்மக்களும், ஆண்மக்களைப் போன்றே தக்கதேக பலமுள்ளவர்களாயும், ஆண்மக்களுக்குச் சமமாக எந் தத் தொழில்களையும் போட்டி போட்டுக்கொண்டு செய்பவர்களாயும், காதன் மிக்குற்றபோழ்து "மேனுட்டாரைப் போன்று" ஆண்மகனைத் தாங் களாகவே வலிதாகப் பிடித்து இழுத்துக்கடித்து முத்திக்கொஞ்சிக் குலாவி ஆடிப்பாடி யணைத்துச் சுகிப்பவர்களாயும், ஓயாமல் வெற்றிலை பாக்குப் புகை யிலையைத் தின்பவர்களாயும், புருஷன்மீது மிகப்பற்றுடையவர்களாயும், கருப்புவர்னத்தில் மிக்க அழகுள்ளவர்களாயும், கனத்ததனபாரங்களை உடை யவர்களாயும், வேப்பெண்ணை தேய்த்துக்கொள்ளுங் கூந்தலை யுடையவர் களாயும், கூந்தலை முடிந்து போட்டுக் கொள்ளாதவர்களாயும், பனிச்சை யற்றவர்களாயும், நாள்தோறும் ஸ்நானஞ் செய்துகொள்ளாதவர்களாயும், காமவிருப்புடையார் பார்வைக்கு மிக ரமணீகரமான தோற்றம் உடையவர் களாயும், நெடிய வேல்போன்ற விழிகளை யுடையவர்களாயும், வெள்ளாட்டி ரத்தம்போன்று வெற்றிலைக் காவியேறிய இதழ்களையும்,கற்பகக்கனிபோன்

றவட்டமுலைகளையும், கருப்பாகிய சக்திகள் நிறைந்த அழகுள்ள வதனங்களையும், ஆலிலைபோன்ற அடிவயிறுகளையும், ஆனைத்துதிக்கைப் போன்ற இரண்டு தொடைகளையும், இப்பொழுதுதான் ஒடிந்து விழுந்து விடுமோ என்னுமாறு கொடிபோன்ற இடைகளையும், மாட்டுத்தும்புகள் போன்ற ஒருவிதப் பொன்னணிகளையும், ஒற்றைத் தட்டாகச் சுற்றிய இடைகளையும் உடையவர்களாயும், தில்லானு, டப்பா, குலுக்கி தேம்பாகு, சிந்து, கொம்மி, ஏலேலம், ஆலோலம், காதன் முதலியன தேவர்களும் கேட்டு ஆநந்திக்க கூடிய நிலைமையில் நல்ல இனிய குரலோடு பாடியாடி ஆண்மக்களுடன் சமமாகக் களிக்கக் கூடியவர்களாயும், வலிய கன்னெஞ்சம் உடையவர்களாயும், ஆண்மக்களுடன் சமயம் நேர்ந்தபொழுது நேர்நின்று மல்லயுத்தம் செய்பவர்களாயும், நீல நிறத்தையுடையவர்களாயும், ஆண்மக்களைப் போன்றே வாய் பேசுகிறவர்களாயும் கோபம் நேர்ந்தபொழுது பிள்ளைகளைத் தாறுமாறுமாகப் புடைப்பவர்களாயும், எதற்கும் அஞ்சாத நெஞ்சம் உடையவர்களாயும், "ஆடறுத்த கள்ளனுக்கு ஆக்கியிட்டகள்ளி" என்ற பழமொழிக்கு நன்றாக இணங்கினவர்களாயும், முறையே மானவீனத்துக்குக் கட்டுப்பட்டவர்களாயும், குடுகுடு கிழவியாகத் தள்ளாடிக் கிடப்பினும் சுத்த வீரமுடையவர்களாயும் இருப்பார்கள். இப்பாலை நில மாக்களுக்கு ஆட்டுக்கடாச் சண்டையும், சேவற்சண்டையும் மிகப் பிரியமாகவிருக்கும். மதுபானங்களினும் மிக்க விருப்புடையவர்களாம். நல்ல வயதுவந்த அஃதாவது, இருபது, இருபத்தைந்தாண்டுகள் நிறைந்த பெண்மக்களும், இருபத்தைந்து முப்பஃதாண்டுகள் நிறைந்த ஆண்மக்களும் ஒன்றுகூடி, பங்குனி சித்திரை மாஸத்து, பூரண சந்திரோதயமாகி ஒருச்சாமநேரங் கழிந்தபின்னர், அவர்கள் ஆநந்தமாக உண்டு உடுத்தி, வெற்றிலைபாக்குகள் போட்டுக்கொண்டு, கலந்து, ஒயில், கொம்மியாட்டத்துக்கு ஆயத்தமாகி, ஒருவருக்கொருவராக நின்று வட்டமிட்டுத் "தன்னனம், தன்னனம், தன்னனம், தனம், தன்னனம், தன்னனம், தன்னனம்" என்னும் தொடக்கத்துத் தொடர்ந்து, பட்சி ஜாலங்களும், மர மட்டைகளும், கவனித்துக் கூறுமிடத்து எழுவகைத் தோற்றங்களுங்கூட ஆநந்தசாகரத்திலே ஊசலாடத்தகுந்த இன்னிசைக்குரல் ஒரேயளவாகக் கிளம்ப, அவர்கள் அங்கைகொட்டி ஒருவரோடு ஒருவர் முத்தியும் மோதியும், பிடித்தும் கடித்தும் பிணைத்தும் அணைத்தும் தழுவியும் ஆடும் ஆட்டத்தால், தாங்களும் தாங்களாகவே ஆடும் இளங்கொங்கைகளைப் பிடித்தும், தடவியும், நுனி விரல்களாலே மெல்லெனக் கசக்கியும், அழுத்தியும், மோந்தும் கடித்தும் அவர்களின் அழகாகிய சிரங்கள் ஒரே அளவாகக்குனிந்தும், நிமிர்ந்தும், விளையாடும், ஒயிற் கொம்மியாட்டமே ஆட்டம். அவர்கள் கொண்டாடும் விளையாட்டமே கொண்டாட்டம். காண்பார் எவர்க்கும் பிரம்மாநந்தமாகவே இருக்கும். கள்ளங் கவடற்ற விளையாட்டு. அவர்கள் ஒருவ

ரோடு ஒருவர் ஐக்கியப்பட்டுத்தன் ஸ்மரணையற்றுக் கோர்த்தகையோடு இலைமறைவு, குழைமறைவு செடிமறைவு கண்டு ஒதுங்கும் ஒதுக்கமே ஒதுக்கம். ஆங்கவர்கள் கண்ட இன்பமே பேரின்பம். அவ்வின்பமானது "கரிய குழல்சரிய, முகம்வேர்வாட, வாசமுறுங்களப முலைப்புளகம் எழ, நேரான வேல்விழிகள் கயல் பொருது செயலதென நீள் பூசலாட, நல கனிவாயின் குமுகுமென அதரவிதழ் தேனூறல்பாய, மிகு கடலமுதம் உதவியிரு தோண்மாலைதாழ, வளைகலகலென, மொழிபதற மாமோக காதலது கரைகாணாது, எரியணுகு மெழுகுபதமாய் மேவிமேவியணை இருவருடல் ஒருவரென காணாது பாயன்மிசை இளமகளிர் கலவி" என்று, நமது, அருணகிரிநாதர் திருவாய் மலர்ந்தருளியதற்கு இரட்டைப்பங்குச் சிறப்பாகவுமே இருக்கும். அவர்கள், எந்த விதமான தொழில்களிடத்தும், ஆண்மக்களும், பெண்மக்களும் கலந்து நின்றே ஒருமை பெற்று வேலை செய்கிறவர்களாகலின் அவர்கள் ஆநந்தம் வரையறப்பாலனவும் சொல்லற் பாலனவும் அன்றாம். மேலும், நமது, செட்டிமண்டலத்து, நெருங்கியபழக்கமும், அடிக்கடி சின்னாட்கள் வாசஞ் செய்யும் வழக்கமுங் எனக்குண்டாகலின் சின்னாட்களுக்கு முன்னர் நான் வசித்துக் கொண்டிருந்த ஓர் நகரத்து, நான் இருக்கு மிடத்துக்குப் பக்கத்தில் ஓர் கட்டிடம் வேலையாகிக் கொண்டிருந்தது. ஒரு நாள் பிற்பகல் அக்கட்டிடத்தின் பக்கத்து வழியாக நான் வருபொழுது அக்கட்டிட எல்லைக்குள் "ஏல ஏல ஏலேலோ! ஏலே! ஏலோ! அடி ஏல ஏலோ ஏலேலோ! ஏல ஏலோ" என்று, ஒரு, பத்து இருபது பெண்கள் ஒன்றுகூடிய கூட்டத்தின் இன்குரலானது, மிகு கெம்பீரமாயும், அவர்களின் மனோல்லாஸத்தை மிகத் தெளிவாகக் காட்டக்கூடியதாயும், கேட்போர் மனத்தை அங்கே இழுத்துக் கொள்ளுஞ் சத்தியை உடையதாயும் சிலுசிலாவென்று ஒரேயளவாக நின்று கிளம்பிற்று. என்னுடைய செவிகளிரண்டும், என்மனமும் என்னுடைய உத்தரவை எதிர் நோக்காமலே அங்ஙனம் நின்றுகொண்டன. அடடா? என்னே! இவர்களின் மனோகரமான உல்லாஸ வாழ்நாட்கள் என்று அவர்களின் இனிய பாடலைச் சிறிது கவனிக்கப் புகுந்தவளவில், அவர்களின் முறைவைக்கும் ஒருத்தியின் வார்த்தையாவது, மேற்கண்ட தொடர்ச்சியினின்றும் "குத்து முலை" ஏலேலோ! கொழுந்தன் வாரான், ஏலேலோ, கொழுந்தன்வாரான் ஏலேலோ, இழுத்து மூடடி ஏலேலோ ! ஏல ஏலோ ! அடி ! என்னபயம் ஏலேலோ ! ஏல ஏலோ ! அடி ! ஏது செய்வான் ஏலேலோ ! ஏல ஏலோ ! அடி சின்னப்பயல், ஏலேலோ! சிரித்துப் பார்ப்பான்! ஏலேலோ! சிரித்துப் பார்ப்பான்! ஏலேலோ! என்று, இன்பாதிபோக அமுதவார்த்தைகள் கேட்கப் பெற்றன. ஆங்கு வேறு சில ஆண்மக்கள் வேலை செய்து கொண்டும் ஏவிக்கொண்டும் நிற்கின்றார்கள். இந்தக் கொள்ளையிற்றான் அவர்களின், கொம்மாளம் அத்தகையனவாம். இன்னும், இவைபோன்று, அவர்களின்

ஆட்டபாட்டங்கள் பலவுள்ளன. அலவகளெல்லாம் ஒருங்கும் வரைந்து முடியாதனவாம். மேலும், அப்பெண்மக்கள் தண்ணீர்க்குடத்தை இடுப்பில் வைத்துக்கொண்டு செல்லும் வழக்கமில்லை. தலையிலேவைத்துக் கொண்டு, அழகாகக் கரங்களை வீசி நடப்பதும் வெகு ஒய்யாரமாகவே இருக்கும். இப்பகுதியார், ஆடு வெட்டிக் கோழியறுத்து, முட்டைகளுடைத்து, பொங்கல்களிட்டுத் தேங்காய் பழங்கள் படைத்து தென்னம் பாளைகளையும் குருத்தோடுபிடுங்கிக் கொணர்ந்து சுவாமிகளுக்குச் சார்த்திப் பூமாலைகளும் அணிந்து பூசைகள் போடும் முறைமை வெகு விசித்திர மாகவே இருக்கும். அளவு கடந்த பக்தியொழுங்காயும் காணப்படும். அற்றை நாள் எத்துணைதூரம் வறந்த கோடைக்காலமாக இருப்பினும் கட்டாய மாகமழை பொழியும். அந்தச் சுவாமிகளின் நிலையம் என்பதற்கு அறிகுறியாகச் சூலாயுதமும், வேலாயுதமும். சாட்டைகளும், மொத்தையானதடிகளும் வீச்சறுவாள்களும் நாட்டப்பட்டும், சார்த்தப்பட்டுமே இருக்கும். காளி, சின்னக் கருப்பன் பெரிய கருப்பன், நொண்டிக் கருப்பன், திட்டாணிக் கருப்பன், சோலைமலையான், கத்திக்காரன், அழகு நாச்சியம்மை, வயனாட்சியம்மை முதலிய தேவதைகளின் பிரதிநிதியாக நின்று ஆவேசங்கொண்டும் ஆடும் வெறியாளன், பெரும்பான்மையும் "வலையன் பள்ளன் பறையன்" என்னும் வகுப்பைச் சார்ந்தவனுகவேதா னிருப்பான். சிறுபான்மை கள்ளர் மறவர் அகம்படியார் வல்லம்பர் முதலிய வகுப்பைச் சார்ந்தவர்களாயும் இருப்பார்கள். அவ்வெறியாளன், தங்கால்களிற் கச்சங்கள் கட்டி இடுப்பிலே அழகான சல்லடமும் ஒட்டியாணமும் மாட்டி, இரண்டு கரங்களினும் முறையாகக் கடகங்களைப்பூட்டி, ஒருவிதமான கோணற் கொண்டையும் முடித்து, கத்தி, வீச்சறுவாள் சாட்டை முதலிய ஆயுதங்களையுந்தாங்கி, ஆங்குடைத்தான படைப்புக்களையும், தூபதீபங்களையும், பறையொலி, கொம்பு தப்பட்டை சப்தங்களையும் கேட்டு, பழைய சுவாமிகளின் வீரதீர பராக்கிரம சக்திகளும் இந்த வெறியாளன் ஆன்மசக்தியும் ஒன்றுபட்டுக் கிளம்பிப், பேரானந்தமான ஆவேசம் வெறிகொண்டு, ஆடும் ஆட்டமும், கேள்விகளுக்கு உத்தரஞ் சொல்லும் பாலைத்திணையின் செந்தமிழ் நடைப்போக்கும், பாலைத்திணையார் என்பதை மிக நன்ருக வெளிப்படுத்தும். அவ்வெறியாளர்கள் ஆட்டுக்குட்டிகளில் நின்றும், இரத்தங்களை உறுஞ்சும் ஆற்றலும், தந்திரமும் பார்க்கப் பார்க்கப் பார்ப்போர்க்குப் பயங்கரமாகவே இருக்கும். இப் பாலைத்திணை நாட்டிடத்து உடுக்கடித்துக் குறிசொல்லும் பூசாரிமார்களும், மகாமந்திரவாதிகளும், பில்லிசூனியங்களிடும் கருவாளிகளும், சக்கரங்கள் வரிந்த தகடுகளைக்கட்டி நோய்களையும் பீடைகளையும் ஒட்டி க்ஷேமலாபங்களை உண்டுபண்ணக்கூடிய மகாவல்லவர்களும், இன்னும் ஏனைய பூர்வீகத் தொழின்முறையாளர்களும், கணக்குவழக்கின்றி ஏராளமாகக் காணப்

படுவார்கள். எடுத்த எந்த வியவகாரங்களுக்கும் உடுக்கடிக்கும் கோடாங்கிச்சித்தனையே கூட்டிக் கொணர்ந்து தேங்காய் பழம் தக்கணை வைத்துக் குறிபார்ப்பதே பெரியவோர் வழக்கமாம். அக்கோடாங்கி சொல்லும் குழூஉக்குறிச் சொற்களுக்கெல்லாம் எத்துணையோ பெரிய அம்பலகாரரும் அடங்கி யொடுங்கி பதிற்சொல்வது மிகவும் நம்போல்வார்க்கு அதிசயமாகவே இருக்கும். அக்கோடாங்கிச் சித்தர்கள், அச்சுவாமிகளைத் தருவிக்கும் பொருட்டுக் கூப்பிட்டு வரத்தும் வருந்துதல் மிகப் பரிதாபமாயும், பக்தியுருக்கமாயும், கேட்போருக்குத் தங்களின் ஸ்மரணையற்றுப் போம்படியாயும் இருக்கும். அச்சுவாமிகளைப் பற்றி மிக நன்றாக உள்ளது உள்ளபடியே வருணிக்கப்படும். அச்சுவாமிகளின் ஆன்மசக்தியின் ஞாபகசக்திகளானது, இக்கோடாங்கிகளின் ஆன்மசக்தியோடு வந்து தாக்குறும்பொழுது, அவ்வுடுக்கடிப்போன் தூலமும் சூக்குமமும் படும்பாடு ஆ! ஆ! என் சொல்வது! மிக அற்புதமாகவே இருக்கும். அவன் தன் முகக்குறிகளொருங்கும் வேறுபட்டு, கருவிழியிரண்டும் நடுநிலைக்குத்தி, இமைகொட்டாத நாட்டமும் பெற்று, கோடையிடி குமுறுதல்போன்ற வொருசப்தமும் கிளம்பி, அவனிருந்த வோரிடம்விட்டு, மனுஷியத்தன்மையிற் கூடாத மற்றொரு தூரத்தே துள்ளிக் குதித்துக் குந்தியிருத்தலும் "செல்லல் நிகழல் வருங்காலம் மூன்றினையுஞ்சொல்லும் மௌனத்தொழில்" என்றவாறு மௌனத்தொழிலுடையார் போன்று, திரிகால வர்த்தமானங்களாகிய விஷயங்களைக் கேட்போர் எவரும் திடுக்கிடுமாறு கண்ட கண்ட மாதிரி துண்டந் துண்டமாக விடைபகர்தலும் மிக அற்புதத்தினும் அற்புதமாகவே இருக்கும். ஆன்மாவின் சக்தியானது இத்தகையனவாம் என்பதை எத்தகைய தத்துவ சாத்திரிமார்கட்கும் தூல சூக்குமச் செய்கை அளவில் காட்டும் தன்மையை உடையதாகவே இருக்கும்.

I. "பொன்போலுங் கள்ளிப் பொறிபறக்குங் கானலிலே
என்பேதை செல்லற் கியைந்தனளே—மின்போலும்
மானவேன் முட்டைக்கும் மாறுய தெவ்வர்போம்
கானவேன் முட்டைக்குங் காடு" (பொய்யா மொழிப்புலவர்)

II. "விழுந்ததுளி அந்தரத்தே வேம்என்றும் வீழின்
எழுந்துசுடர் சுடுமென்று ஏங்கி—செழுங்கொண்டல்
பெய்யாத கானகத்தில் பெய்வளையும் சென்றனளே
பொய்யாமொழிப் பகைஞர் போல்" (குமாரக்கடவுள்)

III. "பாலைக்கிழத்தி திருமுன் நாட்டிய சூலத்தலையில்
தொடர்ந்து சிகைபடர்ந்து விடுதழல் உச்சம் படுகதிர்தாக்கப்
பாடல்சால் பச்சைக் கோடகக் காற்றை
மையில் காட்சிக் கொய்யுளை நிற்ப

வயிற்றில் இருந்து வாயும் முளைத் தென்ன
இருகான் முகனிற் கருகாத்துரந்து
படுமெழல் நீக்கக் குடகடற் குளிக்கும்
நாவாய்க் குறியாத் தீவாய்ப் பாலை இல்'' (கல்லாடம்)

IV. "அம்மவாழி தோழிச் சிறியிலைக் குறுஞ்சினை வேம்பின்
நறும்பழம் உணீஇய வாவலுகக்கும் மாலையும்
இன்றுகொல் தோழி அவர்சென்ற நாட்டே.''

V. "வானமூர்ந்த வயங்கொளி மண்டிலம்
நெருப்பெனச் சிவந்த வுருப்பவிர்ங் காட்டு"

இத்தகைய சிறப்புக்கள் வாய்ந்த பாலைப நாட்டு அவர்கள், ஆடும் வெறியாட்டுக்களைப்பற்றி வருணித்துச் சொல்லவும், வரையவும் எம்மாலாகாத காரியந்தான். என்றாலும், சிலகூறித் தீரவேண்டும் ஆவசியகம்பற்றியே வரையத் தொடங்கினும். மேலும், இப்பாலைப நாட்டில் உடைத்தான வன தேவதைகளுக்கு ஒவ்வோராண்டும் பங்குனி மாதந் தொடங்கிச் சில மாதங்களாகச் சிறப்புக்கள் நடைபெறும். அச்சிறப்புக்களுக்குத் "திருவிழா'' என வழங்கப் பெறுகிறதில்லை. பாலையப்பட்டிச் செவ்வாய் வேலங்குடிச் செவ்வாய், காரைக்குடிச் செவ்வாய், கோட்டையூர்ச் செவ்வாய், கண்டனூர்ச் செவ்வாய், செவ்வாய் என்றே பெயர்கள் வழங்கப் பெறும். ஏனெனில் இப்பாலைத்திணைக்குரிய பெண் தெய்வங்கள், ஆண் தெய்வங்கள் ஒருங்குக்கும் செவ்வாய்க்கிழமையே உரியனவாகலின் என்க. மேலும், அக்கிழமையிற்றான் அத்தேவதைகளுக்கு நாட்டார்களால் பலவகைச் சிறப்புக்களும் நடைபெறும். மேலும், அச்செவ்வாய்களில் இப்பாலைத் திணை நாட்டுப் பெண்மக்கள் ஒவ்வொருவரும் ஸ்நானம் செய்து, உயர்ந்த கண்டாங்கிகளையுடுத்தி வெள்ளி, பித்தளை, பொன் முதலிய உலோகங்களால் அமைக்கப்பட்ட பூட்டி, கொப்பு, தட்டு, வளை முதலிய அணிகளும் அணிந்து, வேப்பெண்ணை தேய்த்து தங்களின் முடிகளை இரண்டு கூறுகபங்கிட்டு அள்ளிச் சொருகி மரு, கொளுந்து, மலர் முதலியவைகளையுஞ் சூடி, மாங்கலியத்தினும் அணிந்துகொண்டு ஒவ்வொரு புதிய மட்குடங்களினும் மதுவாகியகள்ளை நிறைத்து, அக்குடங்களின் வாயில்களில் தென்னம்பாளைகளையும் நாட்டி, புட்பமாலைகளையும் சுற்றித் தங்களின் அழகிய சிரங்களிற்றாங்கி அம்மதுக்குடங்களைக் கொண்டு அப்பெண்மக்கள் ஒருவர் பின் ஒருவராய் பலவூர்களிலிருந்தும் சென்று அப்பாலைக் கிழத்தியை அலங்கரிக்கப் பெற்று வைத்திருக்கப்படும் எல்கையை அடைந்த உடன், அவர்களையறியாமல், அவர்களின் சிரமும், அம்மதுக்குடமும் பொங்கப் பொங்கச் சுற்றியாடுகிற கண் காட்சி, காட்சியினும் காட்சியாகவே மிக அழகாக இருக்கும். அம்மது அளவுக்கு மிகையாக எவ்வளவு பொங்கிவடியினும் பின்னர் சரியாக அளவு

குறையாமலும் இருக்கும். மிகுந்த போதையாகவும் இருக்கும். பின்னர் அம்மதுவினைத்தேவாமிர்தத்தினும் மிகுந்த விசேஷ அமுதமாக நினைத்து இப்பாலைய நாட்டைச்சார்ந்த யாவரும் ஆநந்தமாகப் பருகி, மாமிசாதி படைப்புகளையும் உண்டு களித்து ஆடிப்பாடியமருவார்கள். ஆனால், இக் காலமோ, அம்மதுக்குடம் என்ற பெயர் மட்டுமே அன்றி அக்குடங் கள்யாவும் வெறும் நீர்க்குடங்களாகவே மாறுதலடைந்து கொண்டன. என்றால், அத்தேவதைகளும் தங்களின் பூரணசக்திகளை வெளிக் காட் டாமல் காலதருமத்துக்கு ஏற்றவாறு இயலப் பழகிக் கொண்டன. மேலும், இப்பாலைத்திணைமாக்கள் தைச்சங்கராந்தி மாஸப் பிறப்புக் கழிந்த மற்றை நாளிலிருந்து "மாட்டுப் பொங்கல்" "மஞ்சிகட்டு" என்ற பெயரோடு இப்பாலைத்திணையைச் சார்ந்த ஒவ்வொரு பட்டி தொட்டிகளி லும் தனியான பெரிய விசேடம் ஒன்று நடைபெறுகிறதுண்டு. அவ்வி சேடமானது, ஆடுமாடுகளின் அபிவிருத்தியைக் குறித்துப் பொங்கலிட்டு அவ்வனதேவதைகளுக்குச் சில சிறப்புக்கள் நடத்துவதும், மாடு ஆடுகளுக்கு அன்றையத்தினம் நன்கு நீராட்டிச் சந்தனம் குங்குமம், திருநீறு புட்ப முத லியவைகளும் சார்த்தி, மஞ்சக்கொத்து, கரும்பு,பனங்கிழங்கு, செவ்வந்திப் பூமாலைகள், நல்ல கோடி வேட்டிகளும் கட்டி, சில மாடுகளுக்குத் தண்டை சிலம்புகளும் பூட்டி, மஞ்சனீரிற்றோய்த்த மஞ்சியை இரண்டு கொம்புகளி லும் மிக நன்றாகக்கட்டி, வெளியான பெரிய மைதானத்திலே பலவூர்களி லிருந்தும் வருகிற எல்லாமாடுகளையும் ஒன்றாகக் கூட்டிக்கட்டிவைத்திருந்து ஏகபோகமாய்த் தப்பட்டைகள் கொட்டி கொம்புகள் ஊதி நாட்டார்கள் யாவரும் ஒருங்கே கூடித்திரண்டு வந்து, அம்மாடுகளை அவிழ்த்து விட்டு விரட்டி ஓட்டி வேடிக்கை பார்ப்பதும் உண்டு. ஆயிரக்கணக்கில் ஆண்களும் பெண்களும் வரம்பின்றிக் கூடுவார்கள். இவ்வேடிக்கை மேனாட்டார் புரவி களின் பந்தய வேடிக்கைகளைவிட எத்துணையோ பன்மடங்கு விசேடச் சிறப்புடையதாயும் காணப்படும். இந்த மஞ்சிகட்டுமாடுகளுள், "ஆட்ட பாட்டம், தந்திரமந்திரம், முன்னோக்கம் பின்னோக்கம், மருட்டல், வெருட் டல், குத்தல் பாய்ச்சல்" முதலியன கற்றுக் கொண்டனவாயும், எத்தகைய சுத்த வீரர்கள் பலர் ஒன்றுகூடி எதிர்ப்பினும், அவர்களிடத்தும் அகப் படாசக்தி வாய்ந்தன வாயும், தமன் பிறன் என்பன மிகச் செவ்வனே தெரிந்து கொண்டன வாயும், மிக அழகும், கெம்பீரமான தோற்றமும் உடையனவாயும், எத்துணையும் விலைமதிப் பற்றனவாயும், உள்ள சில மாடு களும் உண்டு. அம்மாடுகளைப் பிடிக்குந்தன்மையில் வன்மை நிரம்பிய கை தேர்ந்த பலசுத்த வீரர்களும் அவ்விடத்துக்கு வேண்டுமென்றே வரு வார்கள். அவர்களை அநாகரீக வகுப்பார் என நினைக்கக்கூடிய ஒவ்வொரு வருக்கும் அவர்கள், வியப்புக்குரியவர்களாகவே காணப்படுவார்கள். பெரும்பான்மையும் அவர்கள் பால்யர்களாகவே இருப்பார்கள். அம்மஞ்சி

கட்டுக்காளைங்கன்றுகளோடு அவர்கள் போராடும் போராட்டும், விளையாட்டும், ஓட்டமும். மறுப்பும், மருட்டும், சிறிது வன்னெஞ்ச முடையார்க்கு அவைகள் அழகாகவும், சிறிது இளநெஞ்சுடையார்க்கு அவைகள் பரிதாபமாயும், கல்வி யறிவோடுகூடிய சிறிது நன்னெஞ்சுடையார்க்கு, அவைகள் ஒருவகையாகச் சந்தோஷமாயும், மற்றொருவகையாக இஃதென்னை என்பதாயும் தெளிய விளங்கும். அம்மாடுகளைப் பிடிக்கப் புகுந்தாருட் சிலர் இறப்பதும் உண்டு. பெருங்காயங்களோடு தப்பிப்பதும் உண்டு. காயப்பட்டு நாலாறு பத்து நாட்கள் கழித்திறப்பதும் உண்டு. இம்மஞ்சிகட்டு பார்ப்பதற்காக இப்பாலைத்திணைமாக்கள் ஆண்களும், பெண்களும் தங்களாற் கூடுமானவரை தங்களை அலங்கரித்துக் கொண்டு "நீயும் நானும் சோடி நெல்லுக்குத்தலாம் வாடி" என்பனவாயத் தொடக்கத்து அற்புதத் தேம்பாகுகளையும், சிந்துக்களையும், ஏசல்களையும், கொம்மிகளையும், வண்ணங்களையும், தங்கள், தங்களின் இனியகுரல்களாலே நவரத்னங்களும் தோற்பனவாக மிகுந்தமனோல்லாஸமாக சோடி சோடியாக அள்ளி எறிந்து கொண்டு பலே, பலே சங்கீத வித்வான்களும், மிஸ்ஸஸ், சரஸ்வதிபாயும், பத்மாஸனிபாயும், இராஜாமணிபாயும், பாலாம்பாள்பாய் முதலிய பாய்மார்களும் ஏ ஏ ! இஃதெவன்! என்ன அற்புதக்குரல்! இப்பாலைத்திணையின் அற்புதச் செந்தமிழ்த்திருப்பாக்களின் அருமையும் பெருமையும், இருந்தவாறென்னை; நாம்பாடும் பாட்டுக்களும், தில்லானுடைப்பாக்களும், தியாகராஜ சுவாமிகளின் கீர்த்தனைகளும், நடராசாச்சாரிப் பாட்டுகளும் இப்பாலைத்திணைமாக்களின் பாட்டுக்களின் காலின்கட் பட்டதூசும் பெறுமாவென்று ஏங்கிவியப்புறுமாறு அவர்கள் செல்லும் செலவு இன்னமும் ஒருதரம் பார்க்கமாட்டோமா வென்றே காணப்படும். இப்பாலைத்திணைமாக்கள் சவ்வாரி செய்கிறவண்டிகள் ஒருமுழ அகலமும், இரண்டுமுழ நீளமும் உள்ளதுதான். இதற்கு மேற்பட்ட அளவுள்ள வண்டிகள் "மண்" மணல், அடிக்கிற மொட்டைவண்டிகள்தான். இவ்வண்டிகளில் ஏறிக்கொண்டு, தாறு மாறுமாகத் தாறுக்கொம்புகள் கொண்டு மாடுகளை குத்திவிரட்டும் வேடிக்கை வேடிக்கையினும் வேடிக்கையாகவே இருக்கும். அதினும், இரட்டை இரட்டையாகவேதான் இருப்பார்கள். "கண்ணொடு கண்ணினை நோக் கொக்கின் வாய்ச் சொற்கள் என்ன பயனுமில" என்றும், "நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக் கூட்டியுரைக்கும் குறிப்புரை யாகும்" என்றும் காணப்படும், இலக்கியங்கட்கு இலக்கணம், அம்மஞ்சி கட்டுக் கூட்டமைதானத்தில் மிகநன்றாகக் காணலாம். இதிற் பழைய ஆசாமிகளைக் காண பழைய ஆசாமிகளும்,புதிய ஆசாமிகளைக்காணப் புதிய ஆசாமிகளும், நிரம்பக் கண்டு கொள்ளக்கிடைப்பார்கள். தங்கள், தங்களின் இட்டம்போன்று கட்டிக் கட்டி, அறுத்துக்கொள்ளும் கொள்வகை உடையார்களாகலின் இம்மஞ்சு கட்டு மைதானக்கூட்டம் அவர்களுக்

குமிக அனுகூலமாக இருக்கும். இப்பாலேத்திணைமாக்கட்கு இஃதொரு, பெரிய பெருநாளென்றே சொல்லலாம். அம்மைதானத்தில் நடக்கும் சம்ப வங்கள் யாவும், அவ்வனதேவதைகள் எல்லாம் ஆநந்திக்கக் கூடியனவாக வே இருக்கும். அன்றையத்தினம், கரந்தைமலைக் கருப்பன் திருவரு ளுக்கத்தான் கட்டாயம் ஒருமழை எங்கிருந்தாவது பொழிந்தே தீரும். இப்பாலேத்திணைக்கு "கரந்தைமலைக்கருப்பனும்" "அழகர்மலைபதினெட் டாம்படிக் கருப்பனும்" "அகோரவீர வடபத்திரகாளி" யுந்தான் தலை மைபூண்டவர்கள். சில முனிவரர்களும் உண்டு. இவர்களை, வெள்ளிக் கிழமை செவ்வாய்க்கிழமைகளில் நாம் நன்முக ஸ்நானஞ் செய்து, விபூதி யணிந்து கொண்டு பக்தி வைராக்கியத்தோடும், நேரில் பார்க்க வேண்டு மென்ற பேரவாவோடும் பகல் பனிரெண்டு நாழிகைக்குமேல், மனிதசஞ் சாரமல்லாத சிலகாடுகள், ஓடைகளுள் நுழைந்து உசாவுவோமானல், அவர் கள் நம்முன்னே வலிதாகவந்து, அவர்களின், எத்துணையோ கல்பகோடி காலங்களாயுள்ள தங்கள் தூல தேகத்தையுங்காட்டி, தாங்கள் இன்னுரென் பதையும் வெளிப்படையாகச்சொல்லி, நாம் நம்பதக்கனவாயுள்ள சில நியா யங்களையும் மெய்ப்பித்துத் திடீரென்று மறைந்தும், தோற்றியும், தம்பீ போய்வாவென்று சொல்லி அவர்கள் செல்வதை நமது கண்ணுறக்காண லாம். அவ்விதம் இரண்டுமூன்று முறை நான், நேரிற்கண்டும், எனக்கு ஆகவேண்டும் சிலகாரியங்களைப்பற்றி எப்படி, எப்படியெனக் கேட்டும் இருக்கிறேன். இஃதுண்மை இதனைப்படிக்கும் எந்தச் சகோதர சகோ தரிகளும் காளி கருப்பன் முனி முதலிய தேவதைகளைக்கண்டார் இப் படித்தான் இருப்பாரோவென பரிகசிக்க வேண்டாம் ஏனெனில்,

"தம்மை இகழ்ந்தமை தாம் பொறுப்பதன்றி மற்று
எம்மை இகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை
எரிவாய் நிரையத்தும் வீழ்வர்கொல் என்று
பரிவதூஉம் சான்றோர் கடன்" (நாலடியார்)

என்ற பெரியார் திருப்பாசுரத்தை நன்முக நண்பர்கள் நெட்டுருச் செய்துகொள்க. மேலும், நமது சைவசமயத்து வழிமுறையான ஒழுக் கத்தின்படி "ஆதியின் மேலாசையடர்ந் தெரித்தவக்கினியின், சோதியினல் வெந்து சுகம் பெறுவதெக்காலம்". என்ற பெரியார் திருவாக்கிற் கிணங்கத் தங்களின் தூல சரீரத்தை சூக்குமசரீரமாகப் பெற்றுக்கொண்ட நமது இந்தியப் பெரியார்கண்மீதும், சண்முக நாதன் முதலிய ஈஸ்வராதிகண் மீதும் பொதுவாக பூரணமான நம்பிக்கையும், பேரபிமானமும், நிரம்பிய பக்தி விசுவாசமும் எந்தக் காலத்தும் எனக்கு உண்டு. சின்னுட்கட்கு முன் னர் ஓர்நாள் நமது காரைக் குடியைச்சார்ந்த வேம்படி ஐயனர் ஆலயத் துக்குச சென்றிருந்தேன். அன்றையதினம் ஆங்குள்ள தெப்பக் குளத்தில் ஸ்நானஞ்செய்து ஸ்வாமி தெரிசனங்களை யெல்லாம் வரிசைக்கிரமமாக

முடித்துக்கொண்டு, வெளியே வந்து, அக்குளத்துக்கு வடகரையிலிருக்கும் கன்மண்டபத்துச் சிறிதுநேரம் நித்திரைசெய்ய வேண்டுமென்று நினைத்துத் துண்டைவிரித்துப் படுத்தேன். ஆகாரங்கள் சரியின்மையால் நித்திரை நன்ருக வரவில்லை. ஏதோ சில எண்ணங்கள் எங்கெங்கோ இருந்து ஓடிவந்தன. அஃதுடன், இவ்வாலயத்துக் காளி கருப்பன் முதலிய எல்லாவன தேவதைகளும் பிரத்தியக்கமாய்க் காணப்படுமென்று பேசிக் கொள்கிருர்களே அஃதுண்மையாயின், அத்தேவதைகளில் ஒன்ருகிய காளிகா தேவியானவள் தன் தூல சரீரத்தோடு நம்முன் வந்து தோன்றுதல் கூடாதாவெனக் கண்ணீர்வடியச் சிறிது நேரங் கவலையோடு சிந்தித்துக் கொண்டிருந்து, பின்னர் வேறுபலயோசனைகள் என்மனத்தகத்து உதயமாகவே அதினின்றும் எழுந்து, அத்தெப்பக்குளமேல் கரை வழியாகத் தெற்கு நோக்கிக் காட்டுக்குள் ஏதோ ஒரு பித்தம் பிடித்தான்போன்று தனியாக நானே நாஞய்ச் சிலவார்த்தைகள் பேசிக்கொண்டு சென்றேன். வேறு மனித சஞ்சாரம் இல்லை. திருப்புத்தூரிலிருந்து தேவகோட்டைக்குச் செல்லும் மார்க்கத்துக்குக் கூப்பிடுதூரத்து ஆங்கிருந்து, மனித நிலைமையிலும், தேவ நிலைமையிலும் உள்ள எத்தகையாரையும், அவர்களின் மனமாதி சக்திகளையும் பூரணமாக இழுத்துத் தன் காற் கீழ்ப்படுத்தும் ஓர்வித அபாரசக்தியும், இளமையும், வனப்பும், சாந்தமும், ஒவ்வோர் அவயவங்களினும் சக்திகள் நன்ருக நிறைந்த கெம்பீரமான தோற்றமும், தேகமாகிய பூமியிலே முளைத்து வளர்ந்து படர்ந்து தளிர் இலைகளோடு கிடக்கும் காமக்கொடிகளின்மீது மலருந்தருணத்தை மேற்கொண்ட அநேக பல அக்காமாதி மொக்குகளும், சுமார் பனிரெண்டு பதின்மூன்று பருவங்களும், ஈண்டும் சிறிது விரித்துக் கூறப்புகின் "இரண்டுடல் ஒன்ருய்க்கரைந்து கண்படாமல் அளவியன் மணநிலை பரப்புங்காலத்து, தனை கரை கடந்த காமக்கடலுள் புன்னுனிப்பனியென மன்னுதலின்றிப், பீரமலர்ந்த வயாவு நோய் நிலையாது வளைகாய் விட்ட புளியருந்தாது, செவ்வாய் திருந்து வெள்வாய் பயவாது, மணிபுகையுண்ட கருமண்ணிடந்து பவளவாயிற் சுவைகாணுது, பொற்குடம் முகட்டுக் கருமணியமைத்தெனக் குங்குமக் கொங்கையும் தலைக்கண் கருது, மலர அவிழ்ந்த தாமரைக்கயலென வரிகொடுமதர்த்த கண்குழியாது, குறிபடு திங்கள் ஒருபதும் புகாது, பொன் பெயர் உடையோன் தன் பெயர் கெடுப்பத் தூணம் பயந்த மாணமர் குழவிக்கு அரக்கர் கூட்டத்து அமர் விளையாட நெருப்பு உமிழ் ஆழியீந்தருள் நிமலன் கூடன்மாநகர் ஆட வெடுத்த விரித்ததாமரை குவித்ததாளோன் பேரருள் விளையாச் சிரிலர் போலத்துலங்கிய அமுதம் கலங்கிய தென்ன இதழ் குவித்துப் பணித்த குதலையும் தெரியாது, முருந்து நிரைத்த திருந்து பற்ருேன்ருது, தெய்வங் கொள்ளார் திணிமணமென்ன விரிதருகூழையும் திருமுடி கூடாது, துணை மீன் காட்சியின் விளைகரு வென்னப்பார்வையிற் றெழில்கள் கூர்விழி

கொள்ளாது, மறு புலத்தடுபகை வேந்தடக்கியதென வடுத்தெழுகொலை முலை பொடித்தனவன்றே, செம்மகண்மாலை இம்முறை யென்றால் வழுத்த லும் வருதலும் தவிர்தி மொழிக்குறி கூடாச் செவ்வேலோயே"(கல்லாடம்) என்ற இலக்கணங்களும் உடைத்தான ஓர் மங்கையர்க்கரசியார் வந்தார். அவர் இன்ன வருணத்தைச்சார்ந்தார் என்பது எந்த வகையானும் எனக்குப் புலப்படவில்லை. அவ் அம்மையாரைப் பார்த்தமாத்திரம் என்னுடைய சரீ ராதிசக்திகள் ஒருங்கும் ஒன்றுமே ஓரணுவளவுகூட அசைதலின்றி சித்திர மாகவமைந்த ஓர் அற்புதப்பாவை அத்தகையனவாய் அவர் முகம் நோக்கி ஓர் நிலையாக நின்று கொண்டன. இமைகொட்டாமல் இக்காலம் சிறு குழந்தைகளை மெஸ்மெரிஸம் பண்ணும் பூச்சாண்டிகளைப்போல் திறு திறு வென்று அவ் அம்மையாரின் அழகான வதனத்தின்கண் என்னுடைய பூரண நோக்கமாகிய கொடுந்தீயானது சிறிது பற்றவே காலைக்கதிரவன் கிரணங்களைக் கொண்டதாமரை மொக்கானது எப்படி மலருமோ அத்தகை யனவாய் அவ் அம்மையாரின் பவளம்போன்ற செவ்விய திருவாயாகிய மொக்கு ஒன்று மலரத் தொடங்கின.

1. அஃதாவது, என்னய்யா கடித்துத் தின்னுகிறதுபோல இப் படிப்பார்க்கிறே? இல்லையம்மா தனியாக இவ்வழியே எங்கு போகிறுயோ வென்று பார்க்கிறேன்.

2. ஓ! ஓ! அப்படியா அதற்காகவா இந்தப்பார்வை. நான் நமது நேருக்கு அதோ தெரிகிற வேம்படி ஐயனர் கோவிலுக்குப் போகிறேன் என்றனர். நானும், அவ் அம்மையாருடன் வடக்கு முகமாகத் திரும்பி நடக்கத் தொடங்கிவிட்டேன். காமுகத்தன்மை நிரம்பித்ததும்பும் அயோக் கியன் ஒருவனுக்கு அங்ஙனம் எத்துணைதூரம் இழிந்த குணங்களாகிய எண்ணங்கள் உண்டாகுமோ அவ்வெண்ணங்களைவிட எத்துணையோ பன் மடங்கு மிகுதியாக என்னுடைய நெஞ்சத்தும் உண்டாகிவிட்டன. "காமஞ் சாலா இளமையோள்வயின், ஏமஞ்சாலா விடும்பை யெய்தி, நன்மையும் தீமையும் என்றிருதிறத்தாற், றன்னொடும் அவளொடும் தருக்கியபுணர்த் துச், சொல்லெதிர் பெறுஅன் சொல்லியின்புறல், புல்லித்தோன்றும் கைக் கிளைக் குறிப்பே'என்னும் தொல்காப்பியச் சூத்திரக்கருத்துக்களும் என்னை வந்து சூழ்ந்து பிடித்துக் கொண்டன. இவ்வெண்ணங்கள் ஒருங்கையும் உள்ளிருத்திக்கொண்டு, ஆம். அம்மா! நானும் அங்குதான் வருகிறேன், என்றனன்.

3. ஆம். ஐயா! நீ நமது ஆலயத்து ஊருணிக்கு வடகரை மண்ட பத்து வடக்குத்தலைவைத்துத் தெக்குக் கானீட்டி கிழக்குமுகமாக எதோ ஒருகவலையாய்ப் படுத்துக்கொண்டிருந்தாய் அன்று? அப்பொழுது நான் உனக்கு முன்னதாகத்தானே வந்தேன். நீ என்னைத் தெரிந்துகொள்ள

வில்லைப்போலும்! ஆம். அம்மா அப்பொழுது அங்கு ஒருவருமே இல்லை. உன்னையும் நான் காணவில்லையே. நின் திருக்கூற்று அற்புதமாக வன்றோ காணப்படுகிறது. ஏ அம்மணீ! நீ யார்? உன் பெயர் என்ன? நீ இருக்கும் இடம் எது? நீ என்ன ஜாதி? நீ யொரு அநாதைப் பெண்போன்று காணப்படுகிறதே? உள்ளதையுள்ளவாறு உண்மையுரைப்பாயானால், நீயும், நானுங் கலந்து சில வார்த்தைகள் பேசிக்கொள்ள வேண்டியது அநேகம் இருக்கிறது. சுருங்கச் சொல்லுமிடத்து உன்னை எங்கள் ஊருக்கே இட்டுக்கொண்டு போய்விடுகிறேன். மிக்கச் சௌரியமாக இருக்கலாம்.

4. ஆ! அப்படியா? நான், நான்தான். இப்பாலை நிலமாக்கள் தங்களின் பெண் தெய்வங்களுக்கு எத்துணைப் பெயர்கள் சொல்லிக்கொள்கிறார்களோ அத்துணைப் பெயர்களுக்கும் உரியவள் நான்தான். நான் இருக்கும் இடம் இக்கல்வீடுதான். என்னுடைய ஜாதி பெண் ஜாதி தான். நான் அநாதைப் பெண் அன்று. இப்பாலை நிலமாக்கள் ஒவ்வொருவரும், ஒவ்வொரு ஜெந்துக்களுங்கூட என்னுடைய நாதிதான். இஃது, உண்மையினும் உண்மை. நான் உன்னை நாலைந்து வருடங்களுக்கு முன்னரே திருமண முடித்துக் கொண்டிருக்கிறேன். அஃது, உனக்கு ஞாபகமில்லையோ? நன்றாக நினைந்து உணர்ந்து பார் என்று, என்னுடைய அருமைக் கண்மணியாகிய, அவ் அங்கயற்கண் அம்மையார் திருவாய்மலர்ந்து, அவ், வேம்படி ஐயனார் ஆலயம் புகுந்தனள். அவ்வளவு தான். ஏ அம்மா! ஏ கண்மணி! ஏ ஈஸ்வரி; அம்மையைக் காணவில்லை. ஆங்கெங்குந்தேடவே, ஆங்கொரு பக்கத்து உடைத்தான பெண்வடிவமான கற்சிலையில் அவ், அம்மையார் கட்டிக்கொண்டிருந்த சிற்றாடை சுற்றப்பட்டிருந்தது. அதனைக்காணவே, அவ் அம்மையார் அவ் ஆலயத்துள்ள ஈஸ்வரி என்பது மிகத் தெளிவாகப் புலப்பட்டது. அங்ஙனம் மிக நன்றாகப் புலப்படவே என்னுடைய இயற்கைக் குணகுணங்கள் ஒருங்கும் மாறுபட்டு விட்டன. அங்ஙனம் மாறுபட்டுக்கொள்ளவே, "இன்னமுது, கனி, பாகு, கற்கண்டு, சீனி, தேன் எனருசித்திடவலியவந்து, இன்பங்கொடுத்த நினை! என்னேரம் நின் அன்பர் இடையறாது, உருகிநாடி, உன்னிய கருத்து அவிழ, உரை குழறி, உடலெங்கும் ஓய்ந்து, அயர்ந்து, அவசமாகி உணர்வரிய பேரின்ப" மயமாகிப் பின்னர் தெளிந்து, ஏ என் அம்மே! ஏ ஈஸ்வரீ! ஏ என் கண்மணீ! ஏ பச்சை நிறத்தி! பவளக்கொடியிடைச்சி! ஏ கச்சிற்கடங்காக் கனதனத்தி! ஏபராசக்தி! ஏ கருணாகரீ! ஏ இப்பாலைத்திணைப் பேச்சி! ஏ இப்பெரும்புவனத் தாய்ச்சி! ஏ என் ஆச்சி! ஏ நீலி! ஏ பெண்மணீ! ஏனோ இங்ஙனம் மறைந்து கொண்டாய்? என்னைத் திருமணம் முடித்துக் கொண்டிருக்கிறேன் என்றாயே? அஃது, உண்மை அன்றா? நின் ஆவற்கியைந்த நான் ஒரு ஆண்மகன் அன்றா? நின்காதற்கியைந்த நான் ஒரு கணவன் அன்றா? நீ! போகிக்கத் தகுந்த நானொரு யோக்கியன் அன்றா?

ஏ காமக் கொடிபடர்ந்த கண்ணம்மோ? இத்துணை யாண்டுகளாக என்னை மறந்து விட்டனையே? இன்றைக்கும் என்னைத் தனியாகத் தேங்கவிட்டனையே? இஃதென்னை நினக்கு அழகாகுமா? நினக்குரிய உத்தம குணமாகுமா? நின்னுடைய பால்ய உருவத்தைக்காட்டி, அடா என்கண்மணீ! என்றொரு அமுதவார்த்தையைக் கூட்டி, நின்குரும்பைத் தனமார்போடு இறுகக்கட்டியணைத்தும் கடித்து என் வதனத்தில் ஓர் முத்தத்தைப் பூட்டி, மரை மலர் போன்ற நின் திருவடிகளை என்சிரத்திலே சூட்டி, என்னுடைய அஞ்ஞானமாகிய தேகத்திலே நின் சூலாயுதத்தை நாட்டி என்னுடைய பாசப்படலமொருங்கையும் கிழித்து ஓட்டி, நானாகிய என்னையும் பலியாக ஏற்றுக்கொள்ளமாட்டாயோ? என் முன்வரமாட்டாயோ? தோற்றமாட்டாயோ? ஏ என் கட்டிக்கரும்பே? ஏ என் சித்துச் சிறுக்கி! சிங்காரச் செல்வி ! இச்செகம் அளந்தோன் தங்காய்! அடீ என் நங்காய்! ஏ மங்காய்! ஏ கோமேதகமே, குளிர்ந்த வைடூரியமே, ஏ மாமேருவே ! நீலமலையே! ஏ மனோன்மணீ அம்மே! "திருவே, என் செல்வமே, தேனே, வானோர் செழுஞ்சுடரே, செழுஞ்சுடரின் சோதிமிக்க உருவே, என் உறவே, என் உள்ளமே, உள்ளத்தின் உள்ளே நின்றே கருவே, என்சற்பகமே, கண்ணே, கண்ணிற் கருமணியே, மணியாடுபாவாய்!" என்று, "பாடினேன். ஆடினேன். பாடியாடி விரும்பியே கூவினேன். அலறினேன். உலறினேன். மெய்சிலிர்த்து இருகை கூப்பி விண்மாரியென என் இருகண்மாரி பெய்யவே,ஏசற்றயர்ந்தேன். இயான் இரும்பு நேர், நெஞ்சகக்கள்வன் ஆனாலும் உனை இடைவிடு நின்றதுண்டோ, என்று நீ அன்று நான் உன்னடிமையல்லவோ, யாதேனும் அறியாவெறும், துரும்பனேன் என்னினும் கைவிடுதல் நீதியோ'' என்று, சிறிது அயர்ந்து, தெளிந்து அங்ஙனம், சிறிது விழித்து நோக்கவே, ஏழுவயதுள்ள ஒரு சிறு பெண்குழந்தையும், ஒரு சிறு கருப்பு நாயும் காணப்பெற்றேன்.காணப்பெறவே ஏஅம்மணீ!என்று, அவள் தன்இரண்டு திருவடிகளையும் பற்றிக் கட்டிப்பிடித்தேன்.கட்டிப் பிடித்தால் கைக்கு அகப்படுவது போற்றுனிருக்கிறது. அவள் தன் அழகிய திருமேனி விலகித்தான் இரண்டடி தூரத்தே நிற்கிறது. அடி ! என் கண்மணீ! ஏ அம்மணீ! இஃதென்னடீ மாயவேலை செய்கிறாய் என்று சிறிது கூர்ந்து நோக்கினேன். நோக்கவே அவள் தன் சரீரத்திற் குரிய நிழலைக்காணவில்லை. இஃதென்னை அற்புதம்! அற்புதம்! என்று வியந்தேன் ஏ என் கண்மணீ என்று நயந்தேன். கட்டியணைத்தொரு முத்தமிட்டுப் பயந்தேன் நான் பெற்ற பேறன்றோ பேறு என்று உயர்ந்தேன். ஏ அம்மா! என்னடி உன் நிழலைக் காணவில்லையே அதன் அற்புதம் என்னவென்று கேட்டேன். கேட்கவே என்னுடைய ஆத்மநாயகி திருவாய் மலர்ந்தருளத் தொடங்கினாள். அஃதாவது, நீ! ஒரு சிறுவனாக இருந்தாலும், சிலநூன் முறை தெரிந்து, சாலத் தெளிந்த சீலத்துயர்ந்து, இச்செந்தமிழ் ஞாலத்தொழுகும் ஆண்மகன். அன்றோ? இம்மாதிரி கோவென்றரற்றி பலவாறு புலம்பிததேம்பி இத்தரை

யில் வீழ்ந்து. புரண்டு கிடந்தழுவான் நீ! என் ஓர் குழந்தையா? அடா! என்கண்மணீ! நீ! என்னைக் காண்பான்புக்கு, நீ அனுபவித்த கட்டங்கண்டுட்கி, மிகவும் நின்மீது அன்புவைக்கின்றேன். நின்னைச்சால மெச்சுகிறேன். இதுகாறும், என்னை, மனிதவர்க்கமாகப் பிறந்தார் எவரும், நின்போன்று பிரத்திபக்கமாகக் கண்டாரில்லை. நீ எந்த ஞான்றும் வாழ்வாயாக. நோயற்றவாழ்வும், குறைவற்ற செல்வமும் பெற்றுய்வாயாக. என்னையும், என்னுடைய சரீரத்தையும் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுந்தன்மையில் மிகுதியும், பேராவலுடையவனாகக் காணப்படுகிறாய். நான், மனிதவர்க்கத்தைச்சார்ந்த சாதாரணமான ஓர் பெண் அல்ல. இத்திரிலோகங்களும் கொண்டாடித்துதிக்கப் பெற்றவள். எல்லாம் வல்லவள். எங்கும் இருப்பவள். பராசக்தி என்ற பெயர்என்னுடையது தான். நான் அழிவற்றவன் காணப்படுகிற எழுவகைத் தோற்றங்களும் என்னுடைய குழந்தைகள்தான். என்னுடைய வம்சந்தான். காணப்படுகிறயாவும் என்மயந்தான். எல்லாம்வல்ல நம்முடைய இறைவனுக்குச் “சேனை வெங்கொலைப் பேய்க்கணம்” என்பது, நினக்கென்னை ஞாபகம் இல்லையோ? அப்பேய்க்கணங்களுள், பெண் பேய்க்கணங்கள் ஒருங்குக்கும் நான் ஒரு தலைமையான பேயுருப் பெற்றவளேயாம். என்னுடைய இயற்கையுருவத்தை நீ காணுவாயானால், காரைக்காலம்மையின் கணவன் போன்றாய் விடுவாய் என்றெண்ணியே நினக்கு நான் அவ்வுருவத்தைக் காட்டினேன் இல்லை. மேலும், ஆதியிலே நான் நோற்ற பேருருந்தவத்தால், என்னுடையதூலமானது, சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய மூன்று சோதிகளும் ஒன்றுகூடி எழுந்த பிரம்ம ஞானக்கினியினாலே மிக நன்றாகவேவப்பட்டுச் சூக்குமத்திலும் சூக்குமமாய்ப், பரமாணுக்களாகப் பிரிந்துகூடும் சக்திவாய்ந்தனவாய், எஞ்ஞான்றும் பரவெளியிலே உலாவித்திரிந்து கொண்டிருக்கும். எந்தப்பூதங்களோடும் சம்பந்தப்பட்டும் படாமலுமே நிற்கும். எக்காரணங்கள் கொண்டும் அழிவு பெறமாட்டாது. சோதிவடிவத்திற்கு நிழல் உள்ளனவாக நீ! எங்கேனும், கேள்விப்பட்டதாவது உண்டா? வெய்யிலேனும், ஒரு வெளிச்சமேனும் நின்கைக்கு அகப்படுமோ?கதிரவனைப் படத்திற்பிடிக்க எவராலும் முடியுமா? மனோசக்திக்கெனின், யாவும் முடியும். கதிரவனுடைய கிரணங்கள் என்னுடைடய தூலாணுக்களையும் ஊடுருவிச்செல்லுகின்றனவாகலின் என்னுடைய் தூலத்துக்கு நிழல் இல்லை. நன்றாகவுணர்ந்துகொள். வனையவொரு எவராலும் என்னைக்கட்டியணைத்துக் கொள்ளமுடியாது. நான் நினைத்தால் ஒழிய பிறருக்கு என்னுடைய இன்பம் கிடைக்கமாட்டாது. என்னுடன் நிற்கும் இக்கருப்புநாய்தான்,எனக்கு முன்னோடியாகிய கருப்பனின் அறிகுறியாம், அவனும், பேய்க் கூட்டத்தைச் சேர்ந்தவன்தான். ஆ என் அரசே! இன்னும், நீ! ஏதேனும் என்னிடம் கேள்க்க வேண்டுமாயின் கேட்டுக்கொள், நினக்கொரு அருமைக்காதலியாயும், முதன்மந்திரியாயும் நின்னை

விட்டுப்பிரியாமல் நின் உடன் நின்று, நினக்கு ஆவனமுடித்துத்தந்து நின்னையும் காப்பேன் ஆருக.

5. ஆ! என் அம்மணீ! ஏ பரமேஸ்வரி! இஃது என்னே? நின் கூற்று வியத்தற்குரிய தாயன்றோ காணப்படுகிறது? "பேய்க்கணங் கட்குத்தலைவி" என்றாயே, அஃதென்னை? அவ்வார்த்தையைக் கேட்டு ஏ சர்வலோக நாயகி! என் மனமானது மிகவும் புண்படுகிறது. "பேய்" என்று சொல் அளவையிலேயே கவனிக்குமிடத்து அஃது ஒரு பயங்கரத்தையும், அதிசயத்தையும், கேவலத்தையும் நன்றாக உணர்த்துகிறதன்றோ? அறிவிலார் ஒவ்வொருவராலும் எள்ளறகுரிய வோர் வார்த்தையன்றோ? ஏ அம்மணீ! நீயதினும், பேய்க்கணங்கட்குத்தலைவி என்றன்றோ செப்பிவிட்டாய்! ஆ! ஆ! மிக நன்றாய் இருக்கிறது. அப்பேய்க்கணங்கட்குத் தலைவி யென்பதும் உண்மைதானோ? அடடா! நீ என்னே புலாலுண்ணியா? சண்டாளியா? கொலைகாரணியா? பேயா? நின் வதனத்தைக்காணுங்கால், நீயொருசைவத்திருக்குழந்தையைப் போன்று, நின்மீது பெருங்காதலுற்ற நானொரு பித்தனுகையால் என்னுடைய கண்ணுக்கு மட்டுந்தான் தோற்றுகிறதோ? சைவத்திருவருள் ஏ கண்மணீ! நின் வதனத்தில் மிக நன்றாகப்பழுத்துப், பேரின்பச் செந்தேனாகக் கனிந்து, மிக்க அன்பெனும், தக்க நன்னெறிபுகுந்து, பக்குவத்தொருகணும் திறந்து, நின்திருவடிகண்டு நக்குவார் சக்திக்கு ஏற்றவாறு சொட்டுச் சொட்டாகச் சொட்டுகிறதே? பேய் என்பதொன்று இல்லவே இல்லை யெனவும் பெரும்பான்மையோர் மிக நன்றாகச்சாதிக்கவும் செய்கிறார்களே! நின் பேய்க்கணத்தவர்க்குச் செய்யும் பூசைகளையும், பலிகளையும் கண்டித்து வெறுக்கிறார்களே? அதினும், நமது, செந்தமிழ்த்தேயத்து "காரைச்சிவனடியார் திருக்கூட்டத்தார்" நின்வருக்கத்தாரையும், நின்வருக்கத்தாரை வணங்கும், மாக்களையும், கண்டமட்டினும் திட்டித்தூஷிக்கிறார்களே? அளவுக்கு மிகுதியாக ஆரவாரிக்கிறார்களே, புலாலுண்பவர்களாகிய நினது அருமை புதல்வர்களோடு பெரும் போர்புரிகிறார்களே, அந்தரத்திருந்து அவதரித்தார்கள் போன்று துள்ளிக்குனிக்கிறார்களே, வேதாகம புராணே திகாசங்களும், உபநிஷத்துக்களும் நன்றாக வுணர்ந்தார்கள் போன்றன்றோ கொம்பியடிக்கிறார்கள், பாவமாகிய வுருவத்தையும், புண்ணியமாகிய வுருவத்தையும், நேரிற் கண்ணுறக்கண்டு கொண்டார்கள் போன்றன்றோ கைகொட்டுகிறார்கள், ஐயோ! பேய்மக்கள் உணவுக்கும் ஓர் தீங்கன்றோ நேரிட்டுவிட்டது, எத்துணை பேய்கட்கு ஆடு, கோழி, பன்றி முதலியன கொடுக்கப்படாமற் போய் விட்டன, ஏ என் அம்மணீ! இவைகள் எல்லாம் நியாயந்தானோ, நினக்கும் சம்மதந்தானோ, என்மனமானது மிகவும் வருந்துகிறது, ஏ என் அம்மணீ! நீ சைவம் என்பதும், அசைவம் என்பது எனக்குப் புலப்படவில்லை. அது விஷயங்களைப் பற்றிமிகத் வெளிவாக நன்கு விளங்குமாறு சிறிது விரித்துரைத்து முடிப்பாய் ஆருக.

ஆம் எம்பி! என் அருமைக்கண்மணி! நின் கூற்றுக்கள் ஒருங்கும் எனக்கு மிகப் பேரானந்தமாகவே இருக்கின்றன. நான் பேய்க் கணங்கட்குத் தலைவியாய் இருத்தல் நோக்கியும், என் வர்க்கத்தார்க்கு நடைபெறும் ஆடு; கோழி, பன்றி முதலிய பலியீடுகளை மறுக்கும் காரைச் சிவனடியார்த்திருக் கூட்டத்தின் தன்மை நோக்கியும் பெரிதும் வருந்துகின்றாய். மேலும், என்னைச் சைவமோ, அசைவமோ என்றும் சந்தேகிக்கின்றாய். ஒவ்வொன்றையும் மிகச்செவ்வனே நன்கு தெளிய விளங்கப்படுத்துகிறேன். நன்றாகக் கேள். அஃதாவது, நீ சைவனோ அசைவனோ? அம்மா! நான் உத்தமமான அசல் பூர்வீகச் சைவன். சைவத்துக்கும், அசைவத்துக்கும், அச்சைவமும் அசைவமும், இரண்டறக்கலந்து பற்றிக்கொண்டிருக்கும் பொருள்களுக்கும் முதலாயும், முதற்காரணனாயும் இருப்பவன் "சிவன்" ஈஸ்வரன் ஒருவன் தானே அன்றோ? அப்பரசிவன் சைவமா அசைவமா அஃதுனக்கு நன்றாகத் தெரியுமா?ஒருவாறு, நின்கருத்துப்போன்று, சைவனாகவே வைத்துக்கொள்வோமாயின், கண்ணப்பன் கொடுக்கும் புலாலுணவுக்கு அளவு கடந்த பேராவல் கொண்டு இரத்தக்கண்ணீரும் வடித்துப் பன்றி மான் மரை முயன் மாமிசாதிகளையும், கேளாமற் கேட்டு வாங்கித்தின்று, அவன் தன் எச்சில் நீரையும் பருகினான் அன்றோ? சிறுத்தொண்டனையும், அவன் மனைவியையும் தங்களின் அருமைப் புதல்வனைத் தங்களின் மனமாற நறுக்கச் செய்தான் அன்றோ? சைவம் என்பதன் பொருள் என்னை? "யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி யாங்கே மாதொருபாகனார் தாம் வருவர்" என்று ஓலமிடும் சிவஞான சித்தியார் சைவநூல் அன்றோ? நாங்களாக நின்று ஏற்றுக்கொள்ளும் பலிகளொருங்குக்கும் அவ் ஈஸ்வரன் முதற்காரணன் அன்றோ? அச்சிவன் ஏற்றுக்கொண்டதன்றோ? நின்னுடைய அறியாத்தன்மையான இவ்வியவகாரத்துக்கு மட்டும் நாங்கள் அச்சிவன் அன்றோ? நின்னுடைய அறிவும், படிப்பும், உலக்கைக் கொழுந்து போன்று மிக நன்றாயிருக்கிறது. எங்காவது 'நின் போன்று ஒருசைவன் "சிரமணிமாலை" அணிந்து கொண்டிருக்கிறானா? என்புமாலை பூண்டுகொண்டிருக்கிறானா? விஷத்தை உண்டு களித்தானா? புலித்தோலை யார்த்துக் கொண்டானா? யானைத்தோலைப் போர்த்துக்கொண்டானா? "காடுடையச் சுடலைப் பொடிபூசி' கொண்டானா? சுடலையாடி என்னும் பெயர் ஏற்றுக்கொண்டானா? பிரமனுடைய மண்டை யோட்டில் பிச்சை யேற்றுக்கொண்டானா? சர்ப்பாபரணத்தை முடித்துக்கொண்டானா? தந்தைக்கு முன்னே மகனைப் பெற்றானா? ஆறுமுகத்தை யடுத்துப் பெற்றானா? மலைமகளை மணந்து கொண்டானா? மேனி வெங்கனலாயும், ஆடுமிடம் உலகெலாம் வெந்தொழிந்த புறங்காடாயும், சேனை வெங்கொலைப் பேய்க் கணங்களாயும் அடையப்பெற்றானா? அக்கினி, மழு, மான் முத்தலைச்சூலம் ஆகிய இவைகளை ஏந்தி நின்றானா? பன்றிக் கோட்டையும், ஆமை யோட்

டையும் அணிந்து நின்றானா? பேய்க்கணங்களுக்கு தலைவனாக நின்று சுடு காட்டிலே நடனம்புரிந்தானா? வேம்பிணங்களைப் பிடுங்கித் தின்றானா? ஆன்மகோடிகளை யெல்லாம் சங்கரித்து நின்றானா? சங்காரகர்த்தாவென்று நின் சைவசமய நூற்களொருங்கும் ஓலமிடுவதென்கொல் பொய்மையோ? முதற்காரணமாயும், துணைக்காரணமாயும், நிமித்த காரணமாயும் அம்முக் காரணங்களுக்கு அதீதமாயும், பரிபூரணமாயும் விளங்கும் ஒருவன் யாவன்? பலி கொண்டவர்யார்? பலியிட்டவர்யார்? பலியாக நின்ற பொருள் யார்? நான்கு கரங்களும், எட்டுத் தோள்களும், ஐந்தாறு சிரங்களும், மூன்றுகண் களும் உடையனா? இளம்பிறையையும் கங்கையையும் தலையிற் சுமந்து கொண்டிருக்கிறானா? நின்னுடைய சைவத்துக்கும், அச்சிவனுடைய சைவத் துக்கும் இன்னும் எத்துணையோ அளவு சங்கையற்ற வேறுபாடுகள் அன்றோ காணப்படுகிறது. அக்காலம் கம்பன் "வைணவன் சம்பிரதாயம் மயிர்போன்றிருக்கிறது" என்றான். இக்காலம் கவனிக்குமிடத்து "சைவன் சம்பிரதாயம் மயிர் போன்றிருக்கிறது" என்று தான் கூறவேண்டும். அடடா! இஃதென்னை? என்னை நான், பேய்க்கணங்களுக்குத் தலைவியென்று சொல்லிக்கொண்டதற்கு ஏதோ சிறிது மனவருத்தம் அடைந்தாய்? நின் னுடைய பரசிவப் பெருமானே, எங்கள் பேய்க்கணங்களுக்குத் தலைவனாக அன்று, இன்று, என்றும் நின்று, ஆடிப்பாடிக், குனித்துக் கூத்துக்களா டிக் களித்து எங்களுடன் பல பலிகளையும் ஏற்றுக் கொண்டாடித் திரிகி றான் என்பது எத்துணையோ தெரிந்த நின் உணர்ச்சியில் இன்றோ? அதற்காக நின் சைவர்கள் ஒருங்கும் எங்கிருந்து வருந்தப் போகிறீர்கள்? பேயே இஃதென உணர்ந்துகொள்ள சக்தியற்ற ஓர் கயவன், பேயென்ப தொன்று இல்லவே இல்லையெனச்சாதித்தல் ஓர் அற்புதமா? அறிவிலார் கூற்றும் ஓர் சாத்திரமாமா?"பாணிகள்கொட்டும் பேய்கள்பிதற்றும் பாடலை மெச்சுககதிர்வேலா" என்ற, அருணகிரிநாதன் போன்ற பெரியார்கட் கன்றோ பேயின் இலக்கணம் நன்றாகத் தெரியும். 'தலையாலே பலி தேறுந் தலைவனை" என்றும், "பேய்வாழ் காட்டகத்தாடும் பிரான்தனை" என்றும் திருநாவுக்கரசர் கூறியதூஉம் எவன்கொற் பொய்மைதானோ? பேய்கள் என்பதும், பேய்க்கணங்கள் வாழ்ந்து கொண்டிருக்கும் காட் டகத்தே ஆடும்பெருமான் என்பதும், விளங்காமற்றான் பாடி விட்ட னரோ? ஆ! ஆ! பேஸ், மிக நன்றாயிருக்கிறது. பேயே இல்லை யெனச்சா திக்கும் ஒரு பேயனுடைய பேய்த்தன்மையானது கவனிக்குமிடத்து பேய்த்தன்மையினும் பேய்த்தன்மை யாகவன்றோ காணப்படுகிறது. சைவன் என்பதற்கு சிவன் என்பதன்றோ பொருள். கைலாயகிரியில் எழுந்தருளி யிருக்கும் நமது பரசிவப்பெருமான் ஒருவனை இன்றி இஞ்ஞாலத்திலுள்ள எவருமே சைவர் இலர் என்பதை நீ நன்றாகவுணர். பிறப்பு இறப்புக் குரித்தாய இப்புன்புலால் யாக்கையுடன் கூடிய ஒவ்வொரு பிராணிகளும்

அசைவமே என்பதை நீ நன்றாகத்தெளி. நான் இவ்வளவுதூரம் சொல்லி வந்ததில் நின்றும் சைவமா அசைவமா என்ற கேள்விக்குரிய விடையை நன்றாகத் தெரிந்துகொள். பேய்க்கணங்களையும், அவைகளுக்குத் தலைவியாகிய என்னையும் இல்லையெனச் சொல்லி வெறுத்தெள்ளி இகழும் ஒருசண்டாளன் எல்லாம்வல்ல முழுமுதற் கடவுளாகிய ஈஸ்வரனையும், உமாதேவியையும் வெறுத்தெள்ளி இல்லையெனச் சாதிக்கும் ஒரு கயவன் ஆம் என்று நன்றாகவுணர். மேலும், "சீவனர் சிவனையறிந்தபின், சீவனர் சிவனையிட்டிருப்பரே" என்றும், "சித்தமல மறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட அத்தனெனக்கருளியவாறுர்பெறுவாரச்சோவே" என்றும் திருவாய் மலர்ந்தருளிய திருமூலர், மணிவாசகப் பெருமான், திருநாளைப்போவார், கண்ணப்பர், காரைக்கால் அம்மையார் முதலிய சிவனடியார்களும், சைவர்களாயிருக்கும் சம்பிரதாயத்தை நன்றாகத்தெளிந்து பார். மேலும், பிரமத்தை நன்றாகத் தெளிந்துணர்ந்து தெரிந்தவன் பிராமணன் என்பதூஉம், சிவனை நன்றாகத் தெளிந்துணர்ந்து தெரிந்து அவனடிக்கு அன்பு பூண்டொழுகி, "ஐயினுன் மிடறடைப்புண்டு; ஆக்கைவிட்டு ஆவிபார் போவதுமே அகத்தார் கூடி, மையினுற் கண்ணெழுதி; மாலைசூட்டி; மயானத்திலிடுவதன்முன் மதியஞ்சூடும், ஐயனுர்க்காளாகி; அன்புமிக்கு; அகங்குழைந்து; மெய்யரும்பியடிகள் பாதம், கையினுற் றெழும் அடியார் நெஞ்சினுள்ளே கன்றுப்பூர் நடுதறியைக்காணலாமே" என்றதிருவாக்கிற்கிணங்கி "அவனேதானே ஆகிய அந்நெறி, ஏகனுகி இறைபணி நிற்க மலமாயை தன்னெடுவல்வினை இன்றே" என்பதாய் சிவனேதானுகி நிற்பான் ஒருவனுக்குத்தான் சைவன் என்பதூஉம் இக்காலம், எங்கோ ஓடியொழிந்து மறைந்து கொண்டன. இக்காலம், கொடிய விடம்போன்ற அதர்ம சண்டாளர்களுக்கும், மாபாதகர்களுக்குமே சைவர்கள் என்றும், பிராமணர்கள் என்றும் பெயரிட்டு அழைக்கப்படுகின்றன. மேலும், இச்சண்டாளர்கள் செய்யுங் கொடுமைகளைப் பற்றி ஒரு சிறிதேனும் சிந்தித்திருக்கின்றாயா? ஒன்றைச் சொல்லுகிறேன்கேள். அஃதாவது, ஒரு பெண்ணிற்குக் குடம்போன்ற இரண்டு முலைகள் காணப்படுகின்றதே அவைகள் எதுக்காக? அவளிடம் பிறக்கும் குழந்தைகள் பால் குடிப்பதற்காக அவைகளில் ஈஸ்வரனுல் பால் நிறைத்து வைக்கப் பட்டிருக்கிறது. அவள்தன் குழந்தையானது பசியோடு அம்முலைக்காம்பில் தன் திருவாய் மடுத்து உண்ணப்புகுந்து நன்றாகச் சுவைத்து உறுஞ்சி அப்பாற்சுவை கண்டு ஆநந்தமாக ஓரைந்தாறு சொட்டுக்கள் அப்பசிப்பிணித்தீர்ப்பான் பொருட்டு உட்சென்ற தருணம் நோக்கி திடீரென்று அக்குழந்தையைப்பிடுங்கி அவள்தன் கழுத்திலே கட்டி பின்பக்கத்திலே தூங்க விட்டுவிட்டு அவள் தன் முலையினின்று எவரேனும் பால் கறப்பாருண்டா? அப்பாலினைக் கடவுளுக்கு அபிஷேகஞ் செய்வாருண்டா? அப்பாலினை மோர் தயிர் வெண்ணை நெய்யாக்குவாருண்டா? வற்றக்காய்ச்சிப் பருகுவாருண்டா

ஒட்டிக்கிரட்டி நீர் கூட்டி விலைக்கு விற்பாருண்டா? எந்தச் சிவனடியார் களுக்காவது, சைவர்களுக்காவது, பிராமணர்களுக்காவது, சீனிகற்கண்டு பொடித்துப் போட்டுக்கொடுப்பாருண்டா? பின்னர் அக்குழந்தைக்கு வடித் தகஞ்சியை ஊட்டுவாருண்டா? அடடா இஃதென்ன கொடுமை! ஓர் ஆவின் கன்றுக்குமட்டும் இக்கொடூரமான செய்கைதகுமா? அஃதென்னை நியாயமா குமா? அதன் கன்றுக்கள் பால் குடிப்பதற்காக அம்மடுக்கள் ஈஸ்வர சிருஷ்டியிலமைக்கப் பட்டிருக்கின்றனவா? மனிதவர்க்கத்தார் பாலும், மோரும் வெண்ணெயும், நெய்யும் பருகுவதற்காகப் படைக்கப்பட்டிருக் கின்றனவா? நமது, செந்தமிழ்த்தேயத்து, இக்கொடுந்தொழிற்கு முதற் காரணராய் நிற்போர் போலிச்சிவனடியார்களும், போலிச்சைவர்களும், போலிப்பிராமணர்களுமே ஆம் அன்றூ? ஓர் ஆவின் கன்றுக்கு மனிதர் செய்யும் வஞ்சம் பொருந்திய அக்கொடூரச்செய்கையினு , வேறொருகொ டூரச்செய்கை ஏதேனும் ஒன்றுளதாக இஞ்ஞாலத்தில் எவரேனும் ஒருவர் விரன்மடக்கக்கூடுமோ? ஐயோ! இஃதென்ன பாமரமனிதரின் அறியாமை! இன்னும் இவர்களுக்குப் பலியாகும் தாவரவர்க்கத்தின் பாடு நின்போல் வார்க்குச் சொல்லவும் வேண்டுமோ? இந்த அதர்ம சண்டாளர்கள் எதனை யுண்டாலும் மலமாகவும், மூத்திரமாகவும் கழிகிறதென்பதை உணர்ந்தார் களில்லை. நமது தாயுமானூர் "கொல்லா விரதம் குவலயமெல்லா மோங்க எல்லார்க்கும் சொல்லுவதென் இச்சைபராபரமே" என்றூரென்று மாத்தி ரம் வாய்கொண்ட மட்டில் சொல்லவும், கைகொண்டமட்டில் வரையவும் புகுந்து கொண்டார்களே அன்றி, அடுத்தவர்க்காக அத்தாயுமான சுவாமி களே "பண்ணேன் உனக்கான பூசையொரு வடிவிலே பாவித்து இறைஞ்சி ஆங்கே பார்க்கின்றமலரோடும் நீயே இருத்தி, அப்பனிமலரெடுக்கமனமும் நண்ணேன்" என்று சிவபூசையைச் சார்ந்த சகலவிதப் பற்றையும், விட் டொழிந்து, துறவு பூண்டு, பாணியிற் பலியேற்றுண்டு, தரையிற்படுத்துறங் கித்திரிந்து திருவாய்மலர்ந்தருளிய பலபாக்களையும் அக்கயவர்கள் தங்க ளின் மனங்கொண்டமட்டில் சிந்தித்துச் சீர்தூக்கி ஆராய்ந்து உணருகின்றூர் களில்லை. அடா! மூதேவிச் சைவனே! புலாலுண்பவர்களுக்குப் புத்தி சொல்லவேண்டுமோயின் அன்போடு சாந்தமாக இனிய வார்த்தைகளாற் பதிற்சொல்லு "மாமிசத்தை யுண்பவர்கள் பறைச்சேரி நாயாய்ப்பிறப்பார் காண் அம்மானை" என்னுந் தொடக்கத்துச் சிலபாக்களும், வார்த்தை களும் சொல்லாமலும், எழுதாமலும் நிறுத்து. இஞ்ஞாலத்து மனிதவர்க்க மாகப் பிறந்தார் யாவரும் ஒரேசாதியார் என்பதை எவர்களுக்கும் நன்றூக வுணர்த்து. யாவரோடும் நன்றூக உண்டு உடுத்திக்கூடியாடி அளவளாவி பேதமறத் திருத்து. போலிச்சைவன், போலிப்பிராமணன் போலிச் சிவ னடியான் இவர்களுக்கு நமது பூர்வீக நியாயாநியாயங்களையும் கொள்வகை களையும் நன்றூக விளங்க எடுத்துக்கூறியவர்கள் உண்மையுணர்வான் பேரறி

வினையுறுத்து. காணப்படுகிற சர்வாண்டபிண்ட சராசரங்கள் ஒருங்குப் "சைவமே" என்பதை இஞ்ஞாலத்து மிக நன்றாகப்புணர்த்து, "ஓசை யொலி யெலாம் ஆனாய் நீ என்றபினர் பேச விரண்டுண்டோ பேய்ச்சைவா" என்ற வள்ளலார் வாக்கினையும், "ஒன்றாய் உலகனைத்தும் ஆனாய் நீயே" என்ற திருநாவுக்கரசர் திருவாக்கினையும் நன்றாகத் தெளிந்து நினைந்துபார் வஞ்ச நெஞ்சத்தை ஒழி. மேலும், காரைச்சிவனடியார் திருக்கூட்டத்தைப் பற்றியும் ஏதோ சில வார்த்தைகள் பேசினாய். அக்கூட்டத்தைப்பற்றியும் சிலவற்றை நன்கு விளங்க வுரைப்பாங்கேள். அஃதாவது, உண்மையில் சிவனடியார்களானால், அவர்கள் "பரந்துலகேழும் படைத்த பிரானை, இரந்துணி என்பர்கள் எற்றுக்கிரக்கும், நிரந்தரமாக நினையும் அடியார் இரந்துண்டு தன்கழல் எட்டச்செய்மாறே" "பிச்சையது ஏற்றான் பிரமன் தலை தன்னில், பிச்சையது ஏற்றான் பிரியாவறஞ் செய்ய, பிச்சையதேற்றான் பிரமன் சிரங்காட்டி, பிச்சையது ஏற்றான் பிரமன் பரமாகவே" என்ற திருமந்திரம் போன்று, பிரமன் தலையோட்டில் பலிபெற்றுண்பார்கள். அவர்களுக்குச் சடாமுடியுண்டு. அம்முடியில் கங்கையும், இளம்பிறையும் உண்டு. சர்பாபரணம் உண்டு. புலித்தோலாடையும், மதகரிபோர்வையும் போர்த்தும் உடுத்தும் திரிவார்கள். ஐந்துசிரம், நான்குகரம், எட்டுத்தோண் முதலிய, நமது பரசிவப்பெருமானுக்குரிய ஒவ்வோரங்கங்களும், ஒவ்வொரு குணகுணங்களும், அவர்களுக்கும் உண்டு. "ஆரேயறிவார் அடியின் பெருமையை, யாரேயறிவார் அங்கவர் நின்றது" என்ற அரியதிருமந்திரத்துக்கு இணங்க, எல்லாம்வல்ல நமது இறைவன் திருவடி இலக்கணங்களையும், பெருமைகளையும் நன்றாக உணர்ந்திருப்பார்கள். அவர்களுக்கு மூன்று கண்களும் உண்டு. இறப்பும் பிறப்பும் இல்லை. வழிதவறி இயலமாட்டார்கள். "தப்பிலாமன்றுள் தனி நடங்கண்டபின் ஒப்பிலி கோடியுகமிருந்தேனே" என்றபடி என்றைக்கும் இருப்பார்கள். எங்கும் பூரணமாக நிறைந்து விளங்குவார்கள். அவர்களுக்குமேற் பெரியார் இஞ்ஞாலத்தில் எவருமே இலர். ஈஸ்வரனுக்கு எத்தனைவிதச் சரீரங்கள் உண்டோ அத்தனை விதச் சரீரம் அவர்களுக்கும் உண்டு. இத்தகைய சிவனடியார்கள் "காரைச் சிவனடியார் திருக்கூட்டத்தில் ஒருவருமே இல்லை. இனிப் போலிச்சிவனடியார்களாவது கூடியிருக்கிறார்களோ எனின் அவர்கள் இலக்கணங்களையும் பற்றிச் சிறிது விளக்கத்தொடங்குவாம். அஃதாவது, "உத்தியோகத்தில் ஒரு மிக்கக் கொள்ளைகொண்டு, மெத்தவடிபட்டு விடுபட்டவரும்; மெத்தப் பெருந்தீன் கிடையாத பேரும்; வருந்தி தந்தை தாய் சொற்கேட்டுத் தங் குடியில் நாளும், பந்தித்தொழுகாத பையல்களும்; சந்ததமும் வேசையில் லங்காத்து விளங்காமற் கொண்டகடன், நேசமுடன் செல்லாமல் நின்றவரும்; வாசமலர்க் கொண்டை மனையாளும் குடிகேடியாயிருக்கக் கண்டு மயல் விட்டகன்ற கள்வர்களும்; ஓயாமல், யாவாரங்கொண்டு கட்டி நட்டம்

வரக்கண்டுணர்ந்து, சேயாய்த் திரிந்தலைந்த செவ்வியரும், யோசனையாய், இனிநாமிருந்தால் முழுமாசமென்று தெரிந்து மண்ணில் ஓடும் பொன்னுங் கருத்தில் ஒன்றாகக்கண்டவர்போல் தேடிப்பதினாறு தீக்கைபெற்று, நாடித் திருவாசகம் படித்துத் தேவாரம் ஓதிப், பெரிதானகாஷாயம்பெற்று; சரியாய் ஏறியொரு பலகையிற் சாய்ந்து; சுவர்க்கமுத்திப் பேறுதருவார் போற் பேச்சிட்டு; நூறு ஜெபமணிக் கைக்கொண்டு திருநீறு; பூசி கௌபீனம் ஆறேழெட்டுக்கட்டித்; தவறாமல் அந்தி சந்தி மூழ்கி யனுட்டானம் பண்ணியொளி; முந்திய கண்மூடி மொண மொணத்து; வந்து சிறியவரைப் பெரியோர் தெண்டனிட்டு; மெண்ணெயிறுக, உருத்திராக்க மணியிட்டு; முறையே இலக்கியச்சாமி, இலக்கணச்சாமி மலைச்சாமி, வாய்மௌனச்சாமி, பிலத்தபலகாரச்சாமி, சடைச்சாமி, சரச்சாமி, மாத்தின்னு மொட்டைத் தலைச்சாமி; முண்ட முழிச்சாமி, பட்டத்துச்சாமி, வற்றுப்பால்ச்சாமி, நெட்டைக்கருஞ்சாமி, செஞ்சாமி, கற்பமுறைச்சாமி, ஒடுக்கத்துச்சாமி, உபதேசச்சாமி, பெருஞ்சாமி, என்று பல பேராயிருந்து; மறுவில்லா நீண்டதலை வாழையிலை போட்டுக் குறுணியரிசிச் சோறுங் கொட்டி; கறியல், பொரியல், கறியில் பொடித்தூவல், கைத்தல், பெருகுதயிர்ப் பச்சடி, கிச்சடி, அவியல் கூட்டுக்கறித்தீயல், பருப்பு, மிளகுநீர், வைச்சகுழைகறி துவட்டல் எல்லாம் முச்சூடும் மொத்தையடித்து; முழுப்பூசுணைக்காய் போல் அத்தாள மென்றதற்குப் பேரிட்டு; மெத்தக் குரல்வளைக் கூத்தாடக் குலுக்கி நெளித்து; விறகு வயிறு வில்லேற்றம்போல், பெருமுரட்டுத்திண்டு போல், வாய் நிறையத்தின்ற கழுகுபோல், விண்டு, இறைமெடுத்த விரியன்போல், உண்டு பலகாரத்தம்பிரான், பட்சணம் நெய் நாழி, அலகாரத்தின்ன அவல் தூணி, குலைவாழைத் தீங்கனிகள் நூறு, தெங்கங்காய்பத்து, மாங்கனிகள் நூறு வகைக்கு வகை; முக்குறுணிமாப்புட்டு, அப்பம் எழுபது' அரியதரம் முந்நூறு; முப்பது வெண்டோசை மொக்கி மொக்கி, அப்பப்பா! அங்குத்தி பட்டினியும் அப்படியே! அத்தாளத்துக்கு இங்குத்தி பட்டினியும் இப்படியே! எங்குமிந்தக் கீர்த்திவிதம்போற் கிடையாதென்று; ஓதுவாய் மூர்த்திகள் கும்பிட்டு முழங்கவே, பார்த்து, செவிக்கடிகடித்து, திருகுதாளஞ் செய்து, எவர்க்கும் பொடிபோட்டு இளக்குஞ்சடையார்; ஓர் கூடைச் சடையார், ஒட்டொட்டுஞ் சடையார்; சோறுண்ணச் சடையார்; நடுவழியே, நேர்ந்து கும்பிட்டார்க்கொன்றும், நின்றுகும்பிட்டார்க் கொன்றும், வீழ்ந்து கும்பிட்டார்க்கொன்றும் விதவிதமாய், ஆசீர்வதித்து, அழகாய்ச் சிரமசைத்து, நேசத்திருக்கரங்கள் நின்றமைத்து; பாசமுடன், பார்ப்பார் சிறுக்கிகளைப் பக்குவமாய்க் கொண்டுவர, நேசரகசியங்கள் நின்று சொல்லி ஆசை கொள்ளப் பீதாம்பரங் கொடுத்துப் பெருகப் பொருள் கொடுத்து, ஓசைப்படாமனிதம் உள்ளிழுத்து, நாசமுறக் கொக்கோகம் கண்டு கோரப்புணர்ச்சி செய்து; முக்காலத்தான்றோர் முறைகெடுத்து;

தக்கதொரு வேடநெறி கெடுத்து; வீணரெனப் பேரேற்றுச், சீலச்-சிவனடியார் யாங்களெனச் செப்பமுறச் செப்பிக்; கெட்டவளின்-குட்டியழித்துக் கொலை பாதகங்கள் செய்து; கெட்ட-மணத்தாலுபர்ந்த மடபதிகளெல்லாம்; பணத்தாசைக்கானபயில்'' என்று அக்காலம், என்னுடைய திருவருட் சக்தி நிரம்பவாய்ந்த சரவணப் பெருமாள் கவிஞன் திருவாய்மலர்ந்தருளிய வாறு, போலிச்சிவனடியார்களேனும் ஒருவர்கூட அக்காரைச் சிவனடியார் திருக்கூட்டத்தில் இல்லை. மேலும், இக்காலம் சிவனைக்கண்டவர்யார்? அவன் தன் இரண்டு திருவடிகளையுங் கண்டார்யார்? அத்திருவடிகளை உடைமைகளாக பெற்ற ஒருவர்யார்? அத்தகைய சிலரேனுங் கூடிவாழ்கிற ஓர் கூட்டம் எங்கே உளது? அ! ஆ! இஃதென்ன கொடுமை! எத்துணை அறியாத் தன்மையும் மோசமும் பொருந்திய பெயராகக் காணப் படுகிறது அ! ஆ! இஃதென்ன அநீதி! இக்காலவன்மையானது எதனை யெல்லாம் புரட்டி வைக்கிறது. "சுகுண விலாஸ், சுந்தரவிலாஸ், கிருஷ்ணவிலாஸ், இராம விலாஸ், சரஸ்வதி விலாஸ், ஞான விலாஸ், பிரம்மஞான விலாஸ், ஆநந்த விலாஸ், மனோன்மணி விலாஸ், தபோவனம், கற்பக விலாஸ்'' என்று, ஒன்று மறியாத வெறுங்கட்டிடங்களுக்கு சில சிசுக்கள் பெயரிட்டுக் கொண்டது போன்றன்றோ இக்காரைச் சிவனடியார் திருக் கூட்டம் என்பதுங் காணப்படுகின்றது. மிக நன்றாயிருக்கிறது. "தட்டிக் கேள்ப் பார் இல்லையானல் தம்பி சண்டபிரசண்டம்'' என்பது போற்றான் காணப்படுகிறது. திருத்தக்காரரும், தலைவர்களும், நன்றாகப் பிரகாசிக்கிறார் கள். உணர்ச்சி மிக நன்றாயிருக்கிறது. நமது பாரதகண்டத்துடைத்தான ஒவ்வோர் சிவாலயங்களுக்கும், எத்துணையோ பொங்கல்கள், சர்க்கரைபொங் கல்கள் முதலிய ஒவ்வொரு நைவேத்தியங்களையும், தேங்காய் பழங்களையும், அபிஷேகாதிகளையும் சுவாமிதான் கேள்க்கிறதோ? நாங்கள் மாத்திரம் ஆடு, கோழிகளைக் கேள்க்கவில்லைப்போலும். அந்தச் சுவாமிகளெல்லாம் இவர்களுடன் நன்றாகப் பேசுகிறதுபோலும். நாங்கள் மாத்திரம் பேச வில்லைப் போலும். நான், ஐயனார், கருப்பன் முதலிய நாங்கள் இவர்களைக் காக்கும் வல்லரசுகள் என்பது இவர்களுக்கு விளங்கவில்லைப் போலும். நாங்கள் கிராம தேவதைகளென்பது இவர்கள் உணர்ந்தார்கள் இல்லைப் போலும். எத்துணையோ வியாதிகளையும், பலவித இடையூறுகளையும், கலகங்களையும், பஞ்சங்களையும், பேதமை, புல்லறிவாண்மை முதலிய சில துர்க்குணங்களையும் எங்களுடைய எல்லைக்குள் வந்து நுழைய விடாமல் பாதுகாத்து "முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறை யென்றுவைக்கப்படும்'' என்பதற்கு இணங்க நாங்கள் அன்றோ செங்கோலோச்சிவருகிறோம். இப்பாலைவனத்தை நாடு நகரங்களாகச் செய்தது நாங்கள் அன்றோ. எங்களுக்கு இறைப் பொருள்களாகக் கொடுக்கும் ஆடு கோழிப் பலிகளைத் தடுக்க இக்குழந்தைகளாலாகுமா. மேலும், புகை

வண்டிகளாலும், புகைக்கலங்களாலும், தந்திகளாலும், தபால்களாலும், ஒரு நூற்றியன்பத்தேழு கோடிமனிதர்கள் கூடிய இங்கிலவுல கொருங்கும் இணைத்துப் பிணைக்கப்பட்டு ஏகநகரமாகக் காணப்படும் இந்தக்காலத்துங் கூடவா; இக்குழந்தைகள் உலகந்தெரியாமல் விழித்தல் வேண்டும்? ஐயோ இஃதென்னபாவம்! நூற்றியன்பத்தேழு கோடிமனிதர்களில் இப்போலிச் சைவக்குழந்தைகள் பக்கம் எத்துணை மனிதர்களைக் கணக்கு வைக்கலாம். இந்நான்கைந்து நமதருமைக் குழந்தைகளிடுங் கூச்சல்கள் யாருக்குக் கேட்கும். இனி, நமது, பாரதகண்டத்துக் காணப்படுமெவ்வொரு மனிதரும், கவனிக்குமிடத்துத் தன்னையும் தன்னைச்சார்ந்த பிறரையும் வீடு வாயல் நிலம் பலம் முதலிய தன் சொத்துக்களையும், தன் நாடு நகரங்கள் முதலிய தன் தேயத்தையும், மதம், பாஷை சம்பந்தமான பலவிஷயங்களையும், நமது, காவலன் ஒருவன் காப்பான் என்ப தொன்றின்றி தாங்கள் தாங்களாகவே பேரறிவாண்மையோடும், புயபல பராக்கிரமத்தோடும், நடுவு நிலைகோடாத நியாயாநியாயங்களோடும் பாதுகாத்துக்கொள்ளல் வேண்டும் பேருருஞ் சத்தியுடையவர்களாய் அன்றோ இயங்கவேண்டுங் காலமாயிருக்கிறது. வருங்காலச் சப்பவங்களொருங்கையும் தம்முள்ளே மிகத்தெளிவாக நன்குணர்ந்த நாயனாரவர்கள், பான்முறை வகுத்து, நூன்முறை விரித்துச் செய்துள்ள,

1 "சிந்தைக்கினிய செவிக்கினிய வாய்க்கினிய
வந்த இருவினைக்கு மாமருந்து — முந்திய
நன்னெறி நாமறிய நாப்புலமை வள்ளுவனார்
பன்னிய இன்குறள் வெண்பா."

2 "வெள்ளி வியாழம் விளங்கிரவி வெண்டிங்கள்
பொள்ளென நீக்கும் புறவிருளைத் — தெள்ளிய
வள்ளுவர் இன்குறள் வெண்பா அகிலத்தோர்
உள்ளிருள் நீக்கும் ஒளி."

3 "அறனறிந்தேம், ஆன்ற பொருளறிந்தேம், இன்பின்
திறனறிந்தேம், வீடுதெளிந்தேம் — மறனெறிந்த
வாளார் நெடுமாற வள்ளுவனார் தம்வாயால்
கேளாதன வெல்லாம் கேட்டு."

4 "அறந்தகளி ஆன்ற பொருள்திரி இன்பு
சிறந்தநெய் செஞ்சொல் தீத்தண்டு — குறும்பாவா
வள்ளுவனார் ஏற்றினார் வையத்து வாழ்வார்கள்
உள்ளிருள் நீக்கும் விளக்கு."

5 "ஆரியமும் செந்தமிழும் ஆராய்ந்திதனினிது
சீரியதென் றொன்றைச் செப்பரிதால்—ஆரியம்
வேதம் உடைத்துத் தமிழ்திருவள் ளுவனார்
ஓது குறட்பா வுடைத்து."

என்பனவாக அக்காலச் சங்கப் பெரும் புலவர்களாலே போற்றிப் புகழ்ந்து கொண்டாடப் பெற்றத் தமிழ் வேதமாகிய திருக்குறள் நூலின் கண், "ஆற்றலுடையீர் அருந்தவம் புரிந்தால் வேற்றுடம்பாகுமா? தமதுடம்பாகுமா? உண்டியை உண்குவது உடலா? உயிரா? கண்டு இன்புறுவது கண்ணா? கருத்தா? என்பான் தொடக்கத்தாய்ந்து அருந்தவம் புரிதற்குச் செல்லும் ஒரு சாரார்க்குமட்டுமே, கடுகு, எண்ணெய், வெங்காயம் உப்பு, உளுந்து, உருளைக்கிழங்கு, முருங்கைக்காய், புலான் முதலியன உண்ணல் படாதென்பதும், ஏனையோர் உண்ணல் பூர்வீக வழக்கு நோக்கி எந்தமார்க்கத்தானும் இழுக்காகமாட்டாதென்பதும் பேரறிவுடையார் எவர்க்கும் தெற்றெனவிளங்கும் பொருட்டுத்தான் அறப்பாலிலே துறவறவியலில், அருளுடைமையைப் பற்றி விவகரித்ததின் பின்னர் புலான் மறுத்தலைப் பற்றி விவகரித்திருக்கின்றார். இஃதுணராதார் பலமார்க்கத்தானும் அக்குறட்பாக்களை எடுத்துக் கொண்டு இடர்ப்படுகின்றார்கள். இன்றேல், அதிகாரம் என்ற பெயரும், வரம்புங் கட்டுவானேன்? மேலும், அக்காலம்,

"கேட்ட வரம் அளிக்கும் கீர்த்தியுள்ள தெய்வங்காள்
கூட்டோடே எங்கே குடிபோனீர்? பாட்டாய் கேள்
செல்காலமெல்லாஞ் செலுத்தினோம் அல்காலம்
கல்லானோம், செம்பானோம் காண்."

என்று, இரட்டையர்கள் சொல்லியதுபோல் இக்காலம் நாங்கள் கல்லுகளாயும், செம்புகளாயும் இருக்கிறோம் என்று நினைத்துக் கொண்டார்கள் போலும். அங்ஙனமன்று, தனவைசியவகுப்பார் ஒருங்கும் வந்தேறிய குடிகளாயிருந்தாலுங்கூட எங்களுடைய எல்கைக்குள் கட்டுப்பட்டவர்களாகலின், பெரும்பான்மையோர் எங்களுக்கு வரி செலுத்துவோர்களாகலின், அவர்களைச் சார்ந்த சில குழந்தைகள் செய்யும் பிழைகளை, வேண்டுமென்றே,

"செறுத்தோறுடைப்பினும் செம்புனலோடு ஊடார்
மறுத்துஞ்சிறைசெய்வர் நீர்நசைஇவாழ்நர்
வெறுப்ப வெறுப்பச் செயினும் பொறுப்பரே
தாம் வேண்டிக்கொண்டார் தொடர்பு"

என்பதற்கு இணங்க நாங்கள் பொறுத்துக் கொண்டிருக்கிறோம். எங்களுக்கு இடும்பலிகளை நாங்கள் விட்டுவிடமாட்டோம். ஒருவர் உண்ணும் உண்டியில் மண் அள்ளிப் போடுவார் குழந்தைகளாகவே இருந்தாலும், யார்தான் பார்த்துக் கொண்டிருப்பார்கள். கற்களைப்போன்றும்,

செம்புகளைப்போன்றும், இருந்துகொள்ள எங்களுக்குந் தெரியாதது என்பதில்லை. நாங்கள் அப்படி ஒதுங்கிக் கொண்டால், எங்களுடைய அரசாட்சிக்குட்பட்ட இப்பாலைய நாடு நகரங்கள் சமுத்திரம் அழிந்து மீன்பிடித்தது போன்றாய் விடுமே என்று பரிந்துதான் இன்னேடும் இத்துணை தூரம் பேசுவதற்கு வெளியாகி ஒருப்பட்டோம். இன்னும் ஒழுங்கான செங்கோலும் செலுத்திவருகிறோம். மேலும், எங்களின் பூர்வீகக் குடிகளான கள்ளர், மறவர், அகம்படியார், வல்லம்பர், வலையர் முதலிய நாட்டார்களானுலோ எங்களுக்கு எட் பிளவு தீங் கிழைக்கவும் ஒருப்படமாட்டார்கள். எங்களையும், எங்கள் வல்லமைகளும் அவர்களுக்கு மிக நன்றாகத் தெரியும். மேலும், தனவைசிய வகுப்பைச் சார்ந்த பால்யர்களுட்சிலர், எங்களைப் போன்று, இப்பாலைய நாடு நகரங்களை அரசு செலுத்த பார்க்கிறார்கள். ஒருவாறு, எங்களுக்குள்ள சூக்கும சக்திகள் ஒருங்கும் அவர்களுக்கும் உளதாக விருப்பின் கண்ட அந்தக்கணமே நாங்கள் ஒதுங்கிக்கொள்ளத்தான் செய்வோம். அப்படிப்பட்ட சூக்கும சக்திகள், அவர்களிடம் பேருருவாக வளர்ந்து, ஒழுங்கு பெற்று, ஒருப்படவில்லை என்பது இதன்மேல் வரும் சில விஷயங்களால் நன்கு இனிது விளங்கும். அஃதாவது, என்னுடைய எல்கைக்குள்ப்பட்ட காரைமா நகரத்தில், தனவைசியவகுப்பைச்சார்ந்த பால்யர்களால் ஒரு சங்கம் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. அச்சங்கத்துக்கு "தனவைசிய ஊழியர் சங்கம்" என்று, பெயர். கவனிக்குமிடத்து, அற்றைக் கூலியேனும், மாதவேதனமேனும் வேறு எவ்விதமான இலாபங்களேனும் அடையக்கருதாமல், தனவைசியவகுப்பாராகிய நாட்டுக்கோட்டை வைசிய மகாசமுகத்துக்குத் தொண்டு பூண்டியலுவோர் கூட்டம் என்பது, அப்பெயரின் தூலமாகிய பொருள்களாகும். பின்னர் சூக்குமமாகிய பொருள்களும் இருக்கின்றது. அஃதாவது, ஊழியம் என்ற சொல்லளவையிலேயே கூலியற்ற வேலை என்பது, சாதாரணவர்களுக்கும் மிகத்தெளிவாக விளங்குவதொன்றும். மேலும் அச்சங்கத்தினின்றும் "தனவைசிய ஊழியன்" என்ற திருநாமத்தோடு கூடிய வாரப்பத்திரிகை ஒன்றும் வெளியாகிக் கொண்டிருக்கிறது. என்றால், "சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம் சொல்லிய வண்ணஞ் செயல்" என்றதற்கு இலக்கணமாக அவர்கள் சொல்லிக் கொண்ட பெயர்களுக்கு ஏற்றவாறுபோல, செய்கையில் ஓர் அணுவளவுகூடப் பொருத்தமற்று, "அரங்கின்றி வட்டாடியற்றே நிரம்பிய நூலின்றிக்கோட்டி கொளல்" என்பதற்கு இணங்கிப்போயிற்று. எனெனில்? அந்த ஊழியனுக்கும், அக்கூட்டத்தார்க்கும், மன்னவன், தனவைசிய மகாசமுகமே யாமன்றே? ஆம். "செயற்கரிய செய்வார் பெரியர்" என்பதற்கு இணங்கச் செய்தற்கு அருமையான பெரிய செய்கைகளை "எண்ணித்துணிவது கருமம்" என்று நன்றாக எண்ணித்துணிந்து, "குணன் நாடிக்குற்றமும் நாடி அவற்றுண்

மிகை நாடிமிக்க கொளல்" என்று கொண்டு, "வினைவலியும் தன்வலியும், மாற்றான்வலியும் துணைவலியும்தூக்கிச்செயல்" என்பதற்கு இணங்கச் செய்து முடிப்பதில் நின்றும் ஊழியன் ஓர் மன்மகனாயும்; அதிகார முறைமையிலும், சொல் அளவையிலும், மன்மகன், மன்மகனாயும், அல்லது, ஓர் முதலாளியாயும் காணப்படுகிறான் என்பது எவர்களும் நன்குணர்ந்த ஓர் விஷயமாம். மேலும், இஞ்ஞாலத்தில் ஒருவர், ஒருவருக்கேனும், ஒரு பெரிய மகாசமுகத்துக்கேனும், ஒரு தேயத்துக்கேனும் ஊழியஞ் செய்யக் கருதினால், அவரிடம், "பேரறிவு அல்லது, பூரண அறிவு, அருட்பெருஞ் சக்தி, நிறை, பொறை, ஓர்ப்பு, கடைப்பிடி, நினைவு, உவப்பு, இரக்கம், நாணம், துணிவு, அன்பு, ஊக்கம், மானம், அவா, ஆண்மை, வென்றி, திடகாத்திரமான தேகம்" முதலியன மிக வொழுங்காகப் பொருந்திக் கிடத்தல் வேண்டும், இத்தகைய குணங்களும், பெரிய தன்மைகளும், மேற்கண்ட தனவைசிய ஊழியனிடத்தும், அச்சங்கத்தார் இடத்தும் எட்பிளவுகூட இல்லையென்று மிகத் தெளிவாகக் கூறலாம். மேலும், நமது, மனிதவுலகத்தில் ஆண்டானுக்கு, அடிமைத்தன்மை பூண்டு ஊழியஞ் செய்வதில் "நாயைத்தான்" மிகவும் விசேடமாகக்கணக்கெடுத்திருக்கிறார்கள். எத்துணையோசிறந்த பெரிய ஊழியக்காரர்களெல்லாம் தங்களைப்பற்றிச் சொல்லிக் கொள்ளப்புகுந்த ஓர் காலத்து "நாயினும் கடையேன்" "நாயினும் கடையேன்" என்று, சொல்லிக்கொள்வது, நமது, உலக வழக்காயும் காணப்படுகிறது. மேலும், ஓர் நாயானது, தன் எஜமானனால், சூரிக்கத்தியால், குத்தப்பட்டேனும், துப்பாக்கியால் சுடப்பட்டேனும், மரணமாகக் கிடக்குந் தருணம் ஓர் அரைநாழிகைக்கு முன்னுங்கூட அந்தோ; அந்நாயானது தன் ஊழியத்தை மிக நன்றாகச் செய்து முடிக்கும் என்பது, அவ்வூழியனுக்கும், அவ்வூழியச் சங்கத்தார்க்குங்கூட மிகத் தெளிவாக இனிது விளங்குமே. இவ்வழக்கம் நோக்கித்தான் "எறிந்தவேல் மெய்யதா வால் குழைக்கும் நாய்" என்று,பண்டையவான்றோர் திருவாக்கு நிகழ்ந்தனவாமென்க.மேலும், ஊழியம் என்ற சொல்லுக்குப் பொருளுணர்ந்து கொள்ளாத முன்னரே ஊழியனுக்குச் சந்தாத்தொகை வசூலித்த வரத்தக முறையைப்பற்றி நினைதொறும், நினைதொறும் பெரும்வியப்பன்றோ ஆறாய்ப் பெருகுகிறது. என் செய்யலாம் பான்மணமாறாப் பாலர்கள். ஒன்றும் உணராக் குழந்தைகள். "ஈன்றாள்பசி காண்பானாயினும், செய்யற்கசான்றோர் பழிக்கும்வினை" என்ற திருக்குறள் இவர்கள் பாடத்துக்கு வரவில்லைப்போலும், "சும்மா கிடந்த சங்கை ஊதிக்கெடுத்தான் ஆண்டி" என்பதற்கு இணங்கவும், "கிழக்குமேக்கு அறியார் வழக்குப் பேசப் புகுந்தார்" என்பதற்கு இணங்கவும் இப்பால்யர்கள், பத்திரிகைகள் நடத்தப் புகுந்ததும், வியாசங்கள் வரையப்புகுந்ததும், நமது, வைசிய மகா சமுகத்தை திருத்தஞ் செய்யப் புகுந்ததும், மிக நன்றாயும், அற்புதமாகவும் இருக்கிறது. "பொருள் கருவி

காலம் வினை இடனோடைந்தும், இருள்தீர வெண்ணிச்செயல்'' என்பதும் ''அறிவு உருவு ஆராய்ந்த கல்வி இம்மூன்றன் செறிவுடையான் செல்க வினைக்கு'' என்பதும், ''தூய்மை, துணைமை, துணிவுடைமை இம்மூன்றின், வாய்மை வழியுரைப்பான் பண்பு'' என்பதும் இம்மாணவர்களுக்கு மறந்து விட்டனவாம்போலும். அடடா; என்ன? ஒரு சுமார் அறுபது, எழுபது, வருஷங்களாக நின்றுபோய்க் கிடந்த தொண்ணூற்றூறு நகரக்கூட்டத்தை என்ன அரும்பாடு, பெரும்பாடுபட்டு, எத்துணையழகாகச் சென்ற துன்மதி யாண்டு, ஆனித்திங்களினீற்றிற் கூட்டி வைத்தார்கள். ''சிறியார் செய்த வெள்ளாண்மை விளைந்தாலும் கைகூடாதென்பதை'' இனிவரும் பால்யர் களுக்கும் மிக நன்றாக விளங்கவன்றோ மெய்ப்பித்துக் காட்டி விட்டார்கள். ஐயோபாவம்; அந்த ஊழியத்தில், ''உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி, இடைக்கண் முறிந்தார் பலர்'' என்ற நாயனார் திருவாக்கிற்கு இணங்க எத்துணைக்காளைகட்கு இடுப்பொடிந்து போயிற்று. தனவைசிய வாலிபர் சங்கங்கள் யாங்கோடி யொளித்துக் கொண்டன. அகிலதன வைசிய வாலிபர் சங்கம் ஏனோ காணமற் போய்விட்டது. ''ஞாலங்கருதி னும் கைகூடும் காலங் கருதி யிடத்தாற்செயின்'' என்றும், ''காலங்கருதி யிருப்பர் கலங்காது ஞாலங்கருதுபவர்'' என்றும் வந்த பொய்யாமொழி பொய்த்தா போய்விடும். நமது, வைசிய மகா சமுகத்து உடைத்தான பெரிய செல்வ வந்தர்களுக்கும், பெரியார்களுக்கும், அடங்கி, ஒடுங்கி, வணங்கி, ''எல்லார்க்கும் நன்றாம்பணிதல்'' என்பதற்கும் இணங்கி, ''பரியது கூர்ங்கோட்டதாயினும் யானை, வெரூஉம் புலிதாக்குறின்'' என்பதற்கும், ''எரியாற்சுடப்படினும் உய்வுண்டாம் உய்யார் பெரி யார் பிழைத்தொழுகுவார்'' என்பதற்கும், ''வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னும் தகைமாண்டதக்கார் செறின்'' என்பதற்கும் உணங்கி இயன்று கொள்ளத் தெரியாத குற்றம் ஒன்றுதான், இத்துணைப் பெருங்கேட்டுகளை இழுத்துக் கொணர்ந்துவிட்டன. இதற்குமுன், வெளி யாகிக் கொண்டிருந்த மித்திரனும் இம்மாதிரிதான் கெட்டான். எந்தக் காலத்தும் ஒரு சமூகத்துக்கேனும், ஒரு தேயத்துக்கேனும் ஊழியஞ் செய்வேம் என்று ஒருவர் வெளிப்பட்டால், அவரிடம் ''மையல், வெறுப்பு, வெகுளி, அழுக்காறு, எளிமை, எய்த்தல், பொச்சாப்பு, மறம், மறவி, அச்சம், இகல், வீண்கெர்வம், ஆடம்பரம், சுயநலம் கருதல், வஞ்சநெஞ் சம், சோம்பல், பேருண்டி, பெருந்துயில், களியாட்டம், தெய்வமிகழல், பெரியாரைத்தூஷித்தல்'' முதலிய தீக்குணங்கள் ஓர் அணுவளவுகூட வன்றோ இல்லாதிருத்தல் வேண்டும். ''அவர்க்காகவன்றோ எண்ணிய எண்ணியாங்கு எய்துவர், எண்ணியர் திண்ணியராகப் பெறின்'' என்ற வேதத்திருவாக்கும் எழுந்தன. ஐயையோ! என்செய்வோம்! இச்சங்கத் தார்க்கும், இவ்வூழியனுக்கும், இடித்துப் புத்திமதி கூறும், தனவைசிய

வகுப்பைச் சார்ந்த ஒவ்வொரு பெரியோர்களும் மௌனஞ் சாதித்துக் கொண்டன்றோ வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். இப்பால்யர்கள் சரிகேட்கும் ஒவ்வொரு விஷயங்கட்கும் ஓம். ஓம் என்று, ஒத்துக் கொள்ளாதபக்கம் நம்பிழைப்புப் போய்விடுமே என்று, நினைக்கும் தரித்திரக்குடுமித்தலைப் பெரியார்கள் அன்றோ இவர்கட்கு மந்திரிமார்களாய் இருக்கிறார்கள். சிறிது கவனிக்குமிடத்து "துன்மதி வணிகரும் கன்மனப் பார்ப்பாரும்" என்பதற்கன்றோ பொருத்தமாய்க்காணுகிறது. "இடிக்குந் துணையாரை ஆள்வாரையாரே கெடுக்குந் தகைமையவர்" "இடிப்பாரை இல்லாத வேமராமன்னன் கெடுப்பாரிலானுங் கெடும்" "தக்காரினத்தனாய்த் தானொழுகவல்லானை செற்றார் செயக்கிடந்ததில்" என்ற திருமந்திரங்களை இம்மாணவர்கள் ஏனோ மறந்து விட்டார்கள். ஊழியன் நின்றுபோய் விடுவான் போலன்றோ காணப்படுகிறது. சமூகத்துக்கு ஊழியன் பேரிலும், சங்கத்தின் பேரிலும் நல்ல அபிப்பிராயங்கள் இல்லாமலன்றோ போய் விட்டன, எத்துணை அசங்கியமான விஷயங்களை எல்லாம் ஏனோ அவ்வூழியன் வந்து சொல்லிக்கொண்டு நிற்கிறான். தனவைசியமகா சமூகத்துக்கு வேண்டாதனவற்றை அன்றோ வேண்டுமென்று செய்கிறான். "செய்தக்கவல்ல செயக்கெடும் செய்தக்கச் சேய்யாமையானும் கெடும்" என்ற திருவாய்மொழி இவ்வூழியன் உணர்ச்சியில் இல்லாமலன்றோ போய்விட்டது. தற்காலம், தனவைசிய வூழியன் என்ற தன் பெயரை மறந்து விட்டன்றோ, தனவைசிய மகா சமூகத்துக்கு "ஊழியன், ஊழியங்களை, ஊழியமாகவன்றோ செய்யத்தொடங்கி விட்டான்"

ஒரு நாடகக்காரன்கூட தன் வேடமும், ஆட்ட பாட்டங்களும், ஆக்டும் நன்றாக இருக்கிறதோவென வெகு ரகசியமாகப் பிறரிடம் தன்னை இன்னானென ஒரு சிறிதளவுங்கூடக் காட்டிக்கொள்ளாதபடி கேட்டுத் தெரிந்து கொள்ளுவானே அன்றோ? இந்த ஊழியச்சிசுவுக்கு அத்துணையுங்கூடத் தெரியாமலன்றோ போய்விட்டது. "பெருமைக்கும் ஏனைச்சிறுமைக்குந் தத்தங்கருமமே கட்டளைக்கல்" என்ற திருக்குறளை நமது ஊழியன் தெளிகின்றானில்லையே. "எனைவகையாற் றேறியகண்ணும், வினைவகையான் வேறாகுமாந்தர் பலர்" என்று, நாயனார் திருவாய்மலர்ந்தருளிய பலருள் ஒருவன் நான்தான் நான்தான் என்றன்றோ கோமாளிக் கூத்தாடுகின்றான். நன்மையும், தீமையும், நாடி நலம்புரிந்த தன்மையான் ஆளப்படும்" என்ற நான்மறைப் பொருளை யாராய்கின்றானில்லையே. ஊழியனும் அச்சங்கத்தாரும் சிறிது நேரம் குந்தியிருந்து தீர்க்க ஆலோசிக்கின்றார்களில்லையே. தனவைசியசிகாமணிகளாகப் பிறந்த சில பால்யர்களை, வெறும் வைசியர்களாக்கவன்றோ கங்கணங் கட்டிக்கொண்டார்கள். இவர்களுக்கு வெட்கமானங்கள் இல்லாமலன்றோ போய்விட்டன. இப்பெரிய வைசியமகாசமூகத்து களைகளைப் போன்றன்றோ இவர்கள் முளைத்து விட்டார்கள். "மனம்

போன போக்கிலே போகவேண்டாம்" என்று ஔவையம் பிராட்டியார் திருவாய்மலர்ந்தது இவர்களுக்காக அன்றோ? அக்காலத்து நம்மனோர் மரண மடைவதற்குகூட ஒன்றுபட்டு மாண்டார்களே. இக்காலத்து இவர்கள் வாழ்வதற்குக்கூட ஒன்றுபடமாட்டேன் என்கிறார்களே. அக்காலத்தவர்கள் வேளாளர்களாகிய பூவைசியர்களிடம் பெண்களைக் கொண்டார்கள் என்று இக்காலத்திவர்களும், எங்கிருந்தோ இரண்டொரு காட்டுப் பெண் பூச்சிகளைக் கொணர்ந்து, விரித்து, மடித்து யோசிக்கத் தெரியாத இரண்டொரு பால்யர்களின் கழுத்தில் கட்டி, அவர்களில்லத்து ஓயாத சண்டைச் சச்சரவுகளையும் இழுத்து விட்டுவிட்டுத் "திருமணம் கண்டநாள்" "திருமணங் கண்ட நாள்" என்று, வெறும் கோமாளிக் கூத்துகள் அன்றோ ஆடிக்களிக்கின்றார்கள் ஐயோ! இவர்களைக் கவனிக்குமிடத்து மகா, வஞ்சநெஞ்சர்களாய் அன்றோ காணுகிறார்கள். உண்மையில் இவ்வைசிய மகாசமுகத்து விவாகமுடித்துக்கொள்ளப் பொருள் அற்ற பால்யர்களின் மீது கருணையுள்ளவர்களா இவர்கள்? விவாக முடித்து வைத்து அவர்களைப் பாதுகாக்குஞ் சக்தியுள்ளவர்களா இவர்கள்? அத்துணை ஆராய்ந்த நுட்பமதியுள்ளவர்களா இவர்கள்? அத்துணைக்கல்வி யறிவுடையவர்களா இவர்கள்? இல்லை. இல்லை. அங்ஙனம், நடுநிலை கோடாதநியாயம் உடையவர்களாயும், ஆண்மையுடையவர்களாயும், வஞ்சகம் அற்றவர்களாயும், சாதீயக்கட்டுப்பாடுகளில் ஒன்றையவிழத்துத் திரும்பக்கட்டுஞ் சக்தியுள்ளவர்களாயும் இருந்திருப்பார்களானால், அத்தனவைசிய ஊழியச்சங்கத்தின் அங்கத்தினர்களாகிய எல்லாப்பால்யர்களும் ஒருங்கே நாங்கள் இத்துணைப் பெயர்கள், இவ்வைசிய மகாசமுகத்தை விட்டும் விலகிக் கொள்ளப்போகிறோம் என்று முன்னதாகச் சமுகத்தார் யாவரும் நன்குணரும்பொருட்டுத் தெரிவித்து விட்டு, ஒவ்வொருவரும், பதினாயிரம், பதினாயிரம் ரூபாய்களை ரொக்கமாக மாத்திரம் எடுத்துக்கொண்டு, மற்றையச் சொத்துக்கள், வீடு வாயல்கள் கடை கண்ணிகள் முதலிய சகல சம்பத்துக்களையும், பற்றி எனக்கு இவ்வித சம்பந்தமும் இல்லை என்று, மனைவிமக்கள் பேருக்கோ, தமையன் தம்பி பேருக்கோ, தாய் தந்தையர்கள் தாய் மாமன் பேருக்கோ, இன்னும் ஏனைய எவரோ ஒருவர் பேருக்கோ, தங்கள் சக்திகள் ஒருங்கையுங் கொடுத்து, விடுதலைப்பத்திரமும் பிறப்பித்து விட்டு ஒரு சுமார் நூறு பெயர்களேனும் "நாம் இந்தத் தனவைசிய வகுப்பில் பிறந்தோம் இல்லை" என்று திடபுத்தியோடு விலகி, தங்களுக்கு இட்டமான ஒரு பக்கத்து ஆயிர ஆயிர ரூபாய்களில் நூறு குடில்களைக் கட்டிக்கொண்டு அதற்கொரு அழகிய பெயர் ஒன்றையுஞ் சூட்டி தற்காலம், இரண்டு மூன்று பெண்களைக் கொண்டுவந்ததுபோல், எந்த வருணத்திலிருந்து ஏனும் பெண்களைக் கொண்டு வந்து, அத்துணைப் பெயர்களும், ஒருமைப்பாட்டோடு ஒருவருக்கொருவர் துணையாகத் திருமணமுடித்துக் கொண்டு, ஏதோ ஒரு தொழின் முறைகளைச்

செய்துகொண்டு வாழ்வான் தொடங்கி இருப்பார்களானால், இற்றை நாள் வரை "ஆயிரம் திருமணமன்றோ முடிந்திருக்கும். இரண்டொரு ஆண்டுகளுக்குள்ளே பதினாயிரக்கணக்கில் திருமணம் முடிந்து விடுமன்றோ. இந்நாட்கள் வரை எத்துணைச் சிறப்புகள் நடைபெறும். சொ. முருகப்பனுக்கும், இச்சங்கத்தார்க்கும் எத்துணைக் கௌரவம் வாய்ந்திருக்கும். அப்பொழுதன்றோ, இச்சமுகம் இஃது என்னடா விநோதம் என்று சிறிது நிமிர்ந்து நோக்கும். அப்பொழுதன்றோ சமுகத்தில் குப்யோமுறையோ வென்று நூதனகிளர்ச்சி ஒன்று நிகழும். அப்பொழுதன்றோ "தனவைசிய வகுப்பார்க்கு மணப்பெண்கள் தேவை" என்று பத்திரிகைகளில் பிரசுரித்தல் வேண்டும். அப்பொழுதன்றோ, இக்கோமாளி ஊழியனையும், அச்சங்கத்தாரையும், அடோ அப்பா! இவர்கள், இக்காலதர்மத்திற்கு ஏற்ற சிம்மக்குட்டிகள் தானென்று இந்நிலவுலகொருங்குமே போற்றிப்புகழ்ந்து கொண்டாடப்படும். அப்பொழுதன்றோ தனவைசியர்கள் தனவைசியர்களாக இருப்பார்கள். அப்பொழுதன்றோ பால்யர்களின் மனைவிகளும் சிறிது அடங்கி ஒடுங்கி அன்புடன் ஒழுகுவார்கள். அப்பொழுதன்றோ இவர்களின் சரித்திரங்கள் சுவர்ண ஏடுகளில் வரைந்து வைக்கப் பெறும். அப்படிக்கெல்லாம் ஒன்றுமின்றி "மீசைக்கும் ஆசை கூழுக்கும் ஆசை" என்பான் போன்றுமன்றோ காணுகிறார்கள். கழுவுக்கு ஏற்ற கோண் மூட்டி யார் என்றன்றோ தேடுகிறார்கள். இவர்களுக்கு இத்தனவைசிய மகாசமுகத்தை விட்டு நீங்கிக்கொண்டிருக்கப் பிரியமும் இல்லை. சிறிது வாய்த்தாக்கும், செல்வமும் இல்லை யென்றிருக்கும், தனவைகியபால்யர்களை இச்சமுகத்தை விட்டு விலக்கித் தொலைத்து தலைமுழுகி விடவும் வேண்டும். பெயர் திருத்தியமைத்து திருமண முடித்து வைத்திருக்கிறோம் என்றும் இருத்தல் வேண்டும். ஐயோபாவம்! இஃது எப்படி நடைபெறும். யாருக்குத்தான் சம்மதியாகும். இத்துணைக் காரியங்களுக்கும் ஆதிமுதன் முதலாகத் தலையெடுத்தவன், சொ. முருகப்பன்தான். கூடுமானவரையாடியோடி அவனும் குமரனாகியமர்ந்தான். பால்யர்களே! நீங்கள் எவ்விதக் காரணங்களைக் கொண்டும் இவ்விதத் திருமணத்துக்கு உடன்படாதேயுங்கள். என்னுடைய புத்திமதிகளை நன்றாகக் கவனித்துக் கேட்டுக் கொள்ளுங்கள். ஒருவேசை தாசிகளை வைத்துக்கொண்டுக் காலத்தை ஓட்டிவிடினுங்கூட ஓட்டிவிடலாம். "மனத்தானும் மாந்தர்க்குணர்ச்சி இனத்தானும் இன்னான் எனப்படுஞ் சொல்" என்றும் "மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம், இனநலம் எல்லாப் புகழுந்தரும்" என்றும், "நல்லினத்தின் ஊங்கு துணையில்லை தீயினத்தின் அல்லற்படுப்பதூஉம் இல்" என்றும் "நிலத்தியல்பால் நீர் திரிந்தற்றாகும் மாந்தர்க்கு இனத்தியல்பதாகும் அறிவு" என்றும், காணப்படுகிற தமிழ்வேதத் திருவாக்கியங்களை நன்கு தெளிந்து எண்ணிப்பாருங்கள். அதன் உடகருத்துக்களையும் ஆய்ந்து நோக்குங்கள். இந்த வைசிய

மகாசமுகத்தை விட்டு நீங்கள் விலகுவீர்களாஞல் ஆடிக்காற்றிலகப்பட்ட இலவம் பஞ்சுபோன்றே ஆய்விடுவீர்கள். உங்களுக்கு பந்துக்களாவார் ஒருவருமே இலராகமுடியும். உங்களின் கழுத்தில் கண்ணியிட்ட ஒருவரே உங்களை அவமதிப்பார். ஏழுவராகன், பத்துவராகன் என்று கொடுத்து நாம் திருமணமுடித்து எப்படி ஜீர்வகிக்கப்போகிரும் என்று ஏங்காதேயுங்கள். நாணயத்தை விட்டுவிடாமல் நமது, செல்வவந்தர்களுக்கு அடங்கி ஒடுங்கிப் பணிந்து, அந்தக்காலத்தவர்கள் போன்று தொலைக்குக்கொண்டு விற்கச்செல்லுங்கள். அந்த வஞ்சநெஞ்ச ஊழியர் சங்கத்தைச் சாராதேயுங்கள். "நாட்டுக் கோட்டை வைசியர்' என்றும் மட்டும் இருந்தால் ஒரு சமய மில்லாவிட்டாலும் ஒரு சமயம் நீங்களும் இலக்காதிபதிகளாகி வயிர நகைகள் அணிந்த மனைவிமக்களோடும் நன்ருகவாழ்ந்துண்டு உடுத்தி ஆண்டனுபவித்துக் கொண்டிருக்கலாம். ஒன்றிரண்டு மூன்று கலியாணங்களாகச் செய்துகொண்டு பார்ப்போம் நாளாவட்டத்துள், கலியாணங்கள் சாஸ்தியாக நடந்து புள்ளிகள் ஒழுங்காக சாஸ்திசேராவிட்டால், அம்மனைவிகளையும், குழந்தைகளையும் அப்படியப்படியே விட்டுவிட்டு நாம் திரும்பிவிடுவோம் என்ருல் அதற்கு மிஞ்சிய பாதகச்செயல் பிற எதுவுமே இலலையென்பதை நன்ருகவுணருங்கள். சைவன், என்றும், சாமியார் என்றும், ஐயாவென்றும் வெறும் போலிப்பட்டங்களை ஏற்றுக் கொள்ள விரும்பாதேயுங்கள். "வியாசர் சொல்லும் பாரதத்தில் வெகு பொய் வீணும், மேதினியை மாய்கைதனில் விரும்பச் சொன்ஞன், ஆய்ந்து கவி பாடி விட்டான் கம்பன் வம்பன் அதீத ராமாயணத்தில் அநேகம் பொய்தான், சாயாமல் அதிவீர ராமபாண்டியன் தமயந்தி சரித்திர நைடதமும் சொன்ஞன், சுயமாகாதிது கவிகள் சுத்தப் பொய்தான் தொடுகவி மாணிக்க வாசகர் சொன்ஞரோ" என்றும், "தேவாரமான திருவாசகத்தைச் செகத்தோர்கள் படித்து மெத்தத் தியங்கிஞர்கள், பேயான ஆண்டிகள் தம் பிழைப்புக்காகப் பேசிவைத்தார் மற்றொன்றும் பிசகோ இல்லை" என்றும், காணப்படும் வாக்கியங்களையும் நன்ருக உணர்ந்து பாருங்கள். ஒழுங்காக பணஞ் சம்பாதிக்கத் தகுந்தத் தொழின்முறைகளை விட்டுவிட்டு "தேவாரம் திருவாசகம், புராணேதிகாசங்கள் சம்பந்தப் பட்டமட்டில்" அத்தமிழ்க் கல்வியையே தமக்குத் தொழிலாகக் கொண்டு திரிவோர், நமது, ஈஸ்வரனே ஆயினும் சரிதான், காலக்கிரமத்தில் பிச்சையேற்றுண்ணவேண்டும் நிலைக்குத்தான் வந்து விடுவார்கள் என்பதை நீங்கள் கனவினும் மறந்துவிட வேண்டாம். நாட்டுக்கோட்டை வைசியம் என்று ஒரு மாதாந்தநூலை நடத்தப் புகுந்து ஆண்டியப்பன் ஆண்டியாய் விட்டான். வைசியமித்திரன் என்று ஒரு பத்திரிகையை நடத்தப் புகுந்து, தேவகோட்டை ராமநாதன் ஆண்டியாய் விட்டான். விவேகபாநு என்ரோ, வித்தியாபாநு என்ரோ, நமது கோநகரில் ஒரு மாதப் பத்திரிகையை நடத்தப் புகுந்து நடத்தி

னோர்க்கு ரூபாய் பதினாயிரத்துக்குமேற் காலியாய்ப் போயிற்று. அஃது டன் அவர்கள் விழித்துக் கொண்டார்கள். கோட்டையூர், சாத்திரி இலக்குமணன் என்பான் ஒரு பத்திரிகை நடத்த வேண்டும், அச்சுயந்திரசாலை வைத்தல் வேண்டும் என்று ஓர் பார்ப்பானுடன் கூடி எண்ணியதற்காக ரூபாய் ஐயாயிரத்தை இழந்தான். தேவகோட்டை மெய்யப்பன் என்பான் ஒருவன் சிவஞானம் என்னும் ஒருவேளாளனுடன் கூடி அச்சுயந்திரசாலை சம்பந்தமாய் ரூபாய் மூவாயிரத்தை இழந்தான். ஸ்ரீ கோவிலூர், மடாதிபதிகள்கூட இவைகள் சம்பந்தமாகச் சிலதொகைகளை இழந்துவிட்டன அன்றோ. இத்தகைய தொழில்கள் இத்தனவைசிய பாலியர்களுக்கு என்றைக்குமே பொருத்தமாகமாட்டாது. இத்தொழில்களுக்காக வேண்டும் போதுமான, எவ்விதசாதனங்களும், தற்கால நாகரீகமான கல்வியுணர்ச்சியும், தேசயாத்திரைகள் சம்பந்தமான இஞ்ஞாலவுணர்ச்சியும், பேரறிவாண்மையும் இல்லாமையே இதற்குக் காரணங்களாகும். இவைகள் சம்பந்தமாக, இனிச், சொ. முருகப்பனும், ராய. சொக்கலிங்கமும் ஆண்டியாகத் தயாராகி விட்டார்கள். குமரன், வி. பிகள் ஒருங்கும் ஆசிரியரைப் பார்க்கத் திரும்பிக் கொண்டிருக்கிறது. டம்பாச்சாரி ஒருவர் சந்தாச் சேர்க்கச் சுற்றிக்கொண்டு திரிகிறார். பாலியர்களே! எச்சரிக்கை. எச்சரிக்கை. தனவைசியர் ஊழியச் சங்கத்தை நம்பாதேயுங்கள். பூர்வீக முறைகளை அனுசரித்து, அச்சங்கம் வேலை செய்யத்தொடங்கவில்லை. நவீன நாகரீகங்களுக்குத்தகுந்த தீரத்துவமும் இல்லை. சாதாரண ஜனங்களிற் சிலர், செல்வவந்தர்களை அடக்கியாள வேண்டும் என்பது எந்தக் காலத்தும் முடியாத காரியந்தான். எந்த இடத்தில் இலக்குமியாகிய செல்வமிருக்கிறதோ அந்த இடத்தில்தான் காமக்குரோதாதி முதலிய தீயகுணங்களுக் கெல்லாந் தலைமையாக நிற்கும் திருமாலாகிய அவள் தன் கொழுநனும், உடன் புணர்ந்து நிற்பான். அவர்களிருவரும் இருக்கும் ஓரிடத்தில்தான், அவர்களின் அருமைக்குமாரனாகிய மன்மதனும் நின்று கூத்தாடுவான். ஆகலின், செல்வவந்தர்களிடத்து, வரன் முறைக்கட்டுக்களைக் கெடுக்கும், அட்டூழியங்களும், கொலைபாதகங்களும், அநேகபல அநீதிகளும் அளவுசங்கை இன்றி மலிந்துதான் நிகழும். இஃது, எந்தக்காலத்தும், எந்தவுலகத்தும் உள்ளவழக்குத்தான். எந்தக்காலத்தும் இஃதுண்மை நோக்கித்தான், செல்வமாதிகளுக்கு இலக்குமியென்றும், அவளுக்கு புருஷன் நீலமேகசாயள வர்ணனாகியுள்ள திருமால் என்றும், அவ்விருவருக்கும் புதல்வன் "காமத்துக்குக் கண் எங்கே கண்டவிடத்து" என்று புகழப்படும் "காமன்" என்றும் நமது, பூர்வீகப் பெரியார் பெயரிட்டு வைத்திருக்கிறார்கள். மேலும், நமது சொ. முருகப்பன் மாத்திரம் ஒருவகையாக நல்ல விவேகசாலிதான். நாய்க்குணமரீஇய குணத்தோடுகூடித்தான், நமது மகா சமுகத்துக்குத் தொண்டுபுரிந்து திருத்துதல் வேண்டுமென்ற பொருள் வெள்ளிடை மலைபோன்று தெள்ளிதில் எவர்களுக்கும்

நன்கு விளங்கும் பொருட்டுத்தான் பத்திரிகைக்கு "ஊழியன்" என்றும் சங்கத்துக்கு "ஊழியர் சங்கம்" என்றும் அக்காலம் பெயர் புனைந்து வைத்தான். ஆனால், காலக்கிரமத்தில் செய்வினைகளில் மாத்திரம், பூரணமாக மறந்து விட்டார்கள். "ஊருக்கு ராஜாக் கையை பிடித்தால் விதிவசம்" என்று உணர்ந்து, அவர்களுடன்கூடிக் கலந்து பணிந்து, ஒத்துப்போகாமல் செல்வவந்தர்களைத் தாக்குவதற்கு ஆரம்பித்துக் கொண்டார்கள். பெரியவோர் கல்லுப்பாறையோடு, சில தேங்காய்களெல்லாம் ஒன்றுகூடி நாங்களும், நின் போன்று வலுவாகத்தானே இருக்கிறோம், நின்னோடுதாக்கி நின்னைசல்லி, சல்லியாக ஆக்கிவிடுகிறோம் பார் என்று எத்துணை வலுவோடு மோதினும், தாக்கினும், சல்லி சல்லியாகச் சிதறுண்டுபோவது அத்தேங்காய்களே, ஆம் போன்று, அன்றோ சிதறுண்டு போயினார்கள். இவர்கள், ஆற்றிமுடிக்கத் தொடங்கிய ஒவ்வொரு பெரியகாரியங்களும், அன்றோ சிதறுண்டுபோயின. மேலும், நமது, சொ. முருகப்பன் தொடங்கும் ஒவ்வொரு செய்கைகளும் இடையில் நின்று கொள்வதும் வழக்கந்தான் ஆனது பற்றித்தான்.

"இசையா அதெனினும் இயைபற்றியோராற்றல்
அசையாஅது நிற்பதாம் ஆண்மை-இசையுங்கால்
கண்டல் திரையலைக்குங் கானலந்தண் சேர்ப்பப்
பெண்டிரும் வாழாரோ மற்று" என்றும்,

"கோளாற்றக் கொள்ளாக் குளத்தின்கீழ் பைங்கூழ்போற்
கேளீவதுண்டு கிளைகளோ துஞ்சுப
வாளாடு கூத்தியர் கண்போற் றடுமாறுந்
தாளாளர்க்கு உண்டோ தவறு" என்றும்,

"உறுபுலி ஊனிரை யின்றி ஒருநாட்
சிறுதேரை பற்றியுந் தின்னும்—அறிவினால்
காற்றொழில் என்று கருதற்கக் கையினான்
மேற்றொழிலும் ஆங்கே மிகும்" என்றும்,

காணப்படுகிற பெரியார் திருவாக்குகளையும் மறந்து, எடுத்துக்கொண்ட ஒரு காரியத்தை இடைக்கண் எத்துணை இடுக்கண்கள் நிகழினும், "இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான், துன்பம் உறுதல் இலன்" என்ற திருக்குறளுக்கு இலக்காகி, நின்று, நிலைத்து, தீரத்தெளிந்து "குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுண் மிகைநாடி" மிக்கன கொண்டு ஆராய்ந்து, அவ்வினை செயல்வகைகளில் நின்றும் இடையிற் பெயர்ந்து விட்டுவிடாமல், பூரணமாக நிறைந்து முடிவுபெறுமாறு கொண்டு செய்து முடிக்கும் பேரறிவாண்மையையும் துறந்து,

"மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீங்கையும் மேற்கொள்ளார்—செவ்வி

அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணுயி னர்''

என்ற இஞ்ஞால வியற்கைக்கும் நேர்விரோதியாய், கல்வி அறிவோடுகூடிய தக்கார் பலரும் எள்ளி நகையாடத் தகுந்த சில சாக்குப் போக்குகளைக்காட்டித்தன்பெயருக்கிருந்த ஊழியப் பத்திரத்தை மிகுபக்குவமாக நமது சொக்கன்கழுத்திலே வெகுதந்திரமாகக் கட்டி விட்டுவிட்டு விலகிக்கொண்டான். அப்பால் குமரனுகவும் மாறிக்கொண்டான். ஆனல் குமரனுந் தேவைதான். என்றால், குமரன் குமரனுகவும் இல்லை. நமது, ஊழியனேடு சண்டைசச்சரவுகளும், மல்லயுத்தமும் செய்கிறன். மேலும், இத்தன வைசியமகா சமுகத்தின் பால்யர்களாலே, மிகுந்த உள்ளன்போடு எத்துணைமதிப்பும், கௌரவப்பாராட்டும் கொடுக்கப்பட்டிருந்ததோ அத்துணை மதிப்பும், கௌரவப் பாராட்டும் இக்காலம் ஓரணுவளவுகூட இருந்த இடம் தடந்தெரியாமல் மறைந்துபோயின. ''நிலையிற் பிரியேல்'' என்ற ஔவையார்திருவாக்கும், இவர்களிடத்தில் நிலைத்து நிற்கிறதுமில்லை. இத்துணை வன்மையோடு கூடிய இவர்கள்தான், எங்களுக்கு ஆடு, கோழிகள் பலியிடுவதைத்தடுக்க முன்வந்து விட்டார்கள். ஒருக்காலும், இவர்களால் ஆகுமா? ஆகாது. ஆகாது. ''ஊழையும் உபக்கங்காண்பர் உலைவின்றித் தாழாஅதுளுற்று பவர்'' என்ற திருக்குறளுக்கு இலக்காகி எடுத்துக்கொண்ட விஷயத்தில் இடையில் விட்டுவிடாமல் உழைக்குஞ் சக்தி இக்காலம், நமது பாரத கண்டத்துள் எத்தகையாரிடத்தும். இல்லை. மேலும் அக்காலம் பாடுவான் முத்தப்பன் என்பான்,

''அஞ்சு வராகனும் கையிலிருக்குது ஆடைகள் துப்பட்டா மீதிலிருக்குது, நெஞ்சுகிடந்து பதைபதைக்குது நேரிட்டகள்ளர்காள் வீழிட்டு ஓடுங்கள், அஞ்சக்குதிரைமேற் பேய்க்கணஞ் சூழ்ந்திட அங்கம்மன்சேனை தளகர்த்தமந்திரி, தஞ்சமென்றோர்களைக் காக்கும் கருப்பண்ணசுவாமி வருகின்றார் சுவாமி வருகின்றார்''

என்று திருவாய்மலர்ந்த அந்தக்கணம் அக்கள்வர்களைப் புறங்காட்டி ஓடச்செய்ததூஉம் எனக்கு முன்னேடியாகிய கருப்பனேயாம் அன்றோ? இன்னும், எத்துணையோ அற்புதங்களும் அன்றோ இந்நாடு நகரங்களிடத்துச் செய்து வருகின்றோம். மேலும், எங்களுடைய இலக்கணங்களையும், வல்லமைகளையும், நாங்கள் உண்ணும் உணவுப் பொருள்களையும், நாங்கள் வசிக்கும் இடங்களையும், இப்பால்யர்கள் உணருமாறு எங்ஙனம்? மேலும், மேலும் இவர்களைப்பற்றிச் சொல்லிக்கொண்டே போவதென்னின் அவைகள் நெடுந்தூரம் போய்க்கொண்டே இருக்கும். நான் இதுகாறும் சொல்லிவந்த ஒவ்வொரு விஷயங்களையும் உன்னல், இப்பொழுது அச்சாகிக் கொண்டிருக்கும் 'சிவகோத்திரவைசிய விருத்தி'' என்னும் புத்தகத்தில் பதிப்பித்து விடு.

நெடுநேரமாயிற்று. என்னிடம் ஏதேனும் கேட்க வேண்டுமாயின் கேட்டுக் கொள்.

ஆம். அம்மா! நின்னுடைய திருக்கூத்து மிக நன்றாயிருக்கிறது. நீ! இத்துணை தூரம் என்னைத் தெருவில் இழுத்து விடுவாய் என்பது எனக்கு முன்னதாகத் தெரிந்திருக்குமானால், ஒரு அணுப்பொழுதுகூட நின்வார்த்தைகளைக்கேட்க உடன்பட்டிருக்கமாட்டேன். இப்பொழுது நின் உத்தரவை மீறி நடப்பதுங்கூடாது. இதற்கு நான் என் செய்வது? "குற்றம் பார்க்கிற் சுற்றமில்லை" என்பதும், "நெல்லுக்கு உமியுண்டு, நீர்க்கு நுரையுண்டு, புல்லிதழ் பூவிற்கும் உண்டு" என்பதும், "அரியகற்று ஆசற்றார்கண்ணும், தெரியுங்கால் இன்மை அரிதே வெளிறு" என்பதும் பொய்த்தாபோய்விடும். அதினும், இக்காலம், இச்செட்டிமண்டலப் பால்யர்களிடம், பிழைபாடுகள் கண்டு பிடிக்கவேண்டுமென்றால் அளவு சங்கையாகாதே. எண்ணில் அடங்குமா, எழுதித்தொலையுமா; மேலும், நியாயத்தைக் கவனிக்கப்புகுந்தால் குற்றமற்ற மனிதர்களே உலகத்தில் இல்லை என்பதாகத்தானே முடியும். நின் உத்தரவின்படி நான், நடப்பதானால், சொ. முருகப்பனும், ராய, சொக்கலிங்கமும் அவர்களைச்சார்ந்த ஏனைய சிலரும், என்னை இலகுவிலா விட்டுவிடுவார்கள். ஐயய்யோ! அவர்களினின்றும், நான் எப்படித் தப்புவேன். ஊழியனையும், குமரனையும், நின்று பேப்பர்களை கிழி கிழி என்று கிழித்து விடுவார்களே. அவர்கள் வெட்கமானத்தை விடுத்தன்றோ இப்பெரிய மகாசமுகத்தைச் சீர்திருத்தஞ் செய்யப் புகுந்திருக்கிறார்கள். "பிறர் பிறர் சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்து, யார் யார்க்கும்" தாழ்ந்துபோவதன்றோ அறிவுடையார்க்கழகென்று நினைந்து கொண்டிருந்தேன். ஏ அம்மணீ! இப்பொழுது என்னைச்சந்திக்கி இழுத்துக் கொணர்ந்து விட்டனையே. அக்காலம் "கம்பன்" "நானும் அறியேன், அவளும் பொய் சொல்லாள்", என்ற பாடத்தை ஒப்பித்துவிட்டு சும்மா இருந்து விடுவோமாயினும், பின்னும், பின்னும் பரிகசிக்கவன்றோ தலைப்பட்டு விடுவார்கள். இக்காலம் அவர்கள், "கற்றறிந்த நாவினர் சொல்லார்; தஞ்சோர்வஞ்சி மற்றையராவார் பகருவர்; பனையின் மேல் வற்றியவோலை கல கலக்கும்; எஞ்ஞான்றும் பச்சோலைக்கு இல்லை ஒலி" என்றும், "சிற்றுணர்வோர் என்றுஞ் சிலுசிலுப்பர்; கற்றமைந்த முற்றுணர்வோர் ஒன்றும் மொழியாரே. வெற்றிபெறு, வெண்கலத்தினோசை மிகுமே; விரிபசும்பொன், ஒண் கலத்திற்குண்டோ ஒலி" என்றுங் காணப்படுகிற பெரியார் திருவாக்குகளுக்கு இணங்க, இப்பெரிய வைசியமகாசமுகத்து எத்துணையோ சிறந்த சர்வகலா நிபுணர்களும் பெரிய செல்வவந்தர்களும், முற்றுணர்வோர்களான பேரறிவாண்மை யுடையவர்களும், சிவஞானயோகச்செல்வர்களும், தத்துவசாத்திரவல்லுநர்களும், கருவிகரணங்கள் ஒய்ந்த மகாசாந்த சீலர்களும், "வாயைத் திறந்தால் வந்தது வம்பு" என்றும், "யாகாவாராயினும் நாகாக்க" என்றும், "அறிவோர்க்கழகு கற்றுணர்ந்தடங்கல்" என்றும் கண்டு தங்களின் மனத்தையடக்கிக் கொண்டிருக்க, நாங்கள் திருத்தஞ் செய்

கிறேம், திருத்தஞ் செய்கிறேம் என்று, ஓர் அணுவளவுகூட நற்பய னற்றுப்போமாறு, வெறுமென, வீணே, கல கல வென்று, பெரியகலக்கன் றோ இம்மகாசமுகத்தைக் கலக்குகிறார்கள். மேலும், "சக்கரச் செல்வம் பெறினும், விழுமியோர் எக்காலுஞ் சொல்லார் மிகுதிச்சொல்; எக்காலும் முந்திரிமேற் காணிமிகுவதேல் கீழ் தன்னை இந்திரனாய் எண்ணிவிடும்" என் பதற்கிணங்க, அவர்கள், தங்களுக்கு எஞ்சியவல்லுநர்களும், திருத்தஞ் செய்யத்தகுந்த பேரறிவாளர்களும், படிப்பாளிகளும், இஞ்ஞால வியவகாரங் களினும், நவீனநாகரீகங்களினும், சிறந்தமேதாவிகளும், நமது, மகாசமுகத் துள் இல்லை என்றன்றோ, அறியாத எண்ணங்கொண்டு, இல்லாத கௌர வத்தை மேற்கொண்டு, இவ்வழிசென்றால் இவ்வழியாம், என்று, முன்ன தாகவுணரும், உணர்ச்சியல்லாத மயக்கங்கொண்டு, தட்டுண்டு, முட்டுண்டு, நிமிர, நிமிரத் தங்களின் அருமையான மண்டையிற் கொட்டுண்டு, தாங்கள் எடுத்துக் கொண்டுள்ள ஒவ்வொருகாரியங்களும் கெட்டுண்டு ஐய்யய்யோ! என் செய்வார்கள் பாவம்! முட்டுண்டு நிற்கிறார்கள். அடீ என் கண்மணீ! ஏ என் அம்மணீ! இந்தத் தருணத்திலா என்னையும் அவர்களிடையில் இழுத்து விட்டுவிட்டாய்! உண்மையுணர்ந்து, நியாயத்துக்கு மடங்கும் குண முடையவர்களா அவர்கள்? அந்தக்காலத்துச் சீத்தலைச்சாத்தனார் போன்று, பிறர்பேரிற் குற்றமே காணக் காண அதற்காக தம்மையே தண்டித்துக் கொள்ளக் கருதி தமது அருமைச் சிரத்திலேயே கொண்டை எழுத்தாணி கொண்டு, கொட்டிக் கொண்டுள்ள தன்மையைப் போன்றுள்ள தன்மை உடையவர்களா அவர்கள்? அக்காலம், "குடம்பை" என்பதற்குப் பொருள் "கூடு" என்று பதவுரைகூறிய "நச்சினார்க்கினியர்" தம்மினும், மேம்பட்ட அறிவுடையரான பரிமேலழகர் "குடம்பை" என்பதற்குப் பொருள் அங்ஙன மன்று, முட்டை என்று, பதவுரை கூறிதிருக்குறளுக்கு விரிவுரையும் மிக நன்றாக வரைந்து வைத்திருக்கிறார் என்று பலரானுங் கேள்வியுற்று, அவர் பால் நேரிற் சென்று, மிக்க அன்போடும் இனிமையான பல பணி மொழி கூறி, மிக்க வணக்கத்துடன் அத்திருச்சுவடியை வேண்டி அவிழ்த்துப் படித்து பார்த்து, ஆநந்தங்கொண்டு ஆ! ஆ! இஃது, எவ்வித மயக்கமும், நீங்கிய மெய்யுரை, மெய்யுரை என்று தம் உச்சியில் ஏற்றிவைத்துக் கொண்டு புகழ்ந்து கூத்துக்களாடிக்களித்து, அப்பரிமேலழகருக்கும், அன்புமயமான முகமன்கூறித் தோத்திரஞ் செய்த "நச்சினார்க்கினிய" ரைப்போன்ற தங்குற் றங்கண்டு ஒப்புக்கொள்ளும் சக்திவாய்ந்த "நச்சினார்க்கு இனியராவரோ" அவர்கள்? அடடா! இஃதென்ன, அம்மணீ! வாய்புளித்ததோ, மாங்காய் புளித்ததோ என்று ஒன்றும் உணராமலன்றோ என்னை வையத்தொடங்கி விடுவார்கள். நான் என் செய்வேன்? எனக்கும், அவர்களுக்கும் எவ்விதத் துவேஷமும் கிடையாது. அம்மா! நினக்கு அஞ்சித்தான் நீ கூறிய விஷயங் கள் ஒருங்கையும் நான் அச்சிடுகிறேன் உனக்கும், உன்னுடைய சேனைகளா

கிய, வெங்கொலைப்பேய்க் கணங்கட்கும் இடும்பலிகளே, அவர்கள் தடுக்க, நீ! "ஊருக்கு எளியவன் யார் பிள்ளையார் கோவில் ஆண்டி" என்பதற்கு இணங்கி என்னைப் பிடித்துக் கொண்டாடி அவர்கண் மீதுள்ள எத்துணையோ பல விஷபங்களையும் வெளிக்கிளப்பி விட்டாய். அவர்கள் நீ சொல்லிய தென்பதை ஒப்புக்கொள்ளவா போகிறார்கள். மாட்டார்கள். மாட்டார்கள். நீயோ படுநீலி, கொலைகாரி, சண்டாளி, சதிகாரி, வஞ்சி, மாயக்காரி, சந்தியில் இழுத்துவிட்டு வேடிக்கைபார்க்க விரும்பும் விநோதக்காரி, கூத்தாடி. அவர்களோ பால்யர்கள். என் செய்வாம்! ஒன்றுகிடக்க, ஒன்றைப்பற்றிப் புலம்பத்தான் செய்வார்கள். ஏ என் அம்மணீ! ஏ என் கண்மணீ! ஏ என் ஆத்மநாயகி! அவர்கள், என்னைப்பற்றி, எத்துணை தூரம் இழித்துக்கூறினும், வையினும், தடிகொண்டு புடைப்பினும், நான் பொறுத்துக்கொள்ளப்போதுமான சக்தியுள்ளவன் தான். மேற் கொண்டும் அவர்களுக்கு நன்மதிபுகட்டவும் வல்லமை உள்ளவன்தான். மேற் கொண்டும், அவர்களுக்கு வேண்டுவன செய்யவும் கடமைப்பட்டவனும் ஆம். ஏனெனில், என்னுடைய பாரத கண்டத்துக்கும், என்னுடைய சைவசமயத்துக்கும், என்னுடையதாய் மொழியான செந்தமிழ்ப் பாஷைக்கும், என்னுடைய தாய் நாடான செந்தமிழ் நாட்டிற்கும் ஆக இற்றை நாள்வரை திருப்பணி முதலிய பலவிதமான அறப்பெருஞ் செயல்களில் ஐம்பதுகோடி ரூபாய்கள் வரை செலவிட்டு நமது புண்ணிய பூமியாகிய, நமது இந்திய தேயத்து மகரிஷிகளின் புராதன கொள்வகைகளை நிலைத்து நிற்கச்செய்த மகா உத்தமசீலக் கொள்வகைகளெல்லாம் ஒருங்கே தங்கிக்கிடக்கும், இப்பெரிய தனவைசிய மகாசமுகத்துள் தோன்றிய பால்யர்களாகலினாலாமென்க. ஆகலின், ஏ என் அம்மணீ! அப்பால்யர்களின் மீது எனக்காக எவ்விதக்காரணத்தை மேற் கொண்டும், அருளுக்கின்றி, கடைக்கண்கொண்டும் ஓர் அணுவளவுங்கூட மருளுக்கங்கொள்ளாதிருக்க வேண்டுமாய் நின்னுடைய தாமரை மலர்போலும் இரண்டு திருவடிகளுக்கும் அநேக நமஸ்காரஞ் செய்து மிகவும் மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். சர்வாண்டபிண்ட சராசரங்களை யெல்லாம் ஒருங்கே ஈன்று, வளர்த்துக்காத்தருளும் எல்லாம் வல்ல இறைவி நீ அன்றோ? "பொல்லாத சேயெனிற்றாய்தள்ள நீதமோ புகலிடம் பெரிதும் உண்டோ" என்பதை நீயும் கவனித்தற் பாலதாம். ஆகலின், ஏ என் அம்மணீ! நல்ல பிள்ளைகண் மீதும், தீய பிள்ளைகண்மீதும் நீ ஒருங்கே சமமாகத் திருவருட்பாலித்தருள வேண்டுமாய், மீண்டும் ஒருதரம் மிக வணக்கத்துடனும், நமஸ்காரத்துடனும், அன்புடனும் கேட்டுக்கொள்கிறேன். ஆ! அப்படியா! ஏ என் அன்ப! அப்படியே ஆகட்டும். பலவகையான சம்பத்துக்களோடும் நீ! நீடூழிவாழ்வாயாக. நான் செல்கிறேன் நீயும் செல்வாயாக. என்று, திருவாய்மலர்ந்து, என் அம்மை அவ் ஐயனார் ஆலயத்துள் அங்ஙனமே மறைந்து கொண்டாள். இத்தேவதைகள், இப்பாலைத்

திணைமாக்களுட் சிலருக்கு நேரில் தெரிந்தும், அவர்களுக்கு வேண்டும் சில உபகாரங்கள் செய்வதும் உண்டு. இத்தேவதைகள் வசிக்கும் ஒவ்வோரிடங்களும், நீர்வளம், நிலவளம் உள்ளதாயும், எத்துணை வறந்த காலத்தும், தளிர், இலை, பூ, பிஞ்சு, காய், கனிகள், கிளைகள் அடர்ந்து நெருங்கிய, மரங்கள், ஓங்கிப்படர்ந்து வளர்ந்து அடர்ந்து செழுமை உற்றதாயும், பார்ப்போர்களுக்கு ஒருவகையான வியப்பும், பயங்கரமும் உடையதாயும் காணப்படும். இப்பாலைத்திணை மாக்களாகிய ஆண்களும், பெண்களும், ஒருவகை ஒழுங்குபற்றி இயலுவதற்காக, இவ்வாலயங்களிற் சென்று சத்தியம் செய்து கொள்வதும் பெரியவோர் வழக்கமாம். பெரும்பான்மை எவ்விதமான வியவகாரங்களையும், அச்சுவாமிகளிடத்தில்தான் சொல்லித் தீர்த்துக்கொள்வார்கள். ஒவ்வொரு குறைபாடுகளையும் ஆங்கு சென்றுதான் முறையிடுவார்கள். அச்சுவாமிகளுக்கு ஆடு, கோழி, பன்றி முதலியன பலியிடுதலும் உண்டு. இளநீர், தேங்காய், பழம், பால், வெண்பொங்கல், சருக்கரைப் பொங்கல், புளியன்னம், எள்ளன்னம் முதலிய நைவேத்தியங்களும் உண்டு. சாராயம், கஞ்சா, ரொட்டி முதலியனவும் வைப்பதுண்டு. பின்னர், அப்பிரசாதங்களை எடுத்து உண்டும், கடித்துத்தின்றும், பருகியும் பார்த்தால் அவைகளுக்குரிய இயற்கைச்சுவை முற்றினு மாறுபட்டுத்தான் இருக்கும். அதினும், சாராயம் கள்ளின் தனிக்குணம் ஓரணுவளவுகூட இல்லாமல் சுத்த நீர் போன்று தானிருக்கும். இப்பாலை நிலமாக்காள் ஒவ்வொருவரும் தீபாவளிப் பண்டிகையை அடுத்த இரண்டு மூன்று நாளும் காட்டுக்குள் சென்று நாயுடன் கூடி வேட்டையாடுவதிற்றான் மிக்கப்பிரியம் உடையவர்களாயிருப்பார்கள். வெள்ளெலி, முயல், மான்மாமிசம் முதலியன, மிகச்சாதாரணமாக வழங்கும். இப்பாலைத் திணைக்குக் கவனிக்குமிடத்து, ராங்கியங்கருப்பன்; மூலங்குடிக் கருப்பன்;ஒகாரைக்குடிவேம்படி; ஐயனர் கோவில் இலுப்பபடிக்கருப்பன்; பள்ளத்தூரைச்சார்ந்த கொத்தடிக்கருப்பன் ; கோட்டையூரைச்சார்ந்த கொத்தங்காட்டுக்கருப்பன், சொக்கட்டான் பிள்ளையார்; கண்டனூர் முச்சந்திக்கருப்பன், முதலிய ஆலயங்கள்தான் முதன்மை பெற்றதாகும். இவைகளுக்கு அடுத்தபடிதான், மற்ற வனதேவதைகளின் ஆலயங்களாகும். தேனுச்சியம்மன், வயனுச்சியம்மன், அழகு நாச்சியம்மன், முதலியதேவதைகள், அக்காடுகளுள் சிலவேளைகளில், வலைக்குட்டிகள் சாடை நிருவாணமாகவும், பிராமணக்குழந்தைகள்சாடை சிற்றுடை பாவாடைகளைச் சுற்றிக் கொண்டுந்திரியும். அதினும், கருப்பன் மிக்க வனப்புள்ளவனாகவும், மனிதர்கண்மீது அன்பும், கருணையும் உள்ளவனாகவும், மிகவாட்டசாட்டமுள்ள தேகத்தை உடையவனாகவும் காணப்படுவான். அவன்மீது, பேரன்புடைய ஒருவருக்கு, எந்தவிதமான ஆபத்துக்களும் வாராமற் காத்துக்கொள்வான். முன்னதாகச் சென்று, இன்ன, இன்ன காரியம் இன்ன, இன்னபடி ஆகப் போகிறது, நீ! இன்னவிதமான எச்சரிக்கைவுடன் இருந்து இன்னவிதமாகத்

தப்பித்துக்கொள் என்று பெருநித்திரைபோகிற ஒருவராயிருப்பினும் மிக
நன்றாகத்தட்டி எழுப்பித் தெரிவித்துச் சொல்லிக்கொடுப்பான். எந்த வித
மான மந்திரக்காரருக்கும், மையாளிகளுக்கும், வல்லமையினாலே கட்டி விடு
வோமென்றால், அக்கட்டுகளுக்குள் அகப்பட்டுக் கொள்ளமாட்டான். ஒரு
முறை, இருமுறை, மும்முறையினும் மிகநன்றாகப் பொறுத்துக் கொண்டு,
எச்சரிக்கையுஞ் செய்வான்; பின்னும், அவனுக்கு விரோதியாகப்பட்டால்,
மகாவல்லமையான ஒருவன் நன்றாக முற்றிய கரும்பொன்றை எப்படிக்கணுக்
கணுவாக முறித்து, மேற்பட்டையையுரித்து, கடித்துச்சுவைத்து அதன்
சாற்றை எப்படிப்பருகுவானோ, அதினுமும்மடங்காக முறித்து இரத்தத்தை
உறிஞ்சி விடுவான். சுடுகாட்டில் வேம்பிணங்களைப் பிடுங்கித் தின்னுவதில்
நின்றும், பச்சையான இரத்தங்குடிப்பதிற்றான் மிக்கப் பிரியம் உடையவன்.
ஆனால், உண்மையில், மெய்ஞ்ஞானி. எல்லாம் வல்ல சித்தன். நியாயத்துக்கு
விரோதமாக எந்தக் காரியங்களினும் இறங்கமாட்டான். எந்தமார்க்கத்தா
லேனும் லஞ்சம் பெற்றுக்கொள்ளாத நியாயாதிபதியாவான். இவனிடத்
தில் கொண்டுபோய் ஒருவர் ஒரு பிரியாதைக் கொடுத்தால், அதை அன்
போடு பெற்றுக்கொண்டு, பிரதிவாதிக்கு நோய், நொடியென்னும் ஒருசம்
மனையனுப்பி, வரவழைத்து, தக்கபடி விசாரணை செய்து ஒழுங்கான தீர்ப்பு
செய்வான். அத்தீர்ப்புக்கு இணங்கி வாதி பிரதிவாதிகளாகிய இருகட்சியா
ரும் இயன்று கோடல்வேண்டும். இன்றேல் அவர்கள் குடிகள் ஒருங்கையும்
அடியோடு கெடுத்து விடுவான். மேற்கோடு அப்பீல் ஒன்றும் கிடையாது.
"அரசன் அன்று கேட்பான்" என்னும் அக்காலத்து பழமொழியின்படி
இக்காலத்தும் இக்கருப்பன் சந்நிதியிற்றான் காணலாம். தெய்வம் நின்று
கேட்கும், என்பதும் இவன் ஆலயத்திற்றான் காணுதல் வேண்டும். இத்தே
வதைகளுக்கு ஸ்திரிபோகம், என்றைக்கும் கசப்பேயாகலின் இவர்கள்
வசிக்கும் தல எல்லைக்குள், அத்தீட்டுகள் உடையார் செல்லுதல் கூடாது.
இப்பாலைத் திணையானது, இற்றை நாள் "செட்டி நாடு" "அல்லது, செட்டி
மண்டலமாக" மாறுதல் அடைந்திருக்கிறது. ஏனைய நாடு நகரங்களிலுள்
ளார் பலரானும், இந்நாட்டை இக்காலம் செட்டி நாடு என்றே அழைக்கப்
பெறுகிறது. ஏராளமான செல்வப் பேறுகள் பெருகிக்கிடக்கிறது. நாடு
கள் ஒருங்கும் பெரிய, பெரிய நகரங்களாக மாறுதலடைந்திருக்கின்றன.
இற்றைநாள் வரை இச்செட்டிமண்டலத்தில் "பிராமணர், வெள்ளாளர்,
நாட்டுக்கோட்டைவணிகர், இளவகைவணிகர், கோண்மூட்டிவணிகர், எண்
ணையாட்டும் வணிகர், பட்டு நூல் வணிகர், சேணியர், வல்லம்பர், கள்ளர்,
கருவறுத்தான் அல்லது, கரும்பறத்தான்; நரிக்குறவர், மறவர், அகம்படி
யார், இடையர், ஆண்டிகள், நாடார், வலையர், பள்ளர், பறையர், இருளர்
குறவர், பணிக்கர் உடையார், துருக்கர், சக்கிலியர், கம்மாளர், வண்ணார்,
அம்பட்டர், வடுகர், மேளகாரர், தாதர், காசுக்கார வணிகர், மூப்பிலியர்,

ராஜாக்கள், தொம்மைக்கூத்தாடிகள் வரையாக சிறிது, ஏறக்குறைய நாற்பது வருணத்தார்வரை வாசஞ்செய்து வருகிறார்கள். இத்தனை வருணத்தவர்களுள், நாட்டுக்கோட்டை வைசியமகாசமூகம் ஒன்று நீங்கலாக ஏனைய ஒவ்வொரு வருணத்தார்களும், மிக நன்றாக ஜீவிப்பதற்கும், பெரிய செல்வந்தர்களாய், பெரிது, பெரிதான இல்லங்கள் கட்டி, நிலம், பலம் முதலிய சகலசம்பத்துக்களோடும், நவரத்தினங்களுடன் கூடிய பூஷணாதிகளோடும், உயர்ந்த பட்டாடைகளோடும், கல்வியாதிகளோடும் வாழ்ந்து வருவதற்கு முதற்காரணம், துணைக்காரணம், நிமித்தகாரணம் ஆகிய முக்காரணங்களும் ஆகி நிற்பது, நமது, நாட்டுக்கோட்டை வைசியமகாசமூகமே ஆம். சுருங்கச் சொல்லுமிடத்துச் சிறிது கூடவோ குறையவோ கொடுத்து ஏனைய ஒவ்வொருசமூகங்களையும், நகரத்தார்கள் என்று பலராலுங் கொண்டாடப் பெறுகிற இவ்வைசிய மகாசமூகமே பாதுகாத்து வருகிறது. இத்துணை வருணத்தார்களினும், கல்வியறிவினும்; செல்லுஞ் சொற்களினும்; புகழ் நிலையங்களினும்; பலவகையான செல்வமாதிகளினும்; எத்தகைய மேனாட்டு மன்மக்கள் வர்க்கத்தார்களும், கண்டு வியப்பத்தகுந்த, பெரிது, பெரிதான மாடமாளிகைகளோடு கூடிய அரண்மனைகளைப் போன்ற இல்லங்கள் கட்டி வாழ்ந்து வருவதினும்; சொக்க வெள்ளி, சுவர்னங்களினாற் செய்த உண்கலங்கண் முதலிய பண்டபாத்திரங்களினும்; எவராலும் விலைமதிப்பிடுதற்கு அருமையான நவரத்னாதிகளுடன் கூடிய அணியாதிகளுடனும், ஆடையாதிகளுடன் ஆண்டனுபவித்து வருவதினும்; புள்ளி கண்மிக்குடைமையினும், ஒருமை பெற்று வாழ்ந்து வருவதினும், முறையான அதிகாரத்தோரணையினும்; வாக்கு நாணயங்களினும், சத்தியத்தினும், யோக்கியதைகளினும், அடைந்தோரைக் காக்கும் பேரறிவாண்மையினும் பெரியதன்மையும், நிலைமையும் உடையது நகரத்தார்களாகிய, இத்தன வைசியமகாசமூகமே ஆம். பெரும் பொருளீட்டும் பேரறிவாண்மை உடையதுமாம். இதற்கு அடுத்தபடியாக "வல்லம்பர்" என்னும், வருணத்தவர்கள் தான். இவர்களின் பூர்வீகம், தஞ்சைமா நகருக்கடுத்த ஏழாவது கல்லிலிருக்கும் வல்லம் என்னும் ஓர் நகரத்திலுடைத்தான, சோழிய வேளாளர் வருணத்தைச் சார்ந்தவர்கள், இவர்கள், வரையறுத்துக் கூறுவதற்கு இயலாத நெடுங்காலங்களுக்கு முன்னரே ஏதோ ஒருகாரணத்தை முன்னிட்டு, அவ்வல்லத்திலிருந்து இப்பாலைத்திணைக்கு வந்து குடியேறினவர்கள் ஆம். அக்காலம் இப்பாலைத்திணையில் "வலையரும், நரிக்குறவரும், பன்றிமேய்க்கும் குறவரும், ஒருவகைக்கள்ளரும்" தான் பூர்வீகஸ்தர்களாமென்க வாசஞ்செய்து வந்தார்கள். அவர்களினிடையே இவர்களும் வந்து கலந்து கொள்ளவே, அவர்களின் அழகியகரங்களிலே உடைத்தான கவண் கற்களும், களிமண் உருண்டை கவட்டுக்கொம்புகளும், விற்கொம்புகளும், கணைகளும், இவர்களின் கரங்களினும் வந்து ஏறிக்கொண்டன. அங்ஙனம் வந்து ஏறிக்கொள்ளவே

இவர்களுக்கு இயற்கையி லுடைத்தான, "காராளர்" என்ற பெயரும், "வேளாளர்" என்ற பெயர்களும் மாறிக்கொண்டன. அங்ஙனமாறிக்கொள்ளவே, நவீனமாக "வல்லம்பர்" என்னும் பெயர் ஒன்று வந்து காரணமாக நேர்ந்து கொண்டன. இவ்வல்லம்பர், அக்காலம், சிறிது வாய்த்தாக்கும் நாகரிகமும், அறிவாண்மையும், உடையவர்களாய் இருந்தார்களாகலின், இப்பாலைத்திணையிலுடைத்தான, எல்லாக்காடுமேடுகளையும், நிலம்பலங்களையும், கண்மா, கரைகளையும், வனதேவதைகளின் ஆலயங்களையும், பலவகையான சுதந்தரங்களையும் தாங்கள் கைப்பற்றிக்கொண்டார்கள். இக்காலம், மிக்க நன்றாக ஆண்டு, அநுபவித்தும் வருகிறார்கள். வலைபர் முதலிய பூர்வீகக் குடிகளைத் தங்களுக்கு அடிமைகளாகவும் ஆக்கிக் கொண்டார்கள். இக்காலம், இவர்கள் பாலையநாட்டு வல்லம்பர் என்று பெயர் பெறுகிறார்கள். இவர்களுள், "மேலானவல்லம்பர்" "செஞ்சி வல்லம்பர்" "மின்னற்கொடி வல்லம்பர்" "கீழனவல்லம்பர்" எனச்சிலபிரிவுகளும் உண்டு. இவர்களுக்கு அடுத்தபடியாக, "கள்ளர்கள்" என்னும் வருணத்தவர்கள் தான். இவர்களுள்ளும், சேர் வைக்கள்ளர்கள்" "ஈசனாட்டுக்கள்ளர்கள்" "புறமலைக்கள்ளர்கள்" "கண்ணிகட்டிக்கள்ளர்கள்" எனச்சில பிரிவுகளும் உண்டு. இக்கள்வர்களுக்கும், அவ்வல்லம்பர்களுக்குந்தான், "இச்செட்டிமண்டலத்து நாட்டார்கள்" என்று பெயர். இத்தனவைசியமகாசமுகத்தார்க்கு "நகரத்தார்" என்று பெயர் வழங்கி வருகிறது. ஏனையவொரு வருணத்தார்களை நாட்டார்கள் என்றேனும், நகரத்தார்கள் என்றேனும் எவ்விதக் காரணங்களைக் கொண்டும் சொல்லப் பெறுகிற வழக்கம் இல்லவே இல்லை. இப்பாலைய நாட்டாரவர்களின் இயற்கையாதிகுணங்களைப்பற்றி விவகரிக்கப் புகுந்தால் அஃதொரு தனிப்புத்தகமாகத்தான் முடியும். என்றாலும், சிலவற்றைச் சுருக்கமாகக்கூறி முடிப்பாம். இவ்வளவு நாகரீகமான காலத்தும், எவர்களையும் பயங்கரப்படுத்தக்கூடிய சரீரத்தோற்றமே இவர்களுக்கு இயற்கையிலுண்டு. தற்கால நாகரீக நிலைமைகளமைந்த விசேஷமான கல்வியறிவுகள் இல்லாதுபோயினும், பூர்வீக முறைமைகளமைந்த கூட்ட நாட்டங்களும், கட்டுப்பாடுகளும் ஒழுங்கான முறைமையிலுண்டு. குற்றவாளிகளையும், போக்கிரி, சாக்கிரிகளையும், திருடர்களையும், பிள்ளையார் கூடத்தில் கூட்டிக் கொணர்ந்து வைத்துக்கொண்டு விசாரித்து உண்மை வெளிப்படாதவரை கட்டிவைத்து அடிப்பதும் உண்டு. ஏனைய எந்த வருணத்தவர்களும் இவர்களுடைய வாய்த்தாக்குக்கே பயங்கரப்படுவார்கள். எவர்களையும் திடீரென்று கைநீட்டுதற்குப் பின்வாங்கமாட்டார்கள். அரசாங்கக் காவலாளர்கள் இந்நாட்டுக்குள் ஓர் அணுவளவுகூடப் பயன்படமாட்டார்கள். இவர்களை அல்லாமல் எந்தவிதமான களவுகளையும், வழிப்பறிகளையும், கொள்ளைகளையும் துப்புத்துலக்கமுடியவே முடியாது. இவர்களுக்குரிய நஞ்சை நிலங்களும், புஞ்சை நிலங்களும், வருஷத்துக் கொருமுறை அநூர்

வமாகவிளைந்தாற்றான் உண்டு. ஆற்று நீர்ப்பாய்ச்சல் என்பது கிடையாது. அண்ணாந்து வானத்தை நோக்கி ஏங்கிக்கிடக்கும் பூமிகள் தான். நகரத்தார்கள் ஒருங்கும் பெரிய, பெரிய செல்வந்தர்களாகலின், அவர்களை நோக்கித்தான், பலவகையான. தாக்குகளானும், அவர்களின் செல்வமாதிகளிலே தாங்களும் சுதந்தரம் பெற்று வாழ்ந்து வருகிறார்கள். இவர்களின் எந்த விதமான நன்மை, தீமை முதலிய செல்லுஞ் செலவுகள் யாவுக்கும் நகரத்தார்களின் செல்வமாதிகள்தான் ஈடுகொடுத்தல் வேண்டும். பூமிக்கு அவர்கள் சொல்லும் கிரையத்தைத்தான் இந்நகரத்தார்கள் கொடுத்துப் பெறுதலும் வேண்டும். நகரத்தார்களுக்கும் அவர்களை அல்லாமல், எந்த விதமான நன்மை, தீமைகளாகிய ஒவ்வொருகாரியங்களும், சிறப்புறுதன் மாட்டாது. நாட்டார்களுள் சிறுபான்மை, லெக்ஷாதிபதிகளாயும் இருக்கிறார்கள். யோக்கியர்களாயும், வாக்கு நாணயம் உடையவர்களாயும் இருக்கிறார்கள். பலர்தொலைகளுக்கு கொண்டுவிற்க மேலாட்களாகவுஞ் சென்று திரும்புகிறார்கள். சிலர்க்குச் சொந்தக்கடைகளும், கொடுக்கல் வாங்கல்களும் மிகுதியாக நடந்து வருகிறது. சிலர் பெரியபடிப்பாளிகளாயும், வித்வான்களாயும், சாத்திர விற்பன்னர்சளாயும் இருக்கிறார்கள். "வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான்" என்பதற்கு இலக்கியமாகவும் சிலர் இயங்குகிறார்கள். இத்தனைக்கும் காரணம் நகரத்தார்கள்தான் என்ற வுண்மையுணர்ந்து விசுவாசத்தோடும் சிலர் இயங்குகிறார்கள். கண்ட விடத்துச் செட்டியார், செட்டியாரவர்கள் என்றும், காணாதவிடத்து அவன் கிடக்கிறான் மட்டிப் பயல் என்றும் பேசுஞ் சிலரும் இருக்கிறார்கள். எத்துணை தூரம், இவர்கள் சிறந்த ஒரு யோக்கியர்களைப் போன்று தோற்றப்பட்டாலுங்கூட இந்நாடு நகரங்கள் ஒருங்கையும் நாமே அடக்கியாள வேண்டுமென்ற எண்ணம் மட்டும் இவர்கள் உள்ளத்தை விட்டு ஒருக்காலும் நீங்கி விடமாட்டாது. சாத்விகமான குணமாத்திரம் இவர்களின் கனவினுங்கூட நிகழமாட்டாது. "நீர் கிழிய எய்த வடுப்போல மாறுமே சீரொழுகுசான்றோர்சினம்" என்ற நமது, ஔவையம் பிராட்டியார் திருவாக்குகளுக்கு இலக்கியமாகத்திகழும் ஒருபெரியாரும், இந்நாட்டார்களிடையில் "சேற்றிலே செங்கழுநீர் மலர் மலர்ந்தது" போன்று ஒருவர் உளர். அவர்தான், யாரென்னின் அவர்தான் அருணாசலம் அம்பலகாரர். அவர் ஒரு பெரிய சிவபூசாதுரந்தரர். வைரவன் கோவில் சுவாமியாடி. விடியற்காலையில் எழுந்து, தெக்கு ஊருணிக்குச் சென்றால், அவர் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு, ஸ்நானஞ் செய்து, நித்திய காலையனுட்டானங்களை முடித்துச் சூரியநமஸ்காரங்கள் செய்து, பூசைகண்முடிந்து, தமது இல்லம் வந்து சேர உச்சிக்கு வந்து விடுவான் கதிரவன். எவ்விதக் காரணங்களை முன்னிட்டும் ஒரு நாள்கூட தவறுதல் இல்லாதவண்ணம், இந்த சத்கருமம் இவர்பால் மிகச்செவ்வனே நடைபெறும். இவருடைய தந்தையின் பெயர் கைலாசம் அம்பலகாரர். இவர்

களின் வீட்டுக்குத்தான் கோட்டைமாநகரத்தில், அம்பலகாரர் வீடென்று பெயர். நாட்டார்களுள், மிகவும் கௌரவமான தலைமைவாய்ந்தவர். இவருடைய கோபம் வெகுசீக்கிரம் மாறுதலடைந்து விடும். இவர் ஒரு இலக்காதிபதி. இப்பெரியார்க்குச் செல்வமாதிகளில் மாத்திரம் மிகுதியான பற்றுதலுண்டென்று பலராலும் பேசக் கேட்கப்படுகிறது. இவர் சத்கருமங்களில் இத்துணைப் பெரியராதற்குக் காரணம் நகரத்தார்களின் புண்ணிய விசேடந்தான். இன்றேல் இப்பெரியார் காளி, கருப்பன், வைரவன், முதலிய தேவதைகளை விட்டுவிட்டுப் பிரத்தியக்கமாக, "ஆதித்தனோடியடங்கும் இடங்கண்டு சாதிக்க வல்லவர் தம்மையுணர்ந்தவர்" என்பதற்கு இணங்கக் கதிரவனைக்கண்டு நமஸ்காரஞ் செய்ய வினைவழியும், எவ்விதக் காரணமும் இல்லை. இப்பெரியாரும், நகரத்தார்கள் போன்று, இரப்போர்க்கு ஏதும் இல்லையென்னாது கொடுப்பார். பலர்க்குச்சில உபகாரங்களும் செய்வார். இப்பெரியார், குணத்தினும், செய்கைகளினும் ஆண்டினும், பெரியராய் விளங்குவதற்கு ஏற்ப சரீர அளவையினும் பெரியவர்தான். இவருடைய சரித்திரம் ஒருவர் எழுதத்தகுந்த நிலைமையிலுள்ளதுதான். இந்நாட்டார்கள், கல்வியாதிகளினும், அறிவாண்மையிலும், நாகரீகமான நடையுடை பாவனைகளினும், உலகவியவகாரங்களினும், திருத்தமாகவேண்டுதல் எத்துணையோ பாக்கிகள் இருக்கின்றன. கிராம முனிசீப் உத்தியோகம் இந்நாட்டார்களில் ஒருவரைச்சார்ந்ததுதான். இவர்களில் மாமிசம் புசியாமல் நாம் சைவரென்று இருப்பவர்கள் ஒருவர்கூட இல்லை. அம்மாவாசி, கார்த்திகை, கார்த்திகைத் திங்களின், திங்கட்கிழமைகள், புரட்டாசிச் சனிவாரங்கள் முதலிய சில நாட்களில் நகரத்தார்களைக் கண்டு இவர்களும் விரதம் பிடிப்பதும் உண்டு. ஆடிச்செவ்வாய்தான் இவர்களுக்கு மிக விசேடமானநாள். எந்தவிதமான செலவு அழிவுகளையும், கணக்கெழுதிப்பார்க்கும் வழக்கமும், செட்டாகச் செலவு செய்து, பெரும்பொருள் மீத்து வைத்தல் வேண்டும் என்ற, எண்ணமும்,பெரும்பான்மையோரிடம் இருக்கமாட்டாது. இவர்களின் இல்லத்தில் போனவர்கள், வந்தவர்களாகிய, எவர்களுக்கும், ஓரணுவளவுகூடத் தரித்திரக் குணமின்றி சாப்பாடுநடக்கும், உணவளிக்குந் தன்மையில், பெண் மக்களும், நல்லகுணம் உடையவர்கள்தான். இத்தன "வைசிய மகாசமுகத்தார்" காவேரிப்பூம் பட்டினத்திலிருந்து வந்தவர்கள்தானோ? அல்லது, இப்பாலைய நாட்டுக்கு பூர்வீகமாய் உடையவர்கள் தானோ? எனச்சந்தேகிக்கும் ஒருவர்க்கு, இதன் மேல்வரும் சில விஷயங்களால் ஆதியில், காவிரிப்பூம் பட்டினமாகிய ஓர் பெரிய நகரத்திலே இருந்துதான் வந்தவர்கள் என்பதையும், சுத்தசைவசித்தாந்தக் கொள்வகைகளைத்தான் உடையவர்களாய் இருந்தார்கள் என்பதையும், நன்கு தெளிய விளங்கிக் கொள்ளலாம். யாங்ஙனமெனின் ? இப்பாலைத்தினைக்கு , " பிள்ளையார் ' ஆலயமாவது, ஆறுமுகக்கடவுளின் ஆலயமாவது, ஈஸ்வரன் ஆலயமாகிய

சிவன் கோவிலாவது, அறுபத்து மூன்று நாயன்மார்களின் ஆலயமாவது பெரும்பான்மையும், உரியனவல்லவாம். பின்னர், பேய்க்கணங்களுக்குரிய சில பீடங்களும் அப்பேய்க்கணங்கட்குத் தலைமையான சில தேவதைகளின் பீடங்களுந்தான் உரியனவாம். அநுபவம், உத்தி, சுருதியாதிகளின் சம்மதமும் ஆம். ஆகலினாற்றான், அக்காலத்து, அரசர்களால் இத்தனவைசிய சமுகத்தார்க்கு என்று, சர்வசுதந்தரங்களோடும், மன்னிணை மரியாதைகளோடும் விடப்பட்டிருக்கும் சிவாலயங்களிலிருந்து, இற்றை நாள்வரை, இவ் வைசிய மகா சமுகத்தார்களால் இப்பாலையநாட்டிடை கட்டப்பெற்றிருக்கும் சிவாலயங்கள், கணேசன், சண்முகநாதன் ஆலயங்கள்வரையுள்ள ஒவ்வொரு ஆலயங்களினும், எந்த விதமான சகல சுதந்தரங்களும், முதல்விபூதி, முதற் சந்தனம், முதன்மாலை, முதற் பரிவட்டம் முதலிய ஒவ்வொருவிதமான மன்னிணை மரியாதைகளும் உரியனவாய், ஏனைய பல வகுப்பார்களும், நாட்டார்களும் மனப்பூர்வமாய் ஒப்பப் பூர்வீகமாய் வழங்கப்பெற்று வருகின்றன. நாட்டார்களுக்காவது. ஏனைய எந்த வகுப்பார்களுக்காவது, மேற்கண்ட அம்மரியாதைகள் உரியனவல்ல. ஆனால், கண்டதேவிச்சிவாலயம்; எழுவங்கோட்டைச் சிவாலயம்; கள்ளாங்குடிச்சிவாலயம்; கோவிலூர்ச்சிவாலயம்; சாக்கோட்டைச் சிவாலயம்; கானாடுகாத்தான் பெரிய கோவிற் சிவாலயம்; கல்லல் சிவாலயம்; காளையார் கோவிற் சிவாலயம்; பரியாம்ர்தப்பட்டிச் சிவாலயம்; நெற்குப்பைச் சிவாலயம்; குன்றக்குடிச் சிவாலயம் முதலிய பூர்வீகச் சிவாலயங்களிலோ எனில்? இச்சிவாலயங்கள், எண்ணிலடங்காத நெடுங் காலங்களுக்கும் முன்னரே இருந்துள்ள ஆலயங்களாம். பாண்டிமன்மக்கள் அரசாட்சி நடக்கும் காலத்தில் முறையே, முதன் முதல் பிராமணர்களுக்கும், அதற்கடுத்த பின்னர், மன்மக்களுக்கும், அதற்கடுத்த பின்னர், இவ் வைசிய மகாசமுகத்தார்க்கும், அம்மரியாதைகள் வழங்கப் பெற்றுவந்தன. அக்காலத்துக்குப் பின்னர், சில துருக்கர்களும், நாய்க்கன்மார்களும், கள்ளர், மறவர்களும், நியாயம், என்பதும், நடுவு நிலைமை என்பதும் ஓரணுவளவுமின்றி, மிருகவியற்கையுடன் கூடினவர்களாய், வாய்த்தாக்குகளாலும், கைத்தாக்குகளாலும், கத்திக்குத்து, வெட்டுக்குத்துக்களாலும் இந்நாடு, நகரங்களைக் கைப்பற்றி ஆளத்தொடங்கிக் கொண்டார்களாகலின், அவ்வரன் முறைக்கட்டுக்களொருங்கும் கெட்டு, அவ்வப்பொழுதுள்ள, மல்லயுத்தக்காரர்களுக்கே, அம்மரியாதைகள் நடந்து வந்திருக்கின்றன. அவைகள், இந்தக்காலத்தும் "சிவம்" என்றால் அஃது இன்னது, அதற்காக "ஆலயம்" என்றால், அவைகளுக்குரிய பொருள்கள், இன்ன, இன்ன, அவ்வாலயங்களிலே நாடோறும் நடக்கும் கிரிகையாதிகளுக்குரிய பொருள்கள் இன்ன இன்ன, ஆங்கு அர்ச்சகரால் தரப்படும் "விபூதி" பிரசாதங்களுக்குரிய அருமை பெருமைகளும், மகத்துவங்களும் இன்ன, இன்ன வென்று ஓரணுவளவு கூட உணருஞ் சத்தியற்ற கள்வர்கள் கையினும், மறவர்கள் கையினும்,

அவைகளைத் தீண்டுவதற்கு ஓரணுவளவுகூட யோக்கியம் அல்லாத அதர்ம சண்டாளர்கள் கையினும், அப்பிரசாதங்களும், அம்மரியாதைகளும் முதன், முதலாக வழங்கப்பெற்று வீணே துர்விநியோகம் ஆகின்றன. இவ்வைசிய மகாசமுகத்தார்களோ, இந்நாட்டுச்குப் பூர்வீகஸ்தர்கள் அல்லாமையானும், தங்களுக்கென்றுத் தனியாலயங்கள் ஏற்பட்டுக் கொண்டமையானும், அச்சுதந்தரங்களொருங்கும் எங்களுக்குரியன வென்று போராடுதல் நியாயம் ஆகாதெதன உணர்ந்தே, அவைகளிற் றலையிட்டுக் கொள்ளாமல் விலகிக் கொண்டார்களாம் என்க. பூர்வீகச்சைவர்களாகலின், இக்காலமும், அவ்வாலயங்கள் ஒருங்கையும், வேண்டும் சீர்திருத்தமுஞ்செய்து, இலக்ஷகணக்குகளிலே அழகிய திருப்பணிகளையுஞ் செய்து அக்சொள்ளையாளர்களின் கைகளிலே ஒப்புக்கொடுத்து விடுகிறார்கள். அக்கள்வர்கள் தங்களிட்டம்போன்று வேட்டையாடுகிறார்கள். அக்கள்வர்களின், ஒவ்வொரு விக்ரகங்களுக்கும், ஆலயங்களுக்கும், நடைபெறும். எந்தவிதமான பெருஞ்சிறப்புக்களும், தேர், திருவிழாக்களும், உயர்ந்த நவரத்தினாதிகளால் இணைக்கப்பட்ட ஆபரணாதிகளும், பரிவட்டங்களும், நகரத்தார்களுக்குத்தான் உரியனவாகும், நகரத்தார்களின் மேற்பார்வையும், தெய்வபக்தியும், விசுவாசமும், கருணையும், தயவுதாட்சண்யமும், சமயாபிமானமும், ஒருசிறிது மாறுபடுமானால், கள்ளர், மறவர்களுடைய ஆலயங்களும், விக்ரகங்களும் கவனிக்குமிடத்து, "வெறுங் குண்டியம்மணம், போட்டுக்கடிசம்மணம்" என்பதற்கு இணங்கத்தானிருக்கும். ஆங்கு நடக்கும் பூசைகளோ! நீர்க்காட்டும்பூசை, நிழல்காட்டும் பூசை, ஆட்காட்டும் பூசை, அழல்காட்டும் பூசை, ஆவிகாட்டும் பூசைகள்தான், பிண்டம்பெருங்காயம் அன்னம் வில்வாதிலேகியமும்" ஆய்விடும். மேலும், அக்காலம், "இரட்டையர்கள்" திருவாங்கூருக்குச் சென்றிருந்தக்கால், அவ்வூர்ச் சுவாமிதரிசனம் செய்து முடிந்தவுடன் தங்களின் பசி பொறுக்கமாட்டாமல், அச்சிவாலயச் சுவாமியை நோக்கி "தேங்குபுகழாங்கூர் சிவனே யல்லாளியப்பா!" ஈங்கு,"நாங்கள் பசித்திருக்க நியாயமோ? என்று கேட்டதற்கு, ஆங்கு, "போங்காணும், கூறுசங்குடோன் முரசு கொட்டோசை கண்டதல்லால், சோறுகண்ட மூளியார்? சொல்?" என்று அச்சுவாமி திருவாய்மலர்ந் தருளியதற்கு ஏற்ப, இக்காலம் இவர்களின் விக்ரகங்களும் வாயை ஆவெனப் பிளக்க ஆரம்பித்துக் கொள்ளும். அப்பொழுது இக்கள்வர்களின் ஆட்ட பாட்டங்களும், சுதந்தரங்களும், அதிகாரத்தோரணைகளும், எங்கள் சுவாமி, உங்கள் சுவாமி என்பதும், பலவிதமான அடாப்பிடிக்கதைகளும் மிக நன்கு விளங்கும். அச்சுவாமிகள் செய்த புண்ணியந்தான் இவ்வைசியமகாசமுகத்தார் இத்துணைதூரம் கவனித்துப் பாதுகாக்க நேர்ந்தன. இன்றேல், அவ்விக்ரகங்களையும், அவ்வாலயக்கற்களையும் ஒவ்வொன்றாகப் பிடுங்கி, இப் பாலைநாட்டுக் கள்ளுக்கடைச், சாராயக்கடைகாரர்களை வாயடி, கையடி போட்டு அவர்கள்பால் அடகுக்காக ஒப்புக் கொடுத்துவிட்டு, நீங்கள் சம

மதப்பட்டு, எத்தனே சுண்டாங்கள்ளும், எத்தனே புட்டிசாராயமும் கொடுப்பீர்களோ, அப்படிக் கொடுங்கள், நாங்கள் ஒன்றுஞ் செய்யவில்லை என்று வேண்டிக் குடித்துவிட்டு இதற்குள் எப்பமும் பரிபூரணமாக விட்டிருப்பார்கள். அச்சுவாமிகளும் இதுவரை மலேச்சாரல்களை நோக்கி ஓடியே போயிருக்கும். அங்ஙனம் இன்றி, அச்சுவாமிகளுக்கும், வாய்க்கரிசி போட்டு, கோடிகளும் போட்டு, செவ்வலரிப் பூமாலைகளும் போட்டு, அச்சுவாமிகள் எங்களுடையதென்னும், அக்கள்வர்களுக்கும், அம்மறவர்களுக்கும், வாய்க்கரிசி போட்டுக், கோடிகளும் போட்டு, மாலைகளும் போட்டு, அவ்வாலயங்களேயும், கருங்கற்பணிகளாக நீடூழிநிலைத்து நிற்குமாறு செய்து, பாழ்ங்காடுகள் ஒருங்கையும், நஞ்சை, புஞ்செய்களாகவும், அழகிய கிராமங்களாகவும் செய்நேர்த்திபண்ணி, கால்வாய்கள் வெட்டி, ஏரிகுளங்களும் ஆக்கி, இலக்ஷக்கணக்குகளில் பெறுமதிப்பையும், அக்கிராமங்களுக்கு உண்டாக்கி, தேர், திருவிழாக்களேயும் நன்கு நடைபெறுமாறு, தோரணேகளாக உண்டுபண்ணி, கிறிஸ்தவர்களாலும், மகம்மதியர்களாலும் கொள்ளேயடித்துக் கொள்ளவிட்டு விடாமலும், வம்மிச பாரம்பரையமாக, வளர்த்துப், பாதுகாத்து வைத்துக் கொண்டிருந்த ஒரு நன்மைக்காகத்தான், அக்கள்வக்கபவர்களும், அம்மறவக்கயவர்களும், அவர்களைச்சார்ந்து கொண்டிருக்கும் சிலபார்ப்பனக் கயவர்களும், சமயம் நேர்ந்துழியெல்லாம் இஃது, எங்கள் சுவாமியாக்கும், இஃது, எங்கள் ஆலயமாக்கும், எங்களுத்குத்தான் சர்வசுதந்தரங்களும் உண்டுமாக்கும், கிராமங்கள் ஒருங்கையும் எங்களிடம் ஒப்புக்கொடுத்து விடுங்கள், சுவாமியை ஈங்குவிடமாட்டோம். ஆங்குவிடமாட்டோம், அங்ஙனம் விடவேண்டுமானுல், நாற்பதாயிரம் கொடுங்கள், அன்பதாயிரம் கொடுங்கள், ஆலயத்துக்குள் நுழையாதேயுங்கள், பரிவட்டங்களே யெல்லாம் எங்கள் மண்டையிற்றூன் முதன் முதலாகக் கட்டவேண்டுமாக்கும், எங்கே தேரை இழுத்து விடுங்கள் பார்ப்போம் என்றும், இங்ஙனம் பலவிதமாகப் போராட்டத்துக்கும் கச்சை கட்டுகிறூர்கள். சமயங் கண்டு சில ஆர்பாட்டங்களேச் செய்து காரியாதிகளேப் பிடுங்கிக் கொள்ளவுஞ் செய்கிறூர்கள். பின்னர் சில நாட்கள் பொறுத்து, ஐந்தாறு கும்பிடுகளேப் போட்டு செட்டியாரவர்களேக் கண்டு, ஆலயம், கிராமம், காரியாதிகள் எல்லாம் ஒருங்கும் இவடத்துக்குத்தானே இருக்கட்டும், எங்களால் அவைகளேக் கட்டிக்காத்து, வேண்டுந்தொகைகளேச் செலவு செய்து, ஆண்டு அனுபவிக்கவும் முடியவில்லை என்று, தங்களின், முப்பத்திரண்டு வெற்றிலைக்காவிப்பற்களேயும் ஒன்றுபோல விரித்துக்காட்டி ஒப்புக்கொடுத்தும் விடுவார்கள். அடடா! நமது இந்தியதேயத்துச் செந்தமிழ்மக்களின் நிலைமையும், கல்வியறிவும், இயற்கையும் இருந்தவாறென்னே? இக்கள்வக்கயவர்களுக்கு மகாராஜாக்கள் என்றும், ஜமீன்தார்கள் என்றும் அழைக்கப்படும் பெயர்கள் எதுக்காக! இவர்கள், எந்த நிலைமையில் மனிதவர்க்கத்தைச்சார்ந்தார்கள். பிறந்தும்

பிறவாத பேற்றையன்றோ பெற்றிருக்கிறார்கள். அடடா! இஃதென்ன பாமரத்தன்மை? மனிதனென்று பிறந்து, வளர்ந்து மீசையுந்தாடியுமாகச் சிறந்தும் நியாயம் வேண்டாமா? ஒரு நிலைமை வேண்டாமா? ஒரு நன்றியறிதல் வேண்டாமா? சத்தியம் வேண்டாமா? நல்லவொழுக்கம் வேண்டாமா? ஒரு கல்வியறிவு வேண்டாமா? இவ்வைசிய மகாசமுகத்தைப்பற்றி ஒரு சிறிதளவேனும் பகுத்துணர்ந்து பார்க்க வேண்டாமா? சைவசமயத்துக்கும், சிவாலயங்களுக்கும், அச்சுவாமிகளுக்கும், அவைகளைச்சார்ந்த கிராமம், பூமிகளுக்கும் நமக்கும் என்ன சம்பந்தம் என்று கண்டு தெளிதல் வேண்டாமா? அவ நியாயமானமார்க்கத்துட் பிரவேசிக்கலாமா? இப்பூமாது, எவர்களுக்குச் சொந்தம் என்று எண்ணல் வேண்டாமா? எருமைக்கடாவின் சாணத்தைச் சுட்டசாம்பலையும், உவர் நிலத்தண்ணீரையும், மரச்சாந்தையும் அசேதனமாகிய கல்லின் கழுத்திலே அணிந்திருந்த மாலையையும், கட்டியபரிவட்டத்தையும் யாருக்குத்தான் முன்னர் கொடுத்துமென்? யாருக்குத்தான் பின்னர் கொடுத்துமென்? என்று நியாயமாகிய உண்மை கண்டு உணர்தல் வேண்டாமா மிகுந்த பக்தி விசுவாசத்தோடு பெரும்பொருள்களைச் செலவு செய்து கொண்டு, அச்சாம்பன் முதலியவைகளை தேவாமிர்தமாமென்று நம்பிக் கொண்டிருக்கும் நகரத்தார்களுக்கு அவைகள் உரிமை யாகட்டுமே என்று விட்டுவிட வேண்டாமா? சாதாரண ஜனங்கள், தேர், திருவிழா என்று கூடிய ஒரு பெருங்கூட்டத்தில் வம்புதும்புகள் செய்து, அக்கூட்டத்தார் காண்டற்குரித்தான கண்காட்சியாக விளங்குவனவற்றைக் கெடுத்தலும் நியாயமாகுமா? தமிழ் மக்களுள் ஒருவருக்கொருவர் பொறுமை வேண்டாமா? ஒருமை பெற்று ஒரு பெரியார்க்கு ஒரு சிறியார் அடங்கியொழுகி இயலுதல் வேண்டாமா? கோடு, நாடுகளுக்குச்சென்று, வீணே பெரும்பொருள்களைத் துர்வினியோகப் படுத்தலாகுமா? ஒருகாசுக்குக்கூட உதவாக்கரையான அவ்வுத்தியோகஸ்தர்கள், அடா புடா வென்றும், என்காணும், போங்காணும் என்றும், போக்கிரிபையல்களே என்றும், பேசுவதைக் கேட்டுக் கொண்டும் இருக்கலாமா? நம்முடைய சரீரகத்துள் உள்ள, நமக்கு அடக்கமாக வேண்டும் மனோசக்தியை நாம் அடக்கியாளவும், அம்மனோசக்திக்கு வேண்டும் சமாதானங்களை நாம் சொல்லிக்கொள்ளவும் நமக்கு முடியாமையான் அன்றோ! நமக்கு எத்துணையோ அனர்த்தங்கள் எல்லாம் நிகழுகிறதென்று நாம் நன்குணர்தல் வேண்டாமா? நமது, காளையார்கோவில், சிவாலயத்தோடும், அக் கோவிலைச்சார்ந்த கிராமம். பூமிகளோடும், சீர் சிறப்புக்களோடும் தேர் திருவிழாக்களோடும் ஏனைய பல நல்ல காரியங்களோடும் பாழாப் போன, இந்த சிவகங்கை சமஸ்தானம் எத்துணை போராட்டங்களாடி அலங்கோலப்படுத்தி யிருக்கின்றன. இப்பொழுது, நமது, கோவிலூர்ச்சிவாலயமும், அவ்வாலயத்தைச்சார்ந்த கிராமம், பூமிகளும், இவர்கள் உண்ணுஞ் சோற்றிலா மண்ணள்ளிப் போட்டன. இன்றேல் இவர்கள் பார்க்குங் கண்

களிலா, மண்ணள்ளிப் போட்டன. இவ்வாலயங்கள், இந்நகரத்தாரைச் சார்ந்து, எத்துணை தூரம், சீர்சிறப்புக்களுடனும், பட்டு, ஆடையாபரணாதிகளுடனும், கருங்கற்றிருப்பணிகளுடனும், செல்வமாதிகளுடனும், செல்வாக்குகளுடனும், அபரிமிதமான திருவருட்சக்திகளுடனும், மேனோக்கி வந்து கொண்டிருந்தன. அ, ஆ! அந்தோ! நமது, சிவாலயங்கள் என்றால் என்ன, இச்சமஸ்தானத்தின் சிவாலயங்கள் என்றால் என்ன, சைவசமயத்தாரின் பொதுச் சொத்துக்கள் அன்றோ? இச்சமஸ்தானத்துக்குத்தான், ஈஸ்வரகிருபை குன்றியிருக்கிறதென்று இச்செந்தமிழ்ஞாலம் தெரிந்துகொண்டிருந்தன. இப்பொழுது, இச்சமஸ்தானத்தைச்சார்ந்த தேவாலயங்களுக்குங்கூட கேதுதசையும், சனியினுடைய அபகாரமும், செவ்வாயினுடைய சித்திரமும் சூழ்ந்துகொண்டிருக்கின்றதென்று தெரிந்துகொள்ள வேண்டியதாய்ப் போயிற்று. என் செய்யலாம்! வினைவழி, தேவாதி தேவர்களையுங்கூடவா விட்டுவிட்டது. ஒரு உத்தமமான, சிவயோகியாரின் மனவருத்தத்தை, இச்சமஸ்தானம் இப்பொழுது ஏற்றுக்கொண்டிருக்கிறது. என்ன தீவினைக்காகவோ! இதற்குமுன்னரே, இரம்பை, ஊர்வசி, திலோத்தமை, மேனை, முதலிய தேவமகளிர்களுங்கூடத் தோற்பனவாயுள்ள ஒரு நல்ல குலமகளான, சுவர்ன விக்ரகம்போன்ற ஒரு பட்டத்து மனையாளையும், மகவையும் இழந்து, அலங்கோலமாகத் திரிகின்றன. இன்னும், என்ன, என்ன கேடுகள் நிகழப்போகின்றனவோ? "எந்தையடியார் மனங்கலங்கின், ஈரேழுலகும் கலங்காவோ" என்றும்,

"ஈசனடியார் இதயங்கலங்கிடத்
தேசமும் நாடும் சிறப்பும் அழிந்திடும்
வாசவன் பீடமும் மாமன்னர் பீடமும்
நாசமதாகுமே நம்நந்தியாணையே" என்றும்,

"பத்தினி பத்தர்கள் தத்துவஞானிகள்
சித்தங்கலங்கச் சிதைவுகள் செய்தவர்
அத்தமும் ஆவியும் ஆண்டொன்றின் மாய்ந்திடும்
சத்தியமீது சதாநந்தியாணையே" என்றும்,

தமிழ் மாமறைகள் ஓலமிடுகின்றன. நாட்டார்கள் ஆதிக்கம்பெற்று விளங்கும் ஐயனார் ஆலயமுதலாகவுள்ள ஒவ்வொரு வனதேவதைகளின் பீடங்களுக்கும், ஆலயங்களுக்கும் நடைபெறும் ஒவ்வொரு பெரும் படைப்புக்களும்,சிறப்புக்களும், நகரத்தார்களையே பொறுத்தனவாம்.இன்றேல் வெறும் சாம்பிராணிப் புகைதான். கற்பூரத்தைக்கூட இலகுவிலே கண்டறியமாட்டாது. சிறுபான்மையாக, இப்பீடங்கள், இவ்வாலயங்களிலும், முதல் விபூதி, முதற்சந்தனம், முதன்மாலை, முதற்றீர்த்தம், முதற் பரிவட்ட முதலிய மரியாதைகள் நகரத்தார்களுக்கே பூர்வீகமாக வழங்கப் பெற்று வருகின்றன. மனப்பூர்வமாக நாட்டார்கள் வேண்டுமென்றே அக்காலம்

விட்டுக் கொடுத்திருக்கிறார்கள். சில இடங்களில் முரண்பட்டு சண்டைசச் சரவுகளுக்கும் நிற்கிறார்கள். இந்த நாட்டிடை தற்காலம்உடைத்தான ஒவ்வொரு சிவாலயங்களும், ஏனைய ஆலயங்களும், அவைகளைச்சார்ந்த கிராமம், பூமிகளும் நகரத்தார்களின், பரிபாலனமாகவும், பாதுகாப்புகளாகவுந்தான் இருந்து வருகின்றன. இப்பாலையநாடு,செட்டிமண்டலமாக, மாறியபின்னர் இக்காலம் பிராமணர்கள் குடிகளாகவந்து, நிரம்பி இருக்கிறார்கள். குழந்தை, குஞ்சுகள், வீடுவாசல்கள், தோட்டந்துரவுகள், செல்வமாதி செருக்குகண் முதலிய பலவகைகளாற் சிறந்துமிருக்கிறார்கள். நகரத்தார்களுக்குப் பஞ்சாங்கஞ் சொல்லும் பார்ப்பார்களுட் சிலர் இலக்காதிபதிகளாகவும் இருக்கிறார்கள். ஒருவன்றன் நிழலானது அவனைவிட்டு நீங்காதவாறுபோல ஒவ்வொரு நகரத்தாரையும் ஒரு சுமார் நான்கைந்து பிராமணர்கள் விட்டு நீங்காமல் நின்று, சூழ்ந்து கொண்டும் பிழைக்கிறார்கள். நகரத்தார்களைச்சார்ந்த ஒவ்வொருகாரியங்களும் அவர்களாற்றான் முடிவு பெறுகிறது. அவர்கள், பிராமணர்களாயிருந்தும், நகரத்தார்களுக்கும், நாட்டார்களுக்கும், அடங்கி ஒடுங்கித்தான் இயலுவார்கள். நகரத்தார்கள் இல்லங்களில் கணக்கு வேலைகள் பார்ப்பர் ஒருங்கும் பெரும்பான்மையும் பார்ப்பார்களாகவேதான் இருப்பார்கள். இந்நாட்டுக் கவரன்மெண்டு உத்தியோகம் பார்ப்பவர்களும் பெரும்பான்மை பார்ப்பார்கள்தான். நகரத்தார்களுக்கும், பார்ப்பார்களுக்கும் மிகுந்த ராசிதான், உண்டு. அப்பார்ப்பார்களால் எவ்வகையான க்ஷேமலாபங்களுக்கும், நல்லராசியே தவிர கெடுதல்கள் கிடையாது. அவர்கள், முன்னதாகவே ஆசீர்வதித்து அச்சதை கொடுப்பார்கள். அப்பார்ப்பார்கள், ஓயாமல் தங்களின் குறைபாடுகளை செட்டியாரவர்களிடம், எவர்களும் பரிதாபப்படக்கூடிய நிலைமையில், இல்லாவார்த்தைகளாலும், இனிய வார்த்தைகளாலும், இரக்கவார்த்தைகளாலும், செட்டியாரவர்களைப்பற்றிய கௌரவவார்த்தைகளாலும், புகழ்மொழிகளாலும், தோத்திரங்களாலும், கதைகள், நொடிகளாலும் சொல்லிக்கொள்வது மிக நன்றாகவும், அதிசயமாகவும் இருக்கும். அந்தவகையில் ஓர் அணுவளவுகூட மான வெட்கப்படமாட்டார்கள். இப்பார்ப்பார்களுட் சிலர், சில நகரத்தார்களிடம், இரவென்றும், பகலென்றுமில்லாமல் பதினைந்து ரூபாய்கள் பெறும்படியான பலவிதத் தொண்டுகளையும், ஊழியங்களையும் செய்துவிட்டு இரண்டு ரூபாய் அவர்களிடம் யாசகம் பெற்றுக் கொள்வதற்குள் பெரும் சங்கடமும் பட்டு விடுவார்கள். சிலர்க்கு யாசகம் என்று ஒரு பைசா வேனும் பெற்றுக் கொள்வதிற்றான் மிகுந்த பிரியம் உண்டு. சில பார்ப்பார் எங்கள் செட்டியார் வீடு, எங்கள் செட்டியார் வீடு என்று உண்மையில், அன்போடும், ஆதரவோடும்,நிலைமையோடும் சுதந்தரமாகச் சொல்லிக்கொள்வதும் உண்டு. சிலர் அங்ஙனமின்றி செட்டியார் வீட்டை ஏமாற்ற வேண்டுமென்ற எண்ணத்துடனும், உள் ஒன்றுவைத்துப் புறமொன்று பேசுகிறவர்களும் உண்டு.

நகரத்தார்களின் இல்லங்களில் நிகழும் எந்தவிதமான விசேடக்காரியங்களி னும், பார்ப்பார்களுக்கு படிவிசாரணைகளும், போஜனங்களும், பூரிதக்ஷணை களும், சோமன் சோடுகளும், சிபார்சுக் கடிதங்களும், கலசம், செம்பு, பெரிய இலைகள் முதலியவைகளும் முன்னதாகவே உண்டு. அவைகள் ஒருங்கும் கட்டளைகளாக ஏற்பட்டுமிருகின்றன. பள்ளிக்கூட உபாத்தியாயர் களும் பெரும்பான்மை அவர்களாகவுந் தானிருப்பார்கள். பார்ப்பார்களில் லாத நகரமே கிடையாது. சிலர் வடமொழி, தென் மொழி பண்டிதர்களா யும், சிலர் பெரிய சாத்திரிமார்களாயும், பாகவதர்களாயும், சங்கீதவித்வான் களாயும், சிலர் இதிகாசப் பிரசாரகர்களாயும், சிலர் தத்துவ சாத்திரிகளாயும் சிலர் யோகீஸ்வரர்களாயும், சிலர் மெய்ஞ்ஞானிகளாயும், சிலர் மாந்திரவாதி களாயும், சிலர், பெரிய வைத்தியர்களாயும், சிலர் எவராலும் அடக்க முடியா தவாயாடிகளாயும், இருக்கிறார்கள். இப்பொழுது சில பார்ப்பார்கள் வியா பாரிகளாகவும் மாறியிருக்கிறார்கள். எந்தவிதமான தொழில்களிடத்தும் அறி வோடும், ஆண்மையோடும், தந்திரமந்திரத்தோடும், பின்வருஞ் செயல்களை உத்தேசஞ்செய்தும் தங்களின் சக்தியைச் செலுத்துவார்கள். தொட்டி லையும், ஆட்டிக்கொண்டு, குழந்தையின் தொடையையும் கிள்ளுகிற சில ரும்உண்டு. பெரிய கொள்ளைக்காரர்களாகச் சிலரும் உண்டு. முதன் மந்திரி உத்தியோக முதற்கொண்டு, களபாகம்' வீமபாகம் வரை நகரத்தார்க்குச் செய்து முடிப்பவர்கள், இப்பார்ப்பன வகுப்பார்கள்தான். சாதாரணமான ஒரு சூத்திரனைப் போன்றே, அங்கவத்திரத்தை இடுப்பில் இறுக்கக்கட்டிக் கொண்டு, வஞ்சமின்றி எந்தவேலைகளையும் சிலர் நன்றாகப்பார்ப்பார்கள். சில நகரத்தார்கள் நாத்துடுக்காகப் பேசுஞ் சில கொடியவார்த்தைகளையும், கேட்டுக் கொள்வார்கள். மனிதனை, மனிதன் தோத்திரம் பண்ணவேண்டும் பழக்கவழக்கங்களைப் படித்துக் கொள்ளவேண்டும் ஒருவர், இப்பார்ப்பார்க ளுட் சிலரிடம் நன்றாகப் படித்துக் கொள்ளலாம். இச்செட்டி மண்டலத்து ஏற்பட்டிருக்கும் சத்திரங்கள் ஒருங்கும் இவர்களுக்குத்தான். ஒன்றுக்கும் உதவாக்கரையான புளிச்சாற்றோடு கூடிய, கல்லும், நெல்லும் கலந்த பருக் கைகளை மேய்ந்துகொண்டு, பூரிகளையும், எதிர் நோக்கி வட்டமிடும் பார்ப் பனபெரியோர்களையும், குழந்தை குட்டி, பெண்டுகளையும், பால்யர்களையும் பார்க்க மிக்கப் பரிதாபமாயிருக்கும். இதில், அபின் தின்னுகிறவர்களும், கஞ்சாக்குடிக்கிறவர்களும், சூதாடுகிறவர்களும், வெறியாளர்களும், பலருண்டு. முழுச் சோம்பேறிகளாயிருக்கிறவர்களும் உண்டு. கட்குடிக்கிறவர்களும், புலாலுண்ணும் புதிய நாகரிகமுடையவர்களும் உண்டு. இதில், எங்கு சுற் றியாவது, ஆங்காங்குடைத்தான வாசகசாலைகளுக்குச் சென்று பத்திரிகை களைப் படித்துத் தீர்த்து விடுவாரும் பலருண்டு. இதில் தாஸ் கட்சியே மிகச்சிறந்தன வென்று, வீண்வாய் பேசுகிற சிலரும் உண்டு. நமது, நகரத் தார்களைச் சார்ந்த சில பெரிய பிரபுக்களிடம் முதன்மந்திரிகளாயிருக்கும்

சில பார்ப்பார்கள், கொண்டு விற்றுக் கணக்கு முடித்துக் கொண்டுவரும் கூட்டாளிகள். மேலாட்களாகிய, நகரத்தார்களுக்குச் செய்யுங் கொடுமைகள் மிக்க பலவுள்ளன. அவர்களிடம் தங்களுக்குப் போதுமான கைக்கூலிகள் பெற்றுக் கொள்வதும் உண்டு. இன்றேல், அந்தக் கணக்குச் சொட்டை, இந்தக் கணக்குச் சொட்டை, இந்தக் கணக்கை வரவு வைத்து இவர் கணக்கில் பற்றெழுதல் வேண்டும். அந்தக் கணக்கை வரவுவைத்து இவர் கணக்கில் பற்றெழுதல் வேண்டும, என்று, பலவிதச் சாக்குப் போக்குகளை அப்பெரிய செட்டியாரவர்களிடம் தனிக்க, தனிக்கச் சில சோள்களுடன் பொருந்தச் சொல்லிக் காட்டிக் கொண்டு, அக்கூட்டாளியின் கணக்கு வழக்குகளைச் சீக்கிரம் பார்த்துத் தீர்த்து வெட்டிவிட ஒட்டாமல் சில அக்கிரமங்களையும் செய்யப் பின்னிட மாட்டார்கள். இவர்கள் பிராமணர்களாயிருந்தும், நியாயாநியாயங்கள் இன்னது தான் என்பதை, செல்வத்தின் மீதுற்றபேராவலினுலே உண்மை யுணர்ந்து கொள்ளாமல்அதர்மசண்டாளச் சூத்திரர்களாக மாறுபட்டிருக்கிறுர்கள். தேவகோட்டை பெரியமைனர் இல்லத்துள்ள உப்பூர் வெங்கட்டராமன் என்னும் ஓர் பார்ப்பனச்சண்டாளன், அப்பெரியாரிடம் யாசகம் பெற்றுத் திரும்புவாரிடம் தான் லஞ்சம் பெற்றும் பொருள் சேர்த்தான் என்பது, இவ்வுலகப் பிரசித்தமேயாம். நியாயத்தையும், உண்மையையும் கவனிக்கப் புகுந்தால், ஒவ்வொரு வருணுச்சிரம தருமிகளிடத்தும், அவ்வவர்களுக்குரிய நல்லொழுக்க வியற்கையாதிகள்' எப்படி மாறுபட்டிருக்கிறதோ, அஃதே மாதிரியாக பார்ப்பார்கள் இடத்தும் மாறுபட்டுக் கொண்டன. பலவிதமான கொடுமைகளும் மிக மலிந்து காணப்படுகின்றன. இனி, வேளாளர் வகுப்பாருண் முதன்மை பெற்ற "சைவாள்" எனப்படும், ஒருவகுப்பைச் சார்ந்த ஒரு சிலர் ஆங்காங்கு ஒவ்வொரு நகரத்தும், இரண்டு வீட்டுக்காரர், நான்கு வீட்டுக்காரர், நகரத்தார்களை அண்டி வாசஞ்செய்து வருகிறுர்கள். எந்த மார்க்கத்தானும், அவர்களும், கவனிக்குமிடத்து நகரத்தார்களுக்கு ஏவலாட்களாகத் தான் காணப்படுகிறுர்கள். அவர்கள் பால், வஞ்சம், பொய், கொலை, களவு, கட்காம முதலிய தீ யொழுக்கங்கள் பெரும்பான்மையுங் காணப்படமாட்டாது. சிலர் தொலைகளுக்கு நகரத்தார்கள் சம்பந்தமாய் கொண்டுவிற்கவும் சென்று திருப்புகிறுர்கள். சிலர் பெரிய வித்வான்களாகவும் இருக்கிறுர்கள். அவர்கள் பூர்வீக நெறிகளில் நின்றும், எவ்வித காரணங்களை முன்னிட்டும் மாறுதலடையவில்லை. பெரும்பான்மையும், உச்சிக்குடுமியுள்ளவர்களாயும், நியமமான சிவபூசையுள்ளவர்களாயும், வரன் முறையான தீக்கைப் பேறுடைய வர்களாயும் நித்திய வநுட்டான கருமங்களை சிறிதும், நழுவவிடாதவர்களாயும், வீண்வார்த்தை, அகங்காரம் டாம்பீகம் அற்றவர்களாயும், முறையான பல நல்லொழுக்கங்கள் உடையவர்களாயும் இருக்கிறுர்கள். அளவுக்கு மிகையான யோக்கியம் உள்ளவர்

கள். தேசிகர் என்று சொல்லப்படும் ஒருவகுப்பாரும், இவர்களும், பெரும் பான்மையும் ஒரே வகுப்பாரெனத்தான் சொல்லுதல் வேண்டும். தேசிகர் வகுப்பாரைச் சார்ந்த சிலர் மாத்திரம் நாங்கள் இவர்கள் பால் பெண்கள் எடுத்துக்கொள்ளுவோமே தவிர, இவர்களுக்கு நாங்கள் பெண்கள் கொடுக்கமாட்டோம் அது மட்டும் வேண்டுமானல் நீங்கள் நன்ருக விசாரித்துப் பாருங்கள் என்று சொல்லுவார்கள். அஃதும், அவர்களின் அறிவின்மை தான். மிகவும். ஆறுதலடைந்த மகா ஞானவான்களும் இருக்கிருர்கள். நகரத்தார்களும், அவர்களைக் கௌரவமாகத்தான்பாராட்டி வருகிருர்கள். ஆனல், பெருஞ் செல்வவந்தர்களாக மாத்திரமில்லை. பெயர்களின் ஈற்றில் "பிள்ளை" என்றழைக்கப்படும், வகுப்பினை உடையவர்கள்தான். சிலர்க்குத் தேசிகர் என்றபட்டமும் உண்டு. இவர்கள், "மணமேற் குடி" "அரண்மனைப்பட்டி" "வீரை" "தளக்காவூர்" "துளாவூர்" முதலிய இந் நாட்டைச் சார்ந்த சில சிற்றூர்களிலே இருந்து, வந்து குடியேறினவர்களாகும். இவ்வகுப்பார்க்கு, எதோ ஒரு பெரியரால் சாபத்தீடு நிகழ்ந்திருக்கிறதென்றும், அதனல், எந்தவிதமான பாக்கியங்களும், குழந்தைப் பேறுகளும் விருத்தி யாகிறதில்லை யென்றுஞ் சிலர் சொல்லிக் கொள்கிருர்கள். இயற்கை யாதி நியாயங்களும் அங்ஙனந்தான் காணப்படுகின்றன. இவர்களுக்கும் எல்லாம் வல்ல இறைவன், அச்சாபத்தீட்டினை ஒழித்துத் திருவருள் பாலிப்பானகுக. இவர்களுக்குப் பூர்வீகம் இந்த நாடு நகரங்கள் தான். ஏனைய பாகங்களிலிருந்துவந்து இங்கு குடியேறியிருக்கும் பலவிதமான போலிச் சைவர்களுக்கும், இவர்களுக்கும் எந்தவிதமான தொடர்ச்சியுமில்லை. இனி, ஏனைய வருணச்சிரம தர்மிகளைப் பற்றி ஈண்டு விவகரிக்க வேண்டும் ஆவசியங்கள் ஒன்றுமில்லை யாகலின் விடுத்தாம். பொதுவாகவும் முடிபுரையாகவும், கூறப்புகுமிடத்து, எவர்களுடைய ஜீவியத்துக்கும், இச் செட்டி மண்டலத்தில் நகரத்தார்கள்தான் காரணமாவார்கள். இனி, நகரத்தார்களுடைய நகரங்களையும், செல்வமாதிகளையும், செல்வாக்குகண் முதலிய அதிகாரத்தோரணைகளையும், கல்வியாதிகளையும், கௌரவங்களையும் இன்பாதிபோகங்களையும், நீர் வளம், நிலவளங்களையும், இயற்கை செயற்கை யாதி குண குணங்களையும், கால நிலைகளையும், நாணயாதிகண் முதலிய பல மார்க்கங்களையும்பற்றி ஒருவாறு, எடுத்தியம்பத் தொடங்குவாம்.

க. இக்காலம், பொதுவாகக் கவனிக்குமிடத்து, நகரத்தார்களைச் சார்ந்த ஒவ்வொரு குடும்பத்தார்களும், பலபாஷைகளாலும், பலகலைகளாலும் பலவிதமான உலகவியவகார அநுபவத்தேற்றங்களாலும், எத்துணையோபன்மடங்கு எம்மில் நின்றும் சிறந்து, நிறைந்த பேரறிவாண்மையையுடைய ஒரு பெரியரால் ஆக்கப்படும், சரித்திரவுருவத்துக்குத் தகுந்த உயர்தர நிலைமையிலேயே வாழ்ந்து வருகிருர்கள் என்பது, எத்தகையாரும்

ஒப்பத்தகுந்த இஞ்ஞாலப்பிரசித்தமான ஒரு தலைமைவாய்ந்த ஓர்விஷயமே ஆகும். என்றால், அங்ஙனம், வரைதற்கு, எம்மாலேனும், ஏனையவொரு ஆதிசேஷனாலும் கூட முடியாதவோர் காரியமாகலின், பொதுவாகவே வரைந்து முடிப்பாம்.

உ. இற்றைக்கு ஏறக்குறைய சுமார் ஒரு நூற்றியன்பது, வருஷங்களுக்கு முன்னரே இருந்து; இப்பாலைவனமானது, தனதியற்கையாதிகுணகுணங்கள் ஒருங்கும் மாறுதலடைந்து "செட்டிநாடு" "செட்டிமண்டலம்" என்று, ஏனையபல நாடு நகரங்களாலும் புகழ்ந்து கொண்டாடத்தகுந்த, உயர்தரமான நல்ல, நாடு நகரங்களாக அமைந்து கொண்டன.

ந. இந்நாடு, நகரங்களைச் சார்ந்த பூமிகளில், சிறுபான்மையாக, மட்டை நெற்களும், ஒருவகைச் சோளமும், வரகு, கேப்பை முதலிய காட்டுத்தானியங்களும், சிலவகைக் காய்கறி பதார்த்தங்களும், இந்நாட்டார்களாலும், பள்ளர், பறையர், வலையர், உடையார் முதலியவர்களாலும், உண்டாக்கப்படுகின்றன. மதுரைச் சில்லாவிலிருந்தும், திருச்சிராப்பள்ளிச் சில்லாவிலிருந்தும், புதுக்கோட்டைச் சீமையிலிருந்தும், ஏராளமான உணவுப்பொருள்கள் வந்து விற்று முதலாகிக் கொண்டிருக்கின்றன. ஏனைய பலவிடங்களிலிருந்தும் சில வுணவுப் பொருள்கள் வந்து அழிந்து கொண்டும் இருக்கின்றன.

ச. சீர் திருத்தமான, நல்ல ரோடுகளும், மார்க்கங்களும், நகரத்தார்களாலே, ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. திருப்புத்தூரிலிருந்து கிழக்கு மேக்காக ஒன்றிரண்டு பெரியரோட்டுகளும், திருமயத்திலிருந்து தெக்கு, வடக்காக ஒன்றிரண்டு பெரிய ரோட்டுகளும், மிகநன்றாக அமைக்கப்பெற்றிருக்கின்றன. இந்த மார்க்கங்களில், இரவென்றும், பகலென்றுமின்றி ஓயாமல் அளவு சங்கை இல்லாமல், பாரமேற்றிய வண்டிகளும், சவ்வாரி வண்டிகளும், சதாகாலமும், போய்க்கொண்டும், வந்து கொண்டும் இருக்கும். இதற்கு மத்தியில், அஃதே மாதிரியாக, அளவு சங்கையின்றி, எந்தக்காலமும், மேனாட்டவர்களின், நவீனசக்திகளாலாக்கப்பட்டு, ஓடித்திரிகிற பலவிதமான மோட்டார்கார்களும், தங்களின் அருமையான இன்குரல்களாலே, அடாநாட்டுப் புறத்தான்களே! அடாக்கட்டை வண்டிக்காரப் பசங்களே! நீங்கள் ஓட்டும் வண்டிகளை, ஓர் பக்கமாக ஒதுக்குங்கள். ஒதுக்குங்கள், என்னும், செம்பொருள் தெற்றென அவ்வண்டியோட்டிகளுக்கு விளங்குமாறு, ஒருவித கரடு, முரடுகளான சப்தங்களைக் காட்டிச் சொல்லிக் கூவிக்கொண்டும், பறந்தோடித் திரிந்துகொண்டு மிருக்கும் பார்க்க மிக்க அதிசயமாகவே இருக்கும். சிற்சில சமயங்களில், அக்காட்டு மாட்டு வண்டிகளும், அவ்வண்டிகளிலுள்ள மனிதர்களும், குட்டிக்கரணம்

போடுவதும், அடிபட்டு, அப்பாடோ அப்பாடோ வென்பதும், சிலர்க்கு வேடிக்கையாகவும், சிலர்க்குப் பரிதாபமாகவும் இருக்கும்.

ரு. பெரும்பான்மையும், நகரத்தார்கள் வசிக்கும், ஒவ்வொரு நகரங்களினும், சிவாலயங்களும், புட்பவனங்களும், பசுமடங்களும், குரு பூசை மடங்களும், சத்திரஞ் சாவடிகளும், மடங்களும், ஸ்த்தாபிக்சப்பட்டிருக்கின்றன. குருக்கண்மார், வேதியர்கள், சைவர்கள், ஓதுவாய் மூர்த்திகண் முதலியவர்களை மிகச் செவ்வனே குடியேற்றப் பெற்று மிருக்கின்றன. ஒன்பது, கொத்தன் வகையராக்குடிகளையும் ஒழுங்காக அமைத்துப்பாது காக்கப்பட்டும் வருகின்றன.

சு. இலக்ஷக்கணக்குகளிலே பெருந்தொகைப் பொருள்களை விரையஞ்செய்து, இறங்கு துறைகளொருங்கும், கருங்கற்படிகளாலே அமைக்கப்பட்ட அநேகபல ஊருணிகளும், தெப்பக்குளங்களும், தாமரைத்தடாகங்களும், கொட்டியும், ஆம்பலும், நெய்தல்களும் நிறைந்த பக்கமெங்குஞ் சீதளகரஞ்சூழ்ந்தபல, குளங்குட்டைகளும், ஆங்காங்கு ஒவ்வொரு நகரங்களிலும்மிக அழகாகவும், நன்ருகவும் அமைக்கப் பெற்றிருக்கின்றன. போதுமானமட்டில் ஆங்காங்கு வேண்டிய கிணறுகளும் தோண்டப்பட்டிருக்கின்றன. எந்தமார்க்கத்தானும், நல்ல நீர்களை, நீர்நிலைகளாக உண்டாக்கி, எந்தக் கோடைக்காலத்தும், பிராணிகளுக்கும், மனிதவர்க்கத்தார்களுக்கும் எவ்வித கட்டங்களும் நிகழாதவண்ணம் பாதுகாக்கப்பட்டும் வருகின்றன.

எ. கருவக்காடுகளையும், கருவேலங்காடுகளையும், கள்ளியங்காடுகளையும், ஒருங்கே வெட்டிப் பிடுங்கி, எறிந்து விட்டு, அழகான பல வீதிகளமைக்கப் பட்டிருக்கின்றன. ரோட்டுகளும், வேண்டும் காலி இடங்களும் அமைக்கப்பட்டிருக்கின்றன நகரத்தார்களின் ஒவ்வொரு பெரிய நகரங்களினும், வேதபாடசாலைகள், ஆகமபாடசாலைகள், தேவார பாடசாலைகள், பெரிது பெரிதான கல்விச்சாலைகள், சங்கங்கள், வாசகசாலைகள், முதலியனவும் ஸ்தாபிக்கப் பெற்றிருக்கின்றன.

அ. உள்ளதுக்குள், காண்பார் எவர்களும், அருமைதானென்க பெருந்தோப்புக்களும், தென்னந்தோப்புக்களும், ஆல், அரசு, வேம்புக்களும், ஆங்காங்கு, "ஊர் நவசந்தியுவந்தான்" ஆலயங்களும், அமைத்து மிக நன்ருக வளர்த்துப் பாதுகாக்கப்பெற்றும் வருகின்றன.

கூ. ஒவ்வொரு நகரங்களும், நகரங்களேயாமென்க வணைய பல நாடு நகரங்களிலிருந்தும், ஏராளமான பலவருணத்தார்களையுஞ் சார்ந்த ஜனங்களும் வந்து, அவ்வவர்களுக்குத் தெரிந்த கைத்தொழில்களையோ, உத்தியோகங்களையோ செய்து, இந்த, நாடு நகரங்களிலே மிக நன்ருக ஜீவித்தும்,

வாழ்ந்தும் வருகிறார்கள். ஆங்காங்கு, "புதுக்கோட்டைச் சந்தை" "பொள்ளாச்சிச்சந்தை" களைப்போன்ற பெரிய சந்தைகளும் கூட்டப்படு கின்றன. எந்த விதமான சரக்குகளும், பண்ட பாத்திரங்களும், நவதானி யங்களும், பலவிடங்களிலி ருந்தும் வந்திறங்குகின்றன.

ய. அந்தக்காலம், காவியங்களில் "காவிரிப்பூம் பட்டினத்துக்கு, எத்துணைச் சீர் சிறப்புகள் சொல்லப் பட்டிருகின்றனவோ, அத்துணைச் சீர் சிறப்புக்களினின்றும், எத்துணையோ பன்மடங்கு மிகுதியான சீர் சிறப்புக் கள் பொருந்திய, அநேகபல காவிரிப்பூம்பட்டினங்களேயாம் என்று, இக் காலம் சொல்லத்தகுந்த நிலைமையிற்றான், நமது, நகரங்கள் ஒவ்வொன்றும் காணப்பெறுகின்றன வெனினும் ஒரணுவளவுகூட மிகையாகாது. அக் காலம், தொண்ணூற்றாறு நகரங்கள் இருந்தனவாம். இக்காலம், நமது, செட்டிமண்டலத்துக்குக் குறிப்பிட்டிருக்கும் நான்கெல்லையின் நடுவில், நமது, நகரங்கள், எழுபத்தியெட்டே இருக்கின்றன. இக்காலம், நமது, மகாசமுகத்தைச்சார்ந்த 'தனவைசிய ஊழியன்" சங்கத்தாரால் கலியுகம் வருஷம். ரு சூ உயஉ க்குச்சரியான" துன்மதிவருஷத்தில் தெரிந்தெடுக் கப்பெற்ற நமது, நகரத்தார்களின், ஜனக்கணிதத்தின் படியுள்ள புள்ளி வாரியாயுள்ள கணக்குகளையும், ஈங்கு குறிப்பிட்டிருக்கிறது. இங்ஙனம், எவர்களும், தெற்றென விளங்கிக் கொள்ளுமாறு, வெளிப்படையாக விரித் துக்கூறுதல், நமது சமுகத்தார் பெரும்பான்மையோர்க்குச் சம்மதியில் லையே எனினும், தனவைசிய ஊழியன் முன் நிற்கிறான். ஆகலின், "சிவ கோத்திர வைசிய விருத்தி" என்னும் பெயரோடு கூடிய இந்நூலிலும், இருத்தல், பிழைபாடாகாது, எனவெண்ணியே, வரைந்திருக்கிறோம்.

யக. க. காரை மாநகரத்தில், புள்ளிகள் அகசுரு. தாரமிழந்தவர் கூடு. கணவன் இழந்தவர் சடுசு பதினாறு வயதுவரை ஆண் சஉக. பதினாறு வயதுக்கு மேல் ஆண். கஉசு. பனிரெண்டு வயதுவரையுள்ள பெண் ஙஅச பனிரெண்டுவயதுக்குமேல் பெண். கOஉ. ஆகமொத்தம். ஙஉஉடு.

உ. பள்ளத்தூரில். புள்ளிகள். ஙOஅ. தாரமிழந்தவர் ஙஙு. கணவன் இழந்தவர் கசுங. பதினாறுவயது வரையுள்ள ஆண்.. உOக. பதினாறுவய துக்கு மேல் ஆண், சங, பனிரெண்டுவயதுவரையுள்ள பெண், கஙசு, பனி ரெண்டுவயதுக் மேல் பெண், ஙச. ஆகமொத்தம் கஉஉசு.

ங. கண்டனூரில், புள்ளிகள், உஎஎ. தாரமிழந்தவர் ஙஉ. கணவன் இழந்தவர் கடுசு. பதினாறு வயது வரை ஆண், கசO. பதினாறு வயதுக்கு மேல் ஆண். ஙO. பனிரெண்டு வயது வரை பெண் கஉசு. பனிரெண்டுவய துக்குமேல் பெண் உசு, ஆகமொத்தம். கஎO

| எண். | ஊர். | புள்ளிகள். | தாரமிழந்தவர். | கணவனிழந்தவர். | ௧௧-வயதுவரை ஆண். | ௧௧-வயதுக்கு மேல் ஆண். | ௧௨-வயதுவரை பெண். | ௧௨-வயதுக்கு மேல் பெண். | ஆகமொத்த ஜனத் தொகை. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ௪ | புதுவயல் ... | 233 | 35 | 138 | 132 | 34 | 108 | 16 | 929 |
| ௫ | கோட்டையூர் ... | 189 | 26 | 105 | 80 | 21 | 91 | 13 | 714 |
| ௬ | உ. சிறுவயல் ... | 173 | 22 | 98 | 107 | 36 | 95 | 23 | 727 |
| ௭ | கானாடு காத்தான் ... | 147 | 14 | 63 | 111 | 23 | 115 | 19 | 639 |
| ௮ | ஆத்தங்குடி ... | 135 | 11 | 73 | 91 | 29 | 85 | 23 | 582 |
| ௯ | கல்லல் ... | 132 | 8 | 60 | 85 | 13 | 81 | 14 | 525 |
| ௧௦ | கொத்த மங்கலம் ... | 113 | 7 | 62 | 62 | 7 | 63 | 6 | 433 |
| ௧௧ | நேமுத்துப் பட்டி ... | 103 | 11 | 64 | 67 | 24 | 60 | 18 | 450 |
| ௧௨ | கல்லுப் பட்டி ... | 79 | 12 | 53 | 72 | 18 | 41 | 13 | 367 |
| ௧௩ | பலவான்குடி ... | 76 | 15 | 46 | 45 | 15 | 35 | 11 | 319 |
| ௧௪ | ஆ. முத்துப்பட்டணம் ... | 62 | 8 | 35 | 49 | 2 | 37 | 8 | 263 |
| ௧௫ | அரியக்குடி ... | 60 | 14 | 56 | 38 | 15 | 27 | 8 | 278 |
| ௧௬ | அளகாபுரி ... | 55 | 11 | 41 | 38 | 18 | 30 | 9 | 257 |
| ௧௭ | இலக்குமிபுரம் ... | 51 | 9 | 32 | 41 | 7 | 37 | 7 | 235 |
| ௧௮ | சொக்கலிங்கம் புத்தூர் ... | 47 | 5 | 20 | 43 | 1 | 34 | 8 | 205 |
| ௧௯ | ஜெயங்கொண்டபுரம் ... | 42 | 1 | 24 | 25 | 5 | 24 | 6 | 169 |
| ௨௦ | மாநகரி ... | 35 | 2 | 23 | 17 | 7 | 18 | 6 | 143 |
| ௨௧ | அமராவதி புதூர் ... | 25 | 4 | 15 | 12 | 4 | 23 | 1 | 109 |
| ௨௨ | வலையபட்டி ... | 346 | 33 | 118 | 262 | 44 | 200 | 57 | 1406 |
| ௨௩ | கூழிப்பிறை ... | 220 | 14 | 114 | 142 | 41 | 125 | 37 | 613 |
| ௨௪ | நச்சாந்து பட்டி ... | 196 | 28 | 110 | 159 | 34 | 121 | 42 | 886 |
| ௨௫ | வேந்தன் பட்டி ... | 177 | 19 | 72 | 160 | 31 | 116 | 42 | 794 |
| ௨௬ | மேலைச் செவற்பட்டி ... | 129 | 10 | 67 | 104 | 33 | 63 | 16 | 551 |
| ௨௭ | புதிப்பட்டி ... | 107 | 9 | 52 | 71 | 18 | 76 | 13 | 453 |
| ௨௮ | வேகுப்பட்டி ... | 106 | 11 | 49 | 85 | 16 | 72 | 20 | 465 |
| ௨௯ | கொப்பனாபட்டி ... | 99 | 7 | 42 | 54 | 12 | 62 | 9 | 384 |
| ௩௦ | விராய்ச்சிலை ... | 95 | 17 | 50 | 65 | 14 | 49 | 18 | 403 |
| ௩௧ | ராங்கியம் ... | 82 | 7 | 49 | 69 | 18 | 42 | 14 | 362 |
| ௩௨ | பனையப்பட்டி ... | 80 | 10 | 36 | 50 | 16 | 37 | 18 | 327 |
| ௩௩ | குருவிக்கொண்டான் பட்டி ... | 71 | 9 | 39 | 58 | 20 | 47 | 22 | 337 |
| ௩௪ | மிதிலைப்பட்டி ... | 68 | 6 | 29 | 48 | 11 | 34 | 15 | 279 |
| ௩௫ | வி. இலக்குமி புரம் ... | 46 | 3 | 17 | 37 | 6 | 19 | 11 | 185 |
| ௩௬ | உலகம் பட்டி ... | 44 | 3 | 27 | 47 | 14 | 31 | 11 | 221 |
| ௩௭ | பொன்னமராவதி ... | 4 | 0 | 1 | 3 | 1 | 1 | 0 | 14 |
| ௩௮ | கீழச்செவற்பட்டி ... | 331 | 40 | 170 | 261 | 86 | 224 | 78 | 1521 |
| ௩௯ | நெற்குப்பை ... | 165 | 10 | 51 | 134 | 29 | 100 | 23 | 677 |
| ௪௦ | கண்டவராயன்பட்டி ... | 150 | 11 | 79 | 120 | 51 | 95 | 34 | 690 |
| ௪௧ | சிறுகூடற்பட்டி ... | 96 | 10 | 45 | 81 | 15 | 60 | 27 | 430 |
| ௪௨ | பூலாங்குறிச்சி ... | 91 | 2 | 25 | 67 | 14 | 68 | 16 | 374 |
| ௪௩ | நாச்சியார்புரம் ... | 79 | 7 | 46 | 55 | 15 | 35 | 12 | 328 |
| ௪௪ | ஆ. தெக்கூர் ... | 77 | 3 | 27 | 72 | 12 | 56 | 12 | 336 |
| ௪௫ | ஆவணிப்பட்டி ... | 64 | 8 | 27 | 47 | 12 | 45 | 13 | 280 |
| ௪௬ | செவ்வூர் ... | 54 | 7 | 28 | 59 | 17 | 44 | 11 | 274 |

| எண். | ஊர் | | புள்ளிகள். | தாரமிழந்தவர். | கணவனிழந்தவர். | ௧௮ வயது வரை ஆண். | ௧௮ வயதுக்குமேல் ஆண். | ௧௨. வயதுவரை பெண். | ௧௨. வயதுக்கு மேல் பெண். | ஆகமொத்த ஜனத் தொகை. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ௪௭ | விராய்மதி | .. | 47 | 3 | 19 | 34 | 6 | 25 | 12 | 195 |
| ௪௮ | மகிபாலன்பட்டி | ... | 45 | 5 | 11 | 32 | 4 | 11 | 9 | 162 |
| ௪௯ | சிராவயல் | ... | 44 | 8 | 21 | 30 | 12 | 29 | 1 | 186 |
| ௫௦ | பிள்ளையார்பட்டி | .. | 17 | 6 | 8 | 9 | 6 | 9 | 6 | 78 |
| ௫௧ | பரியாமிர்தபட்டி | ... | 7 | 1 | 4 | 6 | 3 | 5 | 0 | 33 |
| ௫௨ | தேவகோட்டை | .. | 1046 | 95 | 584 | 725 | 134 | 600 | 126 | 4356 |
| ௫௩ | ஷண்முகநாதபுரம் | ... | 121 | 9 | 70 | 86 | 16 | 60 | 13 | 496 |
| ௫௪ | தாணிச்சாவூருணி | ... | 27 | 10 | 22 | 17 | 6 | 19 | 2 | 130 |
| ௫௫ | நாட்டரசன் கோட்டை | ... | 242 | 30 | 131 | 197 | 36 | 122 | 41 | 1041 |
| ௫௬ | பாகனேரி | ... | 152 | 14 | 59 | 98 | 25 | 90 | 17 | 607 |
| ௫௭ | கண்ட மாணிக்கம் | ... | 139 | 12 | 62 | 91 | 21 | 68 | 26 | 558 |
| ௫௮ | அலவாக்கோட்டை | ... | 86 | 8 | 37 | 56 | 6 | 46 | 16 | 344 |
| ௫௯ | அ. சிறுவயல் | ... | 70 | 5 | 29 | 53 | 18 | 50 | 12 | 307 |
| ௬௦ | சொக்கனாதபுரம் | ... | 64 | 8 | 42 | 43 | 7 | 29 | 6 | 263 |
| ௬௧ | பூங்குடி | .. | 53 | 6 | 30 | 36 | 15 | 33 | 7 | 233 |
| ௬௨ | ஒக்கூர் | ... | 46 | 4 | 12 | 37 | 4 | 22 | 2 | 173 |
| ௬௩ | சொக்கலிங்கபுரம் | . | 44 | 4 | 24 | 43 | 23 | 40 | 6 | 228 |
| ௬௪ | நடராஜபுரம் | .. | 41 | 4 | 24 | 34 | 3 | 29 | 4 | 180 |
| ௬௫ | வெற்றியூர் | ... | 41 | 3 | 18 | 28 | 9 | 27 | 8 | 175 |
| ௬௬ | பட்டமங்கலம் | ... | 40 | 7 | 19 | 20 | 8 | 24 | 2 | 164 |
| ௬௭ | காளையார் மங்கலம் | ... | 40 | 4 | 14 | 28 | 5 | 22 | 11 | 164 |
| ௬௮ | கருங்குளம் | ... | 26 | 5 | 20 | 22 | 5 | 15 | 1 | 120 |
| ௬௯ | நா. அளகாபுரி | ... | 20 | 4 | 9 | 22 | 3 | 10 | 6 | 94 |
| ௭௦ | செம்பொன்னூர் | ... | 18 | 1 | 9 | 7 | 2 | 14 | 2 | 71 |
| ௭௧ | பனங்குடி | ... | 16 | 5 | 8 | 13 | 1 | 19 | 3 | 81 |
| ௭௨ | சக்கந்தி | ... | 13 | 0 | 4 | 14 | 2 | 6 | 2 | 54 |
| ௭௩ | சோழபுரம் | ... | 7 | 0 | 5 | 5 | 0 | 0 | 0 | 24 |
| ௭௪ | அமரிழம் | ... | 291 | 47 | 177 | 193 | 58 | 163 | 42 | 1262 |
| ௭௫ | கடியாபட்டி | ... | 238 | 23 | 135 | 132 | 25 | 127 | 26 | 944 |
| ௭௬ | இராயவரம் | ... | 237 | 23 | 126 | 150 | 38 | 120 | 29 | 960 |
| ௭௭ | தேனீப்பட்டி | ... | 69 | 11 | 30 | 29 | 7 | 30 | 13 | 258 |
| ௭௮ | கோனபட்டு | ... | 181 | 19 | 126 | 155 | 33 | 100 | 18 | 813 |
| | ஆகமொத்தம் 78 | ... | 9666 | 1042 | 5045 | 6634 | 1605 | 5439 | 1411 | 40508 |

இதில் புள்ளி என்பது, புருஷன் மனைவி, இருவருங்கூடியதாகலின், மூன்றாவது கட்டத்திலுள்ள தொகைகளை மொத்த ஜனத்தொகைக்குக் கூட்டும்பொழுது இரட்டித்துக் கொள்ளுதல்வேண்டும். இக்கணக்கில் மீன்றும், நமது, வைசியமகாசமுகம் முதன்மையாகக் கவனிக்க வேண்டும் விஷயம் ஒன்றுளது. அஃதாவது, சமூகப் பொதுவிலிருந்து, "புத்திரிகாமேட்

| எண். | கோத்திரங்கள். | | புள்ளிகள். | தாரமிழந்தவர். | கணவனிழந்தவர். | கக-வயதுவரை ஆண்கள். | கக-வயதுக்கு மேல் ஆண்கள். | கஉ-வயதுவரை பெண்கள். | கஉ-வயதுக்கு மேல் பெண்கள். | ஆக மொத்த ஜனத் தொகை. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | ஒக்கூருடையார் | ... | 384 | 31 | 211 | 245 | 57 | 223 | 68 | 1603 |
| 2 | பட்டணசாமியார் | ... | 390 | 39 | 190 | 2 5 | 60 | 234 | 65 | 1623 |
| 3 | பெருமருதூருடையார் | ... | 3 3 | 54 | 205 | 204 | 43 | 190 | 52 | 1394 |
| 4 | கழனிவாசற் குடியார் | ... | 638 | 70 | 341 | 468 | 111 | 322 | 94 | 2682 |
| 5 | கிங்கிணிக்கூருடையார் | ... | 144 | 10 | 73 | 119 | 28 | 72 | 22 | 612 |
| 6 | பேர செந்தூருடையார் | ... | 43 | 3 | 20 | 39 | 24 | 29 | 10 | 211 |
| 7 | சிறுசேத்தூருடையார் | ... | 2 | 0 | 2 | 3 | 2 | 4 | 1 | 16 |
| 8 | உறையூருடையார் | ... | 417 | 32 | 215 | 273 | 54 | 216 | 63 | 1687 |
| 9 | அரும்பாக்கூருடையார் | ... | 604 | 75 | 318 | 421 | 91 | 398 | 78 | 2589 |
| 10 | மணலூருடையார் | ... | 587 | 56 | 263 | 416 | 87 | 319 | 90 | 2405 |
| 11 | மண்ணூருடையார் | .. | 133 | 16 | 66 | 102 | 25 | 69 | 26 | 570 |
| 12 | கண்ணூருடையார் | ... | 95 | 13 | 51 | 67 | 15 | 63 | 13 | 412 |
| 13 | சருப்பூருடையார் | ... | 166 | 22 | 77 | 104 | 37 | 85 | 23 | 680 |
| 14 | குளத்தூருடையார் | ... | 96 | 10 | 49 | 67 | 17 | 59 | 14 | 408 |
| 15 | சிறுகுளத்தூருடையார் ,, பெரிய வகுப்பு | ... | 820 | 92 | 432 | 628 | 156 | 486 | 140 | 3574 |
| 16 | ,, தெய்வநாயகர் வகுப்பு | ... | 482 | 67 | 276 | 314 | 83 | 263 | 66 | 2033 |
| 17 | ,, பிள்ளையார் வகுப்பு | ... | 35 | 36 | 187 | 224 | 48 | 172 | 54 | 1427 |
| 18 | கழனிவாசலுடையார் | . | 101 | 12 | 52 | 71 | 17 | 49 | 12 | 415 |
| 19 | மருதேந்திரபுரம் உடையார் | | 52 | 3 | 29 | 39 | 2 | 23 | 7 | 207 |
| 20 | திருவேட்பூருடையார் | ... | 937 | 100 | 494 | 605 | 147 | 520 | 125 | 3865 |
| 21 | ,, திருவேட்பூருடையார் | | 1118 | 128 | 600 | 750 | 207 | 643 | 165 | 4729 |
| 22 | இளநலமுடையார் | ... | 496 | 62 | 275 | 335 | 84 | 270 | 67 | 2082 |
| 23 | சூடாமணிபுரமுடையார் | ... | 809 | 70 | 410 | 558 | 112 | 438 | 97 | 3303 |
| 24 | புகழ்வேண்டியபாக்கமுடையார் | ... | 463 | 40 | 200 | 316 | 96 | 285 | 58 | 1921 |
| 25 | கழனி நல்லூருடையார் | ... | 13 | 1 | 9 | 11 | 2 | 7 | 1 | 57 |
| | ஆகமொத்தம் | ... | 9666 | 1042 | 5045 | 6634 | 1605 | 5439 | 1411 | 40508 |

டியாகம்" ஒரு ஆலயத்திருப்பணியைப்போன்று நினைத்து, ஒரு ஆறுவருடத்துக்கு ஒரு முறையேனும் 5,6 முறை தொடர்ச்சியாகச் செய்யத் தொடங்கவேண்டுவதும், சுமங்கலஸ்திரிகள் ஒவ்வொரு ஆண்டுகளிலும் ஒருமுறை "மாங்கலிய விரதத்தை" நியமமாக முறை தவறாமல், அனுட்டித்து வரத் தொடங்கவேண்டுவதும் தான். இந்தக் கணக்கின்படி 2431 பெண்கள் குறையாக விருத்தியையும் கவனித்தல்வேண்டும். நமது, பாரதகண்டத்தின் புராதனக் கொள்வகைகளில் இறங்கவேண்டுவதுதான் நமது கடமை என்றால்,

௰உ. இம்மாதிரி ஜனக்கணிதக் கணக்கு எடுக்கவேண்டுவதும் ஒரு விதத்தற்கால வியற்கைக்கு ஆவசியகந்தான். இனியும், பனிரெண்டு வருடத்துக்கு ஒருமுறை கணக்கெடுத்துப் பார்த்து, சமூகப் பொதுவுக்காக வேண்டுவன பலவும், அறிவாளிகளாயுள்ளார் செய்து முடித்தல் வேண்டுவதூஉம் ஆவசியகந்தான். என்றால், இதற்கு முன்னும், ஒருவாறு சமூகத்துக்கு, இக்கணக்கு விளங்கித்தான் இருக்கும். ஆனால், இத்துணை வெளிப்படையாக எவர்களுக்கும் விளங்கி இராதுதான். இங்ஙனம், சாதாரணமாக, எவர்களுக்கும் வெளிப்படையாக விளங்குமாறு நமது, "ஊழியன் சங்கத்தார்" எதற்காகப் பிரசுரப்படுத்தினார்கள் என்பதுதான் விளங்கவில்லை. இரண்டாயிரத்து, நானூற்றி, முப்பத்தொரு பெண்கள், தேவையிருக்கிறது கண்டு தெளிந்து, பள்ளன், பறையன், அமபட்டன், வண்ணான், மேளங் கொட்டுவோனாயினும், வேளாளன் என்ற பெயர் ஒன்றுமாத்திரம் இருந்தால் போதுந்தானே, சூத்திரர், எனப்படுவார் யாவருந்தானே என்று, உண்மை கண்டுணர்ந்து, அவர்கள் பால் பெண்கள் எடுத்துக் கொள்ளலாம் என்ற சட்டத்தை இவ்வூழியப் பால்ய சங்கத்தார், "வெளுத்ததெல்லாம் பால்" "கருத்த தெல்லாந்தண்ணீர்" என்று உண்மையுணர்ந்து, "சந்துவிட்டால் தம்பி வந்து விட்டான்" என்பதற்கு இணங்க, அமுலுக்குக் கொணர்ந்து விட்டார்கள். அஃதோடும் நின்றுகொள்ளாமல் "தூக்கிப் போட்டதுமில்லாமல், குதிரை குழியும் பறித்ததாம்" என்பதற்கிணங்க, எங்களுக்குப், பெண்கள் தேவை, பெண்கள் தேவை, என்று, ஒரு சிறிதளவுகூட முன் பின் யோசித்து, ஆராய்ச்சி செய்யும் பேருணர்ச்சியின்றி பத்திரங்கண்மூலமாய், வெட்கமானமில்லாமல் கூக்குரற்போடவும் ஆரம்பித்துக் கொண்டார்கள். இவர்களின், நுட்பமதியை என்னென்று புகழ்ந்தெடுத்து எழுதுவேம்! சமூகத்தை, அசங்கியப்படுத்துவதற்கு இப்படியும் ஒரு சங்கம் வேண்டியதுதான்! அதற்காக, ஒரு பத்திரிகையும் வேண்டுவதுதான்! யோசிக்குமிடத்து காரியங்கள் மிகநன்றாக இருக்கிறது! கணவனை இழந்தவர்கள், ஐயாயிரத்து, நாற்பத்தைந்து பெயர்களில் முதியராயுள்ளவர்கள் ஒரு சுமார், ஆயிரம் பெயர்களாவது இருக்கலாமெனததள்ளிவிட்டாலும், மிகுதியாயிருக்கிற நாலாயிரத்து நாற்பத்தைந்து பெயர்களுக்கும், இப்புதிய நாகரீகப்பால்யப்புலிகள், யாதுபுகலிடந் தேடிக்கொண்டிருக்கிறார்கள்? அக்கணவனை இழந்தவர்களென்னே, மனிதவர்க்கத்தாரைச்சார்ந்தார்களல்லப்போலும்! இன்றி, நமது, வைசிய குலத்துப் பெண்மணிகளா இவர்கள், ஆதியில் வேளாளர் குலத்துப் பெண்மணிகள்தானே, அவர்கள், எந்த விதமானசுக போகத்தையும், இழந்து, இப்பூவுலகிற் பிறந்தும், பிறவாதவர்களாய் செத்தால்தான் சாகட்டுமே என்று, எண்ணிக்கொண்டிருக்கிறார்கள் போலும்! இன்றேல், இவர்களை, அக்காலத்தார் போன்று, குழியை வெட்டி இறக்கிவிடலாம் என்று நினைக்கிறார்கள் போலும்! ஆனால், இக்காலம், அக்காலம்

போன்று நவாபுதர்பாரில்லாமற் போயிற்று! இம்மகாசமுகத்தைச் சார்ந்த எந்த நகரத்தைப் பார்த்தாலும் ஒவ்வொரு பெண்சிறுர்களும், இப்பால்யர்களைவிட எத்துணேயோ பன்மடங்கு மிகையாகப் படிக்கவும் தொடங்கிவிட்டார்கள். இதுகாறுமுள்ள கணக்குகளை எடுப்போமாயினும், கணவனை இழந்தபால்யர்களுள் அநேகம் பெயர்கள் மிகநன்ருகப்படித்து மேதாவிகளாயும் இருக்கிறுர்கள். அவர்கள், கையினும், தொகையானபொருள்கள் இருந்து கொண்டுதானிருக்கிறது. எத்துணேயோ பெரியவொரு சாகரமானது, தன்னைக்காத்துக் கொள்வதற்குரிய பாதுகாப்பாகிய ஓர் எல்லையல்லாத எல்கைக்குள் தான் கட்டுப்பட்டு நிற்பது போன்று, இக்குலக் கொடிகளும், மானுபிமானமாகிய ஓர் எல்லைக்குள் கட்டுப்பட்டுக் கொண்டு மிருக்கிருர்கள். தற்கர்லத்து, நாகரீகமாகிய சூருவளியானது, ஓரணுவளவு வீசப்பட்டு ஒருபெண் சிசுக்கிளம்புமானுல், "அடடா இஃதென்ன அநாகரீகமான காலம்! இப்பால்ய விதவைகள் ஒருங்கும் என்னுடைய சகோதரிகளே யாம் அன்ருே! எத்துணேயோ நவீன நாகரீகங்கள் மலிந்து, சிறந்து வளர்ந்து, இந்நிலவுலகம் எங்கணும் பரந்து படர்ந்து விளங்கும் இக்காலம், என்னுடைய சமூகத்துக்குமாத்திரமா அநாகரீகமாய் விளங்குதல் வேண்டும்!" எண்ணரிய பிறவிதனின் மானிடப்பிறவிதான் யாதினும், அரிது, அரிது காண்" என்றும், "இப்பிறவி தப்பினுல் எப்பிறவி வாய்க்குமோ எதுவருமோ அறிகிலேன்" என்றும் பெரியார் திருவாக்குகள் காணக்கிடக்கிறதன்ருே! மாந்தராய்ப் பிறந்தார் ஒவ்வொருவரும், ஆண்டு அனுபவிக்கக் கிடக்கும் பல்வகை இன்பாதிபோகங்களினும் தலையாய இன்பாதிகளை கண்டும் காணுமலா இவர்களின் வாணுட்கள் வீணுட்களாகக் கழிந்துபோதல் வேண்டும்! இவர்களுக்கு ஞாதி ஒருவருமா இல்லை? இவர்களின், அழகிய மிடற்றிலே இனியும் ஒரு திருமாங்கல்யத்தைப் பூட்டினுல் கிடக்கமாட்டேன் என்ரு சொல்லிவிடும்? ஐயய்யோ! இஃதென்னகொடுமை! இவர்கள், இனியும் ஒரு தரமா எனக்குச் சகோதரிகளாகவந்து பிறக்கப்போகிருர்கள்? இந்தக் கணமே இவர்களின் குறையை பூரணமாக நிவர்த்தியாக்க வேண்டுவதும் என்னுடைய முதற்கடமையே யாமன்ருே! ஆகலின், இவர்களுக்கு சீதனமாக நான்கு, நான்குவராகன் நானே தருகின்றேன். அப்பணத் தொகைகளை, மணமகன் ஆர்டருக்கே பூரண சுதந்தரமாகவும் விட்டு விடுகிறேன். இவ்விதஞ்செய்து முடிப்பதே என்னுடைய முதல் தொழிலாக நான் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறேன். ஆகலின், என்னுடைய தன வைசிய மகாசமுகத்தைச் சார்ந்த, பணமகன் தேவை, மனமகன்தேவை, என்று, இவர்கள் பிரசுரித்த பத்திரிகைகளைப்போன்று, அல்லாமலும், பழையஞாபகமான நூதன விவேகம் ஒன்றையும் காட்டி அன்பது லெக்ஷம் பத்திரிகைகளையடித்து இந்நிலவுலகம் எங்கணும், ஒரு நிமிஷத்தில் பரப்பி விடும். அப்பொழுது இவர்களின் யேனுட்டு நாகரீக வண்டவாளங்கள் மிக

நன்ருக விளங்கிப்போம். இவர்கள், எதற்காக இந்தக் கணக்கை அச்சிடுதல் வேண்டும். இரகசியத்தில் வைத்துக் கொண்டாலென்னே! காணுக் குறைக்குக் குமரனும் தேர்சாய்ந்து விட்டதென்று கூச்சலிடுகிருன். நமது சமூகத்துள் பால்ய விதவைகள் இத்தனை பெயர்களா இருக்கிருர்கள், என்று, அறிவுடையார் மனம் ஏங்கிப் புண்படுமோறுதான் இக்கணிதத்தைத் தினசரியில் பதித்தனர்கள்போலும்! இனி என்செய்யலாம். இச்சமுகத்தைச்சார்ந்த பெரியோர்கள் செய்து கொண்டுவந்த தருமங்களே,அப்பால்ய விதவைகளின் மனத்தைப் பாதுகாக்குமாம் என்க. மேலும், அவர்களில், பெரும்பான்மையோர்களின் மனம், வைதீகமார்க்கத்தை மிக நன்ருகப்பற்றிப் பிடித்துக்கொண்டனவாம். பின்னுஞ் சிலர், தத்துவ சாத்திரப்பயிற்சியினும், விசாரணையினும் நுழைந்து கொண்டார்கள். பின்னுஞ் சிலர், தங்களில்லத்துடைத்தான பலவேலைகளேயும் ஓயாமல் கவனித்துப் பார்ப்பதிலேயே நுழைந்துகொண்டார்கள். பின்னுஞ்சிலர், பட்டினியேகிடந்து சாவதுதான் உத்தமம், எனக்கண்டு தெளிந்து, சும்மா உட்கார்ந்து கொண்டே காலத்தைப் போக்குகிருர்கள். பின்னுஞ் சிலர், அழகு, அழ்கான பெட்டிகள் ஆக்குவதிலேயே நின்று விடுகிருர்கள். என்ருலும், அவர்களின் வாழ்க்கை மிகவும் பரிதாபகரமானதுதான். விலேயேறப் பட்டபட்டாடை, பட்டுநூலாடை, நூலாடை முதலியவைகளைத் தங்களின் மனேபீட்டம் போன்று கட்டிக்களிப்பதையும், வெள்ளி, சுவர்னம், முதலிய நவரத்தினுதிகளால் இழைத்த, காப்பு, கொலுசு, அட்டியல், கம்மல் சரப்பணி, சந்திரஹாரம், முதலிய ஆபரணுதிகளே, அணி, அணியாகப் பூட்டியணிந்து, தங்களின், இயற்கை வனப்போடு கூட்டிக்கண்டு ஆநந்தமாகக்களிப்பதையும், தங்கள் உயிரினுஞ் சிறந்த ஒண்பொருளான தங்களின் கொழுநனேடுக் கூடிக்குலாவிக் கொஞ்சிச்சிரித்து விளையாடி, உண்டும், உடுத்தும், கண்டும், கேட்டும், இன்பாதி போகத்து, ஆநந்தமாக ஆண்டும், அனுபவித்துக்களிப்பதையும், மங்கலகரமான வாசனுதிகளுடன் தோய்ந்து களிப்பதையும், சுமங்கலி என்னும் பெயரானிகழும்; சந்தோஷத்துடன் கூடிக் களிப்பதையும், இன்னும் ஏனைய இன்பாதி போகங்களையும் துறந்து, கண்டத்திலே ஒற்றை யுருத்திராக்கத்தைக் கட்டிக்கொண்டும், அமங்கலி யென்னும் பெயரோடுகூடி, வெள்ளை வத்திர மார்த்துத் துறவாச்சிரம தருமம் பூண்டு, பட்டப்பகன் மாத்திரம் ஒரு பொழுதுண்டு, தரையிற்படுத் துறங்கும், தவவொழுக்கம் பூண்டு, பெரியார் குகைகளிலே வாசஞ் செய்வது போன்று, ஓர் ஐந்தாறு ஆண்டுகளுக்கு மேல் தங்களில்லத்தைவிட்டு வெளிப்படாதிருந்தும், இப்பால்யதசையில், அவர்களின் அழகும், சக்தியும், ஒரு சிறிதும் அவர்களுக்குப் பயன்படாவண்ணம், அவர்கள், அனுபவித்து வரும், கட்டங்கண்டு, உட்கியுணர்ந்து கண்ணீருகுக்காத எவனேனும் ஒரு அறிவாளி நமது செந்தமிழ்த் தேயத்தும் இருப்பான் கொல்லோ! இவ்விஷயத்துக்குக் காரணம், ஈஸ்வரனு மனிதனு? இவ்விதிவழி மனிதனுல் முடிந்

ததா, ஈஸ்வரனுல் முடிந்ததா? இப்பழியையும் இப்பாவத்தையும், ஏ! சண்முகநாதா! யாவருடைய தலையிலே சுமத்தி விடலாம்? நீ! ஏற்றுக் கொள்கிருயா? இன்றேல், நின்னுடைய தந்தையாகிய பேராண்டியின் தலையிலே ஏற்றி வைத்து விடவா? இன்றேல், ஒவ்வொருகட்டுக்களின் முடிச்சுக்களையும், அவிழ்த்துக்கொண்டிருப்பவர்களின் தலைகளிலே ஏற்றிவைத்து விடலாமா? ஒருவருக்கொருவர், வஞ்சித்து வாழ்ந்து, எவர்கள்தான் சுவர்க்கப்புகுந்தார்? இல்லை, இல்லை. மனிதவர்க்கமாகப் பிறந்தார் எவர்களுடைய தலைகளும், ஈஸ்வராதிகளுடைய தலைகளும், விதிவசத்தலைகளும், என் பொறுத்துக் கொள்ளப்போகிறது? வேண்டாம், வேண்டாம். பின்னர் எப்படி? கல்வியோடு கூடிய அறிவின்மையின் தலைகளே பொறுத்துக் கொள்ளட்டும். அதுதான், நியாயம். அதுதான் நடுவுநிலைமை அதுதான், எவர்களும் ஒப்பத்தகுந்தது. அதுதான், நம்மோடு சண்டைசச்சரவுகளுக்கு வரக்கூடாதது. காலகதி யென்பதும், விதிவசம் என்பதும், பயங்கரம் என்பதும், ஒழிந்த அன்றைக்கன்றோ உலகம், உலகமாய் காணப்போகின்றன. எல்லாம் வல்ல இறைவன், இப்பால்ய மங்கையர்களுக்கும், ஏனையமங்கையர்களுக்கும், எவ்விதகாரணங்களைக் கொண்டும், என்றைக்கும் நீங்காத நல்ல புத்தியைக் கொடுத்தருளுவான் ஆகுக.

௫௩. மேற்கண்ட நமது, மகாசமூகத்தைச்சார்ந்த பலநகரங்களுள்ளும் "தேவகோட்டை, காரைமாநகரம், கோட்டையூர், கண்டனூர், புதுவயல், பள்ளத்தூர், கானடுகாத்தான், கடியாபட்டி, இராயவரம், அரிமழம், கீழச்செவற்பட்டி, மேலச்செவற்பட்டி வேந்தன்பட்டி, ஆ. தெக்கூர், நெற்குப்பை, ஆத்தங்குடி, கோனுபட்டு, பொன்னவராதி வலையபட்டி மகிபாலன்பட்டி, கண்டவராயன்பட்டி, முதலிய சில நகரங்கள் "தோன்றிற் புகழொடு தோன்றுக" என்பதற்கு இணங்க, மிகுந்த புகழோடும், மிகுந்த கல்வி நலத்தோடும், மிகுந்த நாகரீகங்களோடும், மிகுந்த செல்வச் செழுமைகளோடும், மிகுதியுஞ் சிறந்த ஏனைய பலவிதமான சீர் சிறப்புக்களோடும் பொருந்திய நகரங்களாகும் கானடு காத்தான் ஞாயிற்றுக்கிழமைச் சந்தை. பள்ளத்தூர் வெள்ளிக்கிழமைச் சந்தை. சாக்கோட்டை சனிக்கிழமைச் சந்தை. புதுவயல் புதன்கிழமைச்சந்தை. காரைக்குடித் திங்கட்கிழமை பெரிய சந்தை, வியாழக்கிழமையும் ஒரு சிறு சந்தை கூடும். கடியாபட்டி செவ்வாய்க்கிழமை சந்தை. ராயவரம் புதன்கிழமைச் சந்தை. கோனுபட்டு, செவ்வாய்க்கிழமை சந்தை. புதுப்பட்டி, வலையபட்டி, வேந்தன்பட்டி செவற்பட்டி, பூலாங்குறிச்சி முதலிய இந்நகரங்களுக்கு நடுவாக பொன்னமாராபதியில் சனிக்கிழமை சந்தை கூடுகிறது. கொண்ணையூர், கொப்பனாபட்டுச் சந்தை செவ்வாய்க்கிழமை ஆட்டு பாட்டுச்சந்தையுங் கூடுகிறதுண்டு. ஆத்தங்குடி சனிக்கிழமை சந்தை. கீழச்செவற்பட்டி ஞாயிற்றுக் கிழமைச்சந்தை. கல்லுப்பட்டி வெள்ளிக்கிழமைச் சந்தை. சிலர் இன்

னுஞ் சில நகரங்களிலும், சந்தைகள், கூடுகிறதாயும் சொல்லிக்கொள்கிறார்கள். இச்செட்டி மண்டலத்துடைத்தான இத்தனைசந்தைகளுள்ளும் "காரைமாநகரச்" சந்தைதான் மிகப்பெரியதாகும். இத்தனவைசிய மகாசமுகத்தைச்சார்ந்த ஒவ்வொரு குடும்பத்தார்களும், தங்கள் தங்களுக்கு வருஷக் கணக்குக்காக வேண்டும் ஒவ்வொரு சரக்குகளும் பெரும்பான்மையும் இப்பெரிய சந்தையிற்றான் கொண்முதற் செய்வார்கள். புதுக்கோட்டைச் சந்தைக்கு ஒருவாறு ஒப்பிட்டே கூறலாம். மேலும், இக்காரைமா நகரத்தில், "சிவனடியார் திருக்கூட்டம்" "தனவைசிய வூழியர் சங்கம்" "வாசகசாலை" "இந்து மதாபிமானச் சங்கம்" முதலிய சிலசங்கங்களும், "தனவைசியவூழியன்" "குமரன்" என இரண்டு வாரப்பத்திரிகைகளும், இரண்டு ஒரு மாதாந்தப்பத்திரிகைகளும் நடந்து வருகின்றன. இரண்டு மூன்று அச்சியந்திரசாலைகளும் இருக்கின்றன. சில காரணங்களைக் கொண்டு, இச்செட்டிமண்டலத்துக்குத் தலைநகரமென்றுஞ் சொல்லலாம். தேவகோட்டையிலும் இரண்டொரு அச்சியந்திரசாலைகளிருக்கின்றன. இச்செட்டிமண்டலத்துக்குப் பூர்வீகமாக உரித்தானவர்கள் நீங்கலாக, ஏனையநாட்டுச்சனங்கள் கணக்குவழக்கின்றி ஒரு பெரிய பலாக்கனியை பலபாகங்களாகப் பிளந்து வைத்திருப்ப ஈ யெறும்பாதிகண் மொய்த்துத்துய்த்துக் கொண்டிருப்பன போன்றே சூழ்ந்து மொய்த்துக் கொண்டிருக்கிறார்கள். இச்செட்டி மண்டலத்துக்கடுத்து புகை வண்டித்தொடர் நிலைகள் கிழக்கு அறந்தாங்கியும், மேற்கு மதுரைமாநகரமும், வடக்குத் திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூரும், தெக்குமானமதுரை இராமநாதபுரமுந்தான். இவ் எல்கைகளையல்லாமல் புகைவண்டித் தொடர் இச்செட்டிமண்டலத்தில் கலியுகம் ஐயாயிரத்து இருபத்துநான்காவது, ஆண்டாகிய இற்றை நாள்வரை வரவில்லை.

௰௪. தேவகோட்டை, காரைக்குடி, கோனாபட்டு, கடியாபட்டி, முதலிய சில நகரங்களில் நவீன முறைகளை அநுசரித்து நடைபெறும் சில கல்விச்சாலைகள் நடந்துவரினும், பெரும்பான்மையும், இச்செட்டிமண்டலத்து, அநாகரீகமான சில பூர்வீக முறைகள் அமைந்துள்ள திண்ணைப்பள்ளிக்கூடங்கள்தான் இக்காலமும் நடைபெற்று வருகின்றன. இக்கூடங்களிற்றான் நமது, வைசியமகா சமுகத்தைச்சார்ந்த ஒவ்வொரு சிறாரகளும் படித்து விடுகிறார்கள். இத்திண்ணைப்பள்ளிக்கூட உபாத்தியாயர்களில் பெரும்பான்மையோர்களுக்கு "ழகர" "ளகர" "லகர" பேதங்களும், "ரகர" "றகர" பேதங்களும், "ணகர" "னகர" "நகர" பேதங்களும், உயிரெழுத்து, மெய்யெழுத்து, உயிர் மெய்யெழுத்து, ஆய்தவெழுத்து, குற்றெழுத்து, நெட்டெழுத்து, சுட்டெழுத்து, வினாவெழுத்து, ஆணெழுத்து, பெண்ணெழுத்து, அலியெழுத்து முதலிய சாதாரண, எழுத்தியல்களுங்கூட ஒரு சிறிதளவுந் தெரியாது, என்றால் இவர்களைப்பற்றி மேற்கொண்டு என்னதான் சொல்லி வரையப்போகிறோம்! இவ், உபாத்தியாயர்கள், "கீவா லெக்கம்"

"மேவா லெக்கம்" "பெருங்குளிமாத்து" "சிறுங்குளிமாத்து" "சதுரம் எம்பது" "எஞ்சுவடி" "மோதுரை" "நல்வழி" "வாப்பாடு" என்று, அவர்கள் பேசிக்கொள்வதும், அச்சிறுர்களை முறைவைக்கச் செய்வதும், அச்சிறுர்கள் "ஓரேஞெண்ணே" என்று, ஒருப்போல அழகாக முறைவைத்து கூச்சலிடும் கூச்சல் மிகவியப்பாகவே இருக்கும். நியாயமாக, அவ்வுபாத்தியாயர்களின் இயற்கைகளைப்பற்றிச் சொல்லப்புகுந்தால் அவர்களை ஒருவகையான விலங்கினத்தாரே என்றுதான் கூறுதல் வேண்டும். முழுமூடக்கயவர்கள் என்றும் சொல்லலாம். அதனுல் எவ்விதத்தோஷமும் நிகழமாட்டாது. பெற்றோர்களால் அவர்களிடம் ஒப்புவிக்கும் குழந்தைகளை மனிதக்குழந்தைகளே என்று அவர்கள் கருதுவதில்லை. கீரிப்பிள்ளை, அணிற்பிள்ளை, தென்னம்பிள்ளை, ஆட்டுக்குட்டி, எருமைக்கன்றுக்கண் முதலியனவென்றே கருதி அவர்கள், அக்குழந்தைகளுக்கிடும் கண்டன, தண்டனைகள் அளவிறந்தனவே ஆகும். இச்செட்டிமண்டலத்து, அந்த முழுமூடக்கயவர்களான உபாத்தியாயர்களால் அச்சிறுர்களை கோதண்டத்தில் தூங்கச் செய்யும் பழக்க வழக்கங்கள் இன்னும் தொலைந்து போகவில்லை. குனியவைத்த கழுத்துக்கும், காற்பெருவிரலுக்கும் சரியான கயிற்றை மாட்டி, மூன்று மணிநேரம், நான்கு மணிநேரம்வரை வெயிலில் நிற்கவுஞ் செய்து விடுகிறுர்கள். சில பிள்ளைகளுக்கு விலங்கையும் மாட்டிவிடுகிறுர்கள். சில பிள்ளைகளுக்கு ஒரு மணங்கு பாரமுள்ள கட்டை ஒன்றில் சங்கிலியை மாட்டி, அச்சங்கிலியை காலிலும் பூட்டிச் சுமந்து வரும்படியும் செய்கிறுர்கள். சில பிள்ளைகளைச் சிறையிலடைத்துக்கொண்டும் கஞ்சியூற்றுகிறுர்கள். இயற்கைக்கள்வனுக்கு என்ன நடைபெறுமோ, அத்துணையையுமே அக்கயவர்கள் நடத்திவருகிறுர்கள். எடுத்த எந்த வியவகாரத்துக்கும் ஓயாமல் மண்டையில் கணீர், கணீர் என்று கொட்டுகிறதும், ரூல்த்தடி போன்ற பெரியகொம்புகொண்டு விரன்மணிக்கட்டுக்களில் அடிப்பதும், அளவுக்கணக்கற்ற உக்கிகள் போடும்படி செய்வதும், தாறும், மாறுமாகப்புடைப்பதும்; காட்டுமிராண்டியொருவனே காணினும், அவன் தன் இரண்டு கண்களிலும் கண்ணீர்சொரியப் பரிதாபப்பட்டே தீருவான். இவ்வுபாத்தியாயக் கயவர்கள் "அடியாதமாடு படியாது" என்றும், "அடியுதவினுற் போன்று அண்ணன் தம்பி உதவமாட்டான்" என்றும் சொல்லிக்கொண்டே தீர்மானத்தைத் தீர்த்து விடுகிறுர்கள். பிள்ளைகள் ஒருங்கும் இயமனைக்கண்ட உயிர் போன்றே கிடுகிடுவென்று, நடுங்குவார்கள். சிலபிள்ளைகள் உபாத்தியாயக் கொலைஞனைக் கண்டதும், வேட்டி நன்ருக தொப்பல் தொப்பலாம்படி மூத்திரத்தையும், பெய்து விடுவார்கள். அச்சண்டாளக் கயவர்கள் அதற்கும் இரண்டு புடைபுடைப்பார்கள். பெரும்பான்மையும், முழுச்சோம்பேறிகள் தான் உபாத்தியாயர்களாய் இருக்கிறுர்கள். இக்கயவர்கள் வேறு எவ்விதத் தொழில்களுக்கும் உபயோகப்படமாட்டார்கள். சிலர் முடவர்களாயும்,

சிலர் நோயாளிகளாயும், சிலர் வாதப்பித்தங் கொண்டவர்களாயும், சிலர் வைத்தியக் கிறுக்குப் பிடித்தவர்களாயும், சிலர் சோதிடங் கற்பான் தொடங்கினவர்களாயும், சிலர் வேசையில்லங் காப்பவர்களாயும் காணப்படுகிறார்கள். சிலர் சித்தர் நூற்களையே இராகத்துடன் படித்துக்கொண்டிருந்து பொழுது போக்குகிறவர்களாயும் இருக்கிறார்கள். சிலர் ஊர் மணியம் பார்ப்பார்கள். சிலர் ஆள்வாரற்றவேலை இதுதான் நமக்கு நன்மை பயக்குமென்று நினைத்தே இத்தொழிலைத் தாங்களாகவே ஏற்றுக்கொள்கிறார்கள், இக்கயவர்களிடம், அப்பிள்ளைகள் படித்துப் படிப்பாளிகளாவதைவிட அப்பிள்ளைகள் மூடர்களாயிருந்தே, தங்களின் வாழ்நாட்களை யொழித்து விடுவதே மிக உத்தமமென்று சொல்வதும் பிழையாகமாட்டாது. இத்துணைக்கொள்ளையில், நமது, தனவைசியச் சிறுமிகளும் அக்கயவர்களிடந்தான் ஓதி வருகிறார்கள். சில பள்ளிக்கூடங்களில் ருதுவாகுந்தருணத்தை மேற்கொண்டச் சகோதரிகளுங்கூட படித்து வருகிறார்கள். அடடா! இஃதென்ன அநாகரீகமான, காட்டுமோட்டுத் தன்மை வாய்ந்த கொள்வகை. மகா இலக்குமீகரம் வாய்ந்தவர்கள். சுவர்ண விக்ரகம் போன்றவர்கள். பெரிய செல்வந்தர்களின் புத்திரிகள். அற்புதமான குணவிசேட முள்ளவர்கள் அந்த நித்தத்தரித்திரக் கயவர்களான உபாத்தியாயர்களின் ஊத்தைவாயால் என்ன, என்ன வார்த்தைகளெல்லாங் கேட்டுக்கொள்கிறது! அவர்களின், நவரத்தினம் போன்ற சரீரத்தில் எந்த, எந்த இடங்களிலெல்லாம் கிள்ளு வாங்குகிறது! ஒரு லக்ஷ ரூபாய் சீதனத்தோடு கணவனில்லஞ் செல்லத் தயாராகவிருக்கும் ஒரு பாக்யவதியானவள் அத்தரித்திரகயவனால் "எருமைக் கன்றுக் குட்டியே" "நாயே" "பேயே" "கழுதையே" "பிசாசே" எனப்படுகிற பல இழிந்த வார்த்தைகளைக் கேட்கவும் பெறலாமா! அக்கயவர்களின் "நுகத்தடியினும் வேறுபட்ட மரம்போன்ற" கரங்களால் தொடைகளில் கிள்ளவும் பெறலாமா? தாரை தாரையாகக் கண்ணீரை வடியவும் விடலாமா? அடடா! இஃதென்ன அவநியாயம்! அக்கயவர்கள் சொல்லிக் கொடுக்கும் முந்திரிலக்கப் படிப்பு அப்பெண்மணிகளுக்குச் சுவர்க்கத்தையா காட்டிவிடப்போகிறது? ஆனால், தங்கணவன், கொண்டுவிற்றுக் கொண்டு வரும் கணக்கையாவது, சரி பார்த்து விடுவார்களா! அப்படியாயினுந் தான் இப்படிப் படலாமா? இப்பெண்மணிகள், சிறிது நல்லவிவேகமும், ஒழுக்கமும், சாந்தமும் இயற்கையாகவே உடையவர்களாகலின், தங்களில்லத்திற் போய் ஒன்றையுமே சொல்லமாட்டார்கள். நமது பிள்ளைகள் நன்றாகப் படித்து வருகிறார்களென்று, பெற்றோர்கள் எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் இவைகளை எல்லாம் ஒழுங்காகக் கவனிக்கவேண்டியவர்கள் யார்; பெற்றவர்கள் தானோ? இல்லை, இல்லை. பின்னர்யார்? தங்களின் சமூகத்தைச் சீர்திருத்தஞ் செய்யவென்று கங்கணங் கட்டிக் கொண்டிருக்கும், பெரியோர்கள் தான். அப்பெரியோர்கள், நமது

வைசியமகா சமூகத்துக்கு தற்காலம் உடையவர்கள் யார்? அவர்கள் ராய, சொக்கலிங்கம் அவர்கள் தான். சொ. முருகப்பன் அவர்கள்தான். தன வைசிய ஊழியர் சங்கத்தார்கள்தான். இவர்கள், அக்பர் மணியத்திற்முன் மாரடித்துக்கொண்டு நிற்கிறார்கள். சீர்திருத்தத்துக்கு அடி பீடம் இன்னதென்பதே அவர்களுக்கு விளங்கவில்லை. பால்யர்களின், ஆரம்பக்கல்வி இப்படி நாசமாய்ப் போகலாமாவென்பது அவர்கள் புரட்டிய நூற்களில் காணப்படவில்லைப்போலும்! என் செய்யலாம் பாவம்! அவர்களும் கௌரவம் என்கிற நீலமேக சாமளவர்ணமாகிய போர்வையாற் போர்த்தப்பட்டிருக்கிறார்கள். செல்வவந்தர்களின் காலுக்குச் செருப்பாக நடந்துகொள்ளப் பிரியமும் அவர்களுக்கில்லை. போதுமான திருவருட்சக்தியும் இல்லை. பின்னர் எப்படித் திருத்தஞ் செய்துவிடப் போகிறார்கள்? கோணல்மாணலாக வியாசங்கள் வரைவதும், பத்திரிகைகளை நடத்துவதும், சாதாரண ஒரு முடப்பையல் தொழில் என்பதும் அவர்கள் உணர்ச்சியில் இல்லை. ஆங்காங்கு உடைத்தான ஒவ்வொரு நகரங்களுக்குஞ் சென்று, பெரிய செல்வவந்தர்களைக் கண்டு, மிகத் தாழ்மையான வணக்க ஒடுக்கத்தோடும் கலந்து பேசி விஷயத்தை எடுத்துச் சொல்லிப் பெண்மக்களுக்கும், ஆண்மக்களுக்கும் வேறு, வேறு தனித்தனியாக கல்விச்சாலைகளை முறையாக அமைத்து ஒழுங்காக கல்வி கற்பிக்குமாறு செய்து வருவார்களானல், அந்தோ! இவர்களை எத்துணைப் பெரியரென இச்சமூகம் கொண்டாடும் ! நாளாரம்பத்தில் எத்துணைச் சீர்கள் திருத்தமாய் விடும்! ஒவ்வொரு பெண் மணிகளும் தாங்கள், தாங்களே சுயவரம்நாட்டத் துணிந்துகொள்ளமாட்டார்களா, ஓர் முடவனுக்கும், குருடனுக்கும், அளவுக்கு மிஞ்சிய ஒருவயோதிகனுக்கும், பிணியாளனுக்கும், தன்முன்றானையை விரிக்கச் சம்மதிப்பார்களா? செல்வமில்லாமற் போனுல் எனக்கு அவசியமில்லை. அழகும், குணமும், ஆண்மையுமுள்ள என் அத்தை மகனையே நான் மணப்பேன் என்று தன் நெஞ்சாரத் துணிந்தும் மணந்துகொள்ள மாட்டார்களா? எனக்காக வாங்கிய தொகையை என்கையிலே போட்டு விடுங்கள் என்று பெற்றுக் கொண்டன்று திருமாங்கலியத்தைப் பூட்டக் கழுத்தினை நீட்டுவார்கள். மேற்கண்ட அப்பெரியாரிருவருக்கும் கட்டுத் தலம் இன்னது, மேய்ச்சற்றலம் இன்னது என்பது விளங்காமலன்றோ வீண் முழக்கம் முழங்குகிறார்கள். இவர்களைப்பற்றி மிகுதியும் இங்ஙனம் விரிப்பான் தொடங்கல் தகுதியன்று. மேற்கண்ட அவ் உபாத்தியாயக் கயவர்களோ பள்ளிக்கூடத்துக்குச் சரியாய் வருவதுமில்லை, பாடத்தை ஒழுங்காக நடத்தத் தெரிந்ததுமில்லை. தெரிந்த ஒருவாறு ஒழுங்காக நடத்துவதுமில்லை. எந்த ஒரு பிள்ளைக்கே எனினும், முறையாக ஒன்றைச் சொல்லிக் கொடுத்துப் பின்னர் சரிகேட்பதுமில்லை. இக்கயவர்கள் மண்வெட்டியை எடுத்துக்கொண்டு ஒருவாய்க்கால் வரப்பேனும் வெட்ட ஆள்த்தேவையுண்டோவென்று சொல்லிக் கூவிக்கொண்டு

செல்லினும் ஒரு புண்ணியம் உண்டு. இன்றேல், எச்சிற் கல்லை பொறுக்கச் செல்லினும் ஓர் புண்ணியம் உண்டு. என்றாலும் இக்கயவர்கள் எதற்கு மே லாயக்குப்படமாட்டார்கள். இந்தக் கொள்ளையில் இவர்களுக்குச் சம்ப ளம் பிள்ளை ஒன்றுக்கு ஒரு ரூபாய் இரண்டு ரூபாய்கள்தான். தீபாவளிக்கு வேறு, சங்கராந்திக்கு வேறு, மகர நோன்புக்கு வேறு, நன்மை தீமைகளுக் குவேறு, ஆயாள்வீட்டுக்குக் கூட்டிக்கொண்டு போனதற்கு வேறு கொடுக்க வாங்கல்களும் உண்டு அடடா! இஃதென்ன கொடுமை! "கொழுக்கட்டை தின்ற நாய்க்குக் குறுணிமோர் தெக்கணை" என்ற பழமொழிக்கிணங்க, சில செல்வவந்தர்களின் குழந்தைகளுக்குத் தனித், தனியாக வேறு, வேறு இராப்போதனைக்காக நாலைந்து ரூபாய்கள் சம்பளங்களும் உண்டு. பத்துப் பதினைந்து சம்பளங்களும் உண்டு. இத்துணைவருவாய்களினும், அக்கயவர்க ளுக்கு குடிக்கக்கஞ்சிக்கும், குண்டிக்குத்துணிக்கும், குடியிருக்க வீட்டுக்கும் படுக்கப்பாய்க்கும் நித்ததரித்திரந்தான். பள்ளிக்கூடத்தில் பிள்ளைகள் ஒருவரோடொருவர் அடிபிடி சண்டைகள் போட்டுக் கொண்டும், கூச்சலிட் டுப் பேசியும், சிரித்தும் விளையாடிக்கொண்டும், வெளியேறி அங்கும் இங்கும் ஓடித் திரிந்துகொண்டுந்தான் இருப்பார்கள். கொஞ்சம் வயது முதிர்ந் தபிள்ளைகளை அக்கம் பக்கத்து வீட்டுக்காரர்கள். தங்களில்லத்துடைத் தான சிலவேலைகளை செய்வதற்காக இட்டுக்கொண்டும் போய்விடுவார்கள். ஆனல், பெரும்பான்மையாக நமது செட்டிமண்டலத் துடைத்தான அநேக திண்ணைப் பள்ளிக்கூடங்களை வேண்டுமென்றே கவனித்துக்கொண்டு வந்தி ருக்கிறேன். அவைகளில் ஒரு பள்ளிக்கூடத்தைப்பற்றிச் சிறிது விவரித்து வரைகிறேன் கவனியுங்கள். கோட்டைமாநகரத்தில், பெ. க. அ. சித. வீட் டுக்குத் தென்பக்கம் கிழமேலோடிய ஓர் தெருவில் க. வீ. அழ. வண்டி கொட்டகையில், சண்முகம்பிள்ளை என்பார் ஒருவர், திண்ணைப்பள்ளிக்கூடம் ஒன்று வைத்துக் கொண்டிருக்கிறார். அவருக்கு வயசு இருபத்தைந்து இருபத்தாறு இருக்கலாம். அவர்க்குத் தாய் மாமனர் இருவருளர் ஒருவர் அமராவதி புதூரில் திண்ணைப் பள்ளிக்கூடம் வைத்துக்கொண்டிருக்கிறார். மிக நல்லகுணமும், சாந்தமும், அடக்கமும் உடையவர்கள். நாட்டார்க்கும் நகரத்தார்களுக்கும் மிக நல்லவர்களாய் நடப்பவர்கள். இவர்கள் பூர்வீகம திருநெல்வேலி ஜில்லாவைச் சார்ந்த சைவர்கள் என்று சொல்லிக்கொள் கிறார்கள். பெரும்பான்மையும் சண்முகம் பிள்ளைதான் உபாத்தியாயராக இருந்து பள்ளிக்கூடத்தை நடத்தி வருகிறார். ஒரு சுமார் நூறு பிள்ளை கள் வரை ஆண்களும் பெண்களுமாக அக்கொட்டகையில் குந்தியிருப்பார் கள். பெரும்பான்மை எண்பது பிள்ளைகள்வரை தங்களின் எட்டுமூட்டை களை அவிழ்க்கும், வழக்கமே இல்லை. கோட்டைமா நகரத்திலுள்ள சிலர் நன்றாகக் கவனித்தும் இருக்கலாம். தனக்குப்பின்னாலேனும், முன்னாலே னும் எட்டுமூட்டையைக் கட்டினபடியே வைத்துவிட்டு ஒன்றோடொன்று

குசு, குசு வென்று பேசியும் சிரித்தும் விளையாடி கொண்டுமிருக்கும், சிறிது நேரத்துக்கு ஒருமுறை இரைச்சல் மிகுதியாய் உண்டாகிவிடும். அப்பொழுது பிள்ளைகள் தவருமல், ரூல்தடிக்கனம், நீளமுள்ள பிரம்பொன்றுல் ஒவ்வொரு பிள்ளைகளின் மண்டையிலும், முதுகிலும், நச்சு, நச்சென்றும், பளீர், பளீரென்றும், நியாயாநியாயத்தை உணராமலடித்துக்கொண்டு வருவார். ஒருசமயம், அவர்க்குப் பிரதிநிதியாகவுள்ள பள்ளிக்கூடத்துப் பையன்களில் ஒருவன் அடித்துக்கொண்டு முடிப்பான், பாடஞ் சொல்லிக் கொடுக்கும் பழக்க வழக்கமே கிடையாது. அடித்தமுளையும், ஆணியுமாக, காலத்தை வீணுக்காமல் ஒழுங்காக நாலைந்து உபாத்தியாயர்களிருந்து போதிக்க வேண்டும். ஒரு கூட்டப்பிள்ளைகளின் ஓர் மூலையில் இவ்வொருவர் உட்கார்ந்துகொண்டு, யார் யாரிடம் பாடத்தைக் கேட்பார்? யார் யார்க்கு புதுப் பாடஞ் சொல்லுவார்? யார் யார்க்குச் சட்டம் எழுதிப் போடுவார்? யார் யார்க்கு காப்பி மேற்பாரம் வைத்துக்கொடுப்பார்? யார் யார்க்குக் கணக்குப் போடுவார்? யார் யார்க்கு வாசகம் நடத்துவார்? ஐயோ பாவம்! அவர் என் செய்வார்!"பேராவல் தரித்திரம் தீராத உபத்திரவம்" என்பதுதான். செட்டிநாட்டுப்பள்ளிக்கூடமாயிற்றே எந்தப் பிள்ளைகளை இருத்திக்கொள்வது, எந்தப் பிள்ளைகளைப் போகச்சொல்வது, என்ற கருணையுங்கூடத்தான். இத்துணைத்தன்மையில் இவர்பள்ளிக்கூடத்துக்கு எப்படி நூறு பிள்ளைகள் வரை சேர்ந்தனவென்று சிலர் நினைக்கலாம். அஃதாவது, விடியற்காலையில் ($5\frac{1}{2}$-மணிக்கு) எல்லா பிள்ளைகளையும் ஒன்றுபோல வந்துவிடும்படி, கிட்டியிட்டும்; அடிகளைப்போட்டும், கோதண்டத்தில் தூங்கப் போட்டும் அச்சண்டாளன் அச்சிசுக்களைப் பயமுறுத்தி வைத்திருக்கிறுர். அதன்படியே, எல்லாக் குழந்தைகளையுங் காணலாம். வந்து சேர்ந்ததும் ஒரு பையன் "ஓரேமெண்ணே" என்று, முறைவைக்கிறுன். அவனுக்குப்பின், ஒருபத்து, பதினைந்து பிள்ளைகள் அதன்படியிலேயே அதிகாலையில், ஒரே பெருங்கூச்சலாக முறையிடுகிறுர்கள். அதன் மார்க்கமாக சுருட்டு பற்றவைத்துக் கொண்டு வெளிக்குப்போகுஞ் சிலர், அடோ அப்பா! சண்முகம் பிள்ளை பள்ளிக்கூடத்தை மிகவொழுங்காக நடத்துகிறுன் என்கிறேன் என்று ஊருணிக்கரையில் ஒருவரோடு ஒருவர் பேசிக்கொள்கிறுர்கள். இந்தப்பேச்சுத்தான் அதற்குக்காரணம். ஆங்குசென்று உள்நுழைந்துபார்த்தால் ஏனைய பிள்ளைகள் யாவரும் சும்மாதான் குந்திக்கொண்டிருப்பார்கள். உபாத்தியாயரவர்கள், தங்கள் வைப்பாட்டி வீட்டிற் படுத்துறங்கிவந்த தூங்கமூஞ்சியைக்கழுவாமலும், பல்லைத்துலக்காமலும், குண்டியைக்கழுவாமலும், மலாக்காவிலிருந்து வந்த போர்வை ஒன்றைப் போர்த்துக்கொண்டு முண்டம் போன்ற கரும்பிசாசுக்கு ஒக்க ஓர் பக்கத்தில் குந்திக்கொண்டிருப்பார். பெரும்பான்மையும், பிள்ளைகளுக்கெல்லாம் ஒவ்வொரு ரூபாய் சம்பளந்தான், இவர்க்கு வரும் வருவாய்களில் முக்கால் வாசித் தொகைத் துர்விநியோகச்

தான். அஃதொருபக்கம் இருக்கட்டும். காலை ஒன்பது, பத்துமணிக்கெல்லாம் பிள்ளைகளொருங்கையும் மூஞ்சியைக் கழுவி கொண்டுவாருங்களென்று மூன்று நான்கு பிரிவுகளாகப்பிரித்து மூன்று நான்கு ஊருணிகளைப் பார்க்க அனுப்புவார். அப்பொழுதும் பிள்ளைகள் "முந்திரியும், முந்திரியும் அரைக்காணி" என்று முறைவைத்துக் கொண்டுதான் சென்றுவருவார்கள். அதுவும் ஒரு பிரமைதான். ஏனையா! சில பிள்ளைகள், அறவே எட்டு மூட்டைகளை அவிழ்க்காமல் எதற்காக சும்மாவே குந்திக்கொண்டிருக்கிறார்கள் என்று கேட்டால் நமது, பள்ளிக்கூடத்தில் படிப்புக்காக நமக்குச் சம்பளமில்லை. அப்பிள்ளைகளை வெளியேறி விளையாடவொட்டாமல், அடித்துக் கைகால்களை ஒடித்து, பாதுகாப்பதற்காகத்தான் சம்பளம் என்றுஞ் சொல்லுவார். சில பிள்ளைகள், வீட்டில் செய்தபிழைபாடுகளுக்கும் இவர் கடுந்தண்டனைகள் புரிவார். "பொல்லாதவனைப் பார்க்கினும் புரியாதவன் மகா கெட்டவன்" என்பதற்கிணங்க இவர் ஒன்றும்புரியாத அண்ணாவி. அ. மு. நா. வீட்டுப்பையன்கள், இயற்கையிலேயே, நல்லறிவு, நற்குணம், நல்லொழுக்கம் உடையவர்கள். எந்தவிதமான கட்டமுமின்றி, எத்தகைய ஒரு உயர்ந்த பாடத்தையும் மிக இலகுவிலே, அவர்களுடைய மனோ சக்தியை விட்டு எந்தக்காரணத்தை முன்னிட்டும், எந்தஞான்றும் விலகிவிடாத வண்ணம், கல்லின்மேலெழுதிய எழுத்தாம்போன்று மிக நன்றாகப் பிழையற அவர்களின்பாற் பதிப்பித்து விடலாம். அத்தகைய முதன்மாணவர்களில் ஒருவனான அ. மு. நா. "சொக்கன்" என்பவனை, ஒருநாள் இவ்வுபாத்தியாயர் படுத்தியபாடு, எல்லாம் வல்ல இறைவனுக்குத்தான் பிரீதி. அடடா! என்ன வென்று சொல்வது. இந்த அதர்மசண்டாளக் கொலைஞனையே கீர்த்த நமது நண்பர் ஸ்ரீமார் உபாத்தியாயரவர்கள் அச்சொக்கனுக்குச் செய்யுங் கோட்டாலையைக்கண்டு, அச்சொக்கனுக்கு இளையசகோதரனான சுப்பையா என்னும் ஐந்தாறு வயதுள்ள சிறுவன் மாலைமாலையாக கண்ணீரை வடித்துக்கொண்டு நிற்கிறான். தெருவில் போவார், வருவார் சிலர் இஃது ஏனெனக்கேட்டு வேடிக்கை பார்த்துக்கொண்டும் நிற்கிறார்கள். இந்தத்தருணம் நானும், அங்குபோய்ச் சேர்ந்தேன். அப்பையன் கைகளிரண்டையும், பின்கட்டுமாற்றாக முதுகுப்புறமாக இழுத்து மாற்றிவைத்து ஒரு பச்சை நூற்கயிற்றாலே, ஐந்தாறு சுற்றுக்கள் போட்டுக்கட்டி, அதேகயிற்றைக் கொணர்ந்து கழுத்திலேமாட்டி, கழுத்தை நன்றாகக் குனியவைத்து, அதேகயிற்றை இரண்டு காற்பெருவிரல்களினும் மாட்டி நிற்கவைத்திருக்கிறார். அதற்கு முன் எத்துணை அடிகள் அடித்தாரோ, அது, அவருக்கும் ஏனையபிள்ளைகளுக்குந்தான் தெரியும். இந்த முரட்டுக்கடாப் பாண்டியனைத்தான் அப்பிள்ளைகள் ஐயா! வெனவும் அழைப்பார்கள். அப்பையனோ! மூசு, மூசு, என்று, பெருமூச்சுவிட்டு. ஏங்கி, ஏங்கி, கோவென்று அழுது கொண்டும், முக்கிக்கொண்டும் நிற்கிறான். ஒருவகையாக, எமதருமனையும்,

மார்க்கண்டனேயுமே குறிப்பிடத்தகுந்த நிலைமையாய் காணப்பெற்றன. நான் போனதும், பக்கத்திலிருந்த பையன் ஒருவனைப்பார்த்து அடா! தம்பி, இக் கட்டை அவிழ்த்து விடடாவென்று, சொல்லி அவிழ்த்து விட்டு விட்டு, எந்தப் பிள்ளைகளையும் இந்தமாதிரி செய்யாதேயுங்கள் எனச் சொல்லிவிட்டு என் சோலியைப்பார்க்கப் போய்விட்டேன். பிள்ளைகளுடைய அருமை, பெருமைகள் இக்கயவர்களுக்கு, நன்கு விளங்குவதில்லை. மேற்கண்ட தண்டனையைவிட எத்துணையோ பன்மடங்கு மிகுதியான கண்டன தண்டனைகளும், இவ்வுபாத்தியாயராலும், ஏனைய திண்ணைப் பள்ளிக்கூடங்களிலும், நடப்பது சாதாரண வியற்கையாகவே காணப்படும். மேலும், தற்காலம், எந்தத்திண்ணைப் பள்ளிக்கூடங்களிலும் திவாகரம், நிகண்டு பாடமே கிடையாது. மேலும்.

"நெடுமால் திருமருகா! நித்தம் மதலாய்!
கொடுமா வினையறுக்கும் குன்றே! தடுமாறுது
எண்ணெழுத்து முப்பதுவாயும் என்சித்தத்தே நிற்கப்
பண்ணுத்தமனே பரிந்து" 1.

"முந்திரிலக்கம் முறையுடன்படிக்கத்
தந்திமுகத்தோன் தாளே சரணம்" 2.

"சீரானலக்கம் சிறப்புடனே நான்படிக்க
காரானை மாமுகத்தோன் கழலே சரணம்" 3.

"முக்கான் முதலாக முந்திரிவாய் கீழாக
எக்கா லிசையாக ஏழெட்டுந்தப்பாமல்
தம்பிக்கு நல்லானை சாதிக்கனியானை
தும்பிக்கை யானே துணை"

"அகத்தியன் அருளால் அருந்தமிழ் அ ஆ
செகத்தின் முதலாகச் செப்பவே—மிகுத்தெனக்கு
வாரா வெழுத்தெல்லாம் வரவே வரந்தருவாய்
வாரானை ஐங்கரனே வா" 5.

"உகமது உதித்தபோது ஓங்கியவருடம் மாஸம்
இகபரம் உள்ளமட்டும் இயம்பியவாரம் நாண்மீன்
அகமது பக்கங்கூற அறுமுகன் தனக்குமூத்த
பகவன்தாள் காப்புத்தானே பண்புள்ளோர் பகருவாரே" 6.

"பெருங்குழி மாறுப் பேருலகறியாக்
கருங்குழி யானைக் கணபதி காப்பே" 7

"ஏரம்பா வோர்கோட்டி யானைமுகா நின்னையே
பேரன்பா லேற்றிநிற்கும் பேதையேம்—கூரன்பால்
கற்குஞ்சிறு குழிமாற்றுக் கணக்கேம் நெஞ்சத்து
நிற்கும்படி யருள்செய் நீ." 8.

இன்னும், இவைகள் போன்று சிலகாப்பு பாக்களும் உண்டு. நண்ப! மேற்கண்ட இப்பாக்கள் இக்காலத்தும் இத்துணை மாட்சிகள் தங்கிய இத் திண்ணைப்பள்ளிக்கூடங்களிற் கற்பிக்கும் கல்வியின் காப்புச் செய்யுட்க ளாகும். இந்தக் காப்புச் செய்யுட்களைக் கூடக் காப்புச் செய்யுட்களாகக் கற்பிக்கத் தெரிந்து கொள்ளாத முழுமூடக் கயவர்களிடத்தில் ஆயிரக் கணக்காக ஆண் குழந்தைகளையும், பெண்குழந்தைகளையும், நமது, செட்டிமண்டலம், கல்வி கற்குமாறு ஒப்புக் கொடுத்திருக்கின்றன. அக்காலம் பூரணபாண்டித்தியமுள்ள சாத்திரிமார்களிடத்தில், கல்வி கற்று நம்மனோர், அறிவு நிரம்பப் பெற்றனர்கள். இக்காலம் சிறிது ஏறக்குறைய இருபத் தைந்து வருடங்களுக்கு முன்னரும்கூட நமது சிறுர்கள், பிராமணர்க ளில் ஒருவரையேனும், அல்லது, செவ்வையான சைவர்களில் ஒருவரை யேனும், உபாத்தியாயராகக் கொள்ளவேண்டுமே தவிர, ஏனைய ஒரு வரை உபாத்தியாயராகக் கொள்ளல் கூடாதென்ற எண்ணம் நம்மனோரி டம் தங்கி இருந்துகொண்டு வந்தன. தற்காலம், கள்ளர் மறவர், இடை யர், தாதன், ஆண்டி, புலாலுண்ணும் வேளாளன், கயவன், முட்டாள், நொண்டி, சப்பாணி, பிணியாளன், பெரிய வியாதிக்காரன், கட்குடியன், வெறியன், கோபக்காரன், வஞ்ச நெஞ்சன், வேசை இல்லங்களுக்குத் தூது செல்வோன் முதலிய அயோக்கியர்களெல்லாந் தாங்கள் தாங்க ளே உபாத்தியாயர்களாக உட்கார்ந்துகொள்ள, அவர்களிடம் நம்மனோர் சிறுர்களை ஒருவிதமான ஆராய்ச்சியுமில்லாமல் ஒப்பித்துவிடுகிறார்கள். என் றால், அளவுக்குமிஞ்சிய ஒரு அரசாங்கம்போன்ற சில பெருஞ் செல்வ வந்தர்களேனும் தங்கள், குழந்தைகளின் படிப்பு விஷயத்தைக் கவனிக் கப்படாதோ என்றால் பெரும்பான்மை அவர்களும் கவனிக்கப் படுவ தாய்க் காணப்படவில்லை. பெ. மு. வீட்டிலிருந்து "வண்டார் குழலி" என்னும், சிறுமியையும், "இராமையா" என்னும், சிறுவனையும்கூட மேற் கண்ட அம்முடிவானிடந்தான் ஒப்பிவிக்கப் பெற்றிருக்கிறது. அவ்விரு சிறுவர்களும், அவ்வண்டிக்கொட்டகையின் ஓர் மூலையிற் குந்திக்கொண்டி ருப்பார்கள். ஏனையபிள்ளைகளைப் பண்ணுங் கோட்டாலையைக்கண்டு, இச் சிறுவர்களிருவரும், ஏனைய நமது சிறுவர்கள் பலரும், ஏங்கி, நடு, நடுங்கிக் கிளிப்பிள்ளைகளைப் போன்று ஒடுங்கிப்பார்த்துக் கொண்டிருப்பார்கள். ஆடிக் கொருமுறை, ஆனிக்கொருமுறை ஷை சண்டாளன் "எங்கே, ஏவண்டே! ஒன் பாடத்தைக் கொண்டா" பார்ப்போமென்று கிடு கிடாவென்று ஓர் சத்தமிடு வார். அது கேட்டு, அக்குழந்தை நெலிபிடித்து கிட்டக்கவந்ததும், கன் னத்தில் இரண்டு கிள்ளு வலுவாகக் கிள்ளி விடுவதுதான் பாடங்கேட்குந் தன்மை. மேலும், அக்குழந்தைகளுக்கு கனவினுங்கூடப் பயங்கரந்தான். அடிக்கடி, அக்குழந்தைகளின் உடம்புக்கு அசௌகரியங்கள் ஏற்படுவது முண்டு. காரணம், அளவுக்கு மிகையாக பிள்ளைகள் ஒன்றுகூடி ஓயாமல்

குந்திக் கொண்டிருப்பதாலுண்டாகும் வெப்பந்தான். மாஸம் ஒன்றுக்கு நூறுரூபாய்ச் சம்பளங் கொடுத்துங்கூட ஒரு உபாத்தியாயர் நியமித்துக் கொண்டாற்றான், என்ன, சிற்றறிவைப் பேரறிவாண்மையாக வளர்க்கும் ஒருவகை சக்தி அன்று? மேலும். அவ் உபாத்தியாயர், சிலேட்டுப்பலகை, சிலேட்டுக்குச்சி,சட்டத்துக்கு ஓலை,எழுத்தாணி, பேனா,பெனுசல்,மைக்கூடு, காப்பிநோட்புக், முதலிய புத்தகங்கள் ஏடுகள்வரை ஒவ்வொருபிள்ளைகளும், தவறின்றிக் கொணர்ந்து தயாராக வைத்துக்கொண்டிருத்தல் வேண்டும் எனவும் கட்டளை இடுவார். பொதுவாகச் சாதாரணமாய் இவ் ஒரு திண்ணைப் பள்ளிக்கூடத்தில் மட்டுந்தான், என்பதொன்றுமில்லை. நமது, நாட்டு எல்லாத்திண்ணைப் பள்ளிக்கூடங்களிலும், இம்மாதிரிதான். படிப்பும், படிப்பிக்கும் முறையும் ஓர் இம்மியளவுங்கூட அறிவுடைமையும், நாகரிகமும், அல்லவென்பது கவனிக்கும் காலதர்மத்தை ஒட்டிய ஒவ்வொரு அறிவுடையார்க்கும் நன்குவிளங்கும், மேலும், மனிதவுயிர்க்குக் கல்வி நலத்தாலுண்டாகும் அருமை, பெருமைகளைப் பற்றிப் பேசப்படும், நூற்கள் பண்டைக்காலத்தும், இக்காலத்துங்கூடத்தான் அளவிறந்தனவே ஆகும். அதினும், மகரிஷிகளின் அமுதவாக்குகளும், சாபானுக்கிரக சீலங்கள் நிரம்பப்பெற்ற சங்கப்புலவர்களின் அமுதவாக்குகளும் பூரணமாக மலிந்துததும்பும். நமது, செந்தமிழ்த்தேயத்து, நமது, நாடுநகரங்களிலுடைத்தான பேரறிவாளர்களும், செல்வவந்தர்களும் கவனியாமலிருப்பதென்றால் அஃது எத்துணை வியப்பிற்குரியதாதும். கல்வியின் மாட்சி கணக்கற்றனவே எனினும், ஒரே ஒரு நூலில், நமது, முன்னையப் பெரியார் பொறித்திருக்கும் திருவாக்குகளை மாத்திரம், இங்ஙனம் எடுத்துத் தருவாம், கவனித்துப்பாருங்கள். அத்திருவாக்குகளாகிய, நன்றாக முற்றிப்பெருத்த ஒவ்வொரு புதிய கரும்புத்துண்டங்களையும், அமுதத்தை ஒரு சொட்டளவும் ஒழுகவிடாமல், மிகச்சீராக அடிதொடுத்து, முடிவரை நன்றாகக்கறித்து, மிகச் செவ்வையாகச் சுவைத்து அச்சாற்றைப்பருகி, அச்சத்துக்களை நன்குணர்ந்து, நமது சந்ததியார்களுக்கும் ஊட்ட முயலுங்கள். அஃதாவது, ''கல்லாடம்'' "துறை, கல்வி நலங் கூறல்" "பகுதி ஓதற்பிரிவு".

I. "அலையினிற்சலியா நிலைமையானும், பல உலகெடுத்த ஒருதிறத்தானும், நிறையும் பொறையும் பெறுநிலையானும், தேவர்மூவரும் காவலானும், தமனியப்பராரைச் சைலமாகியும்"

II. அளக்கவென்றமையாப் பரப்பினதானும், அமுதமும் திருவும் உதவுதலானும், பலதுறை முகத்தொடு பயிலுதலானும், முள்ளுடைக் கோட்டு முனைபெறிசுரவம் அதிர்வளை தடியும் அளக்கராகியும்.,

III. நிறையுளங்கருதி நிகழ்பவை நிகழ்பவை தருதலின் வானத் தருவைவந்தாகியும்.

IV. மறை வெளிப்படுத்தலின், கலைமகளிருத்தலின், அகமலர்வாழ் தலின், பிரமனாகியும்.,

V. உயிர் பரிந்தளித்தலின்,புலமிசை போக்கலின்,படிமுழுதளந்த நெடியோன் ஆகியும்.

VI. இறுதியிற் சலியாதிருத்தலானும், மறுமை தந்துதவும் இருமையானும், பெண்ணிடங்கலந்த புண்ணியனாகியும்,

VII. அருள்வழி காட்டலின் இருவிழியாகியும்.,

VIII. கொள்ளுநர் கொள்ளக் குறையாதாதலின், நிறையுளம் நீங்காது உறையருளாகியும்.,

IX. அவை முதலாகி இருவினை கெடுக்கும் புண்ணியக்கல்வி யுண்ணிகழ்மாக்கள், பரிபுரக்கம்பலை இருசெவியுண்ணும், குடக்கோச் சேரன் கிடைத்திது காண்கென, மதிமலி புரிசைத்திருமுகங்கூறி, அன்புருத் தரித்த இன்பிசைப்பாணன், பெறுநிதி கொடுக்கென உறவிடுத்தருளிய, மாதவர் வழுத்துங்கூடற்கு இறைவன், இருசரண் பெருகுநர் போலப் பெருமதி நீடுவர் சிறுமதிநுதலே, எமதாப்த நண்பர்காள்! இத்துணைச் சிறப்புகள், வாய்ந்த கல்வி நலத்தைப் பெற்றுமகிழ்ந்து, ஆநந்தமடைய விருக்கும் நமது, அன்பு நிறைந்த சிறுவர், சிறுமிகள், இந்த முழுமூடக்கயவர்களான மடவுபாத்தியாயர்களிடம், கைபார்த்து, வாய்மூடி, கிடு, கிடு வென்று சரீரம் நடுங்கி, முக்கி, முணமுணத்து, தேக்கித்திகைத்து நின்று கொண்டு "ஓரேணுண்ணே" என்று முறைவைக்கவும் பார்த்திருக்கலாமா! கேட்டிருக்கலாமா! நமது, அருமைக்காதன் மிக்குற்ற மக்களன்று? "கடந்த ஞானியும், மறப்பரோமக்கண் மேற்காதல்" என்ற சிறப்பினைப் பெற்றவர்கள் அன்று? "தந்தைமகற்கு ஆற்றும் நன்றி அவையத்து முந்தியிருப்பச் செயல்" அன்று! நாம் யார்? நமது, மக்கள் யார்; என்னுங் கேள்விக்குரிய சரியான உத்தரம் நம்முடைய பேரறிவாண்மைக்கு இன்னும் புலப்படவில்லையா? செந்நெல்லாலாய செழுமுளைமற்றும், அச்செந்நெல்லேயாகி விளைதலால், செந்நெல், வயனிறையக்காய்க்கும் வளவயலூர! மகன் அறிவு தந்தை அறிவு" என்னும், நாலடியார் என்னை நமக்கு ஞாபகமில்லையா? வேப்பம் வித்துள்ளே, வேப்பமரம் முளைக்க வேண்டும் சக்தியும்; மாவித்துள்ளே, மாமரம் முளைக்கவேண்டும் சக்தியும்; தென்னைவித்துள்ளே, தென்னைமரம் முளைக்க வேண்டும் சக்தியும்; ஆலம்வித்துள்ளே, ஆலமரம் முளைக்கவேண்டுஞ் சக்தியும்; அரசம் வித்துள்ளே அரசமரம் முளைக்க வேண்டுஞ் சக்தியும்; கவனிக்குமிடத்து, நீர்வாழ்வன வித்துள்ளே, நீர் வாழ்வன உற்பதியாக வேண்டுஞ்சக்திகளும்; ஊர்வன வித்துள்ளே ஊர்வன உற்பத்தியாக வேண்டும் சக்திகளும்; பறவைகளின் வித்துள்ளே, பறவைகள் உற்பதியாக வேண்டும் சக்திகளும்; விலங்குகளின் வித்துள்ளே, விலங்குகள் உற்பத்தியாக வேண்டும் சக்திகளும்; தேவர்களின் வித்துக்களுள்ளே, தேவர்கள்

உற்பத்தியாக வேண்டும் சக்திகளும் எங்ஙனம் பரிபூரணமாக நிறைந்து, தங்கிக்கிடக்கின்றனவோ! அங்ஙனமே, நம்போன்ற மனிதவித்துள்ளும் மனிதரே உற்பத்தியாக வேண்டும் சக்திதான், பரிபூரணமாக நிறைந்து, தங்கிக்கிடக்கின்றன வென்பது, நாம் நன்குணர்ந்து, தெளிதல் வேண்டாமா? அங்ஙனமாயின், நாமேதான், நம்மக்களாய், இத்திண்ணை, மடவுபாத்தியாயர்களிடம் கட்டுண்டு நிற்கிறோ மென்பதை நன்குணர்தல் வேண்டாமா? மேலும்,

---

சிவமயம்.

சென்னைப்பட்டணம் 15-10-1923. அன்புள்ள ஐயா! இக்காலத்தில் ஏழைப் பிள்ளைகள் கல்விப் பயிற்சி செய்வதற்குப் பலவித கஷ்டங்கள் ஏற்பட்டிருப்பது தங்களுக்குத் தெரிந்த விஷயமே. எப்படியாவது கஷ்டப்பட்டு படிக்க வேணுமென்று வருகிறவர்களும் பெற்றோர்களின் மேற்பார்வை யில்லாமையால் ஸநாதனமான ஆசாரங்களை நழுவ விட்டு துராசாரங்களைக் கைப்பற்றிக் கெட்டுப் போகிறார்கள். இவைகளை யெல்லாம்நீக்கி திக்கற்ற பிள்ளைகளை நற்குண நற்செய்கைகளுள்ளவர்களாகச் செய்து அவர்களுக்குச் சிறந்த கல்வியும் புகட்டும் பொருட்டு, சென்னைமா நகரில், மயிலாப்பூரில், ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவரில்லம் என்னும் தர்மசாலை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தாரால் ஸ்தாபிக்கப்பட்டு சென்ற 18 வருஷகாலமாக சிறப்புடன் நடந்தேறி வருகிறது. இச்சாலையில் நம் சென்னை இராஜதானி, இலங்கை, பர்மா, முதலிய மாகாணங்களிலிருந்து சென்னைப் பட்டணத்திற்குப் படிக்க வரும் ஹிந்து மதத்தைச் சார்ந்த மாணவர்கள் எந்த ஜாதியாராயினும் அன்ன மளிக்கப்பெற்று, வசிக்க இடம்பெற்று, பெற்றோர்களுடைய ஆதரவைவிடப் பதின்மடங்கு அதிகமாகவே பொறுப்புடன் பரிபாலிக்கப்பட்டு வருகிறார்கள். இல்லத்திலுள்ள மாணவர்கள் வைதீக மதாசாரங்களைக் கைவிடாம லிருக்கும்படிப் பண்டிதர்களாலும் ஸ்ரீ ராம கிருஷ்ண மடத்திலுள்ள சந்நியாசிகளாலும் மதாசார விஷயங்களில் போதிக்கப் படுகிறார்கள். இந்த இல்லம் நீடூழி வாழ வேண்டியதற்காக, கடவுள் கிருபையால் இப்போது ரூ. 2,73,000 செலவு செய்து, 125 பிள்ளைகள் இருக்கத் தகுதியான சொந்தக் கட்டிடமும் அதில் ஸரஸ்வதி தேவி பூஜா மண்டபமும், வைத்தியசாலை முதலியவைகளும் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன.

சிறந்த போதனா முறையென்று கொண்டாடப்பட்டக் குருகுல முறையில் மாணவர்களுக்குக் கல்வி போதிக்கப் படுவதற்காக, 1922ஹு மேமீ த்தில் குருகுல வித்யாசாலை ஒன்றும், அதற்கு அனுபந்தமாக நெசவு வேலை, தச்ச வேலை, பிரம்பு வேலை முதலிய தொழில்களை மாணவர்களுக்குக் கற்பிக்கக் கைத்தொழிற் சாலையொன்றும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன வித்யாசாலையும், கைத்தொழிற் சாலையும் வெகு திறமையுடன் நடத்தப்பட்டு வருகின்றன.

இம்மாணவரில்லத்தைப் பார்வையிட்ட கனவான்கள் ஒவ்வொருவரும் இல்லத்தையும் அதை நடத்தும் முறையையும் அதிகமாகச் சிலாகித்துக் கூறி யிருக்கிறார்கள். இல்லத்தைச் சேர்ந்த எல்லாக் காரியங்களையும் மாணவர்களே விதரணையாய் நடத்தி வருவதும், பூஜையை மிகுந்த பக்தி ச்ரத்தையுடன் செய்வதும், கல்விப் பயிற்சியில் வெகு ஊக்கத்துடன் உழைத்து பல பரிசுகள் அவர்கள் பெறுவதும் வியக்கத் தக்கவைகளாக இருக்கின்றன. நமது சென்னை கவர்னர் வில்லிங்டன் பிரபு, இல்லத்தைப் பார்வையிட்டபோது "நான் இங்கிலாந்திலும் இதனிலும் மேலான இல்லத்தை பார்த்ததில்லை" என்று கூறினார்.

இல்லம், தருமசிந்தையுள்ள கனவான்கள் அவ்வப்போது கொடுக்கும் பேருதவியினால் நடைபெற்று வருகின்றது. சில சமயங்களில் இவ்வாறு கிடைக்கும் பணம் போதாமையினால் செலவிற்கு மிகவும் கஷ்டமாயிருக்கிறது. இதற்கெல்லாம் காரணம் போதுமான மூலதன மில்லாமையே. ஒவ்வொரு மாணவரின் போஷணைக்கு சுமார் ரூ. 3,000 மூலதனம் வேண்டி யிருக்கும்.

குருகுல வித்யாசாலை தற்காலம், மாணவர்கள் வசிப்பதற்கென்றேற்பட்ட அறைகளில் நடைபெற்று வருகின்றது. அதனால் மாணவர்கள் வசிக்குமிடம் குறைய, பல அஸௌகர்யங்கள் ஏற்படுகின்றன. இவைகளை நீக்க, குரு குல வித்யாசாலைக் கென்றுத் தனிக் கட்டிடம் ஒன்று அமைக்க உத்தேசித்திருக்கிறது. இதற்கு ரூ. 75,000 செலவாகுமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. மேற் கூறிய இரண்டு விஷயங்களும் நிறைவேறுவதற்குத் தாங்களும் தங்கள் நண்பர்களும் தங்களா லியன்றமட்டும் உதவி செய்யும்படிக் கேட்டுக் கொள்ளுகிறோம்.

இல்லத்திற்கு மூலதனமும் குரு குல வித்யாசாலைக்கு வேண்டிய தொகையும் சேகரிக்க, சென்னை கவர்ண்மென்டாபீஸ் சங்கத்தார் பல விடங்களில் நாடகங்களை நடித்து, அவைகளின் மூலமாய்க் கிடைக்கும் பொருளை இல்லத்திற்குக் கொடுத்துதவி செய்து வருகிறார்கள். இதுவரையில் அவர்கள் ரூ. 48,000 கொடுத்திருக்கிறார்கள். நாளது மார்கழி மாதத்தில் காரைக்குடிக்கு அவர்கள் விஜயம் செய்து, அங்கு சில நாடகங்களை இல்லத்தின் உதவிக்காக நடிப்பதாக உத்தேசித்திருக்கிறார்கள். அந்நாடகங்கள் வெகு விமரிசையாகவும், பக்தி ரஸம் பூர்ணமாயுள்ளவைகளாகவு மிருக்கும் இச்சங்கத்தாருடைய எண்ணம் நிறைவேறும் பொருட்டுத் தாங்களும் தங்கள் நண்பர்களும் அவர்களையும் அவர்கள் ஏற்றுக்கொண்டிருக்கும் தருமத்தையும் விசேஷமாக ஆதரித்துக் கௌரவப் படுத்துவீர்களென்று நிச்சயமாய் நம்புகிறோம்.

இப்படிக்கு,

காரைக்குடி... 

காறுடுகாத்தர்ன்.

சா. ரூம. மு. அ. அண்ணுமலே செட்டியார்
சா. ரூம. மு. சித. முத்தைய செட்டியார்
சா. ரூம. மு. சித. பெத்தாச்சி செட்டியார்
சா. ரூம. சித. சபாரத்தினஞ் செட்டியார்
சா. அ. ச. கோவிந்தஞ் செட்டியார்
சா. அ. ரூம. அண்ணுமலே செட்டியார்
சா. அ. சித. சிதம்பரஞ் செட்டியார்
சா. அ. அ. அண்ணுமலே செட்டியார்
வெ. வீர. வீரப்ப செட்டியார்
க. வெ. ரூம. வெங்கடாசலஞ் செட்டியார்
க. வே. சித. வெங்கடாசலஞ் செட்டியார்

பள்ளத்தூர்.

சொ. மு. அ. அருணுசலஞ் செட்டியார்
அ. மு. அ. அருணுசலஞ் செட்டியார்
உ. அ. உ. க. ரூம. ரூமசாமி செட்டியார்
உ. அ. உ. க. லெ. லெக்ஷ்மணஞ் செட்டியார்
உ. அ. உ. க. சிதம்பரஞ் செட்டியார்
உ. அ. பெரி. மு. அருணுசலஞ் செட்டியார்
அ. மு. மு. முருகப்ப செட்டியார்
மு. அரு. ரூம. ப. முத்துவீரப்ப செட்டியார்
சொ. மு. ரூமசாமி செட்டியார்
மு. ரூம. ரூமசாமி செட்டியார்

கோட்டையூர்.

அ. க. அ. வெங்கடாசலஞ் செட்டியார்
பெ. மு. அ. வெள்ளேயஞ் செட்டியார்
க. வீ. அள. ரூமநாதஞ் செட்டியார்
பெ. க. அ. சித. வீரப்ப செட்டியார்
ரூம. பெ. அளகப்ப செட்டியார்
அ. க. ரூம. மெ. கி. மெய்யப்ப செட்டியார்
அ. க. ரூம. மெ. சித. நடேசஞ் செட்டியார்
வெ. சி. அ. ரூம. ரூமசாமி செட்டியார்

கண்டனூர்.

வயி. ரூம. வெ. ரூமநாதஞ் செட்டியார்
வயி. ரூம. வ. ரூமசாமி செட்டியார்
வயி. ரூம. அரு. காசிச் செட்டியார்
வயி. அ. வயிரவஞ் செட்டியார்
லெ. சித. லெச்சுமணஞ் செட்டியார்
வயி. அ. ரூம. அண்ணுமலே செட்டியார்

செக்கந்தி.

உல. க. க. சோமசுந்திரஞ் செட்டியார்

கண்டனூர்.

லெ. ரூம. ரூமசாமி செட்டியார்
நா. பெ. அக. முத்தைய செட்டியார்

தேவகோட்டை.

அள. அரு. அருணுசலஞ் செட்டியார்
ரூம. மெ. சித. வயிரவஞ் செட்டியார்
ரூம. அரு. அரு. ரூம. அருணுசலஞ் செட்டியார்
அரு. அரு. சோம. அருணுசலஞ் செட்டியார்
மெ. லெ. மெ. ரூமநாதஞ் செட்டியார்
சித. முரு. வீரப்ப செட்டியார்
அள. வீர. ரூம. சிதம்பரஞ் செட்டியார்
மெ. அரு. நா. ரூமநாதஞ் செட்டியார்
மெ. அரு. அரு. அருணுசலஞ் செட்டியார்
முத்து. கரு. வெ. அளகப்ப செட்டியார்
அள. சுப. பள. சுப்பிரமணியஞ் செட்டியார்
பிச. அரு. அரு. அருணுசலஞ் செட்டியார்
உ. ரூம. உ. மு. சு. ப. லக்ஷ்மணசெட்டியார்
பள. செ. லெக்ஷ்மணஞ் செட்டியார்
முத்து. கமா. மு. ந. நடேசஞ் செட்டியார்
முத்து. கரு. அரு. கருப்பஞ்செட்டியார்
தி. ரூம. தி. தின்னப்ப செட்டியார்
தி. சுப. பழ. பழனியப்ப செட்டியார்

கல்லல்.

மெ. ரூம. வெள. கருப்பஞ்செட்டியார்
ஆ. மு. முருகப்ப செட்டியார்

கண்டரமாணிக்கம்.

பள. சு. ப. லெ. கருப்பன் செட்டியார்
செ. சி. நா. ரூமசாமி செட்டியார்

நெய்துப்பை.

முரு. பள. அண்ணுமலேசெட்டியார்

பூலாங்குரிச்சி.

ரூம. ப. ரூம. சுப்பைய செட்டியார்

ஆ. தெக்கூர்.

கரு. முத்து. அளகப்ப செட்டியார்
கரு. முத்து. தியாகராயசெட்டியார்

ஒக்கூர்.

சி. கரு. சி. சித. சிதம்பரஞ்செட்டியார்
சி. கரு. சி. கரு. அண்ணுமலேசெட்டியார்
சி. கரு. ஆ. கண்ணப்பசெட்டியார்
சி. கரு. ஆ. காசிச் செட்டியார்

காரைக்குடி.

மெ. செ. மெ. சொக்கலிங்கஞ் செட்டியார்
சு. ரூம. மெய்யப்ப செட்டியார்
மெ. செ. ச. சிதம்பரஞ் செட்டியார்
சா. லெ. செட்டியப்ப செட்டியார்
சித. லெ. லெச்சுமணஞ் செட்டியார்
சி. மு. அரு. முத்து ராமஞ்செட்டியார்
சித. நா. நாராயணஞ் செட்டியார்

அ. மு. க. பளணியப்ப செட்டியார்
ஆ. வி. பள. சிதம்பரஞ் செட்டியார்
பள. வெ. ரும. ருமநாதஞ் செட்டியார்
ரும. வீர. மு. வீரப்ப செட்டியார்
மு. ரும. பெரியணன் செட்டியார்
முத்து. அரு. மு. சாமிநாதஞ் செட்டியார்
சா. நா. சா. சொ. சாத்தப்ப செட்டியார்
மெ. பசு. பளணியப்ப செட்டியார்
வெ. ரும. லெ. ருமசாமி செட்டியார்

சிவ. அ. அண்ணுமலை செட்டியார்
முரு. லெ. கி. சொக்கலிங்கஞ் செட்டியார்
நா. மு. லெ. சுப்பிரமணியஞ் செட்டியார்
வீ. சித. நா. சிதம்பரஞ் செட்டியார்
நா. லெ. சித. லெ. சிதம்பரஞ் செட்டியார்
மு. ரும. ருமசாமி செட்டியார்
பெரி. க. பழனியப்ப செட்டியார்
அரு. அ. வெ. தியாகராஜன் செட்டியார்

**கோத்தமங்கலம்.**

சி.ரும. சி. லெச்சுமணஞ் செட்டியார்
சி. ரும. மு. ருமசாமி செட்டியார்
சி. அ. சி. அருணசலஞ் செட்டியார்
சி. அ. சு. செல்லப்பசெட்டியார்
ரும. அரு. வெ. பெத்தாச்சி செட்டியார்

**சோழவரம்.**

சு. ப. க. அ. அண்ணுமலை செட்டியார்

**பூங்குடி.**

கூ. கரு. நா. சித. சிதம்பரஞ் செட்டியார்
கூ. அரு. க. வைரவன் செட்டியார்

**நாட்டரசன் கோட்டை.**

சுப. வெ. வெங்கடாசலஞ் செட்டியார்
சேவு. சிதம்பரஞ் செட்டியார்

**ராமச்சந்திரபுரம்.**

தீ. சொ. கிருஷ்ணப்ப செட்டியார்
தீ. நா. முத்தைய செட்டியார்
சொ. தீ. நாகப்ப செட்டியார்
பி. கு. நா. நாகப்ப செட்டியார்

**நேமத்தான்பட்டி.**

மெ. மு. பள. பழணியப்ப செட்டியார்
மு. பெ. காசி செட்டியார்

**லக்ஷிமிபுரம்.**

சொ. மு. அரு. அளகப்ப செட்டியார்

**புதுவயல்.**

பெ. ப. வி. பழணியப்ப செட்டியார்
யெ. மு. விசுவநாதஞ் செட்டியார்
வீர. வயி. வயிரவஞ் செட்டியார்
பெ. பெரி. வீரப்ப செட்டியார்
அ. சு. பழ. சு. ஷண்முகஞ் செட்டியார்
அள. மு. ருமசாமி செட்டியார்
சு. சி. பழணியப்ப செட்டியார்
அள. குப. குமரப்ப செட்டியார்
சு. ப. சித. சுப்பிரமணியஞ் செட்டியார்

**அளகாபுரி.**

கா. ரும. ப. பழணியப்ப செட்டியார்

**மானகிரி.**

லெ. அருணசலஞ் செட்டியார்

**பாகனேரி.**

பெரி. அள. மு. முத்துக்கருபபஞ்செட்டியார்

எந்தவாற்றுனும், சிறந்து, பேரறிவாண்மை பரிபூரணமாக வளர்ந்துநிறைந்த எமதாப்த நண்பர்காள்! எமதன்பார்ந்த தனவைசிய பிரபுக்களே! காலதருமத்துக்கேற்ற நாகரீகம் வாய்ந்த பெரியவர்களே! நாட்டுக்கோட்டை வைசிய மகாசமுகத்தின், எந்தக்காரியத்திலும், முதன்மை வாய்ந்த தலைவர்களே! கல்வி, அறிவால் நிரம்பிய கனவான்களே! சீர்திருத்த நிலைமைகளிற் சிறந்த சீலர்களே! பூர்வீகக் கொள்கைகளைப் பொன்போல போற்றும் புண்ணியவான்களே! ஒருமை பெற்று வாழ்ந்து வரும் உயர்ந்தவர்களெ! நம் தமிழ் நாட்டு நகரத்தார்களே! அறத்துறைகள் பலவும் ஆராய்ந்துணர்ந்த அறவோர்களே ; எல்லாம் வல்ல இறைவன் திருவருண்மிக்குற்ற ஓ! ஐயன்மீர்! தாங்கள் இத்துணை பெயர்களும் கையொப்பம் வைத்து, இந்த நற்கரிப்பத்திரத்தை, நமது, செட்டிமண்டலத்துக்குக் கொடுத்த ஒருபெருங் கருணையே

கருணை! ஒப்புக்கொண்ட ஒரு தருமமே தருமம்! நமது, பாரதமாதாவின் ஏழைமக்கட்குக் கல்வி, கற்பிப்பதற்காக, இலகுவிலே அஃதாவது, ஓர் ஐந்தாறு நாட்களுக்குள்ளே இலக்ஷக்கணக்கில் பெரும்பொருள் கூடுவதற்கு நீங்கள் செய்த பெரியவோர் தந்திரமே தந்திரம். உத்தியே உத்தி, நகரகமாக்கிய, நுங்களின் நாடகமே நாடகம், "சென்னை கவர்ன்மென்டாபீஸ் சங்கத்தார்" என்ன பார்டுக்கட்டினர்கள்! நீங்கள் கட்டிய பார்டே பார்டு; நீங்கள்! ஆடிய ஆட்டமே, ஆட்டம், நீங்கள் பெற்ற புகழே, புகழ்! நீங்கள், பெற்ற புண்ணியமே புண்ணியம்! நமது, தாதை, மூதாதைகளான முன்னையப் பெரியோர்களெல்லாம், ஆயிரக் கணக்குகளான வருடங்களுக்கு மட்டும் நிலைத்து நிற்கக்கூடிய கல்லாலயங்களைக் கட்டி முடித்தார்கள். அவர்களின், சந்ததியார்களான நீங்களோ! எந்தக் காலத்தும் அழியாத நிலைமையினுடைத்தான, ஆன்மாக்களுக்கு, ஞானக் கண்களாகிய "கல்லாலயங்களை" கட்டிமுடிக்கத் தொடங்கிக்கொண்டீர்கள், இவ்வருஞ் செய்கைகளன்றோ "மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன் தந்தை என் நோற்றான் கொல் என்னுஞ்சொல்" என்ற தேவர் திருவாக்குகளுக்கு இலக்குகள் ஆம். இஃதன்றோ விட்ட குறை முடித்த பகீரதன் செய்கை. அடடா! இஃது, எத்துணைச் சிறப்புக்கள் வாய்ந்த நுட்பமதி. என்னென்று எடுத்துப் புகழுவேம். எதற்கு, எதிர் கூறி வரைகுவேம். "எங்கும் சிவமொழிய இல்லையவன் தன்னை" என்று எங்கினும், எவர்களாலும், புகழ்ந்துகொண்டாடப்படுகிற பெரியார் திருவாக்குகள்போன்று, சிவமயமாகிய மிகவும் பெரிதாகிய இந்நிலவுலகமான நாடகக் கொட்டகையிலே, இப்பொழுதன்றோ, நமது, வைசியமகா சமுகம், அயன் ராஜபார்டு, அயன் ஸ்திரிபார்டு, அயன் பபூன் பார்டு, ஓரடிக்,கோவிந்தசாமி, பெரியமகாதேவன், சீதாராமன், நவாபு பார்டு இலக்குமணன், கோமாவி, மானமதுரை, வெங்கட்டராமன், கிஞ்சின் கோதண்டராமன், கல்யாணிராமன், ராமுடு, சுந்தரம், ரெங்கசாமி, அனந்த நாராயணன், திருப்புகழ் சானகி, பாலாமணி முதலிய இன்னோரன்ன, பெரும்புகழ் படைத்தார்களையே நிகர்ப்பக் கட்டியாட ஆரம்பித்து இருக்கின்றது. இனியன்றோ, நமது, பாரதமாதா ஆநந்தமடையப் போகின்றாள். நரஸ்துதி உதவாதென்று, துவேஷங்கொண்ட சில நாவலர், பாவலர், வித்வான்கள், ஆசிரியன்மார்கள் ஒருவாறுதிட்டி, எள்ளி, நகையாடத்தான் செய்வார்கள். என்றாலும், அவைகளை நான் நன்றாக ஏற்றுக்கொள்வேன். எவ்விதத்தீங்குகளும் எனக்கு நிகழமாட்டாது. "மறைசொலும் பொருள் மனிதவேடமாய் வந்தது" என்பதும், "தெய்வம்மனுஷிய ரூபேணும்" என்பதும், எனக்குமிக நன்றாகத்தெரியும். "இலங்கும் உடலத்தனையும், ஈசன் கோவில்" என்பதும், "உள்ளம் பெருங்கோவில், ஊனுடம்பு ஆலயம், வள்ளல் பிரானார்க்குவாய் கோபுரவாசல், தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்,

கள்ளப்புலனைந்தும் காளாமணிவிளக்கே" என்பதும், எனக்குமிக நன்ருகத் தெரியும். எந்த விதமான, இகழ்ச்சி, புகழ்ச்சிகளினும், அடிபிடிதண்டாக் களினும் நான் தாக்குறமாட்டேன். காணப்படுகிற மூவுலகங்களுமே, நுங் களையும், நுங்களின், இப்பெரிய வைசியமகாசமுகத்தையும், உண்மையிற் போற்றிக் கொண்டாடிப் புகழ்ந்து பேசி தோத்திரஞ் செய்ய வேண்டிய திருக்க, ஏதோ சாதாரண ஒருமனிதனுகிய நான் சில உண்மையான நல்ல பலவிஷயங்களை செய்கையிற் கண்டு மெச்சிப்புகழ்ந்து, வரைவது, எவ்வி தக்காரணங்களை முன்னிட்டும் இழுக்காகமாட்டாது. இஃது, இங்ஙனமாக, எமதன்பார்ந்த மேலே கை யொப்பஞ் செய்திருக்கும் நண்பர்களே! நுங்கள் ஒவ்வொருவரையும், நான் நேரிற் கண்டு, சில நல்ல விஷயங்களைப் பற்றி அன்பு மிக்குற்ற வந்தன வழிபாடுகளுடனே மிக நன்ருகக் கலந்து பேசித் தெளியவேண்டுமென்று எண்ணிக்கொண்டிருந்தேன். அதற்கு முன்ன தாக, இப்பெரிய நமது. மகாசமுகத்துக்குத் தலைவர்கள் யார், யாராயிருக் கலாம் என்பதும், எனக்குத் தெளியாமற்றான் இருந்தது. அந்தத் தருணங் கண்டு "கும்பிடப் போனத்தெய்வம் குறுக்கேவந்து சந்தித்துக் கொண்டது போன்று" எல்லாம் வல்ல இறைவன், திருவருட்கிருபையால், இப்பெரிய வைசியமகாசமுகத்துக்குரிய தலைமைவாய்ந்த' தலைவர்கள் நாங்களே என் னும் செம்பொருள், மிகத்தெளிவாக நன்குவிளங்கும் வண்ணம் மேற் கண்ட நுங்களின், கையொப்பபத்திரம், ஒன்றும், நாடகம் நடக்கும் காலக் கணக்குப் பத்திரம் ஒன்றும், என்னுடைய பார்வைக்குக்கிடைத்தன. மிக நன்ருகப்படித்துப் பார்த்துப்பேரானந்தமான பரவசம் அடைந்தேன். அதற் காகப்பன்முறை நுங்களுக்கு என்மனமார்ந்த அஞ்சலி தருகின்றேன். நமது, தலைவர்களான, பெரியார்கள் தான் இன்னர், இன்னர் எனத்தெரிந்து கொண்டதாயிற்றே, நாம், நேரிற்கண்டு பேசவேண்டிய அந்த பலவிஷயங் களையும், இங்ஙனமேபேசி வரைந்து விட்டால், சமுகத்தைச் சார்ந்த ஒவ் வொருவருக்குமே நன்கு விளங்கும் என்றெண்ணி இதில் வரையத் தொடங் கினேன். சிறிது பிழைபாடுகளாகக்காணினும் பொறுத்துக் கொள்ளல் வேண்டும். ஆநந்தமாகத் திரும்பத்திரும்ப இரண்டு மூன்று முறைகள் நன்ருகப்படித்துப் பார்த்தல் வேண்டும். தெளிந்த நடையிற்ருன், வேண்டு மென்றே, சில அங்கங்களை வரைந்து வருகிறேன். சந்தேகமான விஷயங் கள் ஒன்றுமே இராது. நன்குணர்ந்து நன்ருகச் செய்கையிற் காட்ட வேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறேன். நீங்கள்! எடுத்துக்கொண்ட ஒவ் வொருவிஷயங்களையும், மிகநன்ருக முடித்து விடுவீர்கள் என்பது, எனக் குமிக நன்ருகத் தெரியும். நுங்களுக்குள் ஒருவருக்கொருவர், பொருத வாண்மை, வஞ்ச நெஞ்சம், துவேஷம், விரோதம் முதலியன இருக்கமாட் டாதென்றே எண்ணுகிறேன். ஏதோ ஒருவாறு மனத்துக்கண் ஒருக்கால் நிகழினும் செய்கையளவில் ஒருவருக்கொருவரைத் தாக்கமாட்டாதென்று

மே எண்ணுகிறேன். நுங்கள் கையொப்பப் பத்திரத்திற் கண்ட, நமது, சமுகச்சாம்பிரதாயப்படி அமைந்துள்ள தலைவர்களுக்கு, ஏனைய ஒவ்வொருவரும் அடங்கி, ஒடுங்கி, வணங்கி, அவர்களின் சொல்வரை கடவாமல் இயலுவீர்கள் என்றும் நான் நம்புகிறேன். அப்பத்திரத்து, நமது, வருணாச்சிரம தருமக்கட்டுப் பாட்டின் சம்பிரதாய முறைப்படி முதன், முதலாக நிற்கும் சிலதலைவர்களை "அவதார புருஷர்கள்" என்றே, நான் திடமாகச் சொல்லுகிறேன். "எண்ணிய எண்ணிய ஆங்கு எய்துவர் எண்ணியார், திண்ணியராகப் பெறின்" என்ற திருக்குறளுக்கிலக்கானவர்களாம். மிகுந்த நுட்பமதியோடு கூடினவர்கள் என்பதையும் நான் ஒப்புக்கொள்கிறேன், காலதருமத்தின் கணக்கியல் அறிவுறாஉம் கல்வியுணர்ச்சியுள்ளவர்கள் என்பதையும் சமுகம் ஒப்புக்கொள்ளுகின்றது. என்றால், எமதன்பார்ந்த சகோதரர்களே! இனித்தான் நீங்கள் சிறிது நன்றாகக்கவனித்தல் வேண்டும். ஆய்ந்தோர்ந்து பார்த்துத் தெளிந்து செய்தல் வேண்டும். நுங்களுக்காகவேண்டும் ஒருகாரியம் கொண்டு முடியுங் காலத்துக்குமட்டுந்தான் நீங்கள் தலைவர்களா? இன்றேல், அதற்காக வேண்டும் காரணங்காட்டி, அழகான, மோட்டார்கார்களை யோட்டி, நுங்களின் செல்வத்திருக்கரங்களை நீட்டி, இலக்ஷக்கணக்குகளில், நமது, மகாசமுகத்துச் சாதாரணப் பல்லோர் இடங்களினும் தொகைப் பொருள்களை ஈட்டி, முடிந்து விட்டதன் பின்னரும், அவைகள் எற்றிற்கும் முன்னரும் நீங்கள் தலைவர்களா? நீங்கள் எந்தக்காலத்தும் நமது, வைசியமகாசமுகத்துத் தலைவர்கள் அன்றோ? அன்னிய வருணத்தவர்களின் பிள்ளைகள் படிப்புக்காக இலக்ஷக்கணக்குகளில் பொருள்களை, அள்ளி, அள்ளிக்கொடுக்கும், நுங்களில், பெரும்பான்யோர்களின், சிறுவர், சிறுமிகள், ஒன்றுக்கும், ஒரு தம்படிக்குக்கூட உதவாத இக்காலத்தின் திண்ணைப்பள்ளிக்கூட முழுமுட்டாள் உபாத்தியாயர்களிடம் தூங்கிவிழுந்து கொண்டு நிற்பதென்னையோ? "ஓரேஞெண்ணே" என்று முறைவைப்பான்றொடங்கல் எற்றிற்கோ? அக்கயவர்களிடம் மணிக்கட்டுக்கடோறும் அடிவாங்குவான் யாதுக்கோ? அவர்களின் வாழ்நாண் முழுவதும், நன்மையும், இன்பமும் பயக்க வேண்டும் கல்விமுறைகளை பற்றி நீங்கள் கவனித்தீர்களா? ஊரார்பிள்ளைகளுக்குத் தயிருஞ்சோறுமாக ஊட்டிவளர்த்தால் தங்கள் பிள்ளைகள் தானே வளருவார்கள் என்பதோ நுங்கள் கருத்து? சில பிள்ளைகள் மாத்திரம், தாய்தந்தையர்களின் மேற்பார்வை இன்றி சின்னாட்கள் தொலைநகரங்களிற் படித்தாற்போதுமா? சமுகப்பொதுவின் அகவிஷயங்களைப்பற்றித் திருத்தப் புகுந்தால், நுங்களுக்கு ஏதேனுஞ் சில தீங்குகள் நிகழினும், சமுகப்பொது வின்புற விஷயங்களைப்பற்றி நன்றாக, நீங்கள் சீர்திருந்துமாறு புகுந்தால் அதனால் நுங்களுக்குறுங் கெடுதல் என்னை? இக்காலம், சாதாரணமாக ஐம்பதாயிரம் ரூபாய் ஆஸ்தியுள்ள ஒரு பால்யர்கூட தொலைக்குப் போகிறதில்லையென்று முடிந்து

விட்டதே. அஃது, நுங்களுக்கு விளங்கவில்லையா? அவர்கள், எந்த வித மான, தொழிலுமின்றிக் குட்டிப்புராணக் கச்சேரிகளை நடத்திக்கொண்டு வெறுமனே ஊர்சுற்றுவதினின்றும் நிகழும், கெடுதல்கள் நுங்கள் மனத் துக்கு அகப்படவில்லையா? இன்றேல் நீங்களும் அவைகளுக்குச் சம்மதி தானு? அப்பால்யர்களுக்கு எந்தவிதமான கெட்ட பழக்கவழக்கங்களும் நிக ழாதவண்ணம், ஒழுங்கான, வரன்முறைகளோடு, வீண்காலப் போக்கின்றி ஆரம்பப்படிப்பு முதற்கொண்டு, உயர்தரப்படிப்புவரை படித்துக்கொள்ளத் தகுந்த கல்விச்சாலைகள் நமது, செட்டி நாட்டு எல்கைக்குள், எந்த, எந்த நகரங்களில், அமைத்திருக்கிறீர்கள்? காரைக்குடியிலும், கடியாபட்டியிலுந் தானே? அவைகள், ஒருவருக்குச்சொந்தமா? சமுகப்பொதுவிற்குச் சொந் தமா? அவைகள் "ஸ்கூல்களா" "ஐஸ்கூல்களா" "காலேஜ்களா"? அவை களில், எத்தனை பிள்ளைகள் படிக்கிறார்கள்? அயனாட்டுக்கல்வியா? நம் நாட் டுக்கல்வியா? அவைகளினும், அன்னிய வருணத்தைச்சார்ந்த ஏழைப்பிள்ளை கள் தானே, மிகுதியாக வாசித்து வருகிறார்கள். அப்பிள்ளைகளின், பழக்க வழக்கங்களான, எளியசக்திகள் தானே இவர்களையும் வந்து சூழ்ந்துபிடித் துக்கொள்ளும். மனிதவுலகம் ஒருங்குக்கும் லௌகீகத்தன்மைக்குரிய பொருட் பாஷைகளிற் சிறந்தது, நமது, அரசாங்க பாஷையாகிய "ஆங்கி லம்" என்பதும், வைதீகத்தன்மைக்குரிய பொருட் பாஷைகளில், ஒருதலை சிறந்தது, தேவபாஷையாகிய "சமஸ்கிருதம்" என்பதும் ஒரு, தேசிய பல பாஷைகளில் ஒரு தலை சிறந்தது, அவ்வவர்கட்கு உரிய "தாய்ப்பாஷை" என்பதும், நீங்கள், நன்குணர்ந்ததாம் அன்று? அங்ஙனமாயின், அம்மூன்று பாஷைகளோடும், நமது, சமுகத்தார்க்குரிய "வரத்தகக்கல்வி முறைகளை யும்" ஒன்றாகக்கூட்டிக், கலக்கமும், மயக்கமும், அற்ற நவீனமுறைகளை இக்காலதர்மத்திற்கு ஏற்ப, மிகநன்றாகவமைத்து, வரிசைக்கிரமமாக, வகுப்புவாரியாகப் பிரித்து, உயர்தரக்கல்வி இஃதோடு முடிவாமென்க, ஒவ்வொரு பால்யர்களும், முப்பஃதாண்டுகள்வரைப் படித்து முடிக்கத் தகுந்த நிலைமையில், நமது, செட்டிமண்டலத்து, எல்கைக்குள், நான்கு பக் கங்களில், ஒவ்வொரு இலக்கப் பொருட்டொகை, கட்டடங்களாக, ஆண்மக் களுக்கு வேறு, பெண்மக்களுக்கு வேறாக, ஆயிரக்கணக்கான பிள்ளைகள் அமைந்து, படித்தற்குரிய பலவகையான சௌகரியங்களோடும், ஒரு நான் கைந்து கல்விச்சாலைகளை "தனவைசிய மகாசமுகத்துக்கு" மாத்திரம், தனி யாமென்க, நமது, சமுகப்பொதுமையில் அமைத்து, அவைகளுக்காக வேண் டும் பண்டுத்தொகைகளையும், என்றைக்கும். எக்காரணத்தை முன்னிட்டும், அழிந்து போகாதவண்ணம், நிலைக்கவைத்து, நமது, மரபைச்சார்ந்த ஒவ் வொரு சிறுவர், சிறுமிகளையும், கட்டாயச் சட்டமாகப் படித்து வருமாறு செய்தாலென்னை? "தனக்குப், போகத்தானமும், தருமமும்" என்பது நுங் களுக் கென்னை ஞாபகமில்லையோ? இத்தகைய ஒரு பெரியகாரியத்துக்காக,

மேற்கண்ட அத்தகைய பத்திரம் போன்று ஒரு பத்திரம் அச்சடித்தாலென்ன? இக்காரியங்களுக்காக, நீங்களெல்லீரும் ஒன்றுகூடி யோசித்தாலென்ன? இவைகளுக்கானல், நமது காரோட்டிகள், காரோட்டிகளாக மாட்டார்களா? நமது, சமுகப்பொதுமையில் பொருள் ஈட்டினலென்ன? நுங்களின் அருமைத்திருவாக்கை வெளிவிட்டான் மாத்திரம் போதுமே! எத்துணை இலக்ஷம் பொருட்டொகைகள் வேண்டினுஞ் சேருமே. தங்களுக்காக வேண்டும் சில நன்மைகள் செய்து கொள்வதற்கா, நமது மகர்சமுகத்தார் உண்டியல்களைத் தரமாட்டோமென்று சொல்லுவார்கள்? ஒரு முப்பஃதாண்டுகளுள்ளே, நமது, பால்யர்கள் ஒருங்கும், நமது இந்தியாவையே ஆளத்தகுந்த தன்மைக்கு வந்து விடுவார்களே! நீங்கள் ஒவ்வொருவரும்' நமது, மகாசமுகத்தின், உண்மைத்தலைவர்களாக இருந்தும், நுங்களுக்கேன்? நமது, மகாசமுகத்தின் மீது கருணையில்லாமற் போயிற்று? இந்த ஒரு நல்ல விஷயத்தையேன் மறந்திருக்கிறீர்கள்? ஆனல், நுங்களின்மீது, எந்த விதமான குற்றமுமில்லை.

"தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறை தீர்கிற்பார் விழுமியோர்—திங்கள்
கறைஇருளை நீக்கக் கருதாது உலகின்
நிறைஇருளை நீக்குமே னின்று"

என்பதற் கிணங்கிய விழுமியோர்கள் என்பதை நான் நன்ருக உணர்ந்திருக்கிறேன், என்னைக் கோபிப்பதிலாவது, துவேஷிப்பதிலாவது நுங்களின் காரியமில்லை. நான் சொல்லிவருகிற வண்ணம் நீங்கள் செய்யவேண்டியது தான் நுங்களின் காரியம். நான், நானற்ற நான். என்பதை நீங்கள் நன்குணர்தல் வேண்டும். ஒவ்வொரு நாட்களிலும், ஒருவிநாடிப் பொழுதைக் கூட வீணகக் கழித்துவிடாமல், இன்ன காரியங்களுக்கு இன்ன, இன்ன காலம் என மிக நன்ருக வகுத்துக் காலத்தை அளவுபடுத்திக்கொண்டு, ஒவ்வொருகாரியங்களையும், கொண்டு முடித்துக்காட்டிக் கொண்டுவரும் ஸ்ரீயான் மு. அ. அண்ணமலை செட்டியாரவர்களைப் போன்று, நீங்கள் ஒவ்வொருவரும், நாமும், அம்மாதிரிதான் இயலுதல் வேண்டுமென்று இதனைப்படித்த அந்தக்கணத்தில் இருந்தே நுங்களின்பேரறிவாண்மையாகிய வலக்கரத்திலே வைரமாகிய கங்கணத்தைக் கட்டிக் கொள்ளுங்கள். அப்பெரியார் மாதிரி காண்டற்கு எளியராயும், கடுஞ்சொற்கள் அல்லராயும் ஆகுங்கள். வீணன சில அக்பர்மணியங்களில் தலையிடாதேயுங்கள். இஃதென்னே! கவர்ண்மெண்டு மாதிரியாக நமது, தலைவர்களும் அன்றே அநாவசியமாக வரிப்போட ஆரம்பித்துக் கொண்டார்கள் என்று, கிடு, கிடுவென்று நமது, மகாசமுகம் நடுங்குவதைச் சிறிது, வேடமாறுதலாக நின்று விசாரித்துப் பாருங்கள். ஸ்ரீமான், மு. சித. பெத்தாச்சி செட்டியாரவர்கள், நமது, சமுகத்தை எட்டிப்பார்ப்பதுங்கூட இல்லையாகத் தீர்ந்துவிட்டனபோலும். நண்

பர்களே! இந்தக்கணமே கல்விச்சாலைகளை ஏற்படுத்தி விட்டாற்றான் அக் காரியம் முடிவடைந்ததாக முடியும், இன்றேல் மறந்து விடுவோம். முன் ஒருமுறை ஒருகல்விச்சாலைக்காக தலைவர்கள் பணம் வசூலித்துக்கொண்டு போனதையும், சமுகம் மறந்துவிடவில்லை. நீங்களும், உங்களின், பெருஞ் சொத்துக்களும், சமுகத்தின் சொந்தச் சொத்துக்கள் என்பதை நீங்கள் மறந்துவிடக்கூடாது. ஞாபகம் இருக்கட்டும்.

> "நோக்கிருந்தும் அந்தகராய் காதிருந்தும் செவிடராய் நோயில்லாத
> வாக்கிருந்தும் மூகையராய் மதியிருந்தும் மதியிலராய் வளருங்கை
> போக்கிருந்தும் முடவராய் உயிரிருந்தும் உயிரற்ற பூச்சியராய்[கால்
> ஆக்குமிந்தத் தனமதனை ஆக்கமென நம்பினையே அகக்குரங்கே"

என்று, மாயூரம், முனிசிப் உத்தியோகத்திலிருந்த வேதநாயகம் பிள்ளை திருவாக்குப் பயன்படாவண்ணம் இயலுங்கள். தற்காலம், கோணல் வகுப் பெடுத்துச் சீவிச்சிங்காரித்து, நறுமண மணிந்து, சிலுக்குச் சட்டை இட்டுப் பலவித ஆடம்பரங்களோடும், துர்வினியோகமாகத் தங்களின் முதல்களையே, ஒழிக்கக் கங்கணங்கட்டிக்கொண்டிருக்குஞ் சில பால்யர்களை நீங்கள் கண்கொண்டு பார்க்கிறீர்களா? அவர்களென்ன, நமது, சமுகத்தைச் சார்ந்தவர்களன்று? நுங்களின் சுற்றத்தார்களன்று? அவர்களைச் சீர்திருத் தப்படுத்துவதென்றால் நுங்களால் ஆகாதகாரியமா? அவர்கள் தனவைசியர் களல்லாமல் சாதாரணவைசியர்களாய் விடுவதானால் அஃது, நுங்களுக்கென் னசம்மதிதானா? அவர்களுக்குத்தலைவர்கள் நீங்களன்று? "பற்றற்ற கண்ணும் பழமை பாராட்டுதல் சுற்றத்தார் கண்ணேயுள" என்றும், "சுற்றத்தாற் சுற்றப்படவொழுகல், செல்வந்தான் பெற்றத்தாற் பெற்ற பயன்" என்றும், வெளிவந்த நாயனார் திருவாக்குகள் பயன்படாது போதல் வேண்டுமோ? "முட்டிகைபோல முனியாது வைகலும் கொட்டி யுண்பாருங்குறடு போற் கைவிடுவார், சுட்டுக்கோல் போல எரியும் புகுவாரே நட்டார் எனப்படுவார்" என்ற தமிழ் மறையும் பொய்த்தா விடும்? அவர்களும், அவர்களுடைய சொத்துக்களும் உண்மையில் நுங்களுடையதல்லவா? செட்டிநாடென்று, சிறந்த பெயர் நீங்கி, வெட்டி நாடாகி விடலாமா? நீங்களும், நுங்களுடைய சொத்துக்களும் உண்மையில் அவர்களுடையதல்லவா? நமது, நாடு, நகரங் களில், எங்கெங்கோ இருந்தெல்லாம் வந்து குடிகொண்டிருக்கும் வேசை, தாசிகளைப் பற்றி நீங்கள் கவனித்தீர்களா? நமது, பால்யர்களின், இரத்தத் தையும், செல்வத்தையும், கௌரவத்தையும், பேரறிவாண்மையையும், சக் திகளையும் ஐயய்யோ! அவர்கள் எப்படி உறுஞ்சுகிறார்கள் என்பதை நீங்கள் கண்டீர்களா? அப்பால்யர்களுக்குறும் நயநட்டங்கள் உங்களுக்குரியதன்று? நுங்களுக்கு, நமது கவர்ன்மெண்டின் சம்பந்தமும், அதிகாரவர்க்கத்தார் களின் பேருதவிகளும் மிகுதியாக இருக்கிறதன்று? அவ்வேசை, தாசிகளில் நமது, நாடு நகரங்களுக்கு வேண்டிய சிலரைமாத்திரம் வைத்துக் கொண்டு

மற்றயாவரையும்? நமது, எல்கைகளை விட்டு அப்புறம் போய்விடும்படியாக வேண்டும் ஒருமார்க்கத்தைச் செய்வதற்காக ஓர் கமிட்டி அதிகாரத்தோர ணையுடன் அமைத்து நியமித்தல் கூடாதா? நீங்கள் எங்கெங்கெல்லாமோ யாத்திரைகள் செய்தும் வந்திருக்கிறீர்களே, நுங்கட்கு இன்னும் உலக நாக ரீகம் விளங்கவில்லையா?

"குலம், தவம், கல்வி, குடிமை, மூப்பைந்தும்
விலங்காமல் எய்திய கண்ணும்—நலஞ்சான்ற
மையறு தொல்சீர் உலகம் அறியாமை
நெய்யிலா பாற்சோற்றின் நேர்"

என்ற நாலடியார் என்ன நுங்கட்கு ஞாபகம் இல்லையா? கவனிக்க வேண் டாமா? பொருளாட்சி போற்றாதார்க்கு இல்லை என்பதை மறந்து விட்டீர் களா? பிச்சை, யாசகம் வாங்கும் ஏழை, எளியவர்களை அளவுக்கு மிகையாக நமது நாடு நகரங்களில் பெருக்கவிடலாமா? அப்பிச்சை, யாசகக்காரச் சிறு வர், சிறுமிகளை ஒரு கல்விச்சாலையிலும், கிழவி, கிழவர்களை ஒரு அறக் கூழ்ச்சாலை அல்லது ஒரு வைத்தியசாலையிலும், நல்ல சரீரிகளாயுள்ள வர்களை ஒரு தொழிற் சாலையிலும் பிடித்து அடைத்து விடல் வேண் டாமா ? மேற்கொண்டும் வருகிற அவர்களுக்கெல்லாம் இன்னது சட்ட மாமென்று, விளம்பரப் படுத்தல் வேண்டாமா ? வேதியர்களின் அடி மைத்தொழில்களை நீக்கி, வேதாதிகளை ஓதுமாறும் யாகாதிகளைக்கைக் கொள்ளுமாறும், கட்டாயச் சட்டமாகச் செய்துவிடல் வேண்டாமா ? திண்ணைப் பள்ளிக்கூடங்கள் ஒருங்கையும் எடுத்து விடல் வேண்டா மா? நமது மகாசமுகத்தைச் சார்ந்த ஒவ்வொரு வியாபாரத்தலங்களினும், மேலாட்களாக இருப்பவர்களும், அடுத்தாட்களாய் இருப்பவர்களும், நமது, வகுப்பாரைச் சார்ந்தவர்களாகத்தான் இருத்தல் வேண்டுமென்ற, நம் முடையப் பழையகாலத்துக் கட்டாயச் சட்டத்தை இக்காலம் அமுலுக்குக் கொண்டுவரல் வேண்டாமா? இந்தக்காரியங்களுக்காகவாவது, நமது, சர்வ நகரச் சங்கத்தை நீங்கள் திறந்துகொள்ளல் வேண்டாமா? லௌகீகமார்க் கத்துக்கு ஆசிரியன்மார்களாய் மேனாட்டார்கள் வந்து சுமார் இருநூறு, முந்நூறு வருஷங்களாகியும், இன்னும்மா, நமக்கு, நாகரீகங்கள் நன்கு விளங்கவில்லை? இந்தியர்களுக்கெல்லாம் மிக நன்றாகப்படிப்பு வந்துவிட்டது, இனி, நமக்கு இங்கு எந்தவிதமான சோலிகளும் இல்லை, இனிப் போய்விட வேண்டியதுதான் என எண்ணிப் போய்விடவும் பார்க்கிறார்களே! இன் னும்மா, நமக்கு உத்திகள் தோன்றவில்லை? நாம், தலைவர்களாயிருந்து, நமது மகாசமுகத்தை எப்படிப்பாதுகாப்பது, எப்படித்திருத்துவது, நம் முடைய சொற்களை எப்படிக் கேட்பார்கள், இந்த ஆண்டிப் பையல் என்ன இப்படி எழுதுகிறான், இஃதென்ன விளையாட்டு யோசனையாக இருக்கிறது, இவன் என்ன ஆகாயக்கோட்டை கட்டுகிறான், வீண்மனோராச்சியம் என்ன

பிரயோசனம் என்று, எண்ணுகிறீர்கள்? ஆ! ஆ! மிக நன்றாயிருக்கிறது. கவனித்துக் கொள்ளுங்கள். "ஆகாரக்கணக்கையும்" "கல்விக்கணக்கையும்" "மருந்துக் கணக்கையும்" எப்படிமேனாட்டார் முதன்மையாக அமைத்துக் கொண்டிருக்கிறார்களோ, அப்படியே தலைவர்களாகிய நீங்கள் ஒவ்வொருவரும், முதன் முதலாக ஸ்ரீமான் சா. ராம. மு. அ. அண்ணாமலை செட்டியாரவர்கள் மாதிரியாகத் திருந்தத் தங்களை அமைத்துக் கொள்ளுங்கள். ஒரு விநாடிப் பொழுதைக்கூட வீணாக்கி விடாமல், முறை, முறையாக, வரிசைக் கிரமமாக வேலைகளைப் பாருங்கள். ஆரியம், செந்தமிழ் ஆங்கிலமாகிய மூன்று பாஷைகளினும் தேர்ந்த வல்லுநர் ஒருவர்க்குப் போதிய மாதவேதனங்கொடுத்து சதா நுங்களுடனேயே, ஒருவருக்கு ஒருவர் இருந்துவருமாறு செய்துகொள்ளுங்கள். பின்னர், நமது சமுகத்தைப் பற்றிக்கவனியுங்கள். கவனமாக ஆலோசித்துப்பாருங்கள். நீங்கள், எல்லீரும், ஒன்றுகூடிப் பகர்ந்து பேசித்தீர்மானத்துக்குக் கொண்டுவாருங்கள். நமது, மகாசமுகத்துக்கு ஒருவர், ஒரு பிரசிடெண்டாக இருந்து, நமது, கேளீரையோம்புங்கள். அதனாலுறும் கௌரவத்தையும் அடையவிரும்புங்கள். காலதர்மக் கணக்கைக்கண்டு தெளியுங்கள். ஒன்றுக்கும் மலையாதேயுங்கள். தொலைகளிலே நமக்கு நடக்கவேண்டும் ஒவ்வொரு காரியங்களையும் கவனித்து நன்றாகப் பகர்ந்து பேசுங்கள். நடையுடை பாவனைகளைப் பற்றியும் நன்றாகச் சிந்தித்துப் பாருங்கள். அறிவு விருத்திக்கு முதற் காரணம் ஆகாரங்கள் தான், என்பதை மறந்து விடாதேயுங்கள். வரத்தகத் தொழில்களையும், "வைசியர்க் கழகு வளர்பொருளீட்டல்" என்பதையும், மறந்து விடாதேயுங்கள். கோடு, நாடுகளுக்கு ஆக நமது, மகாசமுகத்தினின்றும், வெளியாகுந் தொகைகளை, நீங்கள் கணக்கெடுத்து பார்த்திருக்கிறீர்களா? சிவகங்கை வக்கீல்களும், மதுரைவக்கீல்களும், புதுக்கோட்டை வக்கீல்களும், ஏனைய உத்தியோகஸ்தர்களும் செல்வவந்தர்களாய் இருப்பதற்குக் காரணம் என்ன நுங்களுக்குத் தெரியுமா? நண்பர்களே! நுங்களின் பேரறிவாண்மை என்ன ஓயாமலா தூங்கிக்கொண்டிருக்கிறது? எந்தத் தன்மையில் மயங்கிக்கொண்டிருக்கிறது? "கரிய குழல் சரிய, முகம் வேர்வாட, வாசமுறு களபமுலை புளகம் எழ, நேரானவேல்விழிகள் கயல் பொருது செயலதென, நீள் பூசலாட நல்லகனிவாயின் குமுகுமென அதரவிதழ்தேனூறல்பாயமிகு, கடலமுதம் பருகியா"? "கருங்குழற் செவ்வாய்; வெண்ணகை; கார்மயில் ஒருங்கியசாயல் ; நெருங்கியுண் மதர்த்து, கச்சற நிமிர்ந்து, கதிர்த்துமுன்பணைத்து, எய்த்திடை வருந்த, எழுந்து புடைபரந்து, ஈர்க்கிடை போகா, இளமுலைமாதர் தம், கூர்த்தநயனக் கொள்ளைக்குப் பயந்தோ?பித்தவுலகர் பெருந்துறைப் பரப்பினுண், மத்தக்களிறெனும், அவாவிடைப்' பட்டோ? கல்வி என்னும் பல்கடன் "மூழ்கியோ?" செல்வம் என்னும், "அல்லலிற்றுய்த்தோ! புல்வரம் பாய பல்துறை" கிடந்தோ? யாது, காரணங்

கொண்டு, நமது, சமுக விஷயத்தின் இத்துணைமயக்கம்? அம்மயக்கத்தினின்றும், தெளிவித்து, நுங்களின், பேரறிவாண்மைகளின், பேருருஞ் சக்திகளின், தன்மைகளையும், செயல்களையும், அதன், அழகான வுருவங்களையும், குணு, குணங்களையும். அவைகளால் நிகழும் பேரானந்தங்களையும், பயனிலைகளையும், நன்றாகக் காணவிரும்புங்கள். நண்பர்களே! நிறைந்த செல்வவந்தர்களே? உத்திமான்களே! மதிநுட்ப நூலோடுடைய, மகாத்மாக்களே ! சிறிது, நன்கு கவனியுங்கள், ஆம், ஐயா! சகோதரர்களே! சாதாரணமாக, இந்த மாங்கொட்டை (அஃதாவது மாவித்தை) யைக் கண்டீர்களா? ஆம் கண்டோம். அஃது, என்னமாவித்து? "ருமானியாவா?" "தில்பஸிந்தா? காதர் பஸிந்தா? "கிரேப்பா"? "மல்ஹோவாவா"! நாட்டுச்சாதிச்கொட்டையா ? அஃது, எப்படித் தெரியும்? கொட்டையோ மிக நன்றாகக்காய்ந்து, வறண்டு போயிருக்கிறது. முளைக்குமோ முளைக்காதோ? ஆ! ஆ! மிகநன்றாகமுளைக்கும். சந்தேகமில்லை, "காய்ந்த வித்துக்குச் சேதமில்லை" என்பது பழமொழியன்று. நல்லவித்துத்தான் முளைக்கும். அதன் சாதி விவரம் ஏன் தெரியவில்லை ! வாசனையல்லது, ருசிகண்டாலல்லவா தெரியும். இஃதோ வறண்டுபோன வித்தாயிற்றே, முளைத்துத் தளிர்வந்தாலுங்கூட இன்ன சாதி என்று சொல்லிவிடலாம். அதற்கிடையில் எப்படிச் சொல்வது, சாத்தியப்படாது, ஆனால், நன்றாகமுளைக்கும். பெரியமரமாகுமா? அடடா! இஃதென்னகேள்வி, நுங்கள் தோப்புத்தான், அளவுக்குமிகையாக போடு மண் போட்ட பூமியாயிற்றே. அநேக பல பெருங்கிளைகளையும், கொம்புக்களையும், பூரணமாக நிறைந்ததளிர், இலை, பூ, பிஞ்சுகளையும், பதினாயிரக் கணக்குகளான காய்கனிகளையும், உடையதாக பெரியமரமாம் அதுமட்டும் நிச்சயந்தான். ஆம் ஐயா ! இந்த வெறும் மாங்கொட்டயை மாத்திரந் தானே கண்டீர்கள், இத்துணைப்பொருள்களும் அதினின்றும் உண்டாகும் என்று எப்படிக்கண்டு சொன்னீர்கள்? அவைகள் நுங்கட்கு எப்படித்தெரிந்தது? அடடா இஃதொரு கேள்வியா? இதோ நமக்கு முன்னிற்கும் இப்பெரிய மாமரமானது, அதன் ஒரு வித்திலிருந்தும் உண்டானது தானே, எத்துணையபாரமான, பெரிய ஒரு விருக்ஷமாகக் காய்த்துக் கனித்துக் கொண்டுநிற்கிறது பாருங்கள். அளவுக்கு மிகையான பலன்களைக் கொடுத்துக்கொண்டுதான் இருக்கிறது. இம்மாதிரிதான். ஆ! அப்படியா? சரிதான். ஆமாம்! அம்மா வின்ஒரு கொட்டையானது, எத்துணை பலம், இருக்கும்? ஒருபலம் இருக்குமா இருக்கும். இப்பொழுது, அம்மரமானது எத்துணை பலம், துலாம், மணங்கு, எத்துணைபாரங்கள் இருக்கும் ? இத்துணைய பாரங்களும், அந்த ஒரு பலக்கொட்டையினின்றும், எப்படியுண்டாயிற்று? இஃதென்ன பேராச்சரியமாக இருக்கிறது ? இதன் கணக்கு நன்கு விளங்கச்சொலலுங்கள்? ஆம், ஐயா! நுங்களுக்கு என்ன இவ்வளவு தெரியாதா? தத்துவ சாத்திரங்கள் ஒருங்கும், தாவர இலக்கணங்கள் ஒருங்கும், நுங்

கள் பால் ஒப்புக்கொடுத்து விடவேண்டும்போலிருக்கிறதே? "மண் தண்ணீர், வாயு, நெருப்பு, ஆகாயாதி" சத்துக்கள் ஒருங்கும் தகுந்தவாறு, அக்கொட்டை ஒன்றுடன்கூடிச் சார்ந்து தத்தம் இயற்கை உருவங்கள் மாறுதலாய் ஒரு செடியாக முளைத்து நாளாவட்டத்தில் இத்துணைச் சிறந்த ஒரு பெரியமாமரமாக ஓங்கிப் படர்ந்து நெருங்கி வளர்ந்து, பூர்த்துக் காய்த்துக்கனித்து மிகப் பேரானந்தமாக தக்க பயனுக நின்று கொண்டிருக்கிறது. இன்றேல், அவ்வொரு பலக்கொட்டை இப்படி, எப்படியாம் இதுதான் நியாயம், ஆம். ஐயா' அக்கொட்டைக்கும், மரத்துக்கும் உள்ள இடைக்குத்தான். இப்படி? அம்மரம், கிளை, இலைகளின் நிறத்துக்கோ? அவைகட்கும், அப்பூதாதி சத்துக்கள்தான் காரணம். அச்சுவைக்கோ? அச்சக்திதான், அவ்வித்தினில் அடங்கி நின்ற சக்தி. எத்துணையோ காய்கனிகளுக்கும் வளர்ந்து, பூரணமாக நிறைந்து நிற்கிறது. இதுதான் ஒரு சக்தியின் அம்சம், ஆம். எமதன்பார்ந்த நண்பர்களே! இப்பொழுது, அம்மாவித்தின் சாதி இன்னதெனத் தெரிந்தோம். அவ்வித்தினுள், அடங்கியிருந்த சக்தியின், ஆண்மைத் தன்மை இன்னதெனத்தெரிந்தோம். அவ்வித்துடன் கூடி, நமக்கு வேண்டியபடியாக மாறுதலடைந்து வளர்ந்து கிடக்கும், பூதாதி சத்துக்களையும், இஃதாமென்று, தெரிந்தோம். சுருங்கச் சொல்லுமிடத்து, அச்சிறிய ஒருவித்தினுள்ளேயே, இத்துணைய பாரசக்திகளும், பலன்களும், அடங்கியிருந்தன வென்றுந் தெரிந்தோம் "தத்துவம், எங்குண்டு தத்துவன் அங்குண்டு" என்பதும், தெரிந்தோம். சாதாரணமாக எந்தவிதமான ஒருவித்துக்களையும், அவ்வவர்கட்குச் சொந்தமான ஒரு பூமியிலே, ஊன்றுவதுபோல, நாமும், நம்முடைய பேரறிவாண்மைகளாகிய வித்துக்களை, நமக்குச் சொந்தமாகிய நமது, வைசியமகாசமுகமாகிய பூமியாகிய, பல இடங்களிலும், ஊன்றுவோமானல், மேற்கண்ட அம்மாவித்தானது, எப்படியாயிற்றோ அப்படியே தக்கபலன்களை நாமும், நாமே அனுபவிப்போம் அன்றோ? ஆகலின், எந்தவிதமான மயக்கத்தையும் ஒழித்து, நுங்களின் பேரறிவாண்மைகளாகிய வித்துக்களை உடன் ஊன்றுங்கள். அயலான் பூமியில் ஊன்றுவதால் நுங்கட்கு யாது பயன்? புகழ்மாத்திரம் போதுமா? புகழும், புண்ணியமும் வேண்டாமா? இதுகாறும், பிறபகுதியாருக்கு ஆக, பிற நகரங்களுக்குக் கல்வியபிவிருத்திக்காக ஐந்தாறு இலக்ஷ ரூபாய்கள் வரை, நமது, மகாசமுகம் கொடுத்திருக்கிறது. நமது, மகாசமுகத்துக்கும் இதுசமயம் அவ்வளவுதான் தேவை. உடன் செய்யுங்கள் நாளைக்குப் பார்ப்போம் என்பதை நாளைக்கு வைத்துக்கொண்டு இந்தக்கணமே செய்து காரியத்தை முடியுங்கள்.

(இன்னும் வரும்)